# திருப்புகழ்

## விரிவுரை

## ஆறாம் தொகுதி

குன்றுதோறாடல்
இரண்டாம் பகுதி
பழமுதிர்சோலை

திருமுருக
கிருபானந்தவாரியார்

லதா

வானதி
பதிப்பகம்

உ

முருகா

ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் அருளிச்செய்த

# திருப்புகழ்

(விரிவுரையுடன்)

## ஆறும் தொகுதி

குன்றுதோருடல் (இரண்டாம் பகுதி)
(ஐந்தாவது படைவீடு)

பழமுதிர்சோலை, ஆறு திருப்பதி
(ஆருவது படைவீடு)

உரையாசிரியர் :
கிருபானந்தவாரியார்



வானதி பதிப்பகம்
13. தீனதயாளு தெரு
தி. நகர், சென்னை-17.

வானதி முதற் பதிப்பு : நவம்பர் 1988

திருநாவுக்கரசு தயாரிப்பு

## சமர்ப்பணம்

*இத் திருப்புகழ் உரைவள நூலினை எம் பரமகுருநாதர் அருணகிரி நாதப் பெருந்தகைக்கு அர்ப்பணிக் கின்றேன். அவர் இதனை இன்னும் இனிதாக்கி ஆறுமுகப் பெருமானது அடிமலர்கட்கு அணிவிப்பாராக.*

விலை ரூ. [illegible]/-

குருகுலம் பிரிண்டர்ஸ், வேதாரண்யம்.

உ

முருகா

# முன்னுரை

முருகப்பெருமானுடைய திருவருள் முழுதும் பெற்ற முனீந்திரர் அருணகிரிநாத சுவாமிகள். இந்த ஞானு சாரியர் உலகம் உய்யப் பாடிய அற்புத ஞானத்தமிழ் திருப்புகழ்.

இந்த ஐந்தாம்படைவீட்டுத் திருப்புகழின் பிற் பகுதியும் 6-ம் படைவீட்டுத் திருப்புகழும் உரையுடன் இப்போது வெளிவருகின்றது.

பலகாலமாக உயர்ந்த தமிழ் நூல்களை அச்சிட்டு, செந்தமிழுக்குத் தொண்டு செய்யும் சென்னை வானதி பதிப்பகம் உயர்திரு. ஏ. திருநாவுக்கரசு அவர்கள் இந்த ஐந்தாம்படை வீட்டின் பிற்பகுதியையும் 6-ம் படை வீட்டுத் திருப்புகழ் உரையையும் அச்சிட்டு அன்பர்கட்கு வழங்குகின்றுர்.

இது மிகச் சிறந்த நற்பணியாகும். இதனை அன்பர்கள் ஒதி உய்வு பெறுக.

அன்பர்,

**கிருபானந்தவாரி.**

## உள்ளுறை

ஒன்றுதொ ருடலை யொருவி யாவிமெய்
துன்றுதொ ருடலைத் தொடங்கி யைவகை
மன்றுதொ ருடிய வள்ளல் காமுறக்
குன்றுதொ ருடிய குமரற் போற்றுவாம்.

எழமுதி ரைப்புனத்.திறைவி முன்புதன்
கிழமுதி ரிளநலங் கிடைப்ப முன்னவன்
மழமுதிர் களிறென வருதல் வேண்டிய
பழமுதிர் சோலையம் பகவற் போற்றுவாம்.

—கந்தபுராணம்.

# பாட்டு முதற் குறிப்பகராதி

## வரலாறுகள்

ஓம் குஹாய நம :

# திருப்புகழ் விரிவுரை

## குன்றுதோருடல்

( ஐந்தாவது படைவீடு )

### விநாயகமலை

[ இராமநாதபுரம் ஜில்லா திருப்புத்தூருக்குக் கிழக்கே ஐந்து மைலில் உள்ளது. பிள்ளையார் பட்டி என்று வழங்கப் படுகின்றது. ]

**115**

சரவண ஜாதா நமோநம கருணைய தீதா நமோநம
சததள பாதா நமோநம அபிராம
தருணக தீரா நமோநம நிருபமர் வீரா நமோநம
சமதள வூரா நமோநம ஜகதீச
பரம சொரூபா நமோநம சுரர்பதி பூபா நமோநம
பரிமள நீபா நமோநம உமைகாளி
பகவதி பாலா நமோநம இகபர மூலா நமோநம
பவுருஷ சீலா நமோநம அருள்தாராய்
இரவியு மாகாச பூமியும் விரவிய தூளேற வானவ
ரெவர்களு மீடேற ஏழ்கடல் முறையோவென்
றிடர்பட மாமேரு பூதர மிடிபட வேதா நிசாசர
ரிகல்கெட மாவேக நீடயில் விடுவோனே
மரகத ஆகார ஆயனு மிரணிய ஆகார வேதனும்
வசுவெனு மாகார ஈசனு மடிபேண
மயிலுறை வாழ்வே விநாயக மலையுறை வேலா மகீதர
வன்சர ராதார மாகிய பெருமாளே.

## பதவுரை

இரவியும் - சூரிய மண்டலமும், ஆகாச - வானுலகமும், பூமியும் மண்ணுலகமும், விரவிய தூள்எ்ற - மறையுமாறு கலந்த துகள் படியவும், வானவர் எவர்களும் ஈடேற - தேவர்கள் யாவரும் உய்வுபெற்று உயர்வடையவும், ஏழ்கடல் முறையோ என்று இடர்பட - ஏழுசமுத்திரங்களும் துன்புற்று 'முறையோ' என்று கதறி வருந்தவும், மாமேரு பூதரம் இடிபடவே தான் - பெரியமேருமலை இடிபட்டு துகள்படவும், நிசாசரர் இகல் கெட - இரவிலேஉலாவுகின்ற இராக்கதர்களின் போர்கெட்டுஒழியவும், மாவேக நீடு அயில் - மிக்க வேகத்தையுடைய நீண்ட வேலாயுதத்தை, விடுவோனே - விடுத்தருளியவரே! மரகத ஆகார ஆயனும் - மரகதம் போன்ற பச்சை நிறமுள்ள திருவுருவமுடைய ஆயர்குலக் கொழுந்தாகிய திருமாலும், இரணிய ஆகார வேதனும் - பொன்னிறமுள்ள திருவுருவுடைய பிரம தேவனும், வசு எனும் ஆகார ஈசனும் - நெருப்பு வண்ணமுள்ள திருவுருவுடைய உருத்திர மூர்த்தியும், அடிபேண - திருவடியை விரும்ப, மயில் உறை வாழ்வே - மயில்வாகனத்தில் எழுந்தருளி வருகின்ற இறையவரே! விநாயக மலை உறைவேலா - விநாயகமலை என்ற திருத்தலத்தில் வாழ்கின்ற வேலாயுதக் கடவுளே! மகீதர - மலைகளோடு கூடிய, வனசரர் ஆதாரமாகிய பெருமாளே-காட்டிலே வாழுகின்ற வேடர்களுக்கு ஆதாரமாகிய பெருமையின் மிக்கவரே! சரவண ஜாதா - நாணல்வனஞ் சூழ்ந்த பொய்கையில் தோன்றியவரே! நமோ நம - போற்றி போற்றி; கருணை அதீதா - கருணை நிறைந்து கடந்த பொருளே, நமோ நம - போற்றி போற்றி; சததள பாதா - நூறு இதழ்களோடு கூடிய தாமரை போன்ற திருவடியை யுடையவரே! நமோ நம - போற்றி போற்றி; அபிராம - மிக்க பேரழகுடையவரே! தருண அக தீரா - இளமையுடன் தைரியத்தை யுடையவரே! நமோ நம - போற்றி போற்றி; நிருப அமர் வீரா - தலைமை தங்கிய வீரரே! நமோ நம - போற்றி போற்றி; சமதள ஊரா - போருக்குரிய சேனைகளுடன் கூடிய ஊராகிய போரூரில் வாழ்பவரே! நமோ நம - போற்றி போற்றி; சகதீச - உலகங்களுக்குத் தலைவரே! பரம சொரூபா - உயர்ந்த ஞானவடிவு உடையவரே! நமோ நம - போற்றி போற்றி; சுரர்பதி பூபா - இமையவர் கோமானாகிய இந்திரனுக்குத் தலைவரே! நமோ நம - போற்றி போற்றி; பரிமள நீபா - வாசனை தங்கிய கடப்பமலர் மாலையை யணிபவனே! நமோ நம - போற்றி போற்றி; உமை காளி பகவதி பாலா-உமைஎன்னும் திருப்பெயரையுடையவரும், கருமை நிறத்தோடு கூடியவரும், ஆறு அருட்குணங்களையுடையவருமாகிய அம்பிகையின் அருட்புதல்வரே! நமோ நம - போற்றி போற்றி; இகபரமூலா - இம்மை மறுமை என்ற இரண்டு சுகமும் அருளுவதற்கு மூல காரணரே! நமோ நம - போற்றி போற்றி; பவுருஷ சீலா - ஆண்மையுடன் கூடிய ஒழுக்கமுடையவரே! நமோ நம - போற்றி போற்றி; அருள் தாராய் - தேவரீருடைய திருவருளைத் தந்தருள்வீர்.

## பொழிப்புரை

சூரியமண்டலமும், விண்ணுலகும், மண்ணுலகும் புழுதி படவும், அமரர்கள் அனைவரும் உய்வுபெற்று ஈடேறவும், எழு கடலும் அஞ்சி "முறையோ" என்று கதறித் துன்புறவும், உயர்ந்த மேருகிரி இடிந்து துகள் படவும், அசுரர்களின் கொடிய போர் ஒழியவும், மிகுந்த வேகத்தோடு கூடிய நீண்ட வேலாயுதத்தை விடுத்தருளியவரே! மரகத நிறமுடைய திருமாலும் பொன்னிறமுடைய திசைமுகனும் நெருப்பு நிற முடைய உருத்திரரும் திருவடியை விரும்ப பச்சை மயில் வாகனத்தின்மீது எழுந்தருள்கின்ற இறைவரே! விநாயக மலை யென்னுந் திருத் தலத்தில் வாழ்கின்ற வேலவரே! மலை களில் உலாவுகின்ற வேடர்களுக்கு ஆதாரமாகிய பெருமையின் மிக்கவரே! சரவண தடாகத்தில் தோன்றியவரே! போற்றி போற்றி; கருணை மிகுந்து தத்துவங் கடந்த தனிமுதலே! போற்றி போற்றி; நூறு இதழ்களுடன் கூடிய தாமரை மலர் போன்ற திருவடியை உடையவரே! போற்றி போற்றி; மிக்க அழகுடையவரே! இளமையுடன் கூடிய தீரரே! போற்றி போற்றி; முதன்மை பெற்ற வீரரே! போற்றி போற்றி; போருக் குரிய தளங்கள் நிறைந்த திருப்போரூரில் வாழ்கின்றவரே! போற்றி போற்றி; உலகங்களுக்குத் தலைவரே! பரஞானவடி வினரே! போற்றி போற்றி; அமரேசனுக்கு அதிபரே! போற்றி போற்றி; பரிமள மிக்க கடப்பமலர் மாலையை யணிபவரே! போற்றி போற்றி; கருமை நிறமுடையவரும் ஆறு குணங்களை யுடையவருமாகிய உமாதேவியாருடைய திருப்புதல்வரே! போற்றி போற்றி; இருமை நலன்களையும் அருளவல்லவரே! போற்றி போற்றி; மிகுந்த ஆண்மையுடையவரே! போற்றி போற்றி; அடியேனுக்கு அருள் புரிவீராக.

## விரிவுரை

சரவணஜாதா:—

ஆயிரத்தெட்டு அண்டங்களையும் நூற்றெட்டு யுகங்களாக அறநெறி வழுவி அமரரை வருத்தி அரசு புரிந்த சூரபன்மனு டைய கொடுமையாகிய தீயினால் வெதும்பிய தேவர்கள் "இனி உய்வு கிடைக்குமோ?" என்று ஏங்கி சிவபெருமானிடம் போய் முறையிட்டனர். சூட்டை சூட்டினால் நீக்கும் மருத்துவ முறை போல் சூராதியவுணரின் கொடுமைத்தீயை யவிக்க சிவபெரு

மானுடைய நெற்றிக் கண்களினின்றும் ஆறு சுயஞ்ஜோதி அருள்தீப் பொறிகள் தோன்றின. அவைகளை அரனார் ஆணையின்படி வாயுதேவனும் அக்கினிதேவனும் கங்கையிலிட்டனர்; கங்கை சரவணத்திற் சேர்த்தனள். ஆங்கு திருமுருகர் அறுமுக வடிவுகொண்டு திருவவதரித்தனர்.

அருவமு முருவுமாகி யனாதியாய்ப் பலவாயொன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாகக்
கருணைகூர் முகங்களாறுங் கரங்கள் பன்னிரண்டுங் கொண்டு
ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தன னுலகமுய்ய.

மனிதர் விலங்கு முதலிய இடத்தினின்றும் அவதரித்த ஏனைய தேவர்களின் அவதாரம் போலன்றி பிறவாயிறவா பெற்றியுடைய பெம்மான் முருகன், பரஞ்சுடர் நெற்றியந் தலத்தினின்றும் வெளிப்பட்டு, சரவணப் பொய்கையில் அருளுருக்கொண்டு உலகங்களை யுய்வித்தனர்.

சரம்-நாணல்; வனம்-காடு. சிறந்த நரம்புகளால் சூழப் பெற்ற இதய கமலத்தின் நடுவினுள் தகராலயத்தில் குகப் பெருமான் வீற்றிருக்கின்றனன் என்ற உள்ளுறையையும் "சரவணஜாதா" என்ற சொற்றொடர் உணர்த்துகின்றது.

கருணையதீதா:—

அதீதம்-கடந்தது; மனவாசகங் கடந்ததும், மறைகளின் முடிவாலும் ஆகமங்களாலும் அளக்கற்கரியதுமாகிய பரம் பொருள் நம்பொருட்டு கருணைகூர் முகங்கள் ஆறுங் கரங்கள் பன்னிரண்டுங் கொண்டு எழுந்தருளினன்.

சமதளவூரா:—

சமதளவூர் என்பது திருப்போரூர், அது செங்கற்பட்டுக்கு அருகே விளங்கும் அருமைத் திருத்தலம்.

## திருப்போரூர்த் தல வரலாறு

தாரகன் என்ற அசுரன் ஒருவன் இருந்தான். (இவன் சூரபன்மன் தம்பியாகிய தாரகனன்று.) இவனுக்கு கமலாட்சன், தாரகாட்சன், வித்யுன்மாலி என்ற மூன்று புதல்வர் இருந்தனர். இவரே திரிபுரத் தசுரர். தாரகன் தேவவருடம் ஐம்பதினாயிரம் ஆண்டு கடுந்தவம் புரிந்தனன். பிரமதேவர்

தோன்றி வேண்டிய வரங்களை நல்கினர். அதனால் தாரகன் தருக்குற்று மூவுலகங்களையும் வென்று தேவரும் மற்று யாவரும் தனது ஏவல் கேட்ப அரசு புரிவானாயினான். திருமால் முதலிய யாவரையுங் கடந்தவனாதலின் தாரகன் என்று பேர் பெற்றனன். (தாரகம்-கடத்தல்.) தாரகன் தன் மக்கள் மூவரையும் நோக்கி, "மைந்தர்காள்! தவத்தினும் சிறந்தது வேறு இல்லை. தவத்தாலேயே எல்லாச் சிறப்புகளையும் நான் பெற்றேன். நீங்களும் சிவபெருமானை வேண்டிப் பெருந்தவம் புரிந்து அழியாத வரத்தைப் பெற்று உய்மின்'' என்று ஏவினான். இதனை யறிந்த இந்திரன், பிரமன், திருமால் முதலிய இமையவர் முதலிய யாவரும் சிந்தாகுலமுற்று வைகுண்டத்தில் கூடி, "அந்தோ! இனி நமக்கு உய்வில்லை. தாரகனுக்கு நாம் ஏவல் செய்வோராய் ஒழியாது துன்புற்று உழல்கின்றோம். இனி அவனுடைய புதல்வரும் தவங்கிடந்து வரம்பெறுவரேல் நமது கதி யாதாகும்? என்செய்வோம்'' என்று ஏங்கினார்கள். ஏங்கிய அவர்கள் தாரகனைக் கொல்லும்பொருட்டு ஒரு அபிசார வேள்வியைப் புரிவாராயினர். அதனையறிந்த தாரகன் கொதித்த உள்ளமுடையவனாய் "அமரரை அடியுடன் அழிப்பேன் என்று வைகுண்டம் போனான். அவன் வரவை யறிந்த மாலயனாதி வானவர் "இறந்தோம்'' என்று கதறி ஓடி பொன்மேருகிரியிற் சென்று அதில் அனைவரும் ஒளிந்துகொண்டார்கள்.

தாரகன் சீற்றமுற்று ஆலகாலம்போற் சென்று மேரு மலையிடம் அடைந்து "தேவர்களே! நுமது பேடித்தன்மை நன்று நன்று; சற்றும் வீரமில்லாத வெற்றுத் தகர்களே!' என்று பரிகசித்து, "உங்கட்கு இடந் தந்த மேரு மலையை வேருடன் பறிப்பேன்'' என்று கூறி அம் மாமேரு மலையை வேருடன் குடைந்து தூக்கினான். குடைபோலக் குலுக்கினான்; சுழற்றினான். ஆலமரத்தை ஒருவன் அசைத்தால் அதிலுள்ள நன்கு கனிந்த கனிகள் உதிர்வதுபோல் தேவர்களும் முனிவர்களும் கீழே விழுந்து கயிலையை நோக்கி ஓடினர். தாரகன் அது கண்டு, எள்ளி நகையாடி மலையை முன்போல் நிறுவித் தனது ஊர் புகுந்தான்.

அயனாரிடமும் அரனாரிடமும் அளப்பற்ற வரம்பெற்ற தாரகன் இவ்வண்ணம் உலகங்களையெல்லாம் தன்னகப்படுத்தி ஆட்சிபுரிந்தனன். பிரம விட்டுணு முதலிய தேவர்களும் ஏனைக்

கணங்களும் கவலைக் கடலுள் மூழ்கி காடு மலை குகை முதலிய இடங்களில் உருமாறி ஒளிந்திருந்தனர். இந்திரன் சற்று தைரியத்துடன் வந்து தாரகனை எதிர்த்து அமராடி வச்சிராயு தத்தை எறிந்தனன். அது தாரகன்மீது பட்டு துரும்புபோல் ஒடிந்து துகளாயிற்று. அதுகண்டு வெருவிய அமரர்கோமான் தனது மனைவி சசிதேவியுடனும் மகன் சயந்தனுடனும் இருடி வடிவெடுத்து ஓர் வனத்தின்கண் தவம்புரிந் திருந்தனன். திருமால் தாரகனுடன் பொருது தோற்று வைகுண்ட வாழ்க்கையை விட்டு மீன்வடிவெடுத்துக் கடலுள் மறைந்து வாழ்ந்தனர். பிரமதேவர் தமது மனோவதி நகரினின்றும் நீங்கி சீகாழிப் பதியை யடைந்து வாணிதேவியுடன் இருடிவேடந் தரித்து சிவபெருமானைப் பூசித்துக்கொண்டிருந்தனர். அதனாலே அப்பதி பிரமபுரம் எனப் பெயருற்றது. தாரகனிடம் அக்கினி மடைத்தொழில் புரிந்தான்; வாயு அரண்மனையைக் கூட்டினான்; வருணன் முற்றத்திற்குத் தண்ணீர் தெளித்தான்; இயமன் காலங்காட்டும் மணியை யடித்தான். இப்படி எல்லாத் தேவர்களும் தத்தமக்கிட்ட ஏவலைப் புரிந்து நொந்து இளைத்தனர். தாரகன் விட்டுணுவின் வைகுண்டத்தில் சித்திரசபையில் வீற்றிருந்து அரசு புரிந்தனன்.

இத்திறத் தமரர் யாவரு மிடைந் தயரவே
முத்திறத் துலகும் வெளவிய முரண்கொ ளசுரன்
நத்தெடுத்தவ னலங்கொள்பதி நண்ணி யவன்வாழ்
சித்திரச் சபையிருந் தரசுசெய் தனனரோ.

இங்ஙனம் வருந்திய தேவர்கள் யாவரும் திருக்கைலாய மலையை யணுகி, சிவபெருமான் சேவடிக் கமலத்தின்மீது வீழ்ந்து வணங்கி, துதித்து தூமலர் தூவித் தொழுது, "கருணைக்கடலே! கண்ணுதற்கடவுளே! தாரகனால் நாங்கள் செக்கிலிட்ட எள்ளுபோல் அரைபட்டு நொந்தோம்; இடர் தீர்த்து எம்மையாட்கொள்ளும்" என்று முறையிட்டனர். சிவபெருமான் அவரிடர் தீர்க்குமாறு தமது திருவுளத்து நினைத்த மாத்திரையே, ஆறு திருமுகங்களும், பதினெட்டு திருக்கண்களும், அபயம் வாள் சூலம் சக்கரம் முசலம் வேல் என்பன வமைந்த வலக்கரங்களாறும், வரதம் கொடி கேடகம் அங்குசம் பாசம் குலிசம் என்பனவமைந்த இடக்கரங்களாறும் கொண்டு, கோடிசூரியப்பிரகாச முடையவராய் முருகக் கடவுள்

அவருடைய இதயத்தினின்றுந் தோன்றியருளினுர். ஆல முண்ட நீலகண்டர் அவருடைய திருமுகத்தை நோக்கி, "மைந்த! தாரகனை வதைத்து அமரர் அலக்கணை அகற்றுதி" என்று அனுப்பினர். பன்னிருகையுடைப் பரமபதி படையுடன் சென்று தாரகனுடன் பத்துநாள் போர்புரிந்து வெள்ளிக் கிழமை இரவிலே அவனை வதைத்தருளினர். மாலயனாதி வானவர்களைப் பண்டுபோல் அவரவர் பதத்திலிருத்தி சிவ மூர்த்தியிடம் எய்தினர். தாரகன் இருந்த இடம் செங்கற் பட்டிற்கு அருகிலுள்ள "திருக்கூவம்" என்னுந் திருத்தல மாகும். அவனுடன் போர் புரிந்த இடம் "போரூர்" எனப் படும். சமரபுரி என்றும் சொல்லப்படும். இத்தலத்திற்கு சிதம்பர சுவாமிகள் பாடியருளிய மிக்க உயர்ந்த திருவாக்காகிய சந்நிதி முறை ஒன்று உண்டு.

> கார்தவழ் மேருவெற்பைக் கடவுளர் வெருவியோட
> வேரொடும் பிடுங்கி மீட்டும் வைத்திடும் விறல்கொ டிண்டோட்
> டாரகன் றன்னை வெற்றி யறுமுகன் சாய்த்த பின்னர்ச்
> சீர்கெழு மவன்றன் மைந்தர் திசைமுகற் பழிச்சலுற்றார்.
>
> —கூர்மபுராணம்.

பகவதி:—

ஐஸ்வரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்ற ஆறுகுணங்களையும் உடையவராதலால் "பகவதி" எனப்பட்டனர்.

இகபரமூலா:—

இம்மைநலன்களையும் மறுமைநலன்களையும் ஒருங்கே யருளவல்லவர் முருகவேள். ஆறுமுகராதலின் என்க.

> " இகபர சௌபாக்ய மருள்வாயே "
>
> —(வசனமிக) திருப்புகழ்.

மரகத ஆகார ஆயனும்.............................................ஈசனும்:—

மால் பிரமன் உருத்திரர் என்ற மூவரும் வணங்கும் முழு முதற் கடவுள் முருகப்பெருமான். முத்தொழில்களையும் அம் மூவருக்குங் கொடுத்தவரும் அவரே. அவர்களின் பயங்கெடுக் கும் அபயரும் அப்பரமபதியே.

> " படைத்தளித் தழிக்குந் த்ரிமூர்த்திகள் தம்பிரானே "
>
> —( கனத்த ) திருப்புகழ்.

" படைக்கப் பங்கயன் துடைக்கச் சங்கரன்
புரக்கக் கஞ்சைமன் பணியாகப்
பணித்துத் தம்பயந் தணித்துச் சந்ததம்
பரத்தைக் கொண்டிடுந் தனிவேலா "

—( தடக்கைப் ) திருப்புகழ்.

கருத்துரை

சூராதியவுணரை யொழித்த சுப்ரமண்யரே! மூவரும் வணங்கும் முழுமுதலே! விராயகமலை யுறை வேலாயுதரே! உமது திருவடிகட்கு வணக்கம் பல; அடியேனை ஆண்டருள்வீர்.

## விராலிமலை

[திருச்சியிலிருந்து மதுரை போகும் வழியில் 20-ஆவது மைலில் உள்ளதலம். சிறியமலை. மலைமேல் ஆறுமுகத்துடன் முருகன் கோயில் கொண்டுள்ளார். திருச்சி, மணப்பாறை முதலிய பல ஊர்களிலிருந்தும் பஸ்வசதி உண்டு. மயில்கள் அதிகம்.]

### 116

சீரான கோல கால நவமணி
மாலாபி ஷேக பார வெகுவித
தேவாதி தேவர் சேவை செயுமுக மலராறும்
சீராடு வீர மாது மருவிய
ஈராறு தோளு நீளும் வரியளி
சீராக மோது நீப பரிமள இருதாளும்
ஆராத காதல் வேடர் மடமகள்
ஜீமூத மூர்வ லாரி மடமகள்
ஆதார பூத மாக வலமிட முறைவாழ்வும்
ஆராயு நீதி வேலு மயிலுமெய்ஞ்
ஞானபி ராம தாப வடிவமும்
ஆபாத னேனு நாளு நினைவது பெறவேணும்

ஏராரு மாட கூட மதுரையில்
மீதேறி மாறி யாடு மிறையவர்
ஏழேழு பேர்கள் கூற வருபொரு ளதிகாரம்
ஈடாய வூமர் போல வணிகரி
லூடாடி யால வாயில் விதிசெய்த
லீலாவி சார தீர வரதர குருநாதா
கூராழி யால்முன் வீய நினைபவ
னீடேறு மாறு பானு மறைவுசெய்
கோபால ராய னேய முளதிரு மருகோனே
கோடாம லார வார அலையெறி
காவேரி யாறு பாயும் வயலியில்
கோனாடு சூழ்வி ராலி மலையுறை பெருமாளே.

## பதவுரை

ஏர் ஆரும் - அழகு நிறைந்த, மாட கூட மதுரையில் மீது - மாட கூடங்களுடன் கூடிய மதுரையம்பதியில், ஏறி மாறி ஆடும் இறையவர் - வெள்ளியம்பலத்திலேறி கான்மாறியாடிய கண்ணுதற் கடவுள், ஏழ் ஏழு பேர்கள் - நாற்பத்தொன்பது சங்கப்புலவர்கள், கூற வரு பொருள் அதிகாரம் - உரைவகுத்துக் கூறுமாறு அருளிய பொருளதிகாரத்தின், ஈடு ஆய - அவ்வுரைகளுள் சிறந்ததனை ஆய்ந்துரைக்கும் பொருட்டு, ஊமர் போல வணிகர் இல் ஊடாடி - ஊமைப்பிள்ளையைப்போல் உருத்திரஜன்மர் என்ற திருநாமத்துடன் செட்டி வீட்டில் தோன்றி விளையாடி, ஆலவாயில் - மதுரையம்பதியில், விதி செய்த லீலா - உரைகளின் தாரதம்மியத்தைப் பகுத்து வெளியிட்ட திருவிளையாடலைச் செய்தவரே! விசார - ஆராய்ச்சி யுடையவரே! தீர - தைரியத்தை யுடையவரே! வரதர - வரத்தையருள் பவரே! குருநாதா - உலகங்களுக்கெல்லாம் குருமூர்த்தியாக விளங்கு பவரே! முன் வீய நினைபவன் - முன்னாளில் தான் கூறியபடி, "சயத்ரதனைப் பொழுது போவதற்குள் கொல்லா தொழியின் இறந்துபட்டொழிவேன்" என்று எண்ணிய அருச்சுனன், ஈடேறுமாறு - இறவாது உய்வு பெறும் பொருட்டு, கூர் ஆழியால் பாநு மறைவு செய் - கூர்மை பொருந்திய சக்கரப்படைக்கலத்தால் சூரியனை மறைத்தருளிய, கோபாலராயன் - யது குலத்தலைவராகிய கண்ணபிரானுடைய, நேயம் உள்ள திரு மருகோனே - அன்புடைய திருமருகரே! கோடாமல் ஆரவார அலை எறி - எக்காலத்தும் குறைவின்றி ஆரவாரத்துடன் அலைகளை வீசிப்பெருக்கெடுத்து ஓடுகின்ற, காவேரி ஆறு பாயும் வயலியில் - காவேரி நதிபாய்ந்து வளஞ்செய்கின்ற

வயலூர் என்னும் புண்ணியதலத்திலும், கோனாடு சூழ் - கோனாடு என்னும் திருநாடு சூழப்பெற்ற, விராலி மலை - விராலி மலையிலும், உறை பெருமாளே - வாழ்கின்ற பெருமையின் மிக்கவரே! சீர் ஆன - சிறப்பு வாய்ந்ததும், கோல கால - கோலாகலத்துடன் கூடியதும், நவமணி மாலா- ஒன்பது மணிகளின் வரிசையினால் பொலிவதும் ஆகிய, அபிஷேகபார - திருமுடிகளைத்தாங்கி விளங்குவதும், வெகு வித தேவ - அநேகவகைப்பட்ட அமரர்களும், அதிதேவர் - தேவர்களின் தலைவர்களும், சேவை செயும் - சேவித்து வணங்கும், மலர் முகம் ஆறும் - தாமரை மலர் போன்ற ஆறு திருமுகங்களையும், சீர் ஆடு வீர மாது மருவிய - பெருமை நிறைந்த வீர இலக்குமி தழுவிவாழ்கின்ற, ஈராறு தோளும் - பன்னிரு புயாசலங்களை யும், நீளும் வரி அளி - நீண்ட வரிகளுடன் கூடிய வண்டுகள், சீ ர ா க ம் ஓது - ஸ்ரீராகம் என்னும் பண்ணைப்பாடி மொய்த்திருக்கின்ற, நீப பரிமள - கடப்ப மலர்களால் மணமிகுந்த, இருதாளும் - இரண்டு திருவடிகளையும், ஆராத காதல் வேடர் மட மகள் - தணியாத காதலுடன் கூடிய வேடர் குலக்கொழுந்தாகிய வள்ளியம்மையாரும், ஜீமூதம் ஊர் - மேகத்தின் மீது ஏறுபவனும், வல அரி - வலன் என்ற நிருதனை வதைத்தவனுமாகிய இந்திரனுடைய, மட மகள் - மடம் என்னும் குணம் பொருந்திய தெய்வ யானை யம்மையாரும், ஆதார பூதம் ஆக - உலகங்கட்கு ஆதார சத்தி களாக, வலம் இடம் உறை வாழ்வும் - முறையே வலப்புறமும் இடப்புறமு மாக வாழ்கின்ற வாழ்வையும், ஆராயும் நீதி வேலும் - நீதியை ஆராய்கின்ற ஞானமேயாகிய வேலாயுதத்தையும், மயிலும் - மயில் வாகனத்தையும், மெய் - சத்து, ஞானம் - சித்து, அபிராம தாபம் - அழகின் மிகுதி (அதனால் விளைவது ஆனந்தம்), வடிவமும் - சச்சிதானந்தத் திருவுருவத்தையும், ஆபாதனேனும் - கொடியேனாகிய அடியேனும், நாளும் நினைவது பெற வேணும் - இடையறாது நினைக்கும் தன்மையைப் பெற்று உய்ய வேண்டும்.

## பொழிப்புரை

அழகு நிறைந்த மாடகூடங்களுடன் கூடிய மதுரை யம்பதி யிலே, வெள்ளியம்பலத்தில் நின்று கால்மாறி யாடிய கண் ணுதற் கடவுள் கூறியருளிய இறையனாரகப் பொருள் என்னும் நூலுக்கு நாற்பத்தொன்பது சங்கப் புலவர்களும் பொருள் கூறி தத்தம் உரையே பெரிதெனக் கலாம் விளைக்க, அதிற் சிறந்த வுரையை ஆராய்ந்து சொல்ல ஊமைப்பிள்ளையைப்போல வணிகர் வீட்டில் தோன்றி (உருத்திரஜன்மர் என்ற திருநாமத் துடன் விளங்கி) கலாந்தீர்ந்து முறை செய்த திருவிளை யாடலைச் செய்தவரே! ஆராய்ச்சியை யுடையவரே! தீரரே! தீப் புகுந்து இறக்க நினைக்கும் அருச்சுனன் உய்வுபெறும் பொருட்டு சூரிய சக்கரப்படையால் கதிரவனை மறைத்தருளிய கோபால மணிவண்ணனுக்கு அன்புமிக்க திரு மருகரே! குறை

யாமல் எப்பொழுதும் ஆரவாரத்துடன் அலைகளை வீசும் காவிரி நதி பாயும் வயலூரிலும், கோளுடு சூழ்கின்ற விராலிமலையிலும் எழுந்தருளியுள்ள பெருமிதமுடையவரே! சிறப்பு வாய்ந்து கோலாகலத்துடன் கூடிய நவமணிகளை வரிசையாகப் பதித்த மணிமகுடங்களைத் தாங்கி விளங்குவதும், தேவர்களாலும் தேவதேவர்களாலும் சேவை செய்யப்படுவதும் ஆகிய மலர் போன்றஆறு திருமுகங்களையும், பெருமை பொருந்திய வீர மகள் வாழும் பன்னிரு திருப்புயங்களையும், நீண்ட வரிகளுடன் கூடிய வண்டுகள் இருந்து ஸ்ரீராகம் என்னும் பண்பாடும் கடப்பமலர்களால் மணங் கமழ்கின்ற இரு திருவடிகளையும், தணியாத காதலுடைய வள்ளியம்மையாரும் மேகவாகனனும் இந்திரனுடைய புதல்வியாராகிய தேவகுஞ்சரியாரும் வலப் புறமும் இடப்புறமுமாக எழுந்தருளியுள்ள வாழ்வையும், நீதியை ஆராய்கின்ற ஞானமாகிய வேலாயுதத்தையும், மயில் வாகனத்தையும். சச்சிதானந்த வடிவத்தையும் கொடியே னுகிய அடியேன் எப்பொழுதும் மறவாமல் நினைந்து உய்ய வேண்டும்.

## விரிவுரை

சீரான.........முகமாறும் :—

கோலாகலம் என்பது கோலகாலமென சந்தத்தைக் குறித்து மாறி வந்தது. கோலாகலம் - சம்பிரமம்.

அபிஷேகம் - முடி.

'உரகர்பதி அபிஷேக மாயிரமும்' —திருவகுப்பு. (1)

தேவாதிதேவர் - தேவ அதிதேவர். முப்பத்துமுக்கோடி தேவர்களும், அவர்களுக்குத் தலைவர்களாகிய மூவர்களும் பணியநின்ற முழுமுதற்கடவுள் முருகவேள்.

"இதழ்பொதிய விழ்ந்த தாமரையின்
மணவறை புகுந்த நான்முகனும்
எறிதிரை யலம்பு பாலுத்தி நஞ்சராமேல்
இருவிழி துயின்ற நாரணனும்
உமைமருவு சந்த்ர சேகரனும்
இமையவர் வணங்கு வாசவனும் நின்றுதாழும்
முதல்வ" —(உததியறல்) திருப்புகழ்.

சீராடு வீர மாது மருவிய ஈராறுதோளும் :—

**சூராதி யவுணர்களை யழித்து வாகைமாலை சூடியது எம்பிரானுடையதோள். வீரமடந்தைக்கு வேறு எங்கும் தங்குவதற்கு இடமின்றி குமரன் தோள்களிற் குடிபுகுந்தனள்.**

"அலகிலவுணரைக் கொன்ற தோளென" —திருப்புகழ்.

**அளவிலா அவுணரை யழித்து உலகங்கட்கு வாழ்வு தந்தது அத் தோளே யாகலின், கச்சியப்பர் வாழ்த்துச் சொல்லவந்த போது முதலில் தோளை வாழ்த்தினர்.**

"ஆறிரு தடந்தோள்வாழ்க." —கந்தபுராணம்.

நீளும் வரியளி சீராக மோதும் நீபம் :—

**நீபம் - கடப்பமலர். வண்டுகள் மலரிலுள்ள தேனை யுண்டு ஸ்ரீராகம் என்னும் இராகத்தைப் பாடுகின்றன. மேலும் புய வடிப்பில், வண்டுகள் இராகமாலிகை பாடுகின்றன என்பார்.**

"வகைவகை குழுமி மொகுமொகு மொகென அநேகசு
மூகராக மதுபம் விழச்சிறு
சண்பகஞ் செறிந்த தாரிற் பொலிந்தன."

—திருவகுப்பு (15)

**இத் திருப்புகழை ஸ்ரீராகத்தில் பாடுவது மரபு; மிக்க இன்பத்தை விளைவிக்கும்.**

ஆராத காதல் வேடர் மடமகள் :—

**ஆராத - தணியாத. முருகவேளுக்கு வள்ளிநாயகியாரிடம் தணியாத காதல் என்பது அவரை உய்விக்கும் பொருட்டு எழுந்த தயவைக் குறிக்கும்.**

"பணியாவென வள்ளிபதம் பணியும்
தணியா அதிமோக தயாபரனே"

—அநுபூதி. (6)

**மட மகள் - மடமைக்குணம் பொருந்தியவர். மடம் என்பதற்கு அறியாமை என்று பொருள் கொள்வர்; அது பொருந்தாது. பெண்களுடைய நாற்குணங்களில் ஒன்று மடம். அது அறியாமையாயின் மகளிருக்கு அறியாமை ஒரு குணமாக அமையலாமா?**

பின்னர், மடம் என்பதற்குக் கொளுத்தியது விடாமை என்பது பொருள். தாய், தந்தை, கணவன் ஆகியோர்களால் நல்லறிவு பெறக் கூறிக் கொளுத்தியது விடாமை எனப்படும்.

ஆராயு நீதி வேலும் :—

வேல் என்பது ஞானம். ஞானமே நீதியை ஆராய வல்லது. "அறத்தை நிலைகாணும்" என்றார் வேல்வகுப்பிலும்.

மெய்ஞ்ஞானபி ராமதாப வடிவமும் :—

மெய் - உண்மை; ஞானம் - அறிவு; அபிராமம் - அழகு; அழகினால் விளைவது ஆனந்தம். காரியத்தைக் காரணமாகப் பேசப்பட்டது. இறைவன் சச்சிதானந்த சொரூபன்.

நாளும் நினைவது பெறவேணும் :

இறைவனை யடைவதற்குச் சிறந்தவழி, அப்பரம பிதாவை இடைவிடாது நினைப்பதுவே.

"நினையே தினம் நினைக்கவுந் தருவாய்"

—(மனத்தி) திருப்புகழ்.

"நினைப்பவர் மனங் கோயிலாக் கொண்டவன்"

—அப்பர்.

மாறியாடும் இறையவர் :—

மதுரையில் அரசுபுரிந்த விக்கிரம பாண்டியனுடைய புதல்வன் இராஜசேகர பாண்டியன் இனிது அறநெறி வழுவாது அரசாண்டான். அவன் 64 கலைகளையும் உணர்ந்திருந்தனன். சோழநாட்டிலிருந்து வந்த ஒருவன், தனது மன்னன் கரிகால்வளவன் 64 கலைகளிலும் வல்லவன் என்றனன். அது கேட்ட பாண்டியன் தான் உணராதிருந்த 64-வது கலையாகிய பரதசாத்திரத்தைத் தக்காரைக்கொண்டு பழகினான்.

அப்போது தனக்கு ஏற்பட்ட கால் வலியை நோக்கி, "சிறிது நேரம் நாம் நடிப்பதற்கே கால் வலிக்கின்றதே? நடராஜமூர்த்தி அனவரதம் ஓவாது நடிக்கின்றனரே? அவருக்கும் திருவடி வருந்துமே? தாண்டவத்தை நிறுத்தச் சொன்னால் உலகம் நடைபெறாதழியும். ஆதலின் கால் மாறியாடுமாறு பெருமானை வேண்டிக்கொள்வோம்" என்று எண்ணி,

திருவாலயம் போய், வெள்ளியம்பலத்துள் ஆடும் விரிசடைக் கூத்தனைக் கண்டு வணங்கிக் கால்மாறியாட வேண்டினான்.

நின்றதா ளெடுத்து வீசி யெடுத்ததாள் நிலமீ தூன்றி
இன்று நாங் காணமாறி யாடி என் வருத்தமெல்லாம்
பொன்றுமா செய்தி யன்றேல் பொன்றுவ னென்னா அன்பின்
குன்றனான் சுரிகை வாண்மேற் குப்புற வீழ்வேன் என்னா.

அரசன் வேண்டி உயிர்விடத் தொடங்கலும், பெருமான் வலக்காலைத் தூக்கித் திருநடனம் புரிந்தருளினார்.

வான் மாறினும் மொழி மாறுத மாறன் மனங்களிக்கக்
கான்மாறி யாடிய கற்பகமே நின் கருணை யென்மேற்
றான்மாறினும் விட்டு நான்மாறிடேன் பெற்ற தாய்க்கு முலைப்
பான்மாறி னும்பிள்ளை பான்மாறு மோ அதிற் பல்லிடுமே.

—அருட்பா.

ஏழேழுபேர்கள்...........விதிசெய்தலீலா :—

சங்கப் புலவர் கலகந் தீர்த்த வரலாறு

"தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவாபோற்றி"

என்ற மணிவாசகத்தால் புகழப் பெற்ற தென்றமிழ் நாட்டின் தலைநகர் மதுரை. அதன் பெருமை எம்மால் அளக்கற்பாற்றோ?

"சிவக்ஷேத்ரோத்தமமிதி ஸ்ரீமத் ஹாலாஸ்யமித்யபி!
ஸமஷ்டி வித்யா நகரீ மதுராபுரமித்யபி!
பூலோக சிவலோகஞ்ச ஜீவன்முக்திபுரந்ததா !
சதுஷ்கூடபுரஞ்சேதி த்வாதசாந்தம் விதுர்ப்புதா:"

என்று அகத்திய சங்கிதையால் புகழப்பெற்று பூலோக கயிலாசம்போல் இன்றும் என்றும் கண்ணுக்குங் கருத்துக்கும் அடங்காத கவினுடன் திகழ்வது மதுரை.

அம்மதுரைமா நகரத்தை வம்சசேகர பாண்டியனது புதல்வன் வம்ச சூடாமணி என்னும் பாண்டியன் அரசு புரிவானாயினான். நாள்தோறும் அம்மன்னர் பெருமான் சண்பகமலர்கள் கொண்டு சோமசுந்தரப் பெருமானை யருச்சிக்கும் நியமம் பூண்டிருந்தனன். அதனால் அவற்குச் சண்பக பாண்டியன் என்னும் பேரும் போந்தது. அறநெறி வழாது அவன் அரசு புரியுங்கால்

கிரக நிலை மாற்றத்தால் மழையின்றி,மக்கள் தடுமாற்றமடைந்தனர். பன்னிரு வருடம் பஞ்சத்தால் உலகம் வாடியது. அதுகாலை ஆங்காங்குள்ள தமிழ்ப்புலவர்கள் பசியால் வருந்தி ஒருங்கு கூடி பாண்டியனை யடுத்தனர். பாண்டியன் அவர்களை அன்னைபோல் ஆதரித்துப் போற்றினன்.

பின்னர் மன்னன் அச்சங்கப் புலவர்களை அன்புடன் நோக்கி, "முத்தமிழ்வல்ல உத்தமசீலர்களே! இங்ஙனே எஞ்ஞான்று மிருந்து அமிழ்தினுமினிய தமிழ் நூல்களை யாய்மின்" என்றனன். புலவர் "புரவலரேறே" ஐந்திலக்கணங்களுள் பொருள் நடுநாயகமாக மிளிர்வது. எழுத்தும் சொல்லும் யாப்பும் அணியும் பொருள் மாட்டன்றோ? அப்பொருள் நூலின்றி யாங்கள் எவ்வாறு ஆய்வோம்?" என்று வருந்திக் கூறினர்கள். அரசன் ஆலவாயண்ணல் ஆலயத்தேகி, "தேவ தேவா! இக்குறையை தேவரீரே நீக்கியருளல் வேண்டும்; தமிழும் தமிழ்நாடும் தழைக்கத் தண்ணருள்புரிவீர்" என்று உள்ளம் உருகிக் கண்ணீர் வெள்ளம் பெருக முறையிட்டனன். அன்பர் கருத்தறிந்து அருளும் எம் சொக்கலிங்கப் பெருமான், இறையனுர் அகப்பொருள் என்னும் பொருள் நூலையருளிச் செய்து பீடத்தின் கீழ் வைத்தருளினுர்.

வடமொழி பாணினியாற் செய்த வியாகரணத்தை யுடைத்து; அப்பாணினியினும் பல்லாயிரமடங்கு மகத்துவமுடையவரும், கரத்தைச்சிறிது கவிழ்த்தலால் விந்தகிரியையும், நிமிர்த்தலால் ஏழ்கடலையும் அடக்கிய பேராற்றலும் பெருந்தவமுமுடையவருமாகிய அகத்திய முனிவரால் செய்யப்பெற்ற இலக்கணமேயன்றி, சிவமூர்த்தியார் செய்தருளிய இலக்கணத்தையும் உடையது இத்தமிழ் எனின் இதன் பெருமையையும் அருமையையும் அளக்கவல்லவர் யாவர்? அதனைத் தாய்மொழியாகக்கொண்ட எமது புண்ணியப்பேற்றைத்தான் அளக்கமுடியுமோ?

"அன்பி னைந்திணைக் களவெனப்படுவ
தந்தண ரருமறை மன்ற லெட்டினுட்
கந்தருவ வழக்க மென்மனுர் புலவர்"

என்ற சூத்திர முதலாக அறுபது சூத்திரங்களை யுடையது இறையனுர் அகப்பொருள். திருவலகிடச் சென்ற அந்தணர் அதனைக் கண்டு எடுத்தேகி அரசனிடம் அளித்தனர். அவன்

அளவற்ற மகிழ்ச்சியை யடைந்து, அதன் பொருள் எளிதில் விளங்காமையின் புலவர்களை நோக்கி, "இதற்கு உரை செய்மின்" என்று வேண்டினன். அங்ஙனமே நக்கீரர், கபிலர், பரணர் முதலிய நாற்பத்தொன்பதின்மரும் உரை செய்தனர். பிறகு அவர்களுக்குள் தங்கள் தங்கள் உரைகளே சிறந்தன என்று கலகம் உண்டாயிற்று. "இவர்கள் உரைகளை யாய்ந்து இதுவே சிறந்தது என்று முடிவு கூறுதற்கு இவரினும் சிறந்த கல்வி கரைகண்ட புலவர் யாண்டுளார்? என் செய்வேன்? ஆண்டவனே! தேவரீரே இக்கலகத்தை நீக்கி யருள் செய்ய வேண்டும்" என்று தென்னவனுகிய மன்னவன் முன்னவன் திருமுன் முறையிட்டனன்.

"வேந்தனே! இவ்வூரிலே உப்பூரிகுடிகிழார் மகனுவன் உருத்திரசன்மனை யழைத்துவந்து உரைகேட்பின் மெய்யுரை அவன் தெரிக்கும். அந்தப்பிள்ளை குமார சுவாமியாகும். மெய் யுரைக்குக் கண்ணீர் சொரிந்து உடல் கம்பித்து ஆனந்த மடைவன்" என்று அசரீரி கூறிற்று.

அதுகேட்ட புரவலனும் புலவரும் விம்மிதமுற்றுத் திருவருளைப் புகழ்ந்து, வணிகர் திருமனையில் அவதரித்து வளரும் உருத்திரஜன்மரிட மேகினர். அந்தக் குழந்தை, செங்கண்ணன்; புன் மயிரன்; ஐயாட்டைப்பருவத்தன்; மூகை போல்ஒன்றும்பேசலன்; இத்தகு முழுதுணர்புலவனும் முருகக் குழந்தையை அனைவரும் வணங்கி முறைப்படி அழைத்து வந்து, சங்கப்பலகையிலிருத்தி வாசநீராட்டி வெண்டுகில் வெண்மலர், வெண் சாந்து முதலியவற்ருல் அலங்கரித்து, போற்றிசெய்து புலவர் யாவரும் தத்தம் உரைகளை வாசித் தனர். உருத்திரசன்மராம் கந்தக் கடவுள் அவ்வுரைகளைக் கேட்டு வருவாராயினுர். சிலர் சொல் வைப்பைக் குறிப்பினுல் இகழ்ந்தார்; சிலர் சொல்லழகைப் புகழ்ந்தார்; சிலர் பொருளா ழத்தை உவந்தார்; சிலர் பொருளை வெறுத்தார்;கபிலர், பரணர் என்னும் புலவர்கள் வாசிக்கும்போது ஆங்காங்கு மகிழ்ந்து தலையை யசைத்தனர்; மதுரைக் கணக்காயன் மகனுர் நக்கீரனுர் தம்முரையை வாசித்தபோது ஒவ்வொரு சொல்லுக்கும் பொருட்சுவை நோக்கித் தலையசைத்து மெய்புளகித்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்து இதுவே உண்மை யுரையென விளக்கியருளினர். பாண்டியனும் பாவலரும் மெய்யுரை பெற்றேமென்று கழிபேருவகை யுற்றனர்.

நுழைந்தான்பொரு டொறுஞ்சொற்ருெறு நுண்டீஞ் சுவையுண்டே
தழைந்தானுடல் புலனைந்தினுந் தனித்தான் சிரம் பனித்தான்
குழைந்தான்விழி வழிவேலையுட் குளித்தான்றனை யளித்தான்
விழைந்தான்புரி தவப்பேற்றினை விளைத்தான் களி திளைத்தான்.

—திருவிளையாடற்புராணம்.

இனி, முருகவேள் உருத்திரஜன்மராக வந்தார் என்பது பற்றிச் சிறிது கூறுதும். ஓலமறைகளறைகின்ற ஒருவனும், மூவருங்காணாத முழு முதல்வனும் ஆகிய முருகவேள் உருத்திர ஜன்மராக வந்தார் என்பது அவருடைய முழு முதற்றன் மைக்கு இழுக்கன்ருேவெனின், இழுக்காகாது. முருக சாரூபம் பெற்ற அபரசுப்ரமண்யருள் ஒருவரே முருகவேள் அருள் தாங்கி உருத்திரஜன்மராக அவதரித்தனர். உக்கிரப்பெரு வழுதியாகவும், ஞானசம்பந்தராகவும் வந்தமையும் அங்ஙனமே. ஸ்ரீகண்டருத்திரர், வீரபத்திரர், வைரவர், ஆகியோர் செயல்களைப் பரசிவத்தின் செயலாக ஏற்றித் தேவார, திருவாசகங்கள் கூறுவதனால் பரசிவத்திற்கு இழுக்கில்லையாமாறு போல், அபரசுப்ரமண்யர்கள் சம்பந்தராகவும் உருத்திரசன்மராகவும், உக்கிரப்பெருவழுதியாகவும் வந்து ஆற்றிய அருஞ்செயல்களை பரசுப்ரமண்யத்தின் செயலாகத் திருப்புகழ் கூறுகின்றது. இதனைக் கூர்த்த மதி கொண்டு நுனித்து உணர்ந்து ஐயந்தெளிந்து அமைதியுறுக.''

''திருத்தகு மதுரைதன்னிற் சிவன்பொரு ணிறுக்கு மாற்றால்
உருத்திர சருமனாகி யுறுபொருள் விரித்தோன்''

—கந்தபுராணம்.

''செஞ்சொற் புலவர்கள் சங்கத் தமிழ்தெரி
செந்திற் பதிநக ருறைவோனே''

—(வஞ்சத்துட) திருப்புகழ்.

''உரைக்கச் செட்டிய னுய்ப்பன் முத்தமிழ்
மதித்திட் டுச்செறி நாற்கவிப்புணர்
ஒடுக்கத் துச்செறிவாய்த்தலத்துறை பெருமாளே''

—(வழக்குச்) திருப்புகழ்.

---

*அசரீரி கூறியதாக அந்நூலுக்கு உரைகண்ட நக்கீரர் பாயிரத்தில் கூறினர். இனி திருவிளையாடற் புராணத்துள் பெருமான் புலவர்போல் வந்து கூறியதாகவும் தனபதி என்னும் வணிகனுக்கும் குணசாலினிக்கும் மகனாகி வளர்ந்தார் என்றும் கூறும்.

"அரியதாதை தானேவ மதுரேசன்
அரிய சாரதாபீட மதனிலேறி யீடேற
அகிலநாலு மாராயு மிளையோனே"
—(மனகபாட) திருப்புகழ்.

"சடிலத் தவனிட் டவிசிட் டகுலத்
தொருசெட் டியிடத் தினுதித் தருள்வித்
தகருத் ரஜன்மப் பெயர் செப்பியிடப் பரிவாலே
சநகர்க்கு மகஸ்த் யபுலஸ்த் யசநற்
குமரர்க் குமநுக்ரக மெய்ப் பலகைச்
சதுபத்து நவப் புலவர்க்கும் விபத் தியில்ஞான
படலத் துறுலக் கணலக் யதமிழ்த்
த்ரயமத் திலகப் பொருள்வ் ருத்தியினைப்
பழுதற் றுணர்வித் தருள் வித்தகசற் குருநாதா"
—(கடலைச்சிறை) திருப்புகழ்.

கூராழியால் ........கோபாலராயன் :—

அருச்சுனன் தன் மகன் அபிமன்யுவை சயத்ரதன் நீதிக்கு மாருகப்பொருது கொன்றமையால், சினந்து "நாளை பொழுது சாய்வதற்குள் சயத்ரதனைக் கொல்லேனுயின் தீப்புகுந்து மாள்வேன்" என்று சூளுரை பகர்ந்து, பதினன்காவது நாள் துரியோதனன் சேனையை அழித்தேகுவானுயினன். நெடுந் தொலையில் சயத்ரத னிருந்தமையால் அவனைக் கொல்வது அரிது எனத் தேர்ந்த கண்ணபிரான் ஆழியால் ஆதித்தனை மறைத்தருளினர். தனஞ்சயன் தீப்புக முயலுகையில் சயத்ரதன் அருகிலடைந்தனன். அப்போது கண்ணபிரான் சக்கரத்தை விலக்கி அருச்சுனனைக் கொண்டு சயத்திரதனைக் கொல்வித்து உய்வுதந்தனர். விரிவை திருப்புகழ் விரிவுரை முதல் தொகுதி 39-ஆம் பக்கத்திற் காண்க.

முருக தலங்களுள் சிறந்தது விராலிமலை. அருணகிரியார் வயலூரில் தங்கியிருந்தபோது, கனவில் பெருமான் தோன்றி "நம் விராலிமலைக்கு வருக"என்று அருள்புரிந்தனர். அப்பரைத் திருவாமூருக்கு அரனுர் அழைத்ததுபோல. அருணகிரியார் உடனே எழுந்து விராலிமலைபோய் வழிபட்டனர்.

## கருத்துரை

சங்கப்புலவர் கலகந் தீர்த்த குருநாதரே! திருமால் மருகரே! விராலிமலை வேலவரே! தேவரீருடைய ஆறுமுகங்

களையும் பன்னிரு புயங்களையும், திருவடிகளையும். அம்மையார் இருவரையும் வேலையும் மயிலையும் உண்மை யறிவானந்த உருவையும் இடையருது அடியேன் நினைந்து உய்வேனுக.

## 117

பா தாள மாதி லோக நிகிலமு
மா தார மான மேரு வெனவளர்
பா டீர பார மான முலையினை விலைகூறிப்
பா லோடு பாகு தேனெ னினியசொ
லா லேய நேக மோக மிடுபவர்
பா தாதி கேச மாக வகைவகை கவிபாடும்
வே தாள ஞான கீனன் விதரண
நா தானி லாத பாவி யநிஜவன்
வீ ணுள்ப டாத போத தவமிலி பசுபாச
வ்யா பார மூடன் யானு முனதிரு
சீர் பாத தூளி யாகி நரகிடை
வீ ழாம லேசு வாமி திருவருள் புரிவாயே
தூ தாள ரோடு காலன் வெருவிட
வே தாமு ராரி யோட அடுபடை
சோ ராவ லாரி சேனை பொடிபட மறைவேள்விச்
சோ மாசி மார்சி வாய நமவென
மா மாய வீர கோர முடனிகல்
சூர் மாள வேலை யேவும் வயலியி லிளையோனே
கூ தாள நீப நாக மலர்மிசை
சா தாரி தேசி நாம க்ரியைமுதல்
கோ லால நாத கீத மதுகர மடர்சோலை
கூ ராரல் தேரு நாரை மருவிய
கா ளுறு பாயு மேரி வயல்பயில்
கோ ளுடு சூழ்வி ராலி மலையுறை பெருமாளே.

## பதவுரை

தூது ஆளரோடு காலன் வெருவிட - தன்னுடைய தூதர்களுடன் காலன் அஞ்சவும், வேதா - பிரமாவும், முராரி ஓட - திருமாலும் அஞ்சி ஓடவும், அடு படை சோரா - கொல்லவல்ல படைகள் சோர்ந்து, வலாரி சேனை பொடிபட - இந்திரனுடைய சேனைகள் பொடிபட்டு அழியவும், மறை வேள்வி-வேத மந்திரங்களுடன் கூடிய யாகங்கள், சோமாசிமார்-சோமயாக முதலியன செய்யும் பெரியோர்கள், சிவாயநம என - சிவாயநம என்ற ஐந்தெழுத்தைஓதித்துதிக்கவும்,மா மாய வீர கோரம் உடன் இகல்-பெரிய மாயங்களும் வீரமும் கோரமும் பொருந்தப் போர் செய்த, சூர்மாள - சூரபன்மன் இறக்கும்படி, வேலை ஏவும் - வேலாயுதத்தை விடுத்தருளிய, வயலியில் இளையோனே - வயலூரில் வீற்றிருக்கும் இளையவரே ! கூதாள - கூதாள மலரிலும், நீப - கடப்பமலரிலும், நாக மலர் மிசை - சுரபுன்னை மலரிலும், சாதாரி - சாதாரி என்ற பண், தேசி - தேசி என்ற பண், நாமக்ரியை முதல்-நாத நாமக்கிரியை என்ற பண் முதலியவற்றையும், கோலால - கோலாகலமாக, நாத கீத - நாதகீதங்களைப் பாடும், மதுகரம் அடர்சோலை - வண்டுகள் நிறைந்த சோலைகளும், கூர் ஆரல் தேரும் - மிகுதியாக ஆரல் மீன்களை ஆய்ந்து தேடுகின்ற, நாரை மருவிய - நாரை என்ற நீர்ப்பறவைகள் பொருந்திய, கான் ஆறு பாயும் - காட்டாறு பாய்கின்ற, ஏரி - ஏரிகளும், வயல் பயில் - வயல்களும் நெருங்கியுள்ள, கோனாடு சூழ் - கோனாட்டில் விளங்கும், விராலி மலை, உறை - விராலிமலையில் எழுந்தருளிருக்கும், பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே ! பாதாளம் ஆதி லோக நிகிலமும்-பாதாளம் முதலிய உலகங்கள் எல்லாவற்றுக்கும், ஆதாரம் ஆன - ஆதாரமாகிய, மேரு என வளர் - மேருமலை போல் உயர்ந்து வளர்ந்துள்ளதும், பாடீர - சந்தனம் அணிந்ததும், பாரம் ஆன - பாரமுள்ளதுமாகிய, முலையினை விலை கூறி - கொங்கையை விலை பேசி, பாலோடு பாகு தேன் என் இனிய சொலாலே - பால், சர்க்கரைப்பாகு, தேன் என்றவை போன்ற இனிய மொழிகளால், அநேக மோகம் இடுபவர் - எண்ணில்லாத மோகத்தைச் செய்பவர்களாகிய பொதுமாதருடைய, பாதாதி கேசம் ஆக-அடிமுதல் முடிவரையுள்ள உறுப்புக்களை, வகைவகை கவிபாடும் - வகை வகையாகப் புகழ்ந்து கவிகள் பாடுகின்ற, வேதாள - பேயன், ஞான கீனன்-அறிவு குறைந்தவன், விதரண நாதான் இலாதபாவி - விவேகமுள்ள நாக்கு இல்லாத பாவி, அநிஜவன் - உண்மையேயில்லாதவன், வீண் நாள் படாத போத தவம் இலி - வீணாள் உண்டாகாமற் காக்கும் அறிவும் தவமும் இல்லாதவன், பசு பாச வ்யாபார மூடன் - உயிரைப் பற்றியும் உலகத்தைப் பற்றியுமே பேசி வியாபாரஞ் செய்கின்ற மூடனாகிய, யானும் - அடியேனும், உனது இருசீர்பாத தூளி ஆகி - தேவரீருடைய இரு சிறந்த திருவடிகளின் தூளியாகும் பேறு பெற்று, நரகு இடை வீழாமலே - நரகத்தில் வீழாதபடி, சுவாமி-உடையவரே ! திருஅருள் புரிவாயே - திருவருள் புரிந்தருள்வீராக.

## பொழிப்புரை

தனது தூதர்களுடன் காலன் அஞ்சவும், பிரமனும் திருமாலும் அஞ்சி ஓடவும், கொல்லவல்ல ஆயுதங்கள் சோர்ந்துபோய் இந்திரனுடைய சேனைகள் பொடிபட்டு அழியவும், வேதமந்திரங்களுடன் கூடிய யாகங்கள், சோமயாகம் முதலிய செய்யும் பெரியோர்கள் சிவாயநம என்று துதி செய்யவும், பெரிய மாயங்களைச் செய்து வீரமாகவும் கோரமாகவும் போர்புரிந்த சூரபன்மன் மாளும்படி வேலைவிடுத்தருளிய இளையவரே! வயலூரில் எழுந்தருளிய இளையவரே! கூதாள மலரிலும், கடப்ப மலரிலும், சுரபுன்னை மலரிலும் மொய்த்து, சாதாரிப் பண், தேசி, நாதநாமக்கிரியை முதலிய பண்களையும் கோலாகலமாகப் பாடி நாதகீதங்களை ஒலிக்கின்ற வண்டுகள் நிறைந்த சோலைகளும், மிகுந்த ஆரல் மீன்களை ஆய்ந்து இரையாகத் தேடுகின்ற நாரைகள் வாழ்கின்ற காட்டாறுகள் பாயும் ஏரிகளும், வயல்களும் நெருங்கியுள்ள, விராலிமலையில் வீற்றிருக்கும் பெருமிதமுடையவரே! பாதாளம் முதலிய உலகங்கள் எல்லாவற்றுக்கும் ஆதாரமாகிய மேருமலைபோல் உயர்ந்து வளர்ந்துள்ளதும், சந்தனக்குழம்பு பூசப்பெற்றதும், பாரமுடையதுமாகிய கொங்கையை விலைபேசி, பால், சர்க்கரைப் பாகு, தேன் போன்ற இனிய மொழிகளால் எண்ணற்ற மோகத்தைச் செய்கின்ற பொது மகளிரின், அடிமுதல் முடிவரையுள்ள அங்கங்களைச் சிறப்பித்துக் கவிகள் பாடுகின்ற பேயனும், அறிவில்லாதவனும், விவேகமுடைய நாக்கு இல்லாத பாவியும், உண்மையில்லாதவனும் வீண் நாளையகற்றும் அறிவும் தவமும் இல்லாதவனும், உயிரைப்பற்றியும் உலகத்தைப் பற்றியுமே பேசி வியாபாரஞ் செய்கின்றவனும் ஆகிய அடியேன், தேவரீருடைய சிறந்த இரு திருவடிகளின் துகளாகும் பேற்றினைப் பெற்று, நரகில் விழாதவண்ணம், என்னையுடையவரே! உமது திருவருள் புரிவீராக.

## விரிவுரை

பாதாளமாதி லோக நிலைமு மாதாரமான மேரு :—

பாதலம் முதலிய எல்லா உலகங்களுக்கும் மேருமலை ஆதாரமாகி நிற்கின்றது. அந்த உலகங்கள் யாவும் மேரு மலையில் கோத்து நிலைபெறுகின்றன. மேரு நடுத்தூண்போல் நிற்கின்றது.

" மகா மேரு பறியுண்ண உலகு நிலை குலையும் " —தக்கயாகப்பரணி.
" மேருத்தூண் ஒன்று நடுநட்டு " —மீனாட்சியம்மன் பிள்ளைத்தமிழ்.
" மேரு நடு நாடி " —திருமந்திரம்.

மோகமிடுபவர் :—

பொதுமகளிர் மேருமலை போன்ற தனத்தை விலை கூறியும் பால், பாகு, தேன்போல் இனிக்க இனிக்கப் பேசியும் தம்மை நாடி வந்தவர் சொக்கிப் போகுமாறு மோகிக்கச் செய்வார்கள்.

பாதாதிகேசமாக வகை வகை கவிபாடும் :—

மாதர்களின் பாதம் முதல் கூந்தல் வரையுள்ள அங்கங்களைத் தனித்தனியே வருணித்துக் கவிகள் பாடிப் புலவர்கள் தாம் கற்ற தமிழை அவமாக்குவர்.

உதிர்வதும், நரைப்பதுமாகிய கூந்தலை மேகம் என்றும், பாக்கின்பாளையென்றும், கொடிப்பாசியென்றும், பல்வேறு உவமைகள் கூறுவர். இவ்வாறு கண், நெற்றி, நாசி, காது, பற்கள், இதழ், கழுத்து முதலிய உறுப்புக்களை விதவிதமாக உவமை கூறிப் பாடுவார்கள். நைடதம் முதலிய நூல்கள் இதற்குச் சான்று.

ஞானஹீனன் :—

ஞானஹீனன் - அறிவற்றவன்.

இயற்கையாயுள்ள எம்பெருமானைப் பாடாமல், செயற்கையழகைப் பாடுவதனால் அறிவற்றவன்.

விதரண நாதான் இலாத பாவி :—

விதரணம் - விவேகம்.

உயர்ந்த தமிழால் இழிந்த பொருள்களைப் பாடுவதனால் அறிவற்ற நாவை யுடையவன்.

## நாக்கு இறைவன் தந்தது

உடம்பில் எல்லாப் பகுதிகளிலும் நரம்புகள் உண்டு. நாக்கை மட்டும் இறைவன் நரம்பின்றிப் படைத்தான். ஏன்? நரம்புள்ள பகுதிகள் சுளுக்கிக் கொள்ளும். கழுத்து சுளுக்கும்; கை சுளுக்கும்; கால் சுளுக்கும்.

நாக்குக்கு நரம்பிருந்தால் சுளுக்கிவிடும். பேசமுடியாத அவல நிலை அடிக்கடி வரும். பேச்சுத் தடைபட்டுப் போகும். அதனால், இறைவன் கருணையோடு பேசுங் கருவியாகிய நாவை நரம்பின்றிப் படைத்தருளினான். அப் பரமன் தந்த நாவால் அவனையே இல்லையென்று கூறுவது எத்துணைப் பேதைமை? சிந்தியுங்கள். அவன் தந்த நாவால் அவனை வாழ்த்த வேண்டும்.

" வார்கழல் வாய் வாழ்த்தவைத்து " —திருவாசகம்.

" நாக்கைக் கொண்டரன் நாமம் நவில்கிலார் " —அப்பர்.

இறைவனுடைய திருநாமங்களைச் சொல்லாத நாக்கு என்ன நாக்கு என்று வடலூர் வள்ளலார் பாடுகின்றார்.

அநிஜவன் :—

நிஜம்-மெய்; அநிஜவன் - உண்மை இல்லாதவன். அகரம் இன்மைப் பொருளில் வந்தது. நியாயம் இல்லாதது அநியாயம். அதுபோல் நிஜம் இல்லாதது அநிஜம்.

விணாள்படாத போத தவமிலி :—

அறிவு-வீணாள்படாமல் தடுக்கும். தவத்தைக் கொடுக்கும். ஆதலால் அறிவும் தவமும் இல்லாதவன் என்றார்.

பசுபாச வ்யாபார மூடன் :—

பசு-உயிர்; பாசம் உலகம். உயிரின்மீது பற்று வைத்தும், உலகப் பொருள்களின்மீது பற்று வைத்தும், அவைகளுக்காகப் பாடுபட்டுத் திரிகின்றவன்.

சீர்பாத தூளியாகி :—

இந்தசொல் மிக உயர்ந்த சொல். நாம் இறைவனுடைய சீர்பாத தூளியாக ஆகவேண்டும். ஆக மிக உயர்ந்த சொல். அடியார்களின் அடிப்பொடியாக ஒரு ஆழ்வார் விளங்கினார். தொண்டரடிப்பொடியாழ்வார்.

அடியார்களின் சீர்பாதத்தூளி சென்னியில் படுமாயின் சகல பாவங்களும், பானுவைக்கண்ட பனிபோல் நீங்கும்.

நரகிடை வீழாமலே சுவாமி திருவருள் புரிவாயே :—

குற்றம் புரிந்தோர் சிறைச்சாலை புக அரசாங்கத்தார் தண்டிப்பதுபோல, பாவம் புரிந்தோர் இருள் உலகமாகிய நரகம் புக இறைவனுடைய ஆணை ஒறுக்கும்.

அசிபத்தியம், கும்பிபாகம், ரௌரவம் முதலிய பல நரகங்கள் உள. தீவினை புரிந்தோர் அவற்றில் சென்று பெருந்துயரங்களை நுகர்வார்கள்.

இத்தகைய கொடிய நரகில் புகுதாவண்ணம் காத்தருள்வீர் என்று அடிகளார் இறைவனிடம் முறையிடுகின்றார்.

முராரி :—

முரன் என்ற அசுரனைத் திருமால் வதைத்தார். அதனால் முராரி என்று பேர்பெற்றார்.

வலாரி :—

வலன் என்ற அசுரனை வதைத்ததனால் இந்திரன் வலாரி என்று பேர்பெற்றனன்.

வலன் என்ற அசுரன் தான் இறந்தால் தன் உடல் நவமணிகளாகுமாறு வரம் பெற்றிருந்தான். இந்திரன் அவனை வஞ்சனையால் யாகப் பசுவாகுமாறு செய்து, யாகத்தில் வதைத்தான்.

யாகத்தில் மறைந்த இவன் உடல் விலையுயர்ந்த இரத்தினங்கள் ஆயின.

உதிரம்-மாணிக்கமாயிற்று
பற்கள்-முத்துக்களாயின
மயிர்கள்-வைடூரியங்களாயின
எலும்புகள்-வைரங்களாயின
பித்தம்-மரகதமாயிற்று
மாமிசம்-கோமேதகமாயிற்று
தசைகள்-பவளமாயின
கண்கள்-நீலமாயின
கபம்-புஷ்பராகமாயிற்று.

சோமாசிமார் :—

சோமாசிமார்-சோமயாகஞ் செய்பவர்கள். வேதாகமங்களில் விதித்தவாறு சிவயாகங்களை நியம நியதியுடன் செய்கின்ற மறையோர் சோமாசி—சோமயாசியெனப் பேர் பெறுவர்.

சோமயாகம்-தேவர்பொருட்டுச் சோமரசம் அளிக்கும் வேள்வி.

சோமம்-யாகங்களில் தேவதைகளுக்கு நிவேதித்துப் பின் பருகுதற்குரிய இரசம் சித்தஞ் செய்யுங் கொடி.

பெரிய புராணத்தில் சோமாசிமாற நாயனுர் என்று ஒருவர் இருந்தார் என்பது உலகறிந்த உண்மை.

கூதாளம் :–

கூதளம் என்பது ஒரு மலர். சங்கு போன்ற வடிவுடன் இருக்கும். "கூதாள கிராத குலிக்கு இறைவா" என்று அநுபூதியிலும் கூறியுள்ளார்.

நாகம் : -

நாகம்–சுரபுன்னே.

சாதாரி :–

சாதாரி என்ற பண் இப்போது காமவர்த்தனி யென்று வழங்குகின்றது. காமவர்த்தனியை இப்போது பந்துவராளி என்று பிழைபடக் கூறுகின்ருர்கள்.

தேசி :—

தேசி என்பது ஒருவகை இராகம்.

நாதநாமக்ரியா :–

இது நிஷாதாந்தராகம். மாயாமாளவ கௌளேயில் பிறந்தது.

கூராரல் தேரு நாரை :–

கூர்-மிகுதி; ஆரல் - ஒரு வகை மீன். நாரை என்ற பறவை வெள்ளிய சிறகையும், பசிய காலேயும் சிவந்த வாயையும் உடையது.

இது ஆரல் மீனேயும், கெண்டை மீனேயும், நெற்கதிர்களேயும் உண்ணும்.

கோனுடு :–

"பகுவாய் நாரை ஆரல் வாரும் பாசூரே" —திருஞானசம்பந்தர்

"ஆரல் அருந்த வயிற்ற நாரை" —குறுந்தொகை

எறும்பீசர் மலேக்கு மேற்கு; மதிற்கரைக்குக் கிழக்கு; காவிரி நதிக்குத் தெற்கு; பிரான் மலேக்கு வடக்கு. இந்த நான்கு எல்லேக்கு உட்பட்டது கோனுடு என்று கொங்கு மண்டல சதகம் கூறுகின்றது.

கருத்துரை

விராலிமலேயுறை வேலவரே! அடியேன் நரகில் விழாத வண்ணம் அருள்புரிவீர்.

## 118

இலாபமில் பொலாவுரை சொலாமன தபோதன
  ரியாவரு மிராவுபக — லடியேனை
இராகமும் விநோதமு முலோபமு டன் மோகமு
  மிலானிவ னுமாபுருஷ — னெனஏய
சலாபவ மலாகர சசீதர விதாரண
  சதாசிவ மயேசுரச — கலலோக
சராசர வியாபக பராபர மநோலய
  சமாதிய நுபூதிபெற — நினைவாயே
நிலாவிரி நிலாமதி நிலாதவ நிலாசன
  நியாயப ரிபாலஅர — நதிசூடி
நிசாசர குலாதிப திராவண புயாரிட
  நிராமய சரோருகர — னருள்பாலா
விலாசுகம் வலாரெனு முலாசவி தவாகவ
  வியாதர்கள் விநோதமகள் — மணவாளா
விராவுவ யலார்புரி சிராமலை பிரான்மலை
  விராலிம லைமீதிலுறை — பெருமாளே.

### பதவுரை

நிலா விரி நிலாமதி-சந்திரிகை விரிந்து ஒளிசெய்கின்ற பிறைச் சந்திரனையும், நிலாத அநில அசனம் - நில்லாது அலைகின்ற காற்றை உணவாகக் கொள்ளுபவனும், நியாய பரிபால - நியாயத்தைக் காக்கவல்லவனும் ஆகிய, அர - ஆதிசேடனாகிய பாம்பையும், நதி சூடி - கங்காநதியையும் சூடினவரும், நிசாசர குல அதிபதி - அரக்கர் குலத்துக்குத் தலைவனான. ராவண புய அரிட-இராவணனுடைய தோள்களை வருந்தச் செய்தவரும், நிர் ஆமய-நோயற்றவரும், சரோருக அரன் - தாமரையில் வீற்றிருப்பவருமான சிவ பெருமான், அருள் பாலா - அருளிய புதல்வரே! வில் ஆசுகம் வலார் எனும்-வில்லிலும் அம்புகள் விடுதலிலும் வல்லவர் என்னும், உலாச இத - மகிழ்ச்சியினால் இன்பங்கொண்டு, ஆகவ - போர் செய்யும், வியாதர்கள் - வேடர்களின், விநோத மகள் மணவாளா - அற்புதப் புதல்வியாகிய வள்ளி நாயகியின் கணவரே ! விராவு வயல் ஆர்புரி - பொருந்திய வயலூர், சிரா மலை - திரிசிராப்பள்ளி, பிரான் மலை - கொடுங்குன்றம் இவைகளில் வாழ்வது

டன், விராலிமலை மீதில் உறை - விராலிமலையின் மேலும் வாழ்கின்ற, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! இலாபம் இல் பொலா உரை சொலா மன தபோதனர் - பயன் இல்லாத பொல்லாத மொழிகளைச் சொல்லாத மனத்தையுடைய தவமுனிவர்கள், இயாவரும் - எல்லோரும், இராவு பகல் - இரவும் பகலும், அடியேனை - அடியேனைக் குறித்து, இவன், இராகமும் - ஆசையும், விநோதமும் - விளையாடல்களும், உலோபமுடன்- உலோபகுணமும், மோகமும் இலான் - காம மயக்கமும் இல்லாதவன், இவனும் மா புருஷன் என ஏய - இவனும் ஒரு உயர்ந்த உத்தம புருஷன் என்று சொல்லும் சொல் பொருந்தும்படியாக, சலாபம்-இனியகுணத்ததான, அமல ஆகர - தூய்மைக்கு இருப்பிடமான, சசிதர - சந்திரனைத்தரித்த, விதாரண - கருணை நிறைந்தவரே! சதாசிவ - சதாசிவமாக இருப்பவரே! மயேசுர - மகேச்சுரரே! சகல லோக - எல்லாவுலகங்களிலும் உள்ள, சர அசர வியாபக-இயங்குவன நிலைத்திருப்பன அனைத்திலும் கலந்திருப்பவரே! பராபர - பரம் பொருளே! மனோலய சமாதி அநுபூதி பெற நினைவாயே - மனம் ஒடுங்கிய சமாதியில் ஒன்றுபடும் நிலையை அடியேன் பெறுமாறு நினைத்தருள வேணும்.

## பொழிப்புரை

சந்திரிகை விரிந்து ஒளி செய்யும் பிறைச்சந்திரனையும், நிலை பெருது அலைகின்ற காற்றைப் பருகுகின்றவனும், நீதி நெறிகளைக் காப்பவனுமான ஆதிசேடனையும், கங்கா நதியையும் சூடியவரும், அரக்கர் குலத் தலைவனான இராவணனுடைய தோள்கள் வருந்துமாறு செய்தவரும், நோயற்றவரும், தாமரையில் வாழ்பவருமாகிய சிவபெருமானுடைய குமாரரே! வில்லில் அம்பு விடுவதில் வல்லவர்களும், மனமகிழ்ச்சியுடன் போர் புரிபவருமான வேடர்களின் அற்புதமான குமாரியாகிய வள்ளிபிராட்டியின் கணவரே! பொருந்திய வயலூரிலும், திரிசிராமலையிலும், பிரான்மலையிலும், விராலிமலையிலும் வீற்றிருக்கும் பெருமிதமுடையவரே! பயனற்ற வார்த்தைகளைச் சொல்லாத நன்மனமுடைய தவமுனிவர் யாவரும் இரவும் பகலும் அடியேனைக் குறித்து, இவன், ஆசையும், விளையாடல்களும், உலோபமும், மோகமும் இல்லாத பெரிய புருஷன் என்று கூறும் சொல் எனக்குப் பொருந்துமாறு, இனிய குணத்ததான, தூய்மைக்கு இருப்பிடமான சந்திரனைத் தரித்த கருணை நிறைந்தவரே! சதாசிவமூர்த்தியே! மகேச்சுரரே! எல்லா வுலகங்களிலும் உள்ள அசையும் பொருள் அசையாத பொருள் என்ற எல்லாவற்றிலும் நிறைந்திருப்பவரே! பரம் பொருளே! மனம் ஒடுங்கிய சமாதியில் ஒன்றி நிற்கும் நிலையை அடியேன் பெறத் தேவரீர் நினைந்தருளவேண்டும்.

## விரிவுரை

இலாபமில் பொலாவுரை :—

**பயனில்லாத தீய சொற்களைப் பேசுவர் சிலர்.**

பயனில் சொல் பாராட்டுவானை மகனெனல்
மக்கட் பதடி யெனல். —திருக்குறள்.

தபோதனர் :—

**வீண் வார்த்தை பேசாத தவமுனிவர் பயனுடைய சொற்களையே பகர்வார்கள்.**

அடியேனை இராகமும் விநோதமு முலோபமுடன் மோகமு மிலானிவனுமா புருஷ னெனஏய :—

**தவமுனிவர்கள் என்னைப் பார்த்து, "இவன் ஆசை, களியாட்டம், உலோபம், மோகம் முதலிய குற்றங்கள் இல்லாதவன்; உத்தமமான சிறந்த புருஷன்" என்று புகழ வேண்டும். பெரியோர்களால் பாராட்டப்பட வேண்டும்.**

மநோலய சமாதிய நுபூதி பெற :—

**அஷ்டாங்க யோகத்தில் சமாதி எட்டாவது படி. அங்கு மநோலயம் உண்டாகும்.**

" பகரொணுதது சேர வொணுதது
நினையொ ணுதது வானதயாபர
பதியதான சமாதி மநோலயம் வந்து தாராய் "
—( தறையின்மா ) திருப்புகழ்.

நிலாகிரி நிலாமதி :—

**நிலா – சந்திரிகை. அமிர்த சீத ஒளியை உலகெங்கும் பரப்புகின்ற சந்திரன்.**

நிலாதவ நிலாசன :—

**நிலாத அநில அசன.**

**எங்கும் நில்லாமல் அலைகின்ற காற்றை ஆகாரமாகக் கொள்ளும் பாம்பு.**

**பாம்புக்குக் காற்று ஆகாரம்.**

"காலே மிகவுண்டு காலே இலாத கணபணம்"
—கந்தரலங்காரம் (41)

நியாய பரிபால அர :—

அர — பாம்பு: இது ஆதிசேடனைக் குறிக்கின்றது. ஆதி சேடன் நாகராஜன். சிறந்த நியாயத்தைப் பரிபாலிக்கின்றவன். நல்ல அறிஞன். அறப்பண்புள்ளவன்.

ஆதிசேடனைச் சிவபெருமான் நாகாபரணமாக அணிந்திருக்கின்றார்.

"வாயுவான பஞ்சடைத்துத் திருமால் துயிலும் மலரணையே
ஆயவிடமாம் யாக்கையமைத் தரனார் அணியும் அரும்பணியே"
—செவ்வந்திப்புராணம்.

ராவண புயாரிட :—

அரிட்டம் - கேடு. இராவணன் சிவபெருமானை மதியாது வெள்ளிமலையைப் பேர்த்து எடுத்தான். சிவபெருமான் புன்னகை புரிந்து திருவடியின் விரலின் நகத்தினால் சிறிது ஊன்றினார். அவன் புயம் நெரிந்து ஓ என்று கதறி அழுதான். அழுததனால் "இராவணன்" என்று பேர் பெற்றான். விளக்கத்தைத் திருப்புகழ் விரிவுரை 5-ம் தொகுதி 24-ம் பக்கத்தில் பார்க்கவும்.

"அருவரை யெடுத்த வீர னெரிபட விரற்களூனு மரன்"—திருப்புகழ்.

சரோருகரன் :—

சரோருகம் - தாமரை: சிவபெருமான் தாமரையில் வீற்றிருக்கின்றார்.

"பதுமநன்மலரது மருவிய சிவன்" —திருஞானசம்பந்தர்.

விலாசுகம் வலார் :—

வில் ஆசுகம். ஆசுகம் - அம்பு. வில்லிலிருந்து அம்புவிடுவதில் வல்லவர்கள் வேடர்கள்.

ஆகவ வியாதர்கள் :—

ஆகவம் - போர். வியாதர் வேடர். வேடர்கள் போர் புரிவதில் சமர்த்தர்கள்.

விராவு வயலார் புரி சிராமலை பிரான்மலை :—

வயலூர், திருச்சிராப்பள்ளி, பிரான்மலை யென்ற கொடுங்குன்றம் இவைகள் விராலிமலைக்கு அருகில் விளங்குகின்றன.

## கருத்துரை

விராலிமலையுறை விமலா! சமாதி மனோலயம் அடியேனுக்குக் கிடைக்க அருள்புரிவீர்.

## 119

நிராமய புராதன பராபர வராம்ருத
நிராகுல சிராதிகப் ப்ரபையாகி
நிராசசி வராஜத வராஜர்கள் பராவிய
நிராயுத புராரியச் சுதன்வேதா
சுராலய தராதல சராசர பிராணிகள்
சொருபமி வராதியைக் குறியாமே
துரால்புகழ் பராதின கராவுள பராமுக
துரோகரை தராசையுற் றடைவேனோ
இராகவ இராமன்முன் இராவண இராவண
இராவண இராஜனுட் குடன்மாய்வென்
றிராகன்ம லராணிஜ புராணர்கு மராகலை
யிராஜசொ லவாரணர்க் கிளையோனே
விராகவ சுராதிப பொராதுத விராதடு
விராயண பராயணச் செருவூரா
விராவிய குராவகில் பராரைமு திராவளர்
விராலிம லைராஜதப் பெருமாளே.

### பதவுரை

இராகவ இராமன் முன் - இரகுவின் மரபில் வந்த இராமபிரான் முன்ஞளில், இராவண - அழுகுரலுற்றவனும், இராவண - இராவின் வண்ணமுடையவனுமாகிய, இராவண இராஜன் - இராவணன் என்ற அரசன், உட்குடன் மாய் வென்ற - அச்சப்பட்டு மாயும் படி வென்ற, இராகன் - அன்பு உடையவரான திருமாலின், மலர் ஆள் நிஜபுராணர் - கண்ணையே மலராகக் கொண்டருளிய பழைய வரலாற்றை யுடைய சிவபெருமானுடைய, குமரா - புதல்வரே! கலை இராஜ - கலைகளுக்குத் தலைவரே! சொல் அ வாரணர்க்கு இளையோனே - புகழப்படும் அந்த யானை முகவர்க்கு இளையவரே! விராகவ - ஆசையில்லாதவரே! சுர அதிப - தேவர்கட்குத் தலைவரே! பொராது - போர் புரியாமலே, தவிராது - தவறுதல் இல்லாமலே, அடு - வெல்லவல்ல, விர அயண பராயண - வீர வழியில் விருப்பம் உடையவரே! செரு ஊரா - திருப்போரூரில் உறைபவரே! விராவிய குரா - கலந்து விளங்கும் குராமரமும், அகில் - அகில் மரமும்,

பராரைமுதிராவளர்-பருத்த அடிமரத்துடன் முதிர்ந்து வளருகின்ற, விராலி மலை - விராலிமலையில் வாழ்கின்ற, ராஜத-அரச குணமுடைய, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே ! நிர்ஆமய - நோயில்லாததும், புராதன-பழமை யானதும், பராபர - எல்லாவற்றுக்கும் மேலானதும், வர அம்ருத - வரத்தைத்தரும் அழிவில்லாததும், நிர் ஆகுல - கவலையில்லாததும், சிர அதிக - முதன்மையாகிச் சிறந்ததும், ப்ரபை ஆகி - ஒளிமயமாய் விளங்கி, நிர் ஆச - ஆசையற்றதும், சிவராஜ - சிவத்துடன் மகிழும், தவ ராஜர் கள் - தவ வேந்தர்கள், பராவிய - புகழுகின்றதும், நிர் ஆயுத புர அரி - ஆயுதத்தை விடாமலேயே புரங்களை எரித்த சிவன், அச்சுதன் - திருமால், வேதா - பிரமன், சுர ஆலய - தேவலோகம், தராதல - மண்ணுலகம், சர அசர பிராணிகள் = இயங்குவன, நிலைத்திருப்பன ஆகிய உயிர்கள், சொருபம் இவர் - இந்த உருவங்களில் கலந்துள்ளதும் ஆகிய, ஆதியை குறியாமே - ஆதிப்பொருளை அடியேன் குறித்துத் தியானிக்காமல், துரால் புகழ் - பயனற்ற புகழைக் கொண்டு, பர ஆதீன - பிறருக்கு அடிமைப்பட்டு, கராஉள-முதலைபோன்ற உள்ளத்தை உடையவனாய், பராமுகதுரோகரை - அலட்சியம் புரியும் பாவிகளை, தராசைஉற்று அடைவேனோ - மண்ணாசை கொண்டு சேர்வேனோ ?

## பொழிப்புரை

இரகுவின் மரபில் வந்த இராமர் முன்பு, அழுதவனாகிய இராவின் நிறமுடைய இராவணன் என்ற அரசன் அச்சப்பட்டு மாயும்படி வென்ற அன்புடைய திருமாலின் கண்ணையே மல ராகக் கொண்டு ஆண்டருளிய, உண்மையான பழைய புகழு டைய சிவபிரானுடைய திருக்குமாரரே! கலைகளின் தலைவரே! புகழ்பெற்ற விநாயகமூர்த்திக்கு இளையவரே! ஆசையில்லாத வரே! தேவர்கட்குத் தலைவரே! போர்புரியாமல், தவறுதல் இல் லாமல் வெல்லவல்ல வீரவழியில் விருப்பம் உள்ளவரே! திருப் போரூரரே! கலந்து விளங்கும் குரா, அகில் முதலிய மரங் கள் பருத்து அடியுடன் வளர்ந்து முதிர்ந்துள்ள விராலிமலையில் வீற்றிருக்கும் அரசரே! பெருமிதமுடையவரே! நோயில்லாத தும், பழமையானதும், எல்லாவற்றுக்கும் மேலானதும், வரத் தைத் தருவதும், அழிவற்றதும், கவலையில்லாததும், சிறந்த முதன்மையானதும்; ஒளிமயமாக விளங்கி ஆசையற்றதும், சிவமயமான முனிவர்கள் புகழ்வதும், ஆயுதம் இன்றிப் புரங் களை எரித்த சிவன், திருமால், பிரமன், விண்ணுலகம், மண் ணுலகம், அசையும் உயிர்கள், அசையாத வுயிர்கள் ஆகிய அனைத்திலும் கலந்து விளங்குவதுமாகிய ஆதிப்பொருளை அடியேன் தியானிக்காமல், பயனில்லாத புகழைக் கொண்டு

பிறருக்கு அடிமைப்பட்டு முதலின் கொடிய உள்ளத்தை யுடையவராய் வேறுமுகமாய்த்திரியும் பாவிகளுடன்மண்ணுசை யினல் சேர்வேனே? (சேரமாட்டேன்).

## விரிவுரை

இந்தத் திருப்புகழில் சுவாமிகள்எப்பொருட்கும் மூலமாகிய இறையைத் தியானிக்க வேண்டும் என்று உபதேசிக்கின்ருர். இப்பாடல் பூராவும் தனதன தனதன என்ற சந்தத்தால் ஆனது. இதே சந்தத்தில் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமி களும், "நிராமய பராபர புராதன" என்று ஒரு தேவாரம் அருளிச்செய்திருக்கிருர்.

நிராமயம் :-

ஆமயம்-நோய். நோயில்லாதது நிராமயம்.

புராதன :-

புராதனம்-பழமையானது. இறைவன் முன்னைப்பழம் பொருட்கு முன்னைப்பழம் பொருளாக விளங்குபவன்.

பராபர :-

பரம்-மேலானது. பராபரம்-மேலான பொருள் அனைத்துக் கும் மேலான பொருள்.

வராம்ருத :-

அம்ருதம்-அழிவில்லாதது. அடியார்க்குக் கேட்ட வரங்களை யருளவல்ல அழியாத பொருள் இறை.

சிராதிக :-

சிரம்-தலைமையானது, அதிகம்-மேம்பட்டது. மேலான முதற்பொருள்.

நிராச :-

ஆசையில்லாதது நிராசை. இறைவன் ஒன்றிலும் விருப் பில்லாதவன்.

சிவராஜதவராஜர்கள் பராவிய :-

சிவத்துடன் ஒன்றிய தவமன்னர்கள் துதி செய்கின்ற பொருள்.

நிராயுதபுராரி :-

ஆயுதம் இன்றி சிரித்துப் புரங்களை எரித்தவர் சிவமூர்த்தி.

அச்சுதன் :-

அச்சுதன்—அழிவில்லாதவன். திருமால்.

வேதா :-

வேதங்களில் வல்ல பிரமன்.

சொரூபமிவர் :-

விண் மண் சராசரம் ஆகிய எல்லாவற்றிலும் கலந்தவர் இறைவர். இவர்தல்-கலத்தல்.

"கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக் கனைகடலைக்
குலவரையைக் கலந்து நின்ற பெரியானை" —அப்பர்.

எல்லாவற்றிலும் இறைவன் கலந்து நிற்பினும் உலக மாயை அவரைப்பற்றாது.

கடலில் பிறந்து, உவர்நீரைப் பருகி, உவர்நீரிலே வாழுகின்ற கடல் மீனுக்கு உவர் பற்றாததுபோல், இறைவன் எங்கும் கலந்து நிற்பினும் உலகமாயை அவரைச் சேராது என்று அறிக.

ஆதியைக் குறியாமே :-

ஆதிப்பொருளாகிய இறைவனைத் தியானித்து அசைவற்றிருக்க வேண்டும். இதுவே உய்யும் நெறி.

துரால்புகழ் :-

துரால்—செத்தை, செத்தைபோன்ற பயனற்ற புகழைப் பெற்று பலர் வாடுகின்றார்கள்.

பராதின :-

பிறருக்கு அடிமைப்பட்டு நிற்கின்றார்கள்.

கராவுள:—

கரா-முதலை. முதலைபோன்ற கடினமனம் படைத்தவர்கள். "முதலையும் மூர்க்கனும் கொண்டது விடா" என்பது பழமொழி. அதுபோல் தீமையை விடாது பற்றிக்கொண்டிருக்கும் உள்ளம் கராவுளம்.

பராமுகம்:—

இறைவனை நோக்காமல் வேறுவழியில் திரும்பிய முகம் பராமுகம்.

துரோகரை தராசையுற்றடைவேனோ:—

தரை-ஆசை-தராசை. மண்ணின்மீது ஆசைவைத்த பாவிகளை அடைதல் கூடாது.

இராகவ இராமன்:—

இரகு என்பவன் சூரியகுலத்துத் தோன்றிய சிறந்தமன்னன். அவன் குலத்திற்பிறந்தவர் இராமர். அதனால் இராகவர் என்று பேர் பெற்றார். இராமன்—அழகுடையவன்.

இராவண இராவண இராவண இராஜன்:—

இராவணன்-அழுதவன். இராவணன்-இரவின் கரிய நிற முடையவன். இராவண இராஜன்-இராவணனாகிய அரசன். இராவணனைப்பற்றிய விளக்கத்தைத் திருப்புகழ் விரிவுரை ஐந்தாம் தொகுதி 24ம் பக்கம் பார்க்கவும்.

இராகன்மலராணிஜபுராணர் :—

இராகன் மலர் ஆள் நிஜ புராணர். இராகம்—அன்பு. திருமால் சக்கராயுதம் பெறும்பொருட்டுத் திருவீழிமிழலையில் தினம் ஒன்றுக்கு ஆயிரம் தாமரை மலர்களைக் கொண்டு அருச்சித்து, சிவமூர்த்தியை வழிபட்டு வந்தார்.

அவருடைய அன்பைக்காணும் பொருட்டுச் சிவபெருமான் ஒருமலரை மறைத்தருளினார். அர்ச்சனை புரிந்துகொண்டிருந்த திருமால் ஒருமலர் குறைந்தது கண்டு, தாமரைமலர் போன்ற தமது விழியை எடுத்து அருச்சித்தார். சிவபெருமான் அவருடைய அன்புக்கு உவந்து சக்கராயுதத்தை வழங்கியருளினார்.

''நயனார்ப்பணம்'' என்ற இந்தச் செய்தியை ஆதிசங்கரர் சிவானந்தலகரியிலும் கூறுகின்றார்.

" ........................ மாசலந்தரன் நொந்துவிழ
உடல்தடியுமாழி தாவெனம்புய
மலர்கள் தசநூறு தானிடும்பகல்
ஒருமலர் இலாது கோவணிந்திடு செங்கண்மாலுக்
குதவிய மகேசர் " (படர்புவியின்)—திருப்புகழ்.

பங்கயம் ஆயிரம் பூவினிலோர் பூக்குறையத்
தங்கண் இடந்தரன் சேவடிமேற் சாத்தலுமே
சங்கரன் எம்பிரான் சக்கரமாற் கருளியவாறு
எங்கும் பரவிநாம் தோணோக்கம் ஆடாமோ.

—திருவாசகம்.

மலர் பொருட்டு ஆட்கொண்ட பழமையான புகழையுடைய சிவபெருமான்.

கலையிராஜ சொல்வாரணர்:—

கலைகள் புகழ்கின்ற அந்த யானைமுகமுடையவர் என்றும் பொருள் செய்யலாம். கலை இராஜ சொல் அவாரணர் எனப் பதப் பிரிவு செய்க.

விராகவ :—

ராகம்-ஆசை. வி-இன்மைப்பொருள் தருகின்றது. ஆசையில்லாதவன் விராகவன். மலம் இல்லாதவன் விமலன் என்பது போல்.

விராயண பராயண :—

வீர அயனம் பராயணம். வீரவழியில் விருப்பம்.

செருவூர் :—

செருவூர்-திருப்போரூர்.

குராவகில் பராரை முதிர் :—

பரு அரை-பராரை. குரா,அகில் முதலிய மரங்கள் பருத்த அடியுடன் முதிர்ந்து வளமையுடன் சூழ்ந்துள்ள தலம் விராலிமலை.

கருத்துரை

விராலிமலை வேலவா! ஆதிப்பொருளாகிய உன்னை இடையறாது தியானிக்க அருள்புரிவாய்.

**120**

இதமுறு விரைபுனல் முழுகி யகில்மண
முதவிய புகையினி லளவி வகைவகை
கொத்தலர்க் ளின்தொடையல் வைத்துவளர்
கொண்டலென

அறலென இசையளி யெனநெ ளிருளென
நிறமது கருகிநெ டுகிநெ றிவுபட
நெய்த்துமுசு வின்திரிகை யொத்தசுருள் குந்தளமும்

இலகிய பிறையென எயினர் சிலையென
விலகிய திலதநு தலும தி முகமும்
உற்பலமும் வண்டுவடு விற்கணைய மன்படரு
முனைவாளும்

இடர்படு கவுநடு வனும்வ லடல்பொரு
கடுவது மெனநெடி தடுவ கொடியன
இக்குசிலை கொண்டமதன் மெய்த்தவநி றைந்தவிழி

தளவன முறுவலு மமுத குமுதமும்
விளைநற வினியமொ ழியுமி னையதென
ஒப்பறுந கங்கள்விரல் துப்பெனவு றைந்துகமு

கிடியொடி படவினை செயும்வின் மதகலை
நெடியக வுடியிசை முரலு சுரிமுக
நத்தனைய கண்டமும்வெண் முத்துவிளை விண்டனைய
எழில்தோளும்

விதரண மனவித னமதை யருள்வன
சததள மரைமுகி ழதனை நிகர்வன
புத்தமிர்து கந்தகுடம் வெற்பெனநி ரம்புவன

இமசல ம்ருகமத களப பரிமள
தமனிய ப்ரபைமிகு தருண் புளகித
சித்ரவர மங்கலவி சித்ரவிரு துங்ககன

விகலித மிருதுள ம்ருதுள நவமணி
முகபட விகடின தனமு முயர்வட
பத்திரமி ருந்தகடி லொத்தசுழி யுந்தியுள மியாத

விபரித முடையிடை யிளைஞர் களைபட
அபகட மதுபுரி யரவ சுடிகைய
ரத்நபண மென்பவழ குற்றவரை யும்புதிய

நுணியத ளிரெனவு லவிய பரிபுர
அணிநட னபதமு முடைய வடிவினர்
பொற்கலவி யின்பமதி துக்கமென லன்றியவர்

விரகினி லெனதுறு மனம துருகிய
பிரமையு மறவுன தருள்கை வரவுயர்
பத்திவழி யும்பரம முத்திநெறி யுந்தெரிவ தொருநாளே

தததத தததத ததத தததத
திதிதிதி திதிதிதி திதிதி திதிதிதி
தத்ததத தந்ததத தித்திதிதி திந்திதிதி

டகுடகு டிகுடிகு டகுகு டிகுடிகு
டிகுடிகு டகுடகு டிகுகு டகுடகு
தத்ததிமி டங்குகுகு தித்திதிமி டிங்குகு

தமிதமி தமிதக தமித திமிதக
திமிதிமி செககண திமித திகதிக
தத்திமித தந்திமித தித்திமிதி திந்திமிதி யெனவேதான்

தபலைகு டமுழவு திமிலை படகம
தபுதச லிகைதவில் முரசு கரடிகை
மத்தளித வண்டையற வைத்தகுணி துந்துமிகள்

மொகுமொகு மொகுவென அலற விருதுகள்
திகுதிகு திகுவென அலகை குறளிகள்
விக்கிடநி ணம்பருக பக்கியுவ ணங்கழுகு

சதிர்பெற அதிர்தர உததி சுவறிட
எதிர்பொரு நிருதர்கள் குருதி பெருகிட
வப்புவின்மி தந்தெழுப தற்புதகவந்தமெழவெகுகோடி

மதகஜ துரகர தமுமு டையபுவி
யதலமு தல்முடிய இடிய நெடியதொர்
மிக்கொலிமு ழங்கஇரு ளக்கணம்வி டிந்துவிட

இரவியு மதியமு நிலைமை பெறஅடி
பரவிய அமரர்கள் தலைமை பெறஇய
லத்திறல ணங்குசெய சத்திவிடு கந்ததிரு

வயலியி லடிமைய குடிமை யினலற
மயலொடு மலமற அரிய பெரியதி
ருப்புகழ்வி ளம்புமென்மு னற்புதமெ ழுந்தருள்கு

கவிராலி

மலேயுறை குரவந லிறைவ வருகலே
பலதெரி விதரண முருக சரவண
உற்பவக்ர வுஞ்சகிரி நிக்ரகஅ கண்டமய

நிருபவி மலசுக சொருப பரசிவ
குருபர வெளிமுக டுருவ வுயர்தரு
சக்ரகிரி யுங்குலேய விக்ரமந டம்புரியு

மரகத கலபமெ ரிவிடு மயில்மிசை
மருவியெ யருமைய இளமை யுருவொடு
சொர்க்கதல மும்புலவர் வர்க்கமும்வி ளங்கவரு
பெருமாளே.

## பதவுரை

தததத தததத ததத தததத திதிதிதி திதிதிதி திதிதி திதிதிதி தத்ததத தந்ததத தித்திதிதி திந்திதிதி டகுடகு டிகுடிகு டிகுகு டிகுடிகு டிகுடிகு டகு டகு டிகுகு டகுடகு தத்ததிமி டங்குகுகு தித்திதிமி டிங்குகுகு தமிதமி தமிதக தமித திமிதக திமிதிமி செககண திமித திகதிக தத்திமித தந்திமித தித்திமிதி திந்திமிதி எனவேதான் - தததத தததத..........தித்திமிதி திந்திமிதி என்னும் ஒலிகளுடன், தபலே - தபலே, குடமுழவு - குடமுழவு; திமிலே - ஒருவகைப்பறையாகிய திமிலே, படகம் - படகம் என்ற சிறுபறை, அது அபுத சலிகை - முன் இல்லாததான சலிகையென்ற அந்த பறை; தவில் - தவில், முரசு - முரசு, கரடிகை - கரடிகை, மத்தளி - மத்தளம், தவண்டை - பேருடுக்கை, அறவைத்த குணி - நிரம்ப இருந்த தகுணிச்சம், துந்துமிகள் - பேரிகைகள், ஆகிய இந்த வாத்தியங்கள், மொகு மொகு மொகு என அலற - மொகு மொகு மொகு என்று பேரொலி செய்யவும், விருதுகள் - வெற்றிச்சின்னங்கள், திகுதிகுதிகு என - திகுதிகுதிகு என்று விளங்கவும், அலகை - பேய்களும், குறளிகள் மாயவித்தை செய்யும் குரளிப்பிசாசுகளும், விக்கிட நிணம் பருக - விக்கல்வருமளவு மாமிசக் கொழுப்புகளே உண்ணவும், பக்கி - பட்சிகளும், உவணம் - கருடனும், கழுகு - கழுகுகளும், சதிர் பெற அதிர் தர - பேறு பெற்றேம் என்று ஆரவாரஞ் செய்யவும், உததி அலறிட - கடல் வற்றிப் போகவும், எதிர் பொரு நிருதர்கள் - எதிர்த்துப் போர் புரிந்த அசுரர்களின், குருதி பெருகிடு அ அப்புவின் - உதிரம் பெருகிவரும் அந்த செந்நீரில், மிதந்து எழுபது அற்புத கவந்தம் எழ - மிதந்து எழுபது கணக்கான அற்புதமான குறை யுடம்புகள் எழவும். வெகுகோடி - பலகோடிக்கணக்கான, மதகஜ - மதத்தைப் பொழியும் யானைகளேயும், துரக - குதிரைகளேயும், ரதமும் உடைய - தேர்களேயுமுடைய, புவி-பூமியும், அதல முதல்முடிய - அதலவுலக

முதலான கீழுள்ள ஏழு உலகங்களும், இடிய - அதிர்ச்சியுற்று கலங்கவும், நெடியது ஓர் மிக்க ஒலி முழங்க - நீண்ட ஒரு பெரிய ஓசையுண்டாகவும், இருள் அக்கணம் விடிந்து விட - உலகின் துயரான இருள் அந்தக் கணமே விலகி ஒழியவும், இரவியும் மதியமும் நிலைமை பெற - சூரியனும் சந்திரனும் நிலை பெற்று விளங்கவும், அடி பரவிய - திருவடியைத் துதி செய்த, அமரர்கள் தலைமை பெற - தேவர்கள் முதன்மை பெறவும், இயல் அ திறல் அணங்கு செய சத்தி விடு - பொருந்திய அந்த வீரலட்சுமி விளங்கும் வெற்றிவேலை விடுத்தருளிய, கந்த - கந்தவேளே! திரு வயலியில்- திருவயலூரில், அடிமைய - அடிமையேனுடைய! குடிமை இனல் அற - குடிப்பிறப்பின் துன்பங்கள் நீங்கவும், மயலொடு மலம் அற - மயக்கமும் ஆணவம் கன்மம் மாயையாகிய மும்மலங்களும் நீங்கவும், அரிய பெரிய திருப்புகழ் விளம்பு என்முன் - அரிய பெரிய திருப்புகழைப்பாடிய அடியேன் முன், அற்புதம் எழுந்து அருள் குக - அற்புதமான திருவுருவுடன் எழுந்தருளிக்காட்சியளித்த குக மூர்த்தியே! விராலி மலை உறை குரவ - விராலி மலையில் வீற்றிருந்தருளும் குருமூர்த்தியே! நல் இறைவ - நல்ல தலைவரே! வரு கலை பல தெரிவிதரண-வழிவழிவந்த கலைகள் பலவுந் தெரிந்த கருணை வாய்ந்தவரே! முருக - முருகப் பெருமானே! சரவண உற்பவ - சரவணப் பொய்கையில் தோன்றியவரே! கிரவுஞ்சகிரி நிக்ரக - கிரவுஞ்ச மலையை அழித்தவரே! அகண்டமய - எங்கும் நிறைந்தவரே! நிருப - தலைவரே! விமல - மாசில்லாதவரே! சுக சொருப இன்பவடிவானவரே! பரசிவ குருபர - பரசிவத்துக்குபதேசித்தவரே! வெளி முகடு உருவ உயர்தரு-அண்டத்தின் புற எல்லையுங் கடந்து உயர்ந்துள்ள, சக்ரகிரியும் குலைய - சக்கிரவாள கிரியும் நடுக்க மடையுமாறு, விக்ரம நடம்புரியும் - ஆற்றல்பொருந்திய நடனத்தைச் செய்த, மரகத கலபம் எரிவிடு - பச்சைநிறமுடைய தோகை ஒளிவீசும், மயில் மிசை மருவியெ - மயிலின் மீது பொருந்திய, அருமைய - அருமை வாய்ந்த, இளமை உருவொடு - இளமை வடிவுடன், சொர்க்க தலமும் - விண்ணுலகமும், புலவர் வர்க்கமும் விளங்க வரு - தேவர் கூட்டமும் விளங்க எழுந்தருளிய, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! இதம் உறு விரை புனல் முழுகி - இன்பத்தைத் தருகின்ற வாசனை கலந்த நீரில் முழுகி, அகில் மணம் உதவிய புகையினில் அளவி - அகிலின் நறுமணம் வீசும் புகையை ஊட்டி, வகை வகை - விதம் விதமான, கொத்து அலர்களின் தொடையல் வைத்து - கொத்துக் கொத்தாக மலர்களின் மாலைகளை வைத்து, வளர் கொண்டல் என வளர்கின்ற மேகம் போலவும், அறல் என - கருமணல் போலவும், இசை அளி என - இசைபாடும் வண்டின் கூட்டம் போலவும், நல் இருள் என - நடு இருள் போலவும், நிறம் அது உருகி - நிறமானது கருமையுள்ளதாய், நெடுகி நெறிவுபட - நீண்டு சுருள் உள்ளதாய், நெய்த்து - வாசனைதடவிய நெய்ப்பு உள்ளதாய், முசுவின் திரிகை ஒத்த - முசு முசுக்கை கொடி போன்ற, சுருள். குந்தளமும் - சுருண்ட கூந்தலும், இலகிய பிறை என - விளங்குகின்ற பிறைபோலவும், [illegible]வினர் சிலை என - வேடர்களின் வில்லைப் போலவும், விலகிய திலதநுதலும்

- விசாலமான பொட்டணிந்த நெற்றியும், மதிமுகமும் - சந்திரனை யொத்த முகமும், உற்பலமும் - நீலோற்பல மலரும், வண்டு - வண்டும், வடு - மாவடுவும், வில்கணை - வில்லம்பும், யமன் - யமனுடைய, படரும் முனைவாளும் - பாய்ந்து வரும் கூரிய வாளும் என நின்று, இடர்படுகவும் - இடரையுண்டாக்கவும், நடுவனும் - இயமனும், வல் அடல் பொரு கடு அதும் என - மிக்க வலிமை பொருந்திய நஞ்சைப் போன்று, நெடிது அடுவ - நீண்ட நேரம் வருத்துவனவாய், கொடியன - பொல்லாதனவாய், இக்கு சிலை கொண்ட மதன் - கரும்புவில்லை யேந்திய மன்மதனுடைய, மெய் தவம் நிறைத்த விழி-உண்மைத்தவம் நிறைந்துள்ளதாய் விளங்கும் கண்களும், தளவு அன முறுவலும் - முல்லையரும்பு போன்ற பற்களும், அமுத குமுதமும் - அமுதம்போன்ற குமுத வாயும், விளை நறவு இனிய மொழியும் - அவ்வாயினின்றும் விளைகின்ற தேன்போன்ற இனிய மொழிகளும், இணையது என ஒப்பு அறு - இன்னத்துக்குத்தான் நிகராகும் என்று சொல்லுதற்கு இல்லாததான, நகங்கள் விரல் துப்பு என உறைந்து - நகங்களுடன் கூடிய விரல்கள் பவளம் போல் விளங்கவும், கமுகு இடி பொடிபட - பாக்கு இதற்கு நிகராகாது என்று இடிபட்டு ஓடிய, வினை செயும் வில் மத - வினைகளையுண்டாக்கும் மன்மதனுடைய வில்லின் கொள்கையைக் கூறும், கலை நெடிய - மதனநூலின்படி நீண்டு, கவுடி இசை முரலு - கௌடி என்ற பண்வகையை ஒலிக்கின்ற, சுரிமுக நத்து அனைய கண்டமும் - சுரிமுகசங்குக்கு ஒப்பான கழுத்தும், வெண் முத்து விளை விண்டு அனைய எழில் தோளும் - வெண்மையான முத்துக்கள் விளைகின்ற மூங்கில் போன்ற தோளும், விதரணமன - விவேகமுள்ள மனதில், விதனம் அதை அருள்வன - வேதனை தருவனவும், சததள மரை முகிழ் அதனை நிகர்வன - நூறுஇதழ்த் தாமரையின் மொட்டை நிகரானவையும், புது அமுது உகந்த குடம் - புதிய அமுதம் நிறைந்த குடம் போன்றவையும், வெற்பு என நிரம்புவன- மலைபோல் பூரித்தவையும், இமசலம் - பன்னீர், ம்ருகமத - கஸ்தூரி, களப பரிமள - சந்தனம் ஆகிய இவைகளின் நறுமணம் நிறைந்தவையும், தமனியப்ர்பைமிகு - பொன்னொளி வீசுபவையும், தருணபுளகித - இளமையும் பூரிப்பும் உடையவையும், சித்ர - அழகு, வரம் - மேன்மை, மங்கலம் - மங்கலம், விசித்ரம்-அதிசயம், இவைகளைக் கொண்டு,இரு துங்ககன-இரண்டு தூய்மையான உயர்ந்தவையும், விகலித மிருதுடை-பெருமையுடன் சாய்வு இல்லாதவையும், ம்ருதுஉள - மென்மையானவையும், நவமணி - நவரத்ன மாலையும், முகபட - மூருந்துணியையுடையவையும், விகடின - பரப்புள்ளவையும் ஆகிய, தனமும் - கொங்கைகளும், உயர் வட பத்திரம் இருந்த - உயர்ந்த ஆலிலைபோன்ற, அகடில் ஒத்த சுழிஉந்தி - வயிற்றில் பொருந்திய கொப்பூழும், உளம் பதியாத - உள்ளத்தில் உண்டு என்று எண்ண முடியாதபடி, விபரிதம் உடை இடை - விபரீதமாக உள்ள இடையும், இளைஞர் களைபட - இளைஞர்கள் களைத்துப்போக, அபகடம் அதுபுரி - பொல்லாங்கு செய்கின்ற, அரவ சுடிகைய - பாம்பின் உச்சியில் உள்ள, ரத்ன பணம் என்ப - இரத்தின படம் என்று சொல்லும்படி, அழகு உற்ற

அரையும் - அழகு வாய்ந்த அல்குலும், புதிய நுணிய தளிர் என - புதிய நுண்ணிய தளிர் போன்றதும், உலவிய பரிபுர - உலாவிய சிலம்பு அணிந்த, அணி நடன பதமும் உடைய வடிவினர் - அழகிய நடனத்துக்குரிய பாதங்களும் உடைய உருவத்தினராம் பொதுமாதருடைய, பொன் கலவி இன்பம் - அழகிய சேர்க்கை இன்பமானது, அதி துக்கம் எனல் அன்றி - அதிக துயரத்தைத் தருவது என்று உணர்வதுடன், அவர் விரகினில் - அவர்களின் தந்திரச் செயல்களில்! எனது உறு மனம் அது உருகிய - எனக்குள்ள மனமானது உருகிய, பிரமையும் அற - மயக்கம் அகலவும், உனது அருள் கைவர-தேவரீரது திருவருள் கைகூடி வரவும், உயர் பத்தி வழியும் - உயர்ந்த அன்பு நெறியும், பரமுத்தி நெறியும் - மேலான முத்தி மார்க்கமும், தெரிவது ஒருநாளே - தெரிந்து கொள்வதும் ஆன ஒரு நாள் அடியேனுக்கு உண்டாகுமோ?

## பொழிப்புரை

*தததத தததத ததத தததத திதிதிதி திதிதிதி திதிதி திதிதிதி தத்ததத தந்ததத தித்திதிதி திந்திதிதி* டகுடகு டிகு டிகு டகுகு டிகுடிகு டிகுடிகு டகுடகு டிகுகு டகுடகு *தத்ததிமி* டங்குகுகு *தித்திதிமி* டிங்குகுகு தமிதமி தமிதக தமித *திமிதக திமிதிமி* செககண *திமித திகதிக தத்திமித தந்திமித தித்திமிதி திந்திமிதி* என்ற ஒலிகளுடன், தபலை, குடமுழவு, திமிலை, படகம், புதுவகையான சல்லிகை, தவில், முரசு, கரடிகை, மத்தளி, தவண்டை, மிகுதியான தகுணிச்சம், துந்துபிகள், ஆகிய இந்த வாத்தியங்கள் மொகு மொகு மொகு என்று பேரொலி செய்யவும், திகுதிகுதிகு என்று வெற்றிச் சின்னங்கள் ஒலிக்கவும், பேய்களும், மாயவித்தைகள் செய்யும் குறளிப் பிசாசுகளும் விக்கல் எடுக்கும் அளவு மாமிசக் கொழுப்பையுண்ணவும், பறவைகளான கருடனும் கழுகும் பேறுபெற்றோம் என்று ஆரவாரிக்கவும், கடல் வற்றவும், எதிர்த்துப் போர் புரிந்த அசுரர்களின் உதிரம் பெருகிவர, அச்செந்நீரில் மிதந்து எழுபது கணக்கான அற்புதமான கவந்தங்கள் எழவும் பல கோடிக்கணக்கான மதயானைகளையும், குதிரைகளையும், தேர்களையும் உடைய பூமியும் அதலம் முதலிய ஏழு உலகங்கள் முழுமையும் அதிர்ச்சியுற்றுக் கலங்கவும், நீண்ட பெருத்த ஒலி முழங்கி எழவும், துன்பமாகிய இருள் அக்கணத்திலேயே விலகி ஒழியவும், சூரியனும் சந்திரனும் நிலை பெற்று விளங்கவும், திருவடியைத் துதி செய்த தேவர்கள் முதன்மை பெறவும் வீரலட்சுமி பொருந்திய வெற்றி வேலை விடுத்தருளிய கந்த வேளே! திருவயலூரில் அடியேனுடைய குடிப்பிறப்பின்

இன்னல் நீங்கவும், மயக்கமும், மும்மலங்களும் விலகவும். அரிய பெரிய திருப்புகழைச் சொன்ன என் முன்னே தேவரீர், அற்புதமான திருவுருவுடன் காட்சிதந்தருளிய குகமூர்த்தியே! விராலிமலையில் வீற்றிருந்தருளும் குருபரனே! நல்லதலைவரே! வழிவழிவந்த கலைகள் பல தெரிந்த கருணை வாய்ந்தவரே! முருகப் பெருமானே! சரவணப் பொய்கையில் தோன்றியவரே! கிரவுஞ்ச மலையைப் பிளந்தவரே! எங்கும் நிறைந்த அரசே! மாசில்லாதவரே! இன்ப வடிவினவரே! பரசிவ குருவே! அண்டத்தின் புறவெளியையுங் கடந்து உயர்ந்துள்ள சக்கிர வாளகிரியும் நடுங்கும்படி பேராற்றலுடன் நடனஞ் செய்யும், பச்சைத் தோகையில் ஒளிவீசும் மயிலின்மீது பொருந்தியவரே! அருமையும் இளமையும் பூண்டு, விண்ணுலகமும் தேவர்களின் குழாங்களும் விளங்க எழுந்தருளும் பெருமிதமுடையவரே! இன்பத்தைத்தரும் வாசனைநீரில் முழுகி, அந்த ஈரம்புலரும்படி, அகிலின் நறுமணப்புகையை ஊட்டி, விதம்விதமான மலர்க் கொத்துக்களால் ஆய மாலைகளை வைத்துள்ள, வளர்கின்ற மேகம் போலவும், கருமணல் போலவும், இசைபாடும் வண்டு கள் போலவும் நீடுஇருள் போலவும், கருநிறமுடையதாய், நீண்டு சுருண்டு முசுமுசக்கைக் கொடிபோல் விளங்கும் கூந்த லும், அழகிய பிறைபோலும், வேடரது வில்லைப்போலும் விசால மாகத் தீட்டிய திலகம் அமைந்த நெற்றியும், சந்திரனைப் போன்ற முகமும், நீலோற்பல மலரும், வண்டும், மாவடுவும், வில்லம் பும், இயமனுடைய பாய்ந்துவரும் கூரிய வாளும், எனநின்று இடர்ப்படுத்தவும், இயமனும், மிக்க வலிமை பொருந்திய நஞ்சும் போல் நெடிது வருத்தம் புரியவும் வல்ல, கரும்பு வில் லேந்திய மன்மதனுடைய மெய்த்தவம் நிறைந்த கண்களும், முல்லையரும்பையொத்த பற்களும், அமுதம் போன்ற குமுத வாயும், அவ்வாயினின்று வெளிப்படும் தேன்போல் தித்திக்கும் இனிய மொழிகளும், ஒப்பற்ற நகங்களுடன் கூடிய பவளம் போன்ற விரல்களும், பாக்கு இதற்கு நிகராகாது இடிந்து ஒடிய, வில்லேந்தி தொழில்புரியும் மதனனுடைய கலைக்குப் பொருந்த, கௌடி என்ற பண் ஒலிக்கும் சுரிமுக சங்கு போன்ற கழுத்தும், வெண்மையான முத்துக்கள் விளையும் மூங்கிலைப் போன்ற அழகிய தோளும், விவேகமுள்ள மனதில் வேதனையைத் தரு பவையும், நூற்றிதழ்த் தாமரை மொட்டு போன்றவையும், புதிய அமிர்தம் நிறைந்த குடம் போன்றவையும், மலைபோன்ற வையும், பனிநீர் கஸ்தூரி சந்தனம் இவைகள் பூசப் பெற்றவை

யும், நறுமணத்துடன் பொன்னொளி வீசுபவையும், பூரித்த இளமையும், அழகும், மேன்மையும், மங்கலமும், அதிசயமும் கொண்ட பெருமையுடையவையும், மிருதுவுடன் ஆடையுடன் கூடியவையும் ஆன கொங்கைகளும், ஆலிலை போன்ற வயிற்றில் சுழித்து உள்ள கொப்பூழும், ஆராய்ந்து அறிய முடியாத நுட்பமான இடையும், இளைஞர்கள் களைத்துப் போகத் தீங்குகள் புரிகின்ற, பாம்பின் உச்சியில் உள்ள இரத்தின படம் போல், அழகிய அல்குலும், புதிய நுண்ணிய தளிர் போன்றதும், சிலம்பணிந்து நடனஞ் செய்வதுமாகிய பாதங்களும், உடைய பொது மாதரின் அழகிய சேர்க்கையின்பம் அதிக துயரத்தைத் தருவது என்று உணர்ந்து, அம்மாதரது தந்திரச் செயலில் உருகும் மயக்கந் தீரவும், உமது திருவருள் கைகூடவும், உயர்ந்த பக்தி வழியும், மேலான முத்தி நெறியும் எனக்குப் புலப்படும்படியான நாள் ஒன்று உண்டாகுமோ?

## விரிவுரை

இத்திருப்புகழின் முதற்பகுதி பெண்களின் கேசாதிபாத வருணனையாக அமைந்தது.

விரிவாக விலைமகளின் உருவங்களைச் சிறப்பித்துக் கூறி, அவற்றின் மீது மயங்காது தெளிய வேண்டும் என்று இப் பாடலில் உபதேசிக்கின்றார்.

பிரமையுமற :—

பிரமை—மயக்கம்; துன்பத்தை இன்பமாக எண்ணி மக்கள் மயங்குகின்றார்கள்.

பக்தி வழியும் பரமுத்தி நெறியுந்தெரிவ தொருநாளே :—

பக்தி வழி—அன்பு நெறி. முக்தி நெறி—பந்தத்தினின்றும் விடுபடும் வழி.

"முத்தி நெறியறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்தி நெறியறிவித்து" —மணிவாசகர்.

திருவயலியிலடிமைய குடிமையினலற மயலொடு மலமற அரிய பெரிய திருப்புகழ் விளம்புமென்மு னற்புதமெழுந்தருள்குக :—

இது அடிகளாரது வாலாற்றை யறிவிக்கின்றது.

சுவாமிகள் வயலூரில் தங்கியிருந்தபோது, "விகடபரிமள" என்று தொடங்கும் ஒரு அரிய பெரிய திருப்புகழ்ப் பாடலைப் பாடியருளினார்.

அப்போது முருகனுவன் அவர் முன் அற்புதமான திருக் கோலத்துடன் தோன்றி, அவருடைய துயரை ஒழித்து, ஞானேபதேசம் செய்து "நம் விராலிமலைக்கு வா" என்று அழைத்து அருளினுர்.

"............................விராலி
மாமலையில் நிற்ப நீகருதியுற்று
வா என அழைத்தென் மனதாசை
மாசினையறுத்து ஞானமுதளித்த
வாரம் இனி நித்தம் மறவேனே" —(தாமரை) திருப்புகழ்.

கருத்துரை

விராலிமலையுறை விமலனே! பக்தி நெறியும் முத்தி நெறியுந் தந்தருள்வீர்.

121

உருவேற வேஜெபித்து வொருகோடி யோமசித்தி
யுடனுக ஆகமத்து கந்துபேணி
உணர்வாசை யாரிடத்து மருவாது வோரெழுத்தை
யொழியாது வூதைவிட்டி ருந்துநாளும்
தரியாத போதகத்தர் குருவாவ ரோரொருத்தர்
தருவார்கள் ஞானவித்தை தஞ்சமாமோ
தழலாடி வீதிவட்ட மொளிபோத ஞானசித்தி
தருமாகி லாகுமத்தை கண்டிலேனே
குருநாடி ராசரிக்கர் துரியோத னுதிவர்க்க
குடிமாள மாயமிட்டு குந்திபாலர்
குலையாமல் நீதிகட்டி யெழுபாரை யாளவிட்ட
குறளாக னூறில்நெட்டை கொண்டஆதி
மருகா புராரிசித்தன் மகனே விராலிசித்ர
மலைமே லுலாவுசித்த அங்கைவேலா
மதுரா புரேசர்மெய்க்க அரசாளு மாறன்வெப்பு
வளைகூனை யேநிமிர்த்த தம்பிரானே.

## பதவுரை

குருநாடு இராசரிக்கர் - குருநாட்டை யாண்டுவந்த அரசர்களாகிய, துரியோதன ஆதிவர்க்க குடிமாள - துரியோதனன் முதலிய கொடிய குலமும் குடியும் மாண்டொழிய, மாயம் இட்டு - மாயைகளைச் செய்தும், குந்தி பாலர் - குந்தி தேவியின் புதல்வர்களாகிய பாண்டவர்கள், குலையாமல் - குலையாமற்படிக்கு, நீதி கட்டி எழு பாரை ஆளவிட்ட - சிறந்த நீதிநெறி வழுவாது ஏழுலகங்களையும் அரசாளுமாறு அருள்புரிந்தவரும், குறள் ஆகன் - குறிய வடிவத்தை யுடையவரும், ஊறில் நெட்டை கொண்ட ஆதி - கெடுதலில்லாத நீண்ட வடிவத்தைக் கொண்ட முதல்வரும் ஆகிய விட்டுணுமூர்த்தியின், மருகா - திருமருகரே! புர அரி சித்தன் மகனே - முப்புரங்களை எரித்த எல்லாம் வல்ல சித்தராகிய சிவபெருமானுடைய திருக் குமாரரே! விராலி சித்ர மலைமேல் உலாவு சித்த - அழகிய விராலிமலை மீது உலாவுகின்ற சித்தரே! அம் கை வேலா - அழகிய திருக்கரத்தில் வேலாயுதத்தைத் தரித்தவரே! மதுராபுர ஈசர் மெய்க்க - மதுரையில் வாழும் சிவபெருமானுடைய திருவருளை மெய்ப்பிக்குமாறு, அரசு ஆளும் மாறன் - அரசுபுரிகின்ற கூன்பாண்டியனுடைய, வெப்பு வளை கூனையே நிமிர்த்த - வெப்பு நோயை நீக்கியதுடன் வளைந்த கூனையும் நிமிர்த்தியாட் கொண்ட, தம்பிரானே - தனக்குமேல் தலைவன் இல்லாதவரே! உருவு ஏறவே ஜெபித்து - மந்திர உரு ஏறுமாறு இடையறுது ஜெபஞ் செய்தும், ஒரு கோடி ஓம சித்தி உடனாக - ஓமத்தீயில் ஒருகோடி ஆகுதி செய்து அதனால் சித்தி பெற்றும், ஆகமத்து உகந்து பேணி - சிவாகமங்களை உவந்து விரும்பியும், உணர்வு ஆசை யாரிடத்து மருவாது - அறிவும் ஆசையும் யாரிடத்தும் வைக்காமலும், ஓர் எழுத்தை ஒழியாது ஊதை விட்டு இருந்து - பிரணவ மந்திரத்தை யுச்சரித்து இடையறுது பிராண வாயுவை யோக முறைப்படி விடுத்து உள்ளம் ஒருமைப்பட்டு இருந்தும், நாளும் தரியாத போதகத்தர் - நாள்தோறும் மேற் கூறியவைகளை மேற் கொள்ளாது பேரளவில் குரு என்று வெளிப்பட்டு சிவஞான நிலையைப் பற்றி போதிக்க வந்து, குரு ஆவர் - குருவாக உலாவுவார்கள்; ஓர் ஒருத்தர் ஞானவித்தை தருவார்கள் - அங்ஙனம் வருகின்ற அவர்கள் ஞானவித்தையும் உபதேசிப்பார்கள்; தஞ்சம் ஆமோ - அவ்வாறு அநுபவமின்றி அவர்கள் உபதேசிப்பது பற்றுக்கோடாக ஆகுமோ? தழல் ஆடி வீதி - புருவ நடுவே ஜோதியானது ஆடிபோல் விளங்கி வீதிபோல் வழிகாட்ட, வட்டம் ஒளி ஞான போத சித்தி - வட்டவடிவாகி ஞான ஒளிவீச சிவபோத சித்தியை, தரும் ஆகில் ஆகும் - தருவதானல் அது பெறத்தக்கதாகும், அத்தை கண்டிலேன் - அதனை அடியேன் காணுமல் தவிக்கின்றேன்,

## பொழிப்புரை

**குருநாட்டையாண்டதுரியோதனாதியர் குலம் மாள அநேக மாயைகளைச் செய்து குந்தியின் மைந்தர்களாகிய பாண்டவர்**

கள் துன்புறுமல் நீதி நெறியோடு ஏழுலகங்களை யாளச் செய்த வரும், குறளுருவத்தை எடுத்தவரும், நெடிய உருவத்தைக் கொண்ட முதல்வருமாகிய நாராயண மூர்த்தியின் திரு மருகரே! திரிபுர தகனராகிய சிவபெருமானுடைய திருக் குமாரரே! அழகிய விராலி மலையின்மீது உலாவுகின்ற சித்தரே! அழகிய கரத்தில் வேற்படையை ஏந்தியவரே! மதுரையில் எழுந்தருளியுள்ள சொக்கலிங்கப் பெருமானுடைய திருவருளை மெய்ப்பிக்கும் பொருட்டு, அங்கு அரசாண்ட பாண்டியனது வெப்பு நோயையும் வளைந்த கூனையும் நீக்கிய தலைவரே! உருவு நிரம்ப இடையறாது ஜெபஞ் செய்தும், ஓமத் தீயில் ஒருகோடி ஆகுதிகளைச் செய்து சித்தி பெற்றும், சிவாகமங்களை உவந்து விரும்பியும், சிவத்தைத் தவிர வேறு ஒருவரையும் அறிந்து விரும்பாமலும் அடுக்காமலும், ஓம் என்னும் தனிமந்திரத்தை ஒழியாது சிந்தித்து சிவயோக முறைப்படி பிராணவாயுவை விடுத்தும், நாடோறும் இந்த நலங்களை மேற்கொள்ளாத சிலர் குருவென்று புறப்பட்டு உபதேசிக்கும் உபதேசம் பற்றுக் கோடாக ஆகுமோ? ஒரு போதும் ஆகாது. புருவ நடுவில் கண்ணாடியைப்போல் ஜோதி தோன்றி வட்டமான அஜ்ஜோதி யில் வழி தோன்றி அதனுள் ஒளி செய்யும் ஞானப் பிரகாச மானது சித்தித்து அடியேனுக்கு சிறந்த நலத்தைத் தருமாயின் அது சிறப்புடைத்தாகும்; அத்தகைய நலத்தை அடியேன் காணாமல் அவமே யலைகின்றேன். (அருள் புரிவீர்)

## விரிவுரை.

இப் பாடலில், முதல் நான்கு வரியில் குருவாவதற்குரிய வர் யாவர்? அவர் தன்மை இவை என்பவற்றை விளக்கு கின்றனர்.

உருவேறவே ஜெபித்து :—

இறைவனுடைய மூல மந்திரத்தை ஒருமையுடன் தனி யிடத் தமர்ந்து விதிப்படி உருவேற ஜெபித்தல் வேண்டும். அவ்வாறு ஜெபிப்பவர்களுடைய சஞ்சித வினைகளாகிய பஞ்சுப் பொறிகள் ஜெபத்தீயால் எரிந்தொழியும்.

ஒருகோடி ஓமசித்தி:—

சிவவேள்விக் குண்டத்தில் விளங்கும் சிவாக்கினியில் ஒரு கோடி ஆகுதி செய்து வழிபடல். அதனால் கலியின் வெம்மை தணியும்.

பூமென் கோதை உமையொரு பாகனை
ஓமஞ் செய்தும் உணர்மின்கள் உள்ளத்தால்
காமற் காய்ந்த பிரான்கடம் பந்துறை
நாமம் ஏத்தநம் தீவினை நாசமே.

வஞ்சித்தென் வளைகவர்ந்தான் வாரானே யாயிடினும்
பஞ்சிக்காற் சிறகன்னம் பரந்தார்க்கும் பழனத்தான்
அஞ்சிப்போய்க் கலிமெலிய அழலோம்பும் அப்பூதி
குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கோடியையே. —அப்பர்.

ஆகமத்துகந்துபேணி :—

**சிவாகமமே பதிநூல் ஆதலால் அதனை உவந்து விரும்பி ஓதுவர்.**

ஆசை யாரிடத்து மருவாது :—

**இறைவனையே ஏத்தும் திருவுடையார் ஏனையோரை யாது குறித்தும் விரும்பார்.**

திருவுமெய்ப் பொருளும் செல்வமும் எனக்குன்
சீருடைக் கழல்களென் றெண்ணி
ஒருவரை மதியா துருமைகள் செய்தும்
ஊடியும் உறைப்பனாய்த் திரிவேன்
முருகமர் சோலை சூழ்திரு முல்லை
வாயிலாய் வாயினா லுன்னைப்
பரவிடு மடியேன் படுதுயர் களையாய்
பாசுபதா பரஞ் சுடரே. —சுந்தரர்

ஓரெழுத்தை ஒழியாது ஊதைவிட்டிருந்து :—

**பிரணவ மந்திரத்தை உச்சரித்து சிவயோக முறைப்படி பிராண வாயுவை சஞ்சரிக்கச் செய்து ஓவியம்போல் அசைவற்றிருப்பர்.**

ஓமெழுத்தி லன்பு மிகவூறி
ஓவியத்தி லந்தம் அருள்வாயே.
—(காமியத்தழுந்தி) திருப்புகழ்.

தரியாத போதகத்தர் குருவாவரோ? :—

**மேற்கூறிய குருவின் இலக்கணங்கள் இல்லாத வெறும் ஆட்கள் குருவென்ற பேருடன் வெளிவந்து உபதேசிப்பதனால் அவர்கள் உண்மைக் குருவாகார்.**

தருவார்கள் ஞானவித்தை தஞ்சமாமோ? :—

அவர்கள் உபதேசிக்கும் பொருளும் உண்மையாகா. குருடனுக்கு மற்ருெரு குருடன் வழிகாட்டி இருவரும் குழியில் வீழ்ந்ததோ டொக்கும்.

குருடருக்குக் கோல்காட்டிச் செல்லுங் குருடர்
முரணும் பழங்குழி வீழ்வர்கள் முன்பின்
குருடரும் வீழ்வர்கள் முன்பின் னறவே
குருடரும் வீழ்வார் குருடரோ டாகியே. —திருமந்திரம்.

தழலாடி..............ஞானசித்தி :—

புருவ மத்தியில் நாட்டத்தை வைத்து தியானஞ் செய்யில் ஆங்கு ஞானஒளி வீசி அதில் வீதி போன்றதொரு வழியும் உண்டாகி சிவஞானஒளி யுண்டாகும்.

"சோதிமலை யொன்று தோன்றிற் றதிலொரு
வீதி யுண்டாச்சுதடி அம்மா." —திருவருட்பா.

"கற்பகந் தெருவில் வீதி கொண்டு"
—(கட்டிமுண்ட) திருப்புகழ்.

குருநாடி ராசரிக்கர்.......... ஆதி :—

சந்திர வம்சத்தில் சவ்வருணன் என்ற அரசனுக்கு தபதி யென்பாளிடம் குருவருளால் பிறந்த புதல்வனுக்கு குரு என்று பேர். குருவென்ற அம் மன்னன் றனி சிறந்து புகழுடன் பூமியைப் புரந்தனன். அதனுல் அந் நாட்டிற்குக் குருநாடு என்ற பேருண்டாயிற்று. அவன் மரபும் குருகுலம் எனப்படும். அம் மரபில் வந்தவர்கள் பாண்டவர்கள்.

நன்னெறியி னின்றும் வழுவாத பாண்டவர்கட்குக் கண்ண பிரான் துணை நின்று, கொடுங் குணங்கள் யாவும் பொருந்திய துரியோதனுதியரை மாள்வித்தனர். அதன் பொருட்டு பகலை இரவாக்கியது, விதுரர் வில்லை வெட்டச் செய்தது, பீஷ்ம துரோணர்களை தந்திரத்தால் கொல்வித்தது ஆகிய பலமாயங் களைச் செய்தனர். துரியோதனனிடம் தூதாகச் சிறிய வடி வினர்போல் சென்று, அவன் ஆழ்ந்த குழி வெட்டி அதன்மேல் தடுக்கிட்டு ஆசனம் போட்டு வைக்க, அதன்மீது இருந்து அடி பாதலமும் முடி ககன கூடமும் செல்ல விசுவரூப மெடுத் தனர். இந்த வரலாறுகளை சுவாமிகள் இனிது எடுத்து சுருங்கச் சொல்கின்றனர்.

சித்தன் மகனே :—

சிவபெருமான் மதுரையில் எல்லாம்வல்ல சித்தராகி வந்து அருள் விளையாடலைச் செய்து கல்லானைக்குக் கரும்பு கொடுத்தமையால் சித்தன் எனக் குறித்தனர்.

விராலிசித்ர மலைமே லுலாவுசித்த :—

சித்தன்மகன் சித்தன்; சித்தர்களால் வணங்கத் தக்கவன்; பழநிக்கும் சித்தன் வாழ்வு என்ற பேருண்டு.

"சித்தா பரத்தமரர் கத்தா" —(இத்தாரணிக்குள்) திருப்புகழ்.

வளைகூனையே நிமிர்த்த :—

சுப்ரமண்ய சாரூபம் பெற்ற அபரசுப்ரமண்யரில் ஒருவர் சுப்ரமண்யத்தின் திருவருள் தாங்கி திருஞானசம்பந்தராக அவதரித்து; சைவசமயத்தையும் சோமசுந்தரர் திருவருளையும் வெளிப்படுத்தி நிறுவி, பாண்டியன் உள்ளக் கூனையும் உடற் கூனையும் நிமிர்த்தி யருளினர்.

கருத்துரை

திருமால் மருக! சிவமைந்த! விராலிமலைமேவு விமல! பாண்டியனை யாண்ட பரம! அசற்குருவை விலக்கி சற்குரு நாதனைப் பெற்று சிவஞானமுற்று உய்ய அருள்புரிவீர்.

## 122

எதிரெதிர்கண் டோடி யாட்கள்
களவதறிந் தாசை பூட்டி
இடறிவிழும் பாழி காட்டு மடமாதர்
இறைவைகொளுங் கூவல் மூத்த
கறையொழுகுந் தாரை பார்க்கி
விளமைகொடுங் காத லாற்றில் நிலையாத
அதிவிகடம் பீழ லாற்ற
அழுகிவிழும் பீற லூத்தை
அடையுமிடஞ் சீலை தீற்று கருவாயில்
அருவிசலம் பாயு மோட்டை
அடைவுகெடுந் தூரை பாழ்த்த
அளறிலழுந் தாம லாட்கொ டருள்வாயே

விதுரனெடுந் த்ரோண மேற்று
எதிர்பொருமம் பாதி யேற்றி
விரகினெழுந் தோய நூற்று வருமாள
விரவுஜெயன் காளி காட்டில்
வருதருமன் தூத னீற்ற
விஜயனெடும் பாக தீர்த்தன் மருகோனே
மதியணையுஞ் சோலை யார்த்து
மதிவளசந் தான கோட்டின்
வழியருளின் பேறு காட்டி யவிராலி
மலைமருவும் பாதி யேற்றி
கடிகமழ்சந் தான கோட்டில்
வழியருளின் பேறு காட்டு பெருமாளே.

### பதவுரை

விதுரன் நெடுந் த்ரோணம் ஏற்று - விதுரர் தமது பெரிய வில்லை யெடுத்து, எதிர் பொரும் அம்பு ஆதி ஏற்றி - எதிரியுடன் போர் செய்ய அம்பு முதலிய கணைகளைத் தொடுத்து, விரகின் எழுந்து ஓய - சமர்த்துடன் எழுந்து போர் புரியுஞ் செயல் ஓயுமாறும், நூற்றுவரும் மாள - துரியோதனன் முதலிய நூறுபேர்களும் இறந்து போம்படியும், விரவு ஜெயன் - உபாயஞ் செய்த ஜெயவீரனும், காளி காட்டில் வரு தருமன் தூதன் - காளிக்கு உரிய வனத்தில் வாழ்ந்து வந்த தருமராஜருடைய தூதனும், நீற்ற விஜயன் நெடும் பாகன் - திருநீற்றையணிந்த அர்ச்சுனனுடைய பெரிய தேர்ப்பாகனும் ஆகிய, தீர்த்தன் மருகோனே - பரிசுத்தமூர்த்தியாகிய கண்ணபிரானுடைய திருமருகரே! மதி அணையும் - சந்திரன் அணையும்படி உயர்ந்துள்ள, சோலை ஆர்த்தும் - சோலைகளோடு கூடியும், அதி வள - அதிக வளப்பமுள்ள, சந்தான கோட்டின் - சந்தானம் என்னும் தேவ தருவைப்போல், வழி அருளின் பேறு காட்டி - தன்னை வழிபட்டோர்க்கு விரும்பிய பேறுகளை உதவுகின்ற, விராலிமலை மருவும் பாதி ஏற்றி - விராலி மலையில் பாதி மலையில் வரச் செய்து, கடிகமழ் சந்தான கோட்டில் - அங்குள்ள சந்தான கோட்டம் என்ற வாசனை வீசும் இடத்தில் எழுந்தருளியிருந்து, வழி அருளின் பேறுகாட்டு - தம்மை யடைந்த அன்பர்கட்கு விரும்பிய நலன்களை வழங்கிக் காட்டுகின்ற, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! எதிர் எதிர்கண்டு - தங்கள் எதிர் எதிரில் வருகின்றவர்களைக் கண்டவுடன், ஓடி ஆட்கள் - ஓடிச் சென்று ஆட்களை, களவு அது அறிந்து - திருட்டுத்தனமாக அவர்களின் நிலையை அறிந்து, ஆசை பூட்டி - அவர்

கட்கு ஆசை பிறக்குமாறு செய்து, இடறி விழும் பாழி காட்டும் - அந்த ஆடவர்கள் தடுக்கி விழும்படி தமது மறைவிடத்தைக் காட்டுகின்ற, மட மாதர்-மடமாதர்களுடைய, இறைவை கொளும் கூவல்-இறை கூடையைக் கொள்கின்ற கிணறு போன்றது, மூத்த கறை ஒழுகும் தாரை-பழைய அழுக்குகள் ஒழுகும் வழி, பார்க்கில்-ஆராய்ந்து பார்க்கில், இளமை கொடும் காதல் ஆற்றில்-இளமைப் பருவத்துக் கொடிய காதல் ஆற்றில், நிலையாத-நிலைக்க முடியாத, அதி விகடம் பீழல் - மிகுந்த துன்பத்தைத் தரும் இடம், ஆற்ற அழுகி விழும் பீறல் - மிகவும் அழுகி விழுகின்ற கிழிந்த இடம், ஊத்தை அடையும் இடம் - அழுக்கு சேரும் இடம், சீலை தீற்று கரு வாயில் - ஆடை மூடுகின்ற கருவுண்டாகின்ற துவாரவாசல், அருவி சலம் பாயும் ஓட்டை - அருவிபோல் நீர் பாய்கின்ற ஓட்டை, அடைவு கெடும் தூரை - தகுதியற்ற அடிப்பாகம் ஆகிய, பாழ்த்த அளறில் - பாழுஞ் சேற்றில், அழுந்தாமல் - அடியேன் அழுந்திவிடாமல், ஆட்கொடு அருள்வாயே - தேவரீர் ஆட்கொண்டருள வேண்டும்.

## பொழிப்புரை

பெரிய வில்லை வளைத்து அதில் அம்புகளைத் தொடுத்து சாமர்த்தியத்துடன் போர் புரியாமல் விதுரர் ஓயும்படியும், துரியோதனனாதியர் நூற்றுவரும் இறக்கும்படியும், உபாயஞ் செய்த ஜெயவீரனும், காளிக்கு உரிய கானகத்தில் வாழ்ந்து வந்த தருமபுத்திரருடைய தூதுவரும், திருநீறு பூசுகின்ற அர்ச்சுனனுடைய தேர்ப்பாகருமாகிய புனித மூர்த்தியாகிய கண்ணபிரானுடைய திருமருகரே! சந்திரன் அணையுமாறு உயர்ந்த சோலைகள்சூழ்ந்து, அதிகவளமுள்ள சந்தானம் என்ற தேவதருவைப் போல் தன்னை வழிபட்டோர்க்கு விரும்பியவற்றைத் தரவல்ல விராலிமலையில், பாதி மலையளவில் அடியவர் ஏறவைத்து, அங்கு நறுமணம் வீசும் சந்தான கோட்டம் என்ற இடத்தில் எழுந்தருளியிருந்து, அன்பர்கட்கு வேண்டிய அனைத்தும் வழங்கும் பெருமிதம் உடையவரே! தங்கள் எதிரில் வருகின்ற ஆடவர்களை ஓடிச்சென்று வரவேற்று வஞ்சனையால் அவர்களின் நிலையை யறிந்து, ஆசையை ஊட்டி, ஆடவர்கள் தடுக்கி விழும்படி மறைவிடத்தைக் காட்டுகின்ற மடமாதர்களுடைய, இறை கூடையைக் கொள்கின்ற கிணறு; பழைய அழுக்குகள் ஒழுகுகின்றவழி; ஆராய்ந்து பார்க்கில் இளம்பருவத்துக் கொடிய காதல் ஆற்றில் நிலைக்க முடியாத மிக்க பரப்புள்ள பீழல், மிகவும் அழுகி விழுகின்ற கிழியும் இடம், அழுக்கு சேரும் இடம், ஆடை மூடிய கருவுண்டாகும் துவாரவாசல், அருவிபோல் நீர்பாயும் ஓட்டை, தகுதி

யற்ற அடிப்பாகம், ஆகிய சேற்றில் அடியேன் அழுந்தாமல் என்னை ஆட்கொண்டருள வேண்டும்.

## விரிவுரை

அடிகள் இத்திருப்புகழின் முதற்பகுதியில் பொதுமாதரின் தன்மையைக் குறிப்பிடுகின்றார்.

விதுரனெடுந்த்ரோண மேற்று எதிர் பொருமம் பாதியேற்று விரகி னெழுந் தோய :—

அர்ச்சுனனுடைய வில் காண்டீபம். இது பிரம்மனுடைய வில். விதுரரிடம் இருந்தது விஷ்ணுவின் வில். அது கோதண்டம். விஷ்ணு வில்லை பிரமனுடைய வில் வெல்லாது. ஆதலால் விதுரருடைய வில்லை ஒழிக்கவேணும் என்று கருதினர் கண்ணபிரான்.

அவர் தூது சென்றபோது, விதுரருடைய திருமாளிகைக்கு எழுந்தருளித் தங்கினர். இதனால் சினங்கொண்ட துரியோதனன் விதுரரை நிந்தித்தான். அதனால் விதுரர் சினங் கொண்டு தன் வில்லை வெட்டிவிட்டு, தீர்த்த யாத்திரை சென்றார். அவரைப் போர் புரியாமல் விலக்கி விட்டார் கிருஷ்ணர்.

காளிகாட்டில் வருதருமன் :—

காளிவாழ்கின்ற இடமாகிய வனத்தில் பன்னிரு ஆண்டுகள் தருமர் துணைவருடன் வாழ்ந்தார்.

நீற்ற விஜயன் :—

அர்ச்சுனன் பரசிவபக்தன். திருநீறுபூசுபவன். சிவபூசை செய்பவன்.

> "ஆசினன் மறைப்படியும் எண்ணில் கோடி
> ஆகமத்தின்படியும் எழுத்தைந்துங் கூறிப்
> பூசினன் வடிவமெலாம் விபூதி" —மகாபாரதம்.

சந்தான கோட்டின் வழியருளின் பேறு காட்டி :—

சந்தானம் என்ற தரு தெய்வதரு. இது தன்னையடைந்தார்க்கு எல்லாந் தர வல்லது. இதுபோல் விராலிமலையும் தன்னையடைந்து வழிபடும் அடியார்க்கு வேண்டிய வேண்டியாங்கு வழங்க வல்லது.

பாதியேற்றி கடிகமழ் சந்தான கோட்டில் வழியருளின் பேறு காட்டு :—

*விராலிமலைக்கு வரும் அடியவர்களை பாதி மலைவரை ஏறச் செய்து, அங்கு நறுமணங் கமழ விளங்கும் சந்தான கோட்டம் என்ற இடத்தில் எம்பிரான் எழுந்தருளியிருக்கின்றார்.*

*வழிபட்டோர்க்கு எல்லா நலன்களும் அருளுகின்றார்.*

கருத்துரை

விராலிமலை முருகா! மாதர் மயக்கத்தில் அழுந்தா வண்ணம் ஆண்டருள்வீர்.

## 123

ஐந்து பூதமு மாறு சமயமு
மந்த்ர வேதபு ராண கலைகளும்
ஐம்ப தோர்வித மான லிபிகளும் வெகுரூப

அண்ட ராதிச ராச ரமுமுயர்
புண்ட ரீகனு மேக நிறவனும்
அந்தி போலுரு வானு நிலவொடு வெயில்காலும்

சந்த்ர சூரியர் தாமு மசபையும்
விந்து நாதமு மேக வடிவம
தன்சொ ரூபம தாக வுறைவது சிவயோகம்

தங்க ளாணவ மாயை கருமம
லங்கள் போயுப தேச குருபர
சம்ப்ர தாயமொ டேயு நெறியது பெறுவேனே

வந்த தானவர் சேனை கெடிபுக
இந்த்ர லோகம்வி பூதர் குடிபுக
மண்டு பூதப சாசு பசிகெட மயிடாரி

வன்கண் வீரிபி டாரி ஹரஹர
சங்க ராஎன மேரு கிரிதலை
மண்டு தூளெழ வேலை யுருவிய வயலூரா

வெந்த நீறணி வேணி யிருடிகள்
பந்த பாசவி கார பரவச
வென்றி யானசமாதி முறுகுகல் முழைகூடும்
விண்டு மேல்மயி லாட இனியக
ளுண்டு காரளி பாட இதழிபொன்
விஞ்ச வீசுவி ராலி மலையுறை பெருமாளே.

## பதவுரை

வந்த தானவர் சேனை கெடிபுக - போருக்கு வந்தடைந்த அசுர சேனைகள் புகழ்பெறவும், விபூதர் இந்த்ரலோகம் குடிபுக - தேவர்கள் பொன்னுலகத்தில் குடிபுகுந்து இன்புறவும், மண்டு பூத பசாசு பசிகெட - நெருங்கிய பூதங்களும் பைசாசங்களும் பசியாறவும், மயிடஅரி - மகிடாசுரனை வதைத்தவளும், வன்கண் வீரிபிடாரி - கொடியதொழிலும் வீரமும் உடையவளும் ஆகிய காளிதேவி, ஹரஹர சங்கரா என-அரஹரா! சங்கரா! என்று துதி செய்யவும், மேருகிரி தலை - மகா மேருகிரியின் உச்சியில், மண்டு தூள் எழ - நெருங்கிய புழுதி உண்டாகவும், வேலை உருவிய - வேலாயுதத்தை விடுத்தருளிய, வயலூரா - வயலூர் என்னுந் திருப்பதியில் எழுந்தருளியுள்ளவரே! வெந்த நீறு அணி - நெருப்பால் வெந்த திருநீற்றைத் தரிக்கின்ற வேணி இருடிகள் - சடாமகுடத்தை யுடைய மாமுனிவர்கள், பந்த பாச விகார பரவச - பந்த பாசத்தில் வசமாகும் தன்மையை, வென்றி ஆன - வெற்றிபெற்ற, சமாதி - சமாதி நிலையில், முறுகு கல் முழை கூடும் - முதிர்ந்த கற்குகையில் பொருந்தியுள்ள, விண்டுமேல் - மலையின் மேல், மயில் ஆட - மயில் ஆடவும், இனிய கள் உண்டு - இனியதேனைப் பருகி, கார் அளி பாட - கரிய வண்டுகள் பாடவும், இதழி - கொன்றை மரங்கள், பொன் விஞ்சவீசு - பொற்கட்டிகள் போன்ற மலர்களை மிகுதியாக வீசுகின்ற, விராலிமலை உறை - விராலிமலை யென்னுந் திருமலையில் வாழ்கின்ற, பெருமாளே - பெருமையின் மிக்கவரே! ஐந்துபூதமும் - மண் நீர் தீ காற்று விண் என்ற ஐம்பெரும் பூதங்களும், ஆறு சமயமும் - சைவம் வைணவம் காணுபத்தியம் கௌமாரம் சாத்தேயம் சௌரம் என்ற ஆறு சமயங்களும், மந்த்ர - மந்திரங்களும், வேத - வேதங்களும், புராண - பதினெண் புராணங்களும், கலைகளும் - அறுபத்துநான்கு கலைகளும், ஐம்பத்தோர் விதமான லிபிகளும் - ஐம்பத்தொரு வகையான எழுத்துக்களும், வெகுரூப - அநேக உருவங்களுடன் கூடிய, அண்டர் ஆதி - தேவர்கள் முதலிய, சர அசரமும்-அசைகின்ற உயிர்களும் அசையாத உயிர்களும் ஆகிய யாவும், உயர் புண்டரீகனும் - உயர்ந்த தாமரை மலரில் வாழும் நான்முகக் கடவுளும், மேக நிறவனும் - நீருண்ட நீலமேகம் போன்ற வடிவுடைய நாராயணமூர்த்தியும், அக்திபோல் உருவானும் - அந்தி வானம் போன்ற செம்மேனியுடைய உருத்திர மூர்த்தியும், நிலவொடு வெயில் காலும் -

நிலவுடன் வெயிலை வீசுகின்ற, சந்திர சூரியர் தாமும் - சந்திர சூரியரும், அசபையும் - அம்ச மந்திரமும், விந்து நாதமும் - விந்து நாதமும், ஏக வடிவம் - ஒரே வடிவமாகும், அதன் சொரூபம்து ஆக உறைவது - சுட்டறிவு அற்று எல்லாம் சிவவடிவாகக் காண்பதுவே, சிவயோகம் - சிவ யோகமாம், தங்கள் ஆணவ மாயை கரும மலங்கள் போய் - தங்களுடைய ஆணவம் கன்மம் மாயை என்ற மும்மலங்கள் அறவே நீங்கப்பெற்று, உப தேச குருபர - உபதேசிக்கின்ற குருபரருடைய, சம்ப்ரதாயமொடு - தொன்றுதொட்டு வருகின்ற நியமத்துடன், ஏயும் நெறி அது - பொருந்து கின்ற வழியை, பெறுவேனோ - அடியேன் பெறக்கடவனோ?

## பொழிப்புரை

போருக்கு வந்த அசுரசேனைகள் (வேற்படையால் அழியும் ஒரு சிறந்த) புகழைப் பெறவும், தேவர்கள் பொன்னாட்டில் குடிபுகுந்து இன்புறவும், நெருங்கிய பூதங்களும் பைசாசங் களும் பசியாறவும், மகிடாசுரனை யழித்தவளும் பயங்கரமான தொழிலை யுடையவளும் வீரத்தின் மிக்கவளுமாகிய காளிதேவி அஞ்சி, "அரஹரா! சங்கரா" என்று துதி செய்யவும், மாமேரு கிரியின் உச்சியில் மிகவும் புழுதி எழவும் வேற்படையை விடுத் தருளிய வயலூராண்டவரே! நெருப்பால் வெந்த திருநீற்றைத் தரிக்கின்ற சடாமகுடத்தையுடைய மாமுனிவர்கள் பந்தபாச மாயா விகாரத்தினாலே தன்வசமற்றிருப்பதை வெல்லற்குக் காரணமான சமாதியை முதிர்ந்த கற்குகையின்கண் கூடுகின்ற மலையின்மேல், மயில்களாகிய நடனமாதர்கள் ஆடவும், இனிய கள்ளுண்டு கரிய வண்டுகளாகிய நட்டுவர் பாடவும், (அவ் வாடலையும் பாடலையுங் கண்டுங் கேட்டும் உள்ளம் உவந்து) கொன்றை மரங்கள் மலர்கள் என்ற பொற்கட்டிகளை மிகுதி யாகப் பரிசாக வீசி வழங்கவும், ஆகிய நலங்களுடன் கூடிய விராலிமலையின்கண் எழுந்தருளிய பெருமிதமுடையவரே! ஐந்து பூதங்களும், ஆறு சமயங்களும், மந்திரங்களும், வேதங் களும், புராணங்களும், கலைகளும், ஐம்பத்தொரு வகையான அட்சரங்களும், தேவர் முதல் தாவரம் ஈறாக உள்ள பலவித வடிவங்களையுடைய சர அசரங்களும், உயர்ந்த பிரமதேவனும் திருமாலும், உருத்திரமூர்த்தியும், நிலவையும் வெயிலையும் வீசுகின்ற சந்திர சூரியரும், அம்ச மந்திரமும், விந்துநாதமும் ஒரே வடிவந்தான்; வேறு வேறாகப் பிரித்துச் சுட்டியறிகின்ற அறிவு நீங்கி எல்லாம் சிவமாகப் பார்க்கின்ற அகண்டாகார நிலையில் நிலைத்திருப்பது சிவயோகமாகவும், ஆணவம் கன்மம் மாயை என்ற மும்மலங்களும் நீங்கி உபதேச குருபர சம்ப்ர

தாயத்துடன் பொருந்தும் நன்னெறியை அடியேன் பெற்று உய்வேனோ?

## விரிவுரை

ஐந்துபூதமும் :-

மண், நீர், தீ, காற்று, வெளி என்பன.

ஆறு சமயமும் :—

சைவம், வைணவம், காணுபத்யம், கௌமாரம், சாக்தம், சௌரம் என்பன. இறைவனுடைய அருட்குணங்கள் ஆறனையும் தனித்தனியே தமக்குரியவாகக் கொள்வன.

மந்த்ர :—

மந்-நினைப்பு; திர-விடுப்பது; நினைப்பவரைப் பாவத்தினின்றும் விடுவிப்பது. அது ஏழு கோடிகளையுடையது. நம:, ஸ்வாஹா, ஸ்வதா, வஷட், வௌஷட், பட், ஹூம்பட், என்பன.

வேத ,—

இருக்கு, யஜுர், ஸாமம், அதர்வணம், என்பன. ஆயுர் வேதம், காந்தர்வவேதம், அர்த்தவேதம், தநுர்வேதம் என்பன உபவேதங்களாம்.

புராண :—

புராணங்கள் பதினெட்டு.

சைவம், பௌஷ்யம், மார்க்கண்டேயம், இலிங்கம், காந்தம், வராகம், வாமனம், மச்சம், கூர்மம், பிரமாண்டம், காருடம், நாரதீயம், வைணவம், பாகவதம், பிரமம், பதுமம், ஆக்னேயம், பிரமகைவர்த்தம் என்பன.

ஐம்பதோர் விதமான லிபிகளும் :—

ஆருதாரங்களில் அடங்கியுள்ள அகாராதி க்ஷகாராந்தமாகவுள்ள மாத்ருகா அட்சரங்கள்.

அசபை :—

உதடு அசையச் செய்வது ஜபம். உதடு அசையாமல் மானஸீகமாகச் செய்வது அஜபாநலம். அதனை ஹம்ஸ மந்திரம் என்பர்.

ஏகவடிவம் :—

சுட்டி யறிகின்ற அறிவு நீங்கி எல்லாம் சிவவடிவாகப் பார்த்தல்.

சிவயோகம் :—

யோகம் என்னும் சொல்லுக்குப் பொருந்துதல் என்று பொருள். பொருந்துதல் என்ற உடனே (1) பொருந்துகின்ற பொருள் எது? (2) எந்தப் பொருளோடு பொருந்த வேண்டும்? (3) பின் பொருந்துதற்குரிய காரணம் யாது? (4) முன் பொருந்தா திருந்தமைக்குக் காரணம் யாது? (5) ஒன்றை மற்றொன்றனோடு பொருத்துகின்ற உபகார சத்தி எது? (6) பொருந்தியபின் விளையும் பயன் யாது? என்ற வினாக்கள் எழும். இவ்வினாக்கட்கு முறையே விடை பின்வருமாறு :

1. பொருந்துகின்ற பொருள் ஜீவான்மா;
2. பொருந்தப்படும் பொருள் பரமான்மா;
3. பின் பொருந்துதற்குரிய காரணம் பிரமானந்த வேட்கை;
4. முன் பொருந்தா திருந்தமைக்குக் காரணம் ஆணவ மல மறைப்பு;
5. பொருத்துகின்ற பொருள் இறைவனோடு தாதான் மியப்பட்டு நிற்கும் அனுக்கிரக சக்தி;
6. பொருந்தியபின் விளைவது சிவானந்தம்.

ஒருத்தியும் ஒருவனும் கூடி யின்புறுவார்களானால், கூடுகின்ற மங்கையும், கூட்டப்படுகின்ற மணாளனும், அவள் அவனைக் கூடுதற்குரிய காமவேட்கையும், முன் அவனைக் கூடாதிருந்தமைக்குக் காரணம் அவனை அறியாமையும், அவனை அவளுடன் கூட்டிவைத்து உதவி புரிகின்ற தோழியும், கூடியபின் விளைகின்ற இன்பமும் போலென்று..ணர்க.

இனி, ஒரு அறிவற்ற பொருள் மற்றொரு அறிவற்ற பொருளுடன் கூடி இன்புறுவதில்லை. ஒரு மரப்பலகை ஒரு மாம்பழத்துடன் கலந்து அதன் மதுரத்தை யறியாது. அறிவற்ற பொருளாயினும் அறிவுடைய பொருளுடன் கூடுங்கால் அறிவுடைய பொருள் இன்புறும். ஒரு மாங்கனியை ஒரு மனிதன் நுகர்ந்து இன்புறுவன். ஆயினும் அல்ப இன்பமேயாம்; அதனினும் சிறந்தது அறிவுடைய பொருள் மற்றொரு அறிவுடைய

பொருளுடன் கூடி இன்புறுவது. அறிவுடைய ஒருவனும் அறிவுடைய ஒருத்தியுங் கூடுகின்ற பொழுது மிகுந்த இன்பம் உண்டாகும். ஆயினும் அவ்வின்பம், கணப்பொழுதில் மறைவதும், தூய்மையில்லாததும், நோய் செய்வதும், வெறுக்கத் தக்கதுமாம்.

சிற்றறிவுடைய சீவான்மா பேரறிவுடைய பரமான்மாவோடு கூடுகின்ற பொழுது, தெவிட்டாத பேரின்பமும், அநுபவிக்க அநுபவிக்கக் குறையாத ஆனந்தமும், நிலைபெறுன உண்மையின்பமும் உண்டாகும். ஆதலால், சீவன் சிவத்துடன் பொருந்துகின்றதே சிவயோகமாம். இது சிவனுடன் பொருந்துதல் எனப் பொருள்படும்.

அட்டாங்க யோகமு மாதார மாறு மவத்தையைந்தும்
விட்டேறிப் போன வெளிதனிலே வியப் பொன்றுகண்டேன்
வட்டாகிச் செம்மதிப்பா லூறலுண்டு மகிழ்ந்திருக்க
எட்டாத பேரின்ப மென்னை விழுங்கி இருக்கின்றதே.

—பட்டினத்தடிகள்.

நிற்க, பிராணவாயுவை முறைப்படி ஒடுக்கி உள்ளத்தை ஒடுக்குவது ஒருமுறை; அதற்கு ஹடயோகம் என்றுபேர். அது குருவின்பால் முறையே கற்றுப் பயின்று செய்யத்தக்கதாம். மிகவும் அரிய சாதனம். அதனை தூலயோகம் என்னலாம். அதனை விடுத்து, சூக்கும முறையாக உள்ளத்தை ஒடுக்கி அவ்வழியே பிராணவாயு முதலியவற்றை ஒடுக்கி சிவத்துள் ஒடுங்குவதுவே சிவயோகம். அதுவே எளிது. ஒரு பொருளை ஆழ்ந்து சிந்திக்கும்போது பிராணவாயு ஒடுங்குவது கண்கூடு; நாடோறும் சிவத்தையுன்னி சிந்தை முழுவதும் அப்பொருளிடம் வைத்து அசைவற்று சித்திரதீபம்போலிருக்கின், கருவி கரணங்கள் யாவும் ஒடுங்கும். அப்போது சிவவொளி நன்கு வீசும், மலமறைப்பு அறவே நீங்கும். அவ்வழி சிவானந்தப் பெருவெள்ளம் பெருகி ஓடும்.

ஹடயோகத்தை அருணகிரி சுவாமிகள் மறுத்துரைக்குமாறு காண்க.

துருத்தி யெனும்படி கும்பித்து வாயுவைச் சுற்றிமுறித்
தருத்தி யுடம்பை யொறுக்கிலென் ஞம்சிவ யோகமென்னுங்
குருத்தை யறிந்து முகமாறுடைக்குரு நாதன்சொன்ன
கருத்தை மனத்தி லிருத்துங் கண்டீர் முத்தி கைகண்டதே.

—கந்தரலங்காரம் (71)

சிவயோக முறையாக பிராணவாயுவை செம்மைப் படுத்துவதே செந்நெறியென தவயோகர் போற்றுஞ் சிவயோகச் செம்மலாகிய எமது திருமூலர் கருமூலங் கெடுமாறு கூறுவதைக் காண்க.

ஆரிய நல்லன் குதிரை யிரண்டுள
வீசிப் பிடிக்கும் விரகறி வாரில்லை
கூரிய நாதன் குருவி னருள்பெற்றால்
வாரிப் பிடிக்க வசப்படுந்தானே.
புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை
நெறிப்பட வுள்ளே நின்மல மாக்கில்
உறுப்புச் சிவக்கும் உரோமங் கறுக்கும்
புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே.
ஏற்றி யிறக்கி இருகாலும் பூரிக்கும்
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாரில்லை
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை யுதைக்குங் குறியது வாமே. —திருமந்திரம்.
கால்பிடித்து மூலக் கனலைமதி மண்டலத்தின்
மேலெழுப்பில் தேகம் விழுமோ பராபரமே.

—தாயுமானார்.

யோகம் என்பதனைப் பலர் பலவாறு கூறினும் யாம் கூறும் சிவத்தொடு கலத்தலே பொருள் என்பதனை காசி காண்ட அருமை வாக்கா லறிக.

இந்திய விடயந் தன்னொடு சிவனால் யோகமென்பார்சிலர் சிலர்தஞ்
சிந்தனை யுயிரோ டடைத லல்யோகமென்பரி தன்றியுஞ் சிலர்தாம்
முந்திய பிராண னபானனோ டடைதலென்பரிம் மொழிந்தவை யனைத்து
மந்தமில் யோகமல்ல நற்சிவன் பரத்துடன் னடைவதே யோகம்.

வெந்த நீறணி வேணி யிருடியர் :—

விராலிமலையில் குகைகளில் முனிவர்கள் சமாதி நிலையில் உறைகின்றனர். அவர்கள் திருநீறு தரித்து விளங்குகின்றனர். அத்திருநீற்றின் அளவிடற்கரிய பெருமையைச் சிறிது கூறுதும்.

## திருநீறு செய்யும் விதி

முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு
சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ வினியது நீறு
சித்தி தருவது நீறு திருவால வாயான் றிருநீறே.

திருநீறு, பசிதம், இரட்சை, விபூதியெனப் பல நாமங்கள் பெற்று விளங்கும். தீவினைகள் அனைத்தையும் நீற்றிவிடலால் திருநீறு; அறியாமையை யகற்றி சிவசோதியைத் தரலால் பசிதம்; பேய் பூதம் வேதாளம் ஏவல் பில்லி சூனியம் துர்த்தேவர்கள் பயம் பழிபாவம் நோய் ஆகிய தீமைகளினின்றுங் காப்பதனால் இரட்சை; அளவற்ற செல்வத்தைத் தருதலால் விபூதி; எனப் பெயர் பெறும்.

இருப்புக்கவசம் பூண்டவனுக்கு ஆயுதங்களின் துன்பம் நேராது. அதுபோல், திருநீறு என்ற வஜ்ரகவசம் பூண்டார்க்கு யாதொரு இடரும் எய்தாது. வினை நீங்கி வீடுபெறுவர்.

கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை
மங்காமல் பூசி மகிழ்வரே யாமாகிற்
றங்கா வினைகளுஞ் சாருஞ் சிவகதி
சிங்காரமான திருவடி சேர்வரே.

—திருமூலர்.

திருநீறு கற்பம், அநுகற்பம், உபகற்பம் என மூன்று வகைப்படும்.

கற்பம் :—

கன்றுபோடாதது, மலடு, இளங்கன்றுடையது, கருவுற்றது, முதிர்ந்த கன்றுடையது, அங்கப்பழுதுடையது. ஆகிய பசுக்களை நீக்கி, நல்ல அழகுடைய சிறந்த கன்றோடு கூடிய பசுவை பங்குனி மாதத்தில் நெல்லறுத்த வயலில் மேயவிட்டு, அப் பசு விடுகின்ற கோமய (சாணம்) த்தை அட்டமி, சதுர்த்தசி, அமாவாசை, பௌர்ணமி ஆகிய நாள்களில், காலை நீராடி சிவபூஜை முதலியன செய்து, சாணம் கீழே விழாமற்படிக்கு, தாமரை, பலாசம், வாழை ஆகிய இலைகளில் ஏதாவதொன்றில். சத்யோஜாத மந்திரஞ் சொல்லி ஏற்கவேண்டும். மேல் வழும்பினை எடுத்துவிட்டு, வாமதேவ மந்திரஞ் சொல்லி பஞ்ச கவ்வியம் விட்டு, அகோர மந்திரம் சொல்லிப் பிசைந்து, தற்புருட மந்திரஞ் சொல்லி உருண்டை செய்தல் வேண்டும். ஓமத்தீ மூட்டி பதடியுடன் சேர்த்துச் சுட்டு, நல்ல பதத்தில் ஈசான மந்திரஞ் சொல்லி எடுத்து, புதிய ஆடையில் வடிகட்டி, பொன், வெள்ளி, தாம்பிரம் ஆகிய பாத்திரம் உத்தமம், மத்திமம், அதமம், இன்றேல் புதியமண், பித்தளை, சுரை ஆகிய பாத்திரங்களிலும் வைக்கலாம். அவ்வாறு வைக்கும் போது அத்திருநீற்றை சிவபெருமானுடைய திருவுருவமாக எண்ணி பஞ்சப் பிரமமந்திரமும், சடங்க

மந்திரமும் சொல்லி. அவற்றுடன் சண்பகம், தாழை, பலாசம் புன்னாகம், தாமரை, துளசி, பாதிரி, பச்சைகற்பூரம், வெட்டிவேர் மரு, விலாமிச்சம் வேர், மல்லிகை, தக்கோலம், நாயுருவி, தருப் பையின் நுனி முதலியவற்றை விபூதியிலிட்டு, மலர் சூட்டி வெண் துகிலால் வாய்கட்டி, காயத்திரி மந்திரஞ் ஜெபித்து, கவசமும் அவகுண்டனமும் செய்து, அத்திரமந்திரஞ் சொல்லி தேனுமுத்திரைகாட்டி பத்திரப்படுத்துதல் வேண்டும். அதில் வேண்டியபோது சிவமந்திரஞ் சொல்லி எடுத்து உபயோ கித்துக் கொள்ள வேண்டும்.

அநுகற்பம் :—

சித்திரை மாதத்தில் காட்டிற்குச் சென்று அங்குள்ள பசு வின் உலர்ந்தகோமய (சாணத்)தைக் கொண்டுவந்து இடித்து பஞ்சகவ்வியம் விட்டு முன் கூறிய முறைப்படி நீற்றி எடுக்க வேண்டும்.

உபகற்பம் :—

காட்டுத் தீயால் வெந்த நீற்றைக் கொணர்ந்து இடித்து கோநீர்விட்டுப் பிசைந்து முன் கூறிய முறைப்படி நீற்றி எடுத்து வைக்கவேண்டும். இனி கற்பம் என்றும் ஒருவகை உண்டு. அது உபகற்பத்தின் சிறு பிரிவாம்.

சர்வ சங்கார காலத்தில் சிவபெருமான் மூவரையும், தேவ ரையும் நெற்றிக்கண்ணால் எரித்து அம்மயானத்தில் நடித்தனர். அப்பொழுது அவருடைய அருள் திருமேனியில் அந்நீறு முழு வதும் படிந்தது. அதனைச் சிவபெருமான் திருக்கரத்தால் வழித்து எறிந்தனர். அதனை இடபதேவர் உண்டு தன் வீரி யத்தைப் பசுக்கள் பால் விடுத்தனர். அதனாலும், தேவர்கள் யாவரும் பசுவின் உடம்பில் வசிப்பதாலும், பசுவின் சாணத்தை எரித்த நீறு மிகவும் புனிதம் பெற்றது.

அத்திருநீற்றை ஒரு கரத்தில் வாங்குதலும், தலை கவிழ்ந்து பூசுதலும் குற்றம். இனி திரிபுண்டரமாக அணிகின்ற விதியை தத்தம் குருமூர்த்தியிடம் கேட்டுத்தெளிக. சென்னியில் அணி வதால் கழுத்துவரைசெய்த பாபங்கள் தீரும். மார்பில் அணி வதால் உள்ளத்தால் செய்த பாவம் தீரும். கரத்தில் அணிவ கரத்தால் செய்யும் பாவங்கள் தீரும். முழந்தாளில் அணிவ தால் கால்களால் செய்யும் பாவங்கள் தீரும். இங்ஙனம் திரு நீறு எல்லாப் பாவங்களையும் போக்கவல்லது. மிகுந்த பாவம்

**செய்தவற்கு திருநீற்றில் வெறுப்பு உண்டாகும். திருநீறு இடாதவரைக் கண்டு பெரியவர்கள் அஞ்சுகின்றனர்.**

பிணியெலாம் வரினும் அஞ்சேன் பிறப்பினே டிறப்புமஞ்சேன்
துணிநிலா அணியினுன்றன் தொழும்பரா டேழுந்தி அம்மால்
திணிநிலம் பிளந்து காணுச் சேவடி பரவி வெண்ணீ
றணிகிலா தவரைக் கண்டால் அம்ம நாமஞ்சுமாறே.

—மாணிக்கவாசகர்.

போற்றி நீறிடாப் புலையரைக் கண்டால் போக போகநீ புலமிழந்தவமே
நீற்றின் மேனியர் தங்கவளக் கண்டால் நிற்க நிற்கவந் நிமலரைக் காண்க
சாற்றி னன்னெறி யீதுகாண் கண்காள் தமனியப் பெருந்தநு வெடுத் தெயிலைக்
காற்றி நின்றனங் கண்ணுதற் கரும்பைக் கயிலையாளனைக் காணுதற் பொருட்டே,

—இராமலிங்க அடிகள்.

"பகர் புனித நீறணியார் ஞானமடை யாா கோடி பவமா றலுங்
தகர்தலுறுர் சமுசார மாபாவ முடையராய்த் தாழ்வார் கும்பி
புகரில்வரு ணுச்சிரம பலமுமுரு ரவரியற்றும் புனித மான
நிகரரிய புண்ணியமும் பாதகமா மென்றுமறை நிகழ்த்து மாலோ"

**திருநீறணியாது செய்யும் தான தருமங்களாலும், விரதங்களாலும், தவங்களாலும் ஒருபோதும் பலன் அடையார். ஆதலால் திருநீற்றை ஒவ்வொருவரும் அன்புடன் அணிதல் வேண்டும்.**

**சிவநாமத்தைக் கூறி திருநீறிட்டார் நிச்சயமாக சிவகதி பெறுவர். "திருவாய்ப் பொலிய சிவாயநம வென்று நீறணிந்தேன் தருவாய் சிவகதி" என்று அப்பமூர்த்திகள் கூறுகின்ற அருமையை யுன்னுமின். "சுந்தரமாவது நீறு" "கவினைத் தருவது நீறு" என்ற திருவாக்குகளையும் உய்த்துணர்மின்; மேல் நாட்டாரும் இன்று அழகு செய்ய வெண் பொடியை முகத்திற் பூசி யுவக்கின்றன ரன்றோ? சிவப்பொடி பூசிற் பவப்பொடியாகும். சிவநாமத்தைக் கூறி திருநீறிட்டார்க்கு பேய் பில்லி பூதங்களாலும் நோய்களாலும் துன்பம் நேராது என்பதை இன்றைக்கும் கண்கூடாகக் காண்கின்றோம். "நீறில்லா நெற்றி பாழ்" என்ற தமிழன்னையின் அமிழ்த வுரையையும் நினைமின். அன்பர்கள் அனைவரும் அன்புடன் அரனுமங் கூறி திருநீறிட்டு வினைகளை வேரோடு களைந்து இருமை நலன்களை எளிதிற்**

பெறுவார்களாக. விளக்கம் திருப்புகழ் விரிவுரை 3-ம் தொகுதி 260-ம் பக்கத்திலும் 5-ம் தொகுதி 349-ம் பக்கத்திலும் கண்டு கொள்ளவும்.

விண்டுமேல் மயிலாட.......... பொன் விஞ்சவீசு :—

அருணகிரியார் இயற்கைக் காட்சியில் நம்மை ஈடுபடுத்துகின்றனர். விராலிமலையில் எந்நேரமும் ஒரு நடனக் கச்சேரி நடக்கின்றது. நடனமாடுகின்ற பெண் மயில்; பின்னே பாடி அவளை நடிக்கச் செய்கின்ற நட்டுவனார் வண்டு; அந்நடனத்தைக் கண்டு கொன்றைமரம் என்ற தனவந்தன் தனது மலர்களாகிய பொற்கட்டிகளை அலட்சியமாக அப்படி வீசுகின்றது. என்ன அழகு?

இவ்வண்ணமே எமது ஞானசம்பந்தப் பெருந்தகையாருங் கூறுமாறு காண்க.

வரைசேரு முகின்முழவ மயில்கள்பல நடமாட வண்டுபாட
விரைசேர்பொன் னிதழிதர மென்காந்தள் கையேற்கு மிழலையாமே.

கருத்துரை

அசுரரை யழிக்க வேல் விடுத்தருளிய வயலூராண்டவரே! விராலிமலையுறை வித்தகரே! எல்லாம் சிவவடிவாகப் பார்த்து சிவயோகத்தில் நிலைபெற சற்குரு பரம்பரையோடு சேர அருள் புரிவீர்.

## 124

கரதல முங்குறி கொண்ட கண்டமும்
விரவியெ ழுந்துசு ருண்டு வண்டடர்
கனவிய கொண்டைகு லைந்த லைந்திட அதிபாரக்

களபசு கந்தமி குந்த கொங்கைக
ளிளகமு யங்கிம யங்கி யன்புசெய்
கனியித ழுண்டுது வண்டு பஞ்சணை மிசைவீழா

இரதம ருந்தியு றுங்க ருங்கயல்
பொருதுசி வந்துகு விந்தி டும்படி
யிதவிய வுந்தியெ னுந்தடந்தனி லுறமூழ்கி

இனியதொ ரின்பம்வி ளைந்த ளைந்துபொய்
வனிதையர் தங்கள்ம ருங்கி ணங்கிய
இளமை கிழம்படு முன்ப தம்பெற வுணர்வேனோ

பரத சிலம்புபு லம்பு மம்பத
வரிமுக எண்கினு டன்கு ரங்கணி
பணிவிடை சென்றுமு யன்ற குன்றணி
யிடையேபோய்ப்

பகடியி லங்கைக லங்க அம்பொனின்
மகுடசி ரந்தச முந்து ணிந்தெழு
படியுந டுங்கவி ழும்ப னம்பழ மெனவாகும்

மருதமு தைந்தமு குந்த னன்புறு
மருககு விந்தும லர்ந்த பங்கய
வயலியில் வம்பவிழ் சண்ப கம்பெரி யவிராலி

மலையில் விளங்கிய கந்த என்றுனை
மகிழ்வொடு வந்திசெய் மைந்த னென்றனை
வழிவழி யன்புசெய் தொண்டு கொண்டருள்
பெருமாளே.

## பதவுரை

பரத சிலம்பு - பரத நாடகத்திற்குரிய சிலம்பு என்ற காலணி, புலம்பும் அம் பத - ஒலிசெய்கின்ற அழகிய திருவடியை யுடையவரே! வரி முக எண்கின் உடன் - வரிகளோடு கூடிய முகமுடைய கரடிப்படையுடன், குரங்கு அணி - குரங்குப் படைகள், பணிவிடை சென்று முயன்ற - குற்றேவல் செய்தற்குப்போய் முயற்சி செய்த, குன்று அணி இடையேபோய் - அழகிய மலைவழியே சென்று, பகடி இலங்கை கலங்க - ஆடலோடு கூடிய இலங்காபுரி கலங்க, அம் பொ(ன்)னின் மகுடசிரம் தசமும் - அழகிய பொன்னாற் செய்யப்பட்ட மணிமுடிகளைத்தரித்த(இராவணனுடைய) பத்துந் தலைகளும், துணிந்து - அறுபட்டு, எழுபடியும் நடுங்க - ஏழுலகங்களும் நடுங்குமாறு, விழும் பனம் பழம் என ஆகும் - மரத்திலிருந்து விழுகின்ற பனம் பழம்போல் விழுந்துருளச் செய்தவரும், மருதம் உதைந்த - மருத மரத்தை உதைத்தவரும் ஆகிய, முகுந்தன் அன்புறும் - முக்தியைத் தருகின்ற திருமால் அன்புகொள்கின்ற, மருக - திருமருகரே! குவிந்து மலர்ந்த பங்கய வயலியில் - கதிரவன் மறைவதால் குவிந்து மீளவுந் தோன்றுவதால்

மலர்கின்ற தாமரைகள் நிறைந்த வயலூர் என்னுந் திருத்தலத்திலும், வம்பு அவிழ் - வாசனை வீசுகின்ற, சண்பகம் பெரிய விராலிமலையில் - பெரிய சண்பகத்தருக்கள் நிறைந்த விராலிமலையிலும், விளங்கிய கந்த என்று உனை - வாழ்கின்ற கந்தக் கடவுளே என்று தேவரீரை, மகிழ்வொடு வந்தி செய் - மகிழ்ச்சியுடன் தொழுகின்ற, மைந்தன் என்றனை - புதல்வனாகிய அடியேனை, வழிவழி அன்பு செய் - வழிவழியாக அன்பு செய்கின்ற, தொண்டு கொண்டு அருள் - அடிமை கொண்டருளிய, பெருமாளே - பெருமையின் மிக்கவரே! கரதலமும் - கையாகிய தலமும் குறி கொண்ட கண்டமும் - நகக்குறியுடன் கூடிய கழுத்தும், விரவி எழுந்து - கலந்து ஆற்றுவதால் மேல் எழுந்து, சுருண்டு - சுருள் பெற்று, வண்டு அடர் - வண்டுகள் நெருங்கியுள்ள, கனவிய கொண்டை குலைந்து அலைந்திட - பருத்த கூந்தல் குலைந்து அலைய, அதிபார - மிகவும் பெரியதும், களப சுகந்தம் மிகுந்த - கலவைச்சாந்து பூசப்பட்டு மணங் கமழ்கின்றதும் ஆகிய கொங்கைகள் இளக - தனங்கள் இளகவும், முயங்கி மயங்கி - விலைமகளிருடன் கலந்து மயங்கியும், அன்புசெய் கனி இதழ் உண்டு துவண்டு - அன்பைச் செய்கின்ற கனிபோன்ற இதழமுதைப் பருகி துவண்டும், பஞ்சணைமிசை வீழா - பஞ்சணைமேல் வீழ்ந்தும், இரதம் அருந்தியும், இன்பத்தை யுண்டும், உறும் கருங்கயல் பொருது சிவந்து குவிந்திடும்படி - பொருந்தியுள்ள கருமையான அவர்கள் கண்கள் பூசல்செய்து சிவந்து குவியுமாறு, இதவிய உந்தி எனும் தடம்தனில் உற மூழ்கி - இதமாகிய உந்தி என்னும் இடத்தில் பொருந்தி அதில் முழுகியும், இனியது ஓர் இன்பம் விளைந்து அளைந்து - இனியதாகிய ஓர் இன்பம் உண்டாகி அதில் கலந்தும், பொய் வனிதையர் தங்கள் மருங்கு இணங்கிய - பொய்யாக அன்பு செய்கின்ற பரத்தையரிடத்தில் கூடி வறிதே கெடுகின்ற, இளமை கிழம்படு முன் - இளமைப் பருவமானது முதுமைப் பருவத்தை யடைவதற்குள், பதம்பெற உணர்வேனோ - தேவரீருடைய திருவடியைப் பெற்றுய்ய உணர்வு பெறமாட்டேனோ?

## பொழிப்புரை

பரதக்கூத்திற் கிசைய ஒலிக்கும் சிலம்பு இனிது ஒலிக்கும் அழகிய திருவடியை யுடையவரே! வரிகளை யுடைய முகத்துடன் கூடிய கரடிப்படையுடன் குரங்குப் படைகளும் பணிவிடை செய்து சீதையைத் தேடுதற்கு முயன்ற மலைகளின் வழியே சென்று, ஆடல் பாடல்களுடன் கூடிய இலங்கை கலங்கவும், அழகிய பொன்முடிகளுடன் கூடிய இராவணனுடைய பத்துத் தலைகளும், ஏழுலகங்களும் நடுங்குமாறு பனம் பழம் போல விழுந்துருளவும், போர்செய்தவரும், கிருஷ்ணவதாரத்தில் மருத மரங்களின் இடையேபோய் அவைகளை உதைத்தவரும், முத்தியைத் தருபவருமாகிய திருமால் அன்பு கொள்

கின்ற மருகரே! குவிந்து மலர்கின்ற தாமரைகள் நிறைந்த வயலூர் என்னுந் திருத்தலத்திலும், மணங்கமழ்கின்ற பெரிய சண்பக மரங்கள் மிகுந்த விராலிமலையிலும் விளங்குகின்ற கந்தப் பெருமானே! என்று துதிசெய்து மகிழ்ச்சியுடன் தொழுகின்ற குழந்தையாகிய அடியேனை வழிவழியாக அன்புசெய் தொண்டு கொண்டருளிய பெருமிதமுடையவரே! கழுத்தில் கை செருகியாற்றுவதால் மேலெழுந்து சுருண்டு வண்டுகள் மொய்த்துள்ள பருத்த கூந்தல் குலைந்து அலையவும், கலவைச் சாந்து கமழ்கின்ற பருத்த தனங்கள் இளகவும், கூடி மயங்கியும், அன்புறுகின்ற கனி நிகர்த்த அதரத்தைப் பருகியும், துவண்டும், பஞ்சணை மேல் வீழ்ந்தும், இன்பமுற்றும், கரிய கண்கள் பூசலாடி சிவந்து குவியுமாறு, இதஞ் செய்கின்ற உந்தியில் முழுகியும், இனிய சுகத்தில் கலந்து, பொய்யாக நடிக்கும் பரத்தையர்பால் இணங்கிய இளமையானது கிழப் பருவத்தையடையு முன்னரேயே தேவரீரது திருவடியைப் பெற்று உய்ய உணர்ச்சியை அடையமாட்டேனோ?

## விரிவுரை

இளமை கிழம்படுமுன் பதம்பெற உணர்வேனோ :—

கிழப்பருவம் மிகவும் கொடுமையானது; மனைவியும் மக்களும் வெறுப்பர்; நண்பர் அறவே புறக்கணிப்பர்; உடல் நலங்குன்றிவிடும்; கண்பார்வை மங்கும்; செவிடுபடும்; உண்டது செமிக்காது; இறைவனைச் சிறிதுநேரம் இருந்து தியானிக்க உடம்பு இடந்தராது. ஆதலால் இளமைப் பருவம் மாறி முதுமைப் பருவம் வருவதற்குள் இறைவனது பதம்பெறுவதற்கு உணரவேண்டும்.

காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே
பாலுண் கடைவாய் படுமுன்னே—ஓலஞ்செய
துற்ரு ரழுமுன்னே ஊரார் சுடுமுன்னே
குற்ருலத் தீசனையே கூறு.

—பட்டினத்தடிகள்.

"நரைவரு மென்றெண்ணி நல்லறிவாளர்
குழவி யிடத்தே துறந்தார்"

—நாலடியார்.

முற்பகுதியில் 11 வரிகளில் இளமையை யழிக்க வல்லது இதுவென்றும். அதனின்றும் தப்பி என்று மகலாத இளமையைத் தரவல்ல இளம்பூரணனது இன்னருளைப் பெறுதற்கு முயலவேண்டு மென்றுங் குறிப்பிடுகின்றனர்.

பரதசிலம்பு புலம்புமம்பத :—

பரதம் என்பது ஒருவகைக் கூத்து. பாவ, ராக, தாளம் மூன்றுங் கூடியதற்கு பரதம் என்பர். அக்கூத்திற்கு ஆசிரியர் நடராஜமூர்த்தி.

"இன்பத் திறமுதவு பரதகுரு வந்திக்குஞ்சற் குருநாதா"
—(அமுதுததி) திருப்புகழ்.

பரதநடனத்திற்கு இசைய சிலம்பு முருகவேள் திருவடியில் மிகவும் இனிமையாக ஒலித்துக்கொண்டிருக்கின்றது.

"இனியநாத சிலம்பு புலம்பிடும்
அருணை ஆடக கிண்கிணி தங்கிய அடிதாராய்"
—(கமலமாதுடன்) திருப்புகழ்.

மகுட நிரந்தசமும் :—

இராவணன், கும்பகர்ணன், விபீடணன் என்னும் மூவரும் உடன்பிறந்தார். முறையே தாமசம், ராஜசம், சத்துவம் என்ற முக்குணங்களாவார். சத்துவகுணமாகிய விபீடணர் பகவானாகிய ஸ்ரீராமரிடம் அடைக்கலம் புகுந்தனர். தாமசம் ராஜசம் என்ற இருவரும் அழிந்தனர். அதில் தாமசகுணமாகிய ராவணனுக்குப் பத்துத் தலைகள். அவையாவன, காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மற்சரம், ஈருஷை, டம்பம், மமகாரம், அகங்காரம் என்பன.

மருத முதைந்த முகுந்தன் :—

இதனைத் திருப்புகழ் விரிவுரை 5-ம்தொகுதி 110-ம் பக்கத்தில் காண்க.

வழிவழி யன்புசெய் தொண்டு கொண்டருள் :—

அருணகிரிநாத சுவாமிகள் பல இடங்களில் தன்னை வழி வழி யடிமை என்று தெரிவிக்கின்றார்கள்.

" தஞ்சமாகியெ வழிவழி யருள்பெறும்
அன்பினு லுன தடிபுக ழடிமை "
"முடிய வழிவழி யடிமை யெனுமுரிமை யடிமை முழு
துலகறிய மழலை மொழி கொடுபாடு மாசுகவி
முதலமொழிவன நிபுண மதுப முகரித மவுன
முகுள பரி மளநிகில கவிமாலை சூடுவதும்" —சீபாத வகுப்பு. (1)

## கருத்துரை

திருமால் மருகரே! வயலூரிலும் விராலிமலையிலும் வாழ்கின்ற பெருமானே! பெண்ணாசையிற் சிக்கி இளமை வறிதே கழியுமுன் உணர்வு அருள்வீர்.

## 125

கரிபு ராரி காமாரி திரிபு ராரி தீயாடி
கயிலை யாளி காபாலி கழையோனி
கரவு தாச ஞசாரி பரசு பாணி பாஞளி
கணமொ டாடி காயோகி சிவயோகி
பரம யோகி மாயோகி பரிய ராஜ டாசூடி
பகரொ ணாத மாஞானி பசுவேறி
பரத மாடி காஞடி பரவ யோதி காதீத
பரம ஞான வூர்பூத அருளாயோ
சுருதி யாடி தாதாவி வெருவி யோட மூதேவி
துரக கோப மீதோடி வடமேரு
சுழல வேலை தீமூள அழுத ளாவி வாய்பாறி
சுரதி ஞேடு சூர்மாள வுலகேழும்
திகிரி மாதி ராவார திகிரி சாய வேதாள
திரளி ஞேடு பாரூேடு கழுகாடச்
செருவி னுடு வானீப கருணை மேரு வேபார
திருவி ராலி யூர்மேவு பெருமாளே.

### பதவுரை

சுருதி ஆடி தாதா - வேதங்களை அத்யயனம் செய்யும் பிரமன், வி வெருவி ஓட - மிகவும் பயந்து ஓடவும், மூதேவி துரக - மூதேவி அகன்று ஓடவும், கோபம் மீது ஓடி - கோபம் மிகவும் கொண்டு, வட மேரு சுழல - வடதிசையிலுள்ள மேருமலை சுழலவும், வேலை தீ மூள-கடலில் எரி மூளவும், அழுது அளாவி வாய் பாறி சுரதிஞேடு, சூர்மாள - வாய் கிழிய அழுது சப்தத்துடன் சூரபன்மன் இறக்கவும், உலகு ஏழும் - ஏழு உலகங்களும். திகிரி - வட்டமாய். மாதிர ஆவார - திசைகளை மறைக்கின்ற. திகிரி சாய - சக்கிரவாளகிரி சாயவும், வேதாள திரளிஞேடு - பேய்க் கூட்டங்களுடன். பாரூேடு - பருந்தும், கழுகு ஆட - கழுகுகளும் ஆடவும். செரு வில் நாடு - போரை நாடிச் சென்ற, வான் நீப - தூய கடப்ப மலர் மாலை யணிந்த, கருணை மேருவே - கருணையில் மேருமலை போன்றவரே! பார - பெருமை பொருந்திய, திரு விராலி ஊர் மேவு - திரு விராலி ஊரில் எழுந்தருளி யுள்ள, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! கரி புர அரி - யானையின்

உடலை அழித்தவரும், காம அரி - மன்மதனை அழித்தவரும், திரி புர அரி - மன்மதனை அழித்தவரும், தீ ஆடி - தீ அபிஷேகங் கொள்பவரும், கயிலை ஆளி - கயிலை மலைக்கு இறைவரும், காபாலி - கபாலத்தைக் கையில் ஏந்தியவரும், கழை யோனி - மூங்கிலடியில் தோன்றியவரும், பான் ஆளி - நள்ளிருளை உகந்தவரும், கணமொடு ஆடி - பேய்க் கூட்டங்களுடன் ஆடுபவரும், கா யோகி - உலகங்களைக் காக்கும் யோகியும், சிவயோகி - சிவயோகியும், பரமயோகி - பெரிய யோகியும், மாயோகி - பெருமை மிகுந்த யோகியும், பரிய அரா ஜடா சூடி - பெரிய பாம்பைச் சடை முடியில் தரித்தவரும், பகர ஒணுத மாஞானி - சொல்லுதற்கு அரிய பெரிய ஞானியும், பசு ஏறி - பசுவை வாகனமாகக் கொண்டவரும், பரதம் ஆடி - பரத நாடகம் ஆடுபவரும், கான் ஆடி - கானகத்தில் நடிப்பவரும், பர - மேலானவரும், வயோதிக அதீத-மூப்பைக் கடந்தவரும் ஆகிய சிவபெருமானுடைய, பரமஞான ஊர்பூத - பெரிய ஞான இடத்தில் அடியேன் புகும்படி, அருளாயோ - திருவருள் புரிவீராக.

## பொழிப்புரை

வேதங்களை ஓதுகின்ற பிரமன் மிகவும் அஞ்சி ஓடவும், மூதேவி விலகியோடவும், கோபம் மிகவுங் கொண்டு, வட மேருகிரி சுழன்று கலங்கவும், கடல் தீப்பட்டு எரியவும், சூரபன் மன் வாய் கிழியும்படி அழுது மாளவும், ஏழு உலகங்களும், வட்டமாகிய திசைகளை மறைக்கின்ற சக்கிரவாளகிரியும் சாயவும், பேய்க் கூட்டங்களும் பருந்துகளும் கழுகுகளும் ஆடவும், போரை நாடிச்சென்ற, தூய கடப்பமலர் மாலை தரித்தவரே! கருணையில் மேருமலை போன்றவரே! சிறந்த திருவிராலி மலையாகிய இடத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமிதம் உடையவரே! யானையின் உடலை யழித்தவரும், மன்மதனை அழித்தவரும், திரிபுரங்களை அழித்தவரும், நெருப்பில் முழுகுபவரும், கயிலைமலைக்கு அதிபரும், பிரமகபாலத்தை ஏந்தியவரும், மூங்கிலடியில் தோன்றியவரும், கரத்தில் நெருப்பை ஏந்திய குருநாதரும், மழுவை ஏந்தியவரும், நடு இரவில் ஆடுபவரும், பேய்க்கூட்டங்களுடன் ஆடுபவரும், உலகங்களைக் காக்கும் யோகியும், சிவயோகியும், பெரிய யோகியும், சிறந்த யோகியும், பெரிய பாம்பைச் சடைமுடியில் தரித்தவரும், சொல்லுதற்கு அரிய பெரிய ஞானியும், பசுவில் ஏறுபவரும், பரதக்கூத்து ஆடுபவரும், மயானத்தில் நடிப்பவரும், மேலானவரும், மூப்பைக் கடந்தவரும் ஆகிய சிவபெருமானுடைய சிறந்த ஞான உலகில் அடியேன் புகும்படி அருள்புரிவீர்.

## விரிவுரை

கரிபுராரி :—

கரிபுர அரி. புரம்—சரீரம்.

தாருகவனத்து முனிவர்கள் அபிசார ஓமம் செய்து அனுப்பிய யானையை உரித்துச் சிவபெருமான் போர்த்தியருளினார்.

காமாரி :—

ஆசையை உண்டுபண்ணுகின்ற அதி தேவதையாகிய மன்மதனை எரித்தவர்.

தீயாடி :—

சிவபெருமான் நெருப்பு மயமானவர். அவருக்கு கார்த்திகை பௌர்ணமியில் நெருப்பினால் அபிஷேகம் புரிய வேண்டும். கார்த்திகை பௌர்ணமியன்று இறைவனை எழுந்தளப் புரிந்து, கோயிலுக்கு முன் நிறுத்தி, பனை ஒன்றை நிறுவி, ஓலை மூடி, அதில் சிவத்தை ஆவாகனம் புரிந்து கொளுத்துவர். இதனைச் 'சொக்கப்பனை கொளுத்துவது'' என்கிறார்கள். இது இறைவனை நெருப்பினால் வழிபடுவதாகும்.

கழையோனி :—

சிவபெருமான் மூங்கில் அடியில் முளைத்தருளினார். அதனால் வேய்முத்தர் என்று அவருக்கு ஒரு பேருண்டு.

கரவுதாசனாசாரி :—

கர உதாசன ஆசாரி. உதாசனன்—அக்கினி. கையில் நெருப்பை ஏந்தியவர்.

"வெங்காட்டுள் அனலேந்தி விளையாடும் பெருமானே"
—சம்பந்தர் தேவாரம்.

பரசுபாணி :—

பரசு—மழு. மழுவையேந்தியவர்.

"பரசு பாணியர்" —சம்பந்தர்.

பாணுளி :—

பான்—நடு இரவு.

"நள்ளிருளில் நட்டம் பயின்றாடு நாதனே" —திருவாசகம்.

"கழுது கண்படுக்கும் பானாள்" —பரஞ்சோதியார்.

கணமொடாடி :—

இறைவர் மகாசம்மார ஊழியாகிய நள்ளிருளில் நடம் புரிவார். பேய்கள் முதலிய சிவகணங்கள் அவருடன் ஆடும்.

கா யோகி :—

கா—காப்பாற்றுகின்ற. அகில வுலகங்களையுங் காப்பாற்று பவர்.

சிவபெருமான் சிறந்த யோகமூர்த்தி. அதனால் நான்கு முறை யோகி என்று கூறுகின்றார். "காயோகி, சிவயோகி, பரம்யோகி, மாயோகி" என்று அழகிய சொற்களால் அருண கிரிநாதர் சிவபெருமானைக் கூறியருளுகின்றார்.

"நான் மறைபாடும் பரமயோகி" —சம்பந்தர்,

பசுவேறி :—

பசு என்பது கட்டுப்பட்டது என்ற பொருளையுடையது.

"பசு ஏறும் எங்கள் பரமன்"

—(பலபல வேடமாகும்) சம்பந்தர் தேவாரம்.

பரத மாடி :—

ப—பாவம்; ர—ராகம்; த—தாளம்.

இந்த மூன்றுடன் கூடியது பரதம். பரத நாடகம் புரியும் ஆசாரியர் சிவமூர்த்தி.

"திமிதமென முழவொலி முழங்கச் செங்கைத்
தமருகம ததிர் சதியொடன்பர்க் கின்பத்
திறமுதவு பரதகுரு"

—(அமுதுததி விட) திருப்புகழ்.

காடாடி :—

சர்வ சங்கார காலத்தில் மகாமயானமாகிய காட்டில் இறைவன் தன்னந்தனியில் நடனம் புரிவான்.

வயோதிகாதீத :—

வயோதிக அதீத. சிவபெருமான் என்றும் இளையவர்.

பரமஞான ஊர்பூத அருள்வாயே :—

புகுத என்ற சொல் பூத என்று வந்தது. சிவலோகம் அடைய அருள்செய்க என்று விண்ணப்பம் செய்கின்றார்.

சுருதியாடி தாதா: —

பிரமன் சதாவேதங்களை ஓதுபவர். அதனால் அவர் வேதன் எனப்படுவார்.

மூதேவி துரக :—

துரக—அகல. மூதேவியானவள போரின் அதிர்ச்சியால் அகன்று ஓடிவிட்டாள்.

சுரதிரேடு :—

சுரத்திரேடு—என்ற சொல் சுரதிரேடு எனவந்தது. சுரம் போல் ஓசை செய்து வாய்கிழியும்படி சூரபன்மன் அழுது மாண்டான்.

திகிரி மாதிராவார திகிரி :—

திகிரி வட்டமாகிய திசைகளை மூடிய சக்கிரவாளகிரி. மாதிர ஆவாரம். ஆவரம்—மூடுதல்.

வானீப :—

வான்—தூய்மை. நீபம்—கடப்பம்.

கருணை மேரு :—

முருகப் பெருமான் கருணையில் மேரு போன்றவர்.

கருத்துரை

விராலிமலையுறை வேலவரே! சிவலோகம் அடைய அருள்வீர்.

## 126

காமாத்திர மாகி யிளைஞர்கள் வாழ்நாட்கொடுபோகியழகிய
காதாட்டிய பார இருகுழை யளவோடிக்
கார்போற்றவழோதிநிழல்தனிலார்வாட்கடையீடுகனகொடு
காலேற்றுவை வேலின் முனைகடை யமதூதர்
ஏமாப்பற மோக வியல்செய்து நீலோற்பல ஆசில் மலருட
னேராட்டவி நோத மிடும்விழி மடவார்பால்
ஏகாப்பழி பூணு மருளற நீதோற்றிமு ளுை மடிமையை
யீடேற்றுத லாலுன் வலிமையை மறவேனே
சீமாட்டியு மாய திரிபுரை காலாக்கினி கோப பயிரவி
சீலோத்தமி நீலி சுரதிரி புவனேசை
சீகார்த்திகையாயஅறுவகைமாதாக்கள்குமாரனெனவெகு
சீராட்டொடு பேண வடதிசை கயிலாசக்
கோமாற்குபதேசமுபநிடவேதார்த்தமெய்ஞ்ஞானநெறியருள்
கோதாட்டிய ஸ்வாமி யெனவரு மிளையோனே
கோடாச்சிவபூஜை பவுருஷமாருக்கொடைநாளு மருவிய
கோனாட்டுவி ராலி மலையுறை பெருமாளே.

## பதவுரை

சீமாட்டியும் ஆய திரிபுரை - பெருமாட்டியாகிய மூன்று உலகங்கட்கும் தலைவியும், கால அக்கினி - உகாந்த காலத்தில் தோன்றும் நெருப்பு போன்ற, கோப பயிரவி - கோபத்தையுடைய பயிரவியும், சீல உத்தமி - நல்லொழுக்கமுள்ள உத்தமியும், நீலி - நீலி நிறமுடையவரும், சுர திரிபுவன ஈசை - விண்ணுலக முதலிய மூன்று புவனங்கட்குந் தலைவியும் ஆய பார்வதியும், சீ கார்த்திகை ஆய - பெருமையுடைய கார்த்திகையாய, அறுவகை மாதாக்கள் குமாரன் என - ஆறு வகைப் பெண்களும் குமாரன் என்று, வெகு சீராட்டொடு பேண - மிகவும் பாராட்டுடன் உம்மை வளர்க்க, வட திசை கயிலாய கோமாற்கு - வட திசையில் உள்ள கயிலாயமலைக்குத்தலைவராகிய சிவபெருமானுக்கு, உபநிட வேத அர்த்த மெய்ஞ்ஞான நெறி அருள் - உபநிடதம் வேதம் இவைகளின் பொருளான உண்மையான மார்க்கத்தை உபதேசித்து, கோது ஆட்டிய ஸ்வாமி என வரும் இளையோனே - குற்றத்தை நீக்கிய குருமூர்த்தி யென விளங்குகின்ற இளையவரே! கோடா சிவ பூஜை - நெறி தவருத சிவ பூஜையும், பவுருஷம் - ஆண்மையும், மாரு கொடை நாளு மருவிய - இல்லை யென்னுத கொடையும் பொருந்தியுள்ள, கோனுட்டு விராலி மலை உறை - கோனுட்டைச் சேர்ந்த விராலி மலையில் வாழ்கின்ற, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! காம அத்திரம் ஆகி - மன்மத பாணமாகி, இளைஞர்கள் வாழ் நாள் கொடு போகி - இளைஞர்களுடைய வாழ் நாளைக் கொண்டு போய், அழகிய காது ஆட்டி - அழகிய காதுகளில் ஆடுகின்ற, பார இரு குழை அளவு ஓடி - கனத்த இரு தோடுகள் வரையும் ஓடிச் சென்று, கார் போல் தவழ் - மேகம் போல் தவழ்ந்து விளங்கும், ஓதி நிழல் தனில் - கூந்தலின் நிழலில் ஆர் வாள் கடை ஈடு கன கொடு - நிறைந்து வாள் முனை போன்று ஈடு கனம் கொண்டு, கால் ஏற்று - கரு நிறம் கொண்டு, வை வேலின் முனை கடை - கூரிய வேலின் முனையின் நுனி போன்று, யம தூதர் - இயம தூதர்களும், ஏமாப்பு அற - இறுமாப்பு நீங்க, மோக இயல் செய்து - மோகத் தன்மையைச் செய்து, நீலோற்பல ஆசு இல் மலருடன் நேர் - குற்றமில்லாத நீலோற்பல மலருடன் ஒப்பான, ஆட்டம் விநோதம் இடு விழி - நடன விநோதத்தைச் செய்யும் கண்களையுடைய, மடவார் பால் - பொது மாதர்களிடத்தே, ஏகாபழி பூணும் மருள் அற - நீங்காத பழியைக் கொண் ருந்த, மயக்கம் அடியேனை விட்டு அகல, நீ தோற்றி - தேவரீர் அடியேன் முன் தோன்றி, முன் ஆளும் அடிமையை - முன்பு ஆண்ட அடிமையாகிய என்னை ஈடேற்றுதலால் - காத்தருளிய காரணத்தால், உன் வலிமையை மறவேனே - உமது அருளின் ஆற்றலை ஒரு போதும் மறக்க மாட்டேன்,

## பொழிப்புரை

**பெருமாட்டியும், திரிபுரசுந்தரியும், ஊழித் தீயைப் போன்ற கோபமுடைய பயிரவியும், நல்லொழுக்கமுள்ள உத்தமியும்,**

நீல நிறமுடையவரும், தேவலோக முதலிய மூன்று உலகங்கட்கும் தலைவியுமான பார்வதியும். சிறந்த கார்த்திகைப் பெண்கள் அறுவரும் எங்கள் மகனே என்று பாராட்டி வளர்க்க, வட திசையில் உள்ள திருக்கயிலாயகிரிக்குத் தலைவராய சிவபெருமானுக்கு, உபதேசமாக, வேத உபநிடதப் பொருளாகிய உண்மை ஞான நெறியையருளிய குருநாதர் என விளங்கும் இளம்பூரணரே; குன்றாத சிவபூசையும், ஆண்மையும், மாறாத தருமகுணமும் என்றும் நிறைந்துள்ள கோனாட்டில் விராலி மலையில் வாழ்கின்ற பெருமிதம் உடையவரே! மன்மத பாணமாகி, இளைஞர்களுடைய வாழ்நாளைக் கொண்டுபோய், அழகிய காதில் ஆடுகின்ற இரண்டு குழைகள் வரை ஓடிச் சென்று, மேகம்போல் தவழ்கின்ற கூந்தலின் நிழலில் நிறைந்து நின்று, வாள்முனை போல் வலிமையும் பெருமையும் கொண்டதாய், கரு நிறங்கொண்டு, கூரிய வேலின் முனைபோல், யமதூதர்களும் இறுமாப்பு நீங்க, மோகத்தை விளைக்கும்குற்றமில்லாத நீலோற்பல மலர் போன்றதாய். நடனவிதம் புரியும் கண்களையுடைய பொது மாதரிடம், நீங்காத பழியைக் கொண்டிருந்த மயக்கம் தனைவிட்டு அகலத் தேவரீர் என்முன் தோன்றி முன்னாள் ஆட்கொண்டு உய்யுமாறு செய்த கருணையின் வலிமையை ஒரு போதும் மறவேன்.

## விரிவுரை

**காமாத்திரம் :-**

மன்மதபாணம் உயிர்களை மயக்குவதுபோல், பொது மாதர்களின் கண்கள் இளைஞர்களை மயக்கும் வலிமையுடையது. வாழ்நாளையுண்ணும் கொடுமையுடையது.

**இருகுழை அளவோடி :-**

கண்கள் நீண்டு காது வரை ஓடிப் புரள்வன.

**காலேற்று :-**

கால்-கருமை நிறம்.

**யமதூதர் ஏமாப்பற :-**

இயமதூதர்கள் கண்களைப்பார்த்து. இக்கண்கள் புரியும் கொடுமைக்கு நாம் எம்மாத்திரம் என்று இறுமாப்பு ஒழிகின்றார்கள்.

ஏகாப்பழி பூணுமருளற நீ தோற்றிமு னுமடிமையை ஈடேற்றுதலாலுன் வலிமையை மறவேனே :-

இது அருணகிரியாரது சரித்திரக் குறிப்பு. சுவாமிகள் உலக நெறியில் உழன்று துன்பமடைந்தபோது, முருகவேள் அவர் முன் தோன்றி கருணைபுரிந்து ஆட்கொண்டருளினார்.

இத்தகைய கருணைத் திறத்தை அடியேன் ஒருபோதும் மறவேன்'' என்று நன்றியுணர்வுடன் நவில்கின்றார்.

கோடாச் சிவபூசை பவுருஷ மாறாக் கொடை நாளு மருவிய கோனாடு :-

விராலிமலை கோனாட்டில் உள்ள திருமலை. அந்தக் கோனாட்டில் உள்ளவர்கள், குன்றாத சிவபூசையும், ஆண்மையும், இடையறாத கொடைக்குணங்களும் உடையவர்கள்.

### கருத்துரை

விராலிமலையுறை முருகா! உனது கருணைத் திறத்தை ஒருபோதும் மறவேன்.

## 127

கொடாதவனை யேபு கழ்ந்து குபேரனென வேமொ ழிந்து
குலாவியவ மேதி ரிந்து புவிமீதே
எடாதசுமை யேசு மந்து எனாதகலி யால்மெ லிந்து
எலாவறுமை தீர அன்று னருள்பேணேன்
சுடாததன மான கொங்கை களாலிதய மேம யங்கி
சுகாதரம தாயொ ழுங்கி லொழுகாமல்
கெடாததவ மேம றைந்து கிலேசமது வேமி குந்து
கிலாதவுட லாவி நொந்து மடியாமுன்
தொடாய்மறலி யேநி யென்ற சொலாகியது வருங்கொல்
சொலேழுலக மீனு மம்பை யருள்பாலா
நடாதசுழி மூல விந்து நளாவிவிளை ஞான நம்ப
நபோமணி சமான துங்க வடிவேலா
படாத குளிர் சோலை யண்ட மளாவியுயர் வாய்வ ளர்ந்து
பசேலெனவு மேத ழைந்து தினமேதான்
விடாதுமழை மாரி சிந்த அநேகமலர் வாவி பொங்கு
விராலிமலை மீது கந்த பெருமாளே.

## பதவுரை

ஏழ் உலகம் ஈனும் அம்பை அருள் பாலா - ஏழு உலகங்களைப் பெற்ற பார்வதியம்மை யருளிய திருக் குமாரரே! நடாத சுழி - நட்டுவைக்கப்படாத சுழி முனை, மூல விந்து - மூலாதாரம் முதலிய ஆதாரங்கள், விந்து ஆகிய இவைகளின், நள் ஆவி வினை - நடுவில் உள் உயிரில் உயிர்க்குயிராய் விளங்கும், ஞான நம்ப - ஞானமூர்த்தியே! நபோ மணி சமானதுங்க - சூரியனுக்குச் சமானமான ஒளியும் பரிசுத்தமுமுடைய, வடிவேலா - கூரிய வேலாயுதரே! படாத குளிர் சோலை - வெயில் படாத குளிர்ந்த சோலைகள், அண்டம் அளாவி உயர்வாய் வளர்ந்து - ஆகாயம் வரை ஓங்கி உயர்ந்து வளர்ந்து, பசேல் எனவுமே தழைந்து - பச்சென்ற நிறத்துடன் தழைத்து, தினமேதான் - நாள் தோறும், விடாது மழை மாரி சிந்த - விடாமல் மழை பெய்வதால், அநேக மலர் வாவி பொங்கு - பல மலர்கள் நிறைந்த தடாகங்கள் சூழ்ந்துள்ள, விராலிமலை மீது உகந்த - விராலி மலை மீது விரும்பி வாழும், பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! கொடாத வனையே புகழ்ந்து-தருமமே செய்யாத ஒருவனைப் புகழ்ந்து, குபேரன் எனவே மொழிந்து - அவனைக் குபேரன் என்று கூறி, குலாவி அவமே திரிந்து - அவனை மகிழ்ந்து துதி செய்து வீணாகத் திரிந்து, புவி மீதே - இந்தப் பூமி யின் கண், எடாத சுமையே சுமந்து - சுமக்க முடியாத குடும்பச் சுமையைச் சுமந்து, எழுாத கலியால் மெலிந்து - நினைக்கவும் முடியாத கொடுமையைத் தரும் கலி புருஷனால் வாடி, எலா வறுமை தீர - எல்லா வறுமைத் துன்பங் களும் தீரும்படி, அன்று உன் அருள் பேணேன் - அந் நாளில் உமது திருவருளை விரும்பாது காலங் கழித்தேன். சுடாத தனம் ஆன கொங்கை களால் - நெருப்பில் சுடாத பசும் பொன் போன்ற கொங்கைகளால், இதயமே மயங்கி - உள்ளம் மயக்கம் பூண்டு - சுக ஆதரமது ஆய் ஒழுங்கில் - சுகத்தைத் தரக் கூடிய வழியில், ஒழுகாமல் - அடியேன் நடக்காமல், கெடாத தவமே மறைந்து - கெடுதல் இல்லாத தவநெறி மறைந்துபோக, கிலேசம் அதுவே மிகுந்து - துன்பமே மிகவும் பெருகி, கிலாத உடல் ஆவி நொந்து - ஆற்றல் இலாத உடலில் உயிர் நொந்து, மடியா முன் - இறந்து படு முன்பாக, தொடாய் மறலி நீ என்ற சொல் ஆகி அது உன் நா வரும் கொல் - "யமனே! நீ இவனைத் தொடாதே" என்ற சொல் உமது நாவில் வருமோ?, சொல் - அதை எனக்குச் சொல்லி யருளுக.

## பொழிப்புரை

**ஏழு உலகங்களையும் ஈன்ற பார்வதிதேவியின் புதல்வரே! நட்டுவைக்கப்படாத சுழிமுனை, மூலாதார முதலிய ஆறுதாரங் கள், விந்து என்ற இவைகளின் நடுவில் விளங்கும் உயிரில் தோன்றி விளங்கும் ஞானமூர்த்தியே! சூரியவொளி போன்ற தூய கூரிய வேலவரே! வெயில் படாத குளிர்ந்த சோலைகள் வானத்தை யளாவி உயர்ந்து வளர்ந்து பச்சென்ற நிறத்துடன்**

தழைத்து, நாள்தோறும் மழை பொழிவதால், பல மலர்த் தடாகங்கள் சூழ்ந்துள்ள, விராலி மலைமீது எழுந்தருளியுள்ள பெருமிதமுடையவரே! தருமஞ் செய்யாதவனைப் புகழ்ந்து, குபேரன் என்றுகூறி அவனுடன் கூடி வீணாகத் திரிந்து, இந்தப் பூதலத்தில் தாங்கமுடியாத குடும்பச் சுமையைத் தாங்கி, நினைக் கவும் முடியாத கொடுமையுடைய கலிபுருஷனால் வாடி, எல்லா வறுமைகளும் தீரும் பொருட்டு உமது திருவருளை விரும்பாது காலங் கழித்தேன்; நெருப்பில் சுடாத பசும் பொன் போன்ற கொங்கைகளால் உள்ளம் மயங்கி, சுகாதாரமான நெறியில் நடக்காமல், கெடுதல் இல்லாத தவநெறியும் மறைந்து போக, துக்கமே மிகவும் பெருகி, வலிமையில்லாத உடம்பில் உயிர் நொந்து இறந்துபோகுமுன் தேவரீர் தோன்றி, "இயமனே! நீ இவன் உயிரைத் தொடாதே" என்ற சொல், உமது நாவில் வருமோ? அதை எனக்குச் சொல்லியருளும்.

## விரிவுரை

கொடாதவனையே புகழ்ந்து குபேரனெனவே மொழிந்து குலாவியவமே திரிந்து :—

வறுமையின் கொடுமையால் வறியவர்கள், பொருளுடை யாரிடம் போய், அவர்களைக் குபேரன் என்றும், பெரிய கொடையாளி யென்றும் கூறிப் புகழ்வார்கள். ஆனால் அவர் கள் ஒரு காசும் கொடுக்காத பரம லோபிகள்.

எடாத சுமையே சுமந்து :—

அளவுக்கு மேற்பட்ட குடும்பச்சுமை, வியாபாரச்சுமை முதலிய பாரங்களைத் தங்கள் தலையில் சுமந்து பலர் வாடுகின் றார்கள்.

எனாத கலியால் மெலிந்து :—

கலிபுருஷன் மனத்தால் நினைக்க முடியாத அளவு கொடு மையுடையவன். அவன் அநேக கொடுஞ் செயல்களைச் செய் விப்பான். அதனால் மக்கள் மெலிந்து வாடுகின்றார்கள்.

எலா வறுமை தீர அன்று னருள் பேணேன் :—

அறிவில் வறுமை; பொருளில் வறுமை; குணத்தில் வறுமை, இப்படிப் பல வறுமைகள் தீர முருகனை ஏத்தி அவருடைய திருவருளை விரும்பாமல் வறிதே வாழ் நாளைத் தொலைத்துவிடுகின்றார்கள்.

இலாத வுடலாவி நொந்து மடியாமுன் :—

இலாத—ஆற்றல் இல்லாத. வலிமையற்ற உடலில் உயிர் நொந்து இறக்குமுன் முருகா! உன் அருள் வெளிப்பட வேண்டும்.

தொடாமறலியே யென்ற சொலாபெறு மாறுநற்சொல் :—

எம் பெருமானே! அடியேனுடைய உயிரை இயமன் பிடிக்க வரும் போது, தேவரீர் அப்போது தோன்றி, "இயமனே! நீ இவன் உயிரைத் தொடாதே. அவன் நம் அடியவன்" என்றுகூறும் அருள் உரை உமது நாவில் இருந்து வராதோ? அப்படி வரும் என்று எனக்கு ஒரு உறுதிமொழி கூறி யருளுவீராக.

நடாதசுழி மூலவிந்து நளாவிவிளை ஞானநட்ப :—

ஒருவரால் நடப்படாமல் ஆறு ஆதாரங்களிலும் ஊடுருவி யுள்ள சுழிமுனையிலும் விந்துவிலும் இடையில் விளங்கும் உயிர்க்கு உயிராய் இறைவன் விளங்குகின்றான்.

கருத்துரை

விராலிமலை மேவும் வேலவரே! இயமபயம் நீக்கி எனை ஆண்டருளும்.

## 128

மாயா சொருப முழுச்ச மத்திகள்
ஓயா வுபாய மனப்ப சப்பிகள்
வாஞூளை யீரும் விழிக்க டைச்சிகள் முனிவோரும்
மாலாகி வாட நகைத்து ருக்கிகள்
ஏகாச மீது தனத்தி றப்பிகள்
வாரீ ரிரீரென் முழுப்பு ரட்டிகள் வெகுமோகம்
ஆயாத வாசை யெழுப்பு மெத்திகள்
ஈயாத போதி லறப்பி ணக்கிகள்
ஆவேச நீருண் மதப்பொ றிச்சிகள் பழிபாவம்
ஆமா றெணுத திருட்டு மட்டைகள்
கோமாள மான குறிக்க ழுத்திகள்
ஆசார வீன விலைத்த னத்திய ருறவாமோ

காயாத பால்நெய் தயிர்க்கு டத்தினை
ஏயா வெணுமை லெடுத்தி டைச்சிகள்
காணாத வாறு குடிக்கு மப்பொழு துரலோடே
கார்போலு மேனி தனைப்பி ணித்தொரு
போர்போ லசோதை பிடித்த டித்திட
காதோடு காது கையிற்பி டித்தழு தினிதூதும்
வேயா லநேக விதப்ப சுத்திரள்
சாயாமல் மீள அழைக்கு மச்சுதன்
வீறான மாம னெனப்ப டைத்தருள் வயலூரா
வீணாள் கொடாத படைச்செ ருக்கினில்
சூர்மாள வேலை விடுக்கும் அற்புத
வேலா விராலி மலைத்த லத்துறை பெருமாளே.

## பதவுரை

காயாத பால் - காய்ச்சாத பால், நெய், தயிர் குடத்தினை - நெய் தயிர்க்குடங்களை, ஏயா - பொருந்திய மனத்துடன், எணுமல் எடுத்து - சற்றும் சிந்தியாமல் எடுத்து, இடைச்சிகள் காணாத ஆறு - இடைச்சிமார் கட்குத் தெரியாதபடி, குடிக்கும் அப்பொழுது - குடித்துக் கொண்டிருக்கும் பொழுது, உரலோடே - உரலுடன், கார்போலும் மேனிதனை பிணித்து - நீலமேகம் போன்ற திருமேனியைக்கட்டி, ஒரு போர் போல் - ஒரு போரிடுவது போல், அசோதை - யசோதை, பிடித்து அடித்திட - பிடித்து அடிக்க, காதோடு காது கையில் பிடித்து அழுது - இரண்டு காதுகளையுங் கையில் பிடித்துக் கொண்டு அழுதவரும், இனிது ஊதும் வேயால் - இனிமையாக ஊதுகின்ற புல்லாங்குழலால், அநேக வித பசுதிரள் சாயாமல் - பலவிதமான பசுக் கூட்டங்கள் தவருதபடி, மீள அழைக்கும் அச்சுதன் - மீண்டுவரும்படி அழைத்தவரும் ஆகிய திருமாலை, வீறு ஆனமாமன் என படைத்து அருள் - சிறப்பு வாய்ந்த மாமனாகக் கொண்டருளும், வயலூரா - வயலூர்ப் பெருமானே! வீணாள் கெடாத - வீணாக நாள் செல்வழிக்காமல், படை செருக்கினில் - படைகள் நம்மிடம் இருக்கின்றது என்ற அகங்காரத்துடன் இருந்த, சூர் மாள - சூரபன்மன் மாளும்படி, வேலை விடுக்கும் - கடலில் விடுத்தருளிய, அற்புத வேலா - அற்புதமான வேலாயுதரே! விராலி மலை தலத்து உறை - விராலி மலை என்ற திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! மாயா சொரூப - மாயையே உருவெடுத்தாற் போன்ற, முழு சமத்திகள் - முழுச் சாமர்த்திய சாலிகள்; ஓயா உபாய - முடிவே இல்லாத தந்திரம் நிறைந்த, மன பசப்பிகள்; வாழ் நாளை

ஈரும் - வாழ்நாளை அறுத்து அழிக்கின்ற, விழி கடைச்சிகள் - கடைக்கண்ணினர்; முநிவோரும் மால் ஆகி வாட - முனிவர்களும் மயக்கமுற்று வருந்தும்படி, நகைத்து உருக்கிகள் - சிரித்து அவர்களை உருக்க வல்லவர்கள், ஏகாச மீது - மேலாடையின்மீது, தன திறப்பிகள் - கொங்கையைத் திறந்து காட்டுபவர்கள், வாரீர் இரீர் என் முழு புரட்டிகள் - வாருங்கள், இருங்கள் என்று கூறும் முழு மோசக்காரிகள், ஆயாத ஆசை எழுப்பும் எத்திகள் - ஆராய்வதற்கு இடமில்லாத ஆசையையும் எழுப்புகின்ற ஏமாற்றுக்காரிகள், ஈயாத போதில் - காசு கொடுக்க முடியாத போது அற பிணக்கிகள் - மிகவும் பிணங்குபவர்கள்; ஆவேச நீர் உண் - கள்ளைக்குடிக்கின்ற, மத பொறிச்சிகள் - வெறி கொள்ளுகின்ற ஐம்பொறிகளையுடையவர்கள்; பழி பாவம் ஆமாறு எணாத - பழிபாவம் ஆகுமே என்று எண்ணாத, திருட்டுமட்டைகள் - திருட்டு வினிகள்; கோமாளம் ஆன - வேடிக்கையான, குறி கழுத்திகள் - நகக் குறி யமைந்த கழுத்தையுடையவர்கள்; ஆசார ஈன - ஆசாரம் குறைந்த, விலைதனத்தியர்-விலைக்கு விற்கும் தனத்தையுடையவர்கள் ஆகிய பொதுமாதர்களின், உறவு ஆமோ - உறவு ஆகுமோ?

## பொழிப்புரை

காய்ச்சாத பால், நெய் தயிர்க் குடங்களைச் சற்றும் சிந்தியாமல் எடுத்து, கோபிகைகள் காணாதபடி குடித்த போது, உரலில் கட்டி நீலமேகம் போன்ற திருமேனியை அசோதை அடித்த போது, இருகாதுகளையும் கையால் பற்றிக்கொண்டு அழுதவரும், புல்லாங்குழல் ஊதி பலவிதமான பசுக்களை அழைத்தவருமாகிய திருமாலை பெருமை மிகுந்த மாமன் எனக் கொண்ட வயலூர் வள்ளலே! படைகளின் அகங்காரத்தினால் வீணாக்படாமல் இருந்த சூரபன்மன் மாயும்படி அற்புதமான வேலாயுதத்தைக் கடலின்மீது ஏவியவரே! விராலி மலையில் வாழும் பெருமிதமுடையவரே! மாயையின் வடிவான முழுச் சமர்த்திகள்; ஒழியாமல் தந்திரம் புரியும் மனத்துடன் பசப்புகின்றவர்கள்; வாழ்நாளை அறுத்தழிக்கும் கடைக்கண்ணுடையவர்கள்; முனிவர்களும் மயக்கமுற்று வாடும்படிச் சிரித்து மனத்தை உருக்குபவர்கள்; மேலே மூடிய ஆடைக்குமேல் தனங்கள் தெரியும்படி நிற்பவர்கள்; "வாருங்கள்" "இருங்கள்' என்று கூறும்' முழு வஞ்சனைக்காரிகள்; மிகுந்த போகத்தையும், ஆராய்ச்சியில்லாத ஆசையையும் எழுப்புகின்ற ஏமாற்றுக்காரிகள்; பணங் கொடுக்க முடியாத போது அறவே பிணங்குபவர்கள்; மயக்கத்தைத் தரும் கள்ளைக் குடிப்பவர்கள்; பழி பாவம் என்று எண்ணாத திருட்டு மௌடிகள்; வேடிக்கையாக நகக்குறிகள் அழுத்திய கழுத்தினர்கள்;

ஆசாரங் குறைந்த விலைக்கு விற்கும் தனத்தினர்கள் ஆகிய பொது மகளிரின் உறவு நல்லதாகுமோ? ஆகாது.

## விரிவுரை

முநிவோரும் மாலாகிவாட நகைத்துருக்கிகள் :—

முற்றத்துறந்த முனிவர்களும் தங்களைக் கண்டு மயங்கித் தியங்கி உருகி நிற்குமாறு அழகில் மிகுந்து நிற்பர் பொது மகளிர்.

........................."துறந்தோருளத்தை
வளைத்துப் பிடித்துப் பதைக்கப் பதைக்க வதைக்குங் கண்ணார்."
—கந்தரலங்காரம் (32)

விசுவாமித்திரர் மேனகையைக் கண்டு மயங்கினார். பல காலம் செய்த தவம் அழிந்து குன்றினார்.

காசிபர் மாயையைக் கண்டு மருண்டார். ஆனால் இவைகள் சிவனருள் இன்றி நிற்கும் முனிவருக்கு உரியவை.

காமனை எரித்த கண்ணுதற் கடவுளைக் கருத்தில் இருத்திய நற்றவரைப் பொது மகளிர் மயக்க இயலாது.

திருப்பூம்புகலூரில் உழவாரத் தொண்டு செய்து கொண்டிருந்தார் அப்பர் பெருமான். அப்போது அரம்பை முதலிய வான மாதர்கள் வந்து அவர் திருமுன்னே,

ஆடுவார் பாடுவார் அலர்மாரி மேற்பொழிவார்
கூடுவார் போன்றணைவார் குழல்அவிழ இடைநுடங்க
ஓடுவார் மாரவே ளுடன்மீள்வர்; ஒளிபெருக
நீடுவார் துகில்அசைய நிற்பாரும் ஆயினார்.

இந்த சாகச வித்தைகளைக் கண்ட அப்பர் பெருமானுடைய மனம் ஒரு சிறிதும் சலனம் அடையவில்லை. "உமக்கு இங்கு என்ன வேலை? போமின்" என்று அருளிச் செய்தார்.

ஆதலால் சிவனடியார்கள் காதலால் மயங்க மாட்டார்கள்.

ஏகாசம் :—

ஏகாசம்-மேற் போர்வை.

"பொருபுநதர முரித்து ஏகாசமிட்ட புராந்தகர்."
—கந்தரலங்காரம் (45)

ஆவேச நீர் :—

கள்ளை யுண்டவர் ஆவேசம் வந்தவர்போல ஆடுவர். அதனால் ஆவேச நீர் என்றார்.

"ஆவேச நீரைக் குடித்த துட்டர்கள்"

—(ஆசாரவீன) திருப்புகழ்

காயாத பால் நெய்......................அச்சுதன் :—

இந்த மூன்று அடிகளில் பாகவதத்தில் கண்ணபிரான் செய்த திருவிளையாடல்களை எடுத்து இனிது கூறுகின்றார்.

"அளைதயிர் பாலுண்டு கண்டுபிடிக்கப் பிடியுண்டு
ஆப்புண்டிருந்தானல்................அடியுண்டழுதானல்."

—பெரியாழ்வார்.

கருத்துரை

விராலிமலை முருகா! மாதர் மயக்கம் கொடிது. அது கூடாது.

## 129

மாலாசை கோப மோயாதெ நாளு
மாயா விகார வழியேசெல்
மாபாவி காளி தானேனு நாத
மாதா பிதாவு மினிநீயே
நாலான வேத நூலாக மாதி
நானோதி னேனு மிலைவீணே
நாள்போய் விடாம லாறாறு மீதில்
ஞானோப தேச மருள்வாயே
பாலா கலார ஆமோத லேப
பாடீர வாக அணிமீதே
பாதாள பூமி யாதார மீன
பானீய மேலை வயலூரா
வேலா விராலி வாழ்வே சமூக
வேதாள பூத பதிசேயே
வீரா கடோர சூராரி யேசெ
வேளே சுரேசர் பெருமாளே.

## பதவுரை

பாலா - இளமையானவரே! கலார ஆமோத - செங்குவளை மலரில் பிரியமானவரே! அணி மீதே பாடீர லேப வாக - ஆபரணங்களின்மீதுசந்தனக் கலவைப் பூச்சு அணிந்துள்ள அழகரே! பாதாள பூமி ஆதார - பாதலத்துக்கும் பூதலத்துக்கும் பற்றுக் கோடானவரே! மீன பானீய மேலை வயலூரா - மீன் நிறைந்த நீர்சூழ்ந்த மேலை வயலூரில் வாழும் வள்ளலே! வேலா - வேலாயுதரே, விராலி வாழ்வே - விராலி மலையில் வாழ்பவரே! சமூக வேதாள பூதபதி சேயே - கூட்டமான பேய்கள் பூதகணங்கள் இவைகட்குத் தலைவரான சிவகுமாரரே! வீரா - வீரமூர்த்தியே! கடோர சூர அரியே - கொடுமை வாய்ந்த சூரனை அழித்தவரே! செவ்வேளே - செவ்வேட்பரமரே! சுர ஈசர் - தேவர்கட்குத் தலைவராகிய, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! மால் ஆசை கோபம் - மயக்கம் ஆசை கோபம் என்ற இவைகள், ஓயாது - ஓய்வு இல்லாமல், எ நாளும் - எந்நாளும், மாயா விகார வழியே செல் மாபாவி - உலக மாயையாகிய விகார வழியிலே செல்லுகின்ற பெரிய பாவியும், காளி - விஷகுணமுள்ளவனும், தானேனும் - இப்படிப்பட்டவனாக அடியேன் இருப்பினும், நாத - தலைவரே! மாதா பிதாவும் இனி நீயே - தாயும் தந்தையும் இனி எனக்கு நீர்தான்; நால் ஆன வேதநூல் - நான்கு வேத நூல்களையும், ஆகமஆதி - ஆகம முதலிய நூல்களையும், நான் ஓதினேனும் இலை - அடியேன் படித்ததும் இல்லை. வீணே நாள் போய் விடாமல் - வீணாக நாள் போய் விடாத வண்ணம், ஆறுறு மீதில் - முப்பத்தாறு தத்துவங்கட்கு அப்பாற்பட்ட நிலையில், ஞான உபதேசம் அருள்வாயே - ஞான உபதேசத்தை அருள்புரிவீராக.

## பொழிப்புரை

இளங் குமாரரே! செங்கழுநீர் மலர் மாலையில் அன்புள்ளவரே! ஆபரணங்கள் மீது சந்தனக் கலவை யணிந்துள்ளவரே! பாதலத்துக்கும் பூதலத்துக்கும் தலைவரே! மீன் நிறைந்த தண்ணீர் சூழ்ந்த மேலை வயலூரில் வாழ்பவரே! வேலாயுதரே! விராலி மலையில் வாழ்பவரே! பேய்க் கூட்டங்கள், பூதக் கூட்டங்களின் தலைவராய சிவ குமாரரே! வீர மூர்த்தியே! கொடுமையான சூரபன்மனுக்குப் பகைவரே! செவ்வேட் பரமரே! தேவர் தலைவராகிய பெருமித முடையவரே! மயக்கம் ஆசை கோப முதலியவை ஓயாது, என்றும் மாயா விகார வழியில் செல்லுகின்ற பெரிய பாவியும் விஷ குணமுள்ளவன் எனினும் தலைவரே! எனக்கு தாயும் தந்தையும் நீர்தான். வேதாகமம் முதலிய நூல்களை அடியேன் ஓதினேனில்லை, வீணே நாள் கழிந்து போகாமல் முப்பத்தாறு தத்துவங் கட்கும் அப்பாலுள்ள ஞானத்தை உபதேசித்தருளுவீர்.

## விரிவுரை

மாலாசை கோபம் :—

**ஆசை, ஆசையால் கோபமும், கோபத்தால் மயக்கமும் தோன்றும்.**

**இந்த மூன்றும் பசையற அற்றால் பிறவி அறும்.**

காமம் வெகுளி மயக்கம் இம்மூன்றன்
நாமம்கெடக் கெடும் நோய். —திருக்குறள்.

"பற்றவா வேரொடும் பசையற பிறவிபோய்" —கம்பர்.

காளி :—

**காளம்-விஷம். விஷகுணமுள்ளவன் காளி.**

நாலானவேத நூலாகமாதி நானோதினேனுமிலை :—

**கற்கவேண்டிய நூல்களில் தலையாயவை வேதாகமங்கள். வேதம்-பொது; ஆகமம் - சிறப்பு. சிறிதேனும் வேதாகம ஞானம் பெற வேண்டும்.**

மாதா பிதாவும் இனி நீயே :—

**"அடியேனுக்கு முருகா! நீதான் தாயும் தந்தையும்" என்கின்றார் அருணகிரிநாதர்.**

"மாதாபிதாவி னருணல மாருமகாரி லெனையினி
மாஞானபோத மருள்செய நினைவாயே'.
—(ஆசாரவின.) திருப்புகழ்.

"எந்தாயு மெனக்கருள் தந்தையுநீ
சிந்தாகுல மானவை தீர்த்தெனையாள்" —அநுபூதி (46)

ஆறுறுமிதில் ஞானோபதேசம் அருள்வாயே :—

**ஆன்ம தத்துவம் 24, வித்யா தத்துவம் 7, சிவ தத்துவம் 5 ஆக 36 இந்த முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்த இடத்தில் சென்று உபதேசம் பெற விழைகின்றார்.**

"ஆறாறையுநீத் ததன்மேல் நிலையைப்
பேறா அடியேன் பெறுமா றுளதோ" —அநுபூதி (47)

கல்லாரம் :—

**கல்லாரம் என்பது சந்தத்தை ஒட்டி கலாரம் என்று வந்தது. கல்லாரம்—செங்குவளை.**

**முருகனுக்குப் பிரியமான மலர் செங்குவளை. செங்குவளை மலர்வதனால் திருத்தணிக்குக் கல்லாரகிரி என்று பேர். அங்கு வாழும் முருகன் செங்கல்வராயன்.**

## கருத்துரை

**விராலிமலை முருகா! ஞானோபதேசம் புரிந்தருள்வீர்.**

## 130

மேக மெனுங்குழல் சாய்த்திரு
கோக னகங்கொடு கோத்தணை
மேல்விழு கின்ற பராக்கினி லுடைசோர

மேகலை யுந்தனி போய்த்தனி
யேகர ணங்களு மாய்க்கயல்
வேல்விழி யுங்குவி யாக்குரல் மயில்காடை

கோகில மென்றெழ போய்க்கனி
வாயமு துண்டுரு காக்களி
கூரவு டன்பிரி யாக்கல வியின்மூழ்கிக்

கூடி முயங்கி விடாய்த்திரு
பார தனங்களின் மேற்றுயில்
கூரினு மம்புய தாட்டுணை மறவேனே

மோகர துந்துமி யார்ப்பவி
ராலி விலங்கலின் வீட்டதில்
மூவுல குந்தொழு தேத்திட வுறைவோனே

மூதிசை முன்பொரு காற்றட
மேருவை யம்பினில் வீழ்த்திய
மோகன சங்கரி வாழ்த்திட மதியாமல்

ஆக மடிந்திட வேற்கொடு
சூரனை வென்றடல் போய்த்தணி
யாமையின் வென்றவ னற்பிற கிடுதேவர்

ஆதி யிளந்தலை காத்தர
சாள அவன்சிறை மீட்டவ
னுலகங்குடி யேற்றிய பெருமாளே.

### பதவுரை

மோகர துந்துபி ஆர்ப்ப - பெரிய ஆரவாரத்துடன் பேரிகை ஒலி செய்ய, விராலி விலங்கலின் வீடு அதில் - விராலி மலையின் மீதுள்ள திருக் கோயிலில், மூ உலகும் தொழுது ஏத்திட உறைவோனே - மூன்று உலகில்

உள்ளோர்களும் வணங்கி வாழ்த்தும்படி வாழ்கின்றவரே! மூ திசை - வட திசையில், முன்பு ஒரு கால் - முன்பு ஒருமுறை, தடமேருவை அம்பினில் வீழ்த்திய - விசாலமான மேருமலையைச் செண்டாயுதத்தால் வீழ்த்திய, மோகன - வசீகரமுடையவரே! சங்கு அரி வாழ்த்திட-சங்கையேந்திய திரு மால் வாழ்த்தச் சென்று, மதியாமல் - சூரனை ஒரு பொருட்படுத்தாமல், ஆகம் மடிந்திட - அவனுடைய உடல் அழியும்படி, வேல் கொடு - வேலா யுதத்தைக் கொண்டு, சூரனை வென்று - சூரபன்மனை வென்று, அடல்போய் தணியாமையின் வென்றவனால் - திக்கு விஜயத்தில் போர்க்குப்போய் குறைவுபடாமல் வென்ற சூரபன்மனால், பிறகிடு தேவர் - புறங்கொடுத்து ஓடிய தேவர்களின், ஆதி இளம் தலை காத்து - தலைவனாகிய இந்திரன் மகனாகிய சயந்தனைக் காத்து, அரசு ஆள - அவன் அரசு செய்யும்படி, அவன் சிறை மீட்டு - அவனைச் சிறையிலிருந்து மீட்டு அருளி, அவன் ஆள் உலகம் குடி ஏற்றிய - அவன் ஆட்சிபுரிந்த பொன்னுலகில் குடியேற்றிய, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! மேகம் எனும் குழல் சாய்த்து - மேகம் போன்ற கூந்தலைச் சாய்த்து, இரு கோகனகங்கொடு கோத்து - தாமரை மலர் போன்ற இரு கண்களைக் கொண்டு இழுத்துச் சேர்த்து, அணைமேல் விழுகின்ற பராக்கினில் - படுக்கைமீது விழுகின்ற விளையாட் டில், உடை சோர - ஆடை நெகிழவும், மேகலையும் தனி போய் - தனியே மேகலாபரணமும் நீங்கவும், தனியே கரணங்களும் ஆய் - தனிப்பட்டு மனம் முதலிய கரணங்கள் ஒன்றுபடவும், கயல் வேல் விழியும் குவியா - மீனையும் வேலையும் போன்ற கண்கள் குவியவும், குரல் மயில் காடை கோகிலம் என்று எழ - மயில் காடை குயில் போன்ற ஒலி குரலில் எழவும், போய் கனி வாய் அமுது உண்டு உருகா - சென்று மாதர்களின் கனி போன்ற அதரத்தின் அமுதத்தைப் பருகியுருகியும், களிகூர - மகிழ்ச்சிமிக வும், உடன் பிரியா கலவியில் மூழ்கி - உடனாகவேயிருந்து நீங்குதல் இல்லாத புணர்ச்சியின்பத்தில் முழுகி, கூடி முயங்கி விடாய்த்து - சேர்ந்து தழுவி களைப்படைந்து, இரு பார தனங்களின் மேல் துயில் கூரினும் - பெரிய இரு கொங்கைகளின்மீது மோகத்தூக்கம் புரிந்தாலும், அம்புய தாள் துணை மறவேனே - உமது இரு தாமரைகள் போன்ற திருவடிகளை அடியேன் மறக்கமாட்டேன்.

## பொழிப்புரை

**பெரிய ஆரவாரத்துடன் பேரிகை ஒலிக்க விராலிமலைக் கோயிலில் மூன்று உலகத்தவரும் வணங்கி வாழ்த்தும்படி வாழ்கின்றவரே! வடதிசையில் உள்ள விசாலமான மேரு மலையை முன் ஒரு சமயம் செண்டினால் வீழ்த்திய வசீகரமுடைய வரே! திருமால் வாழ்த்தச் சென்று சூரபன்மனுடைய உடல் அழியும்படி வேலினால் வென்று, அவனிடம் புறங்கொடுத்து ஓடிய தேவர்களின் தலைவனாகிய இந்திரனுடைய புதல்வன்**

சயந்தனைக் காத்தருளி, அவனைச் சிறை மீட்டு, பழையபடி ஆட்சி புரியும்படி பொன்னுலகில் குடியேற்றிய பெருமிதம் உடையவரே! மேகம் போன்ற கூந்தலைச் சாய்த்து, தாமரை மலர் போன்ற இரு கண்களைக் கொண்டு ஈர்த்துச் சென்று படுக்கை மீது விழுகின்ற விளையாட்டில் ஆடை நெகிழவும், மேகலாபரணம் நீங்கவும், கருவி கரணங்கள் ஒன்றுபடவும், மீனையும் வேலையும் ஒத்த கண்கள் குவியவும், மயில் காடை குயில் போன்ற ஒலி குரலில் எழவும், பொது மாதருடைய அதர பானஞ் செய்தும், மகிழ்ச்சி மிகுந்து புணர்ந்து இளைத்து இரண்டு கொங்கைகளின் மேல் மோகத் துயில் புரிந்தாலும் உமது திருவடித் தாமரைகளை அடியேன் மறக்கமாட்டேன்.

## விரிவுரை

மேகமெனுங் குழல் சாய்த்து :—

பொது மகளிர் மேகம் போன்ற இருண்ட கூந்தலைத் தொங்க விட்டு வீதியில் நின்று இளைஞர்களை வசப்படுத்துவர்.

அங்கை மென்குழலாய்வார் போலே
சந்திநின் றய லூடே போவார்
அன்பு கொண்டிட நீரோ போரீர் அறியீரோ"

இரு கோகனகங் கொடுகோத்து :—

கோகனகம்-தாமரை; உவம ஆகுபெயராகக் கண்ணைக் குறிக்கின்றது.

தாமரை மலர் போன்ற விழியால் மருட்டி ஆடவரை ஈர்த்து மயக்குவர்.

தனங்களின் மேற்றுயில் கூரினு மம்புயதாட்டுணை மறவேனே:—

"முருகா! மாதர் மீது அன்பு கொண்டு அவர் வசமாகி அவரைத் தழுவி உறங்கினும் உமது திருவடியை ஒரு சிறிதும் மறவேன்" என்று சுவாமிகள் கூறுகின்றார்.

" கண்டுண்ட சொல்லியர் மெல்லியர் காமக் கலவிக்கள்ளை
மொண்டுண் டயர் கினும் வேல்மறவேன் " —கந்தரலங்காரம் (37)

மூவுலகுந் தொழுதேத்திட வுறைவோனே :—

முருகவேள் மூவர் தேவாதிகள் தம்பிரான் ஆதலின் சுவர்க்கம், பூதலம், பாதலம் என்று மூன்று உலகத்தவர்களும் வணங்கித் துதிசெய்கிறார்கள்.

"நவலோக முங்கைதொழு நிசதேவ லங்கிருத"
—(சிவனார்மனங்) திருப்புகழ்.

மேருவையம்பினில் வீழ்த்திய மோகன :—

மேருவைச் செண்டால் எறிந்த திருவிளையாடல். இதனைத் திருப்புகழ் விரிவுரை முதல் தொகுதி 69-ம் பக்கத்தில் காணலாம்.

சங்கரி வாழ்த்திட :—

சங்கு அரி. சங்கையேந்திய திருமால்.

இந்தலை காத்து :—

இந்திரன் புதல்வனாகிய சயந்தன் சிறையில் கிடந்து துன்புற்றபோது, ஆறுமுகப் பெருமான் அவன் கனவில் தோன்றி அருள்புரிந்தார்.

அவன் சிறை மீள அருளி, அமரலோக வாழ்வும் வழங்கினார்.

கருத்துரை

விராலிமலை மேவு முருகா! எப்போதும் உமது மலரடியை மறவேன்.

131

மோதி யிறுகிவட மேரு வெனவளரு
  மோக முலையன்சைய வந்துகாயம்
 மோச மிடுமவர்கள் மாயை தனில்முழுகி
  மூட மென அறிவு கொண்டதாலே
காதி வருமியம தூதர் கயிறுகொடு
  காலி லிறுகளனை வந்திழாதே
 காவ லெனவிளைய வோடி யுனதடிமை
  காண வருவதினி யெந்தநாளோ
ஆதி மறையவனு மாலு முயர்சுடலை
  யாடு மரனுமிலை றொன்றதான
 ஆயி யமலைதிரி சூலி குமரிமக
  மாயி கவுரியுமை தந்தவாழ்வே
சோதி நிலவுகதிர் வீசு மதியின் மிசை
  தோய வளர்கிரியி னுந்திநீடு
 சோலை செறிவுள்வி ராலி நகரில்வளர்
  தோகை மயிலுலவு தம்பிரானே.

## பதவுரை

ஆதி மறையவனும் - ஆதி மறையவனாகிய பிரமனும், மாலும் - திருமாலும், உயர் சுடலை ஆடும் அரனும் - மயானத்தில் திருநடனம் புரிகின்ற அரனும், இவர் ஒன்றது ஆன ஆயி - இந்த மும்மூர்த்திகட்கும் ஒப்பற்ற அன்னையும், அமலை - மலம் இல்லாதவரும், திரிசூலி - திரிசூலத்தை யேந்தியவரும், குமரி - இளமையானவரும், மகமாயி - பெரியமாயியும், கவுரி - பொன்னிற முடையவரும் ஆகிய, உமை தந்த வாழ்வே - உமா தேவியார் பெற்ற செல்வமே! சோதி நிலவு கதிர் வீசு மதியின் மிசை தோய வளர் கிரியின் - சோதியாகிய ஒளிக்கிரணங்கள் வீசுகின்ற சந்திரன்மீது தோயும்படி வளர்ந்துள்ள மலைமீது, உந்தி நீடு - ஆறு நீண்டுள்ள, சோலை செறிவு உள - சோலைகளும் நெருங்கியுள்ள, விராலி நகரில் வளர் - விராலிமலையில் வீற்றிருக்கின்ற, தோகை மயில் உலவு-தோகை மயில் மீது உலாவுகின்ற, தம்பிரானே - தனிப் பெருந்தலைவரே! மோதி - மேலெழுந்து, இறுகி - திண்ணிதாய், வடமேரு என வளரும் - வட மேருகிரிபோல் வளர்ந்து, மோக மூலை அசைய - மோகத்தை மூட்டும் தனங்கள் அசைய, வந்து காயம் மோசம் இடும் அவர்கள் - ஆடவர்பால் வந்து உடலால் மோசஞ் செய்கின்ற பொது மாதர்களின், மாயை தனில் முழுகி - மாயையிலே அடியேன் மூழ்கி, மூடம் என அறிவு கொண்டதாலே - மூடத்தனம் என்னும் படி அறிவைக் கொண்ட காரணத்தால், காதி வரும் - உயிரைப்பிரிக்க வரும், இயம தூதர் - இயமனுடைய தூதர்கள், கயிறு கொடு - பாசக் கயிற்றைக் கொண்டு, காலில் இறுக - பிராணவாயுவுடன் கட்டி, எனை வந்து இழாதே - அடியேனிடம் வந்து இழுக்காமல் , காவல் என - அடியேனுக்குக் காவலாக, விரைய ஓடி-விரைந்து ஓடிவந்து, உனது அடிமை காண வருவது இனி எந்த நாளோ-உமது அடிமையாகிய சிறியேன் கண்டு உய்யும்படி வருவது இனி எந்த நாளோ?

## பொழிப்புரை

**ஆதிப்பிரமனும், அரியும், சுடலையில் ஆடும் அரனும் ஆகிய திரிமூர்த்திகட்கும் அன்னையும், மலமற்றவரும், திரிசூலத்தையுடையவரும், குமரியும். மகமாயியும் பொன்னிறமுடையவரும், ஆகிய உமாதேவியார் பெற்ற செல்வரே! சோதிமயமான ஒளியை எங்கும் வீசுகின்ற சந்திரன்மீது தோயும்படி உயர்ந்து வளர்ந்துள்ளதும், ஆறும், நீண்ட சோலைகளும் நெருங்கியுள்ளதும் ஆகிய விராலி மலைமீது வாழ்பவரே! தோகைமயிலில் உலாவுகின்ற தனிப்பெருந் தலைவரே! மேலோங்கி திண்ணிய தாய வடமேருமலை போல் வளர்ந்து மோகத்தை யூட்டுகின்ற தனங்கள் அசைய வந்து, உடல் நலத்தால் மோசஞ் செய்கின்ற பொது மாதர்களின் மாயையில் மூழ்கி, மூடத்தன்மை**

யென்னும்படியான காரணத்தால், உயிரைப்பற்ற இயமதூதர்கள் வந்து கயிறுகொண்டு பிராணவாயுவுடன் கட்டி என்னை இழுக்காமல், காவலாக நீர் விரைந்து ஓடி அடியேன் கண்டு தெரிசிக்க வருவது இனி எந்த நாளோ?

## விரிவுரை

கயிறுகொடு காலிலிறுக எனைவந்திழாதே :—

இயமதூதர்கள் வினைகளின் முடிவில் வந்து பிராணவாயுவுடன் பாசக்கயிற்றைச் சேர்த்துக் கட்டி இழுத்து உயிரைப் பிரித்துக் கொண்டு போவார்கள்.

கால்—வாயு.

"காலனார் வெங்கொடுந் தூதர் பாசங் கொடென்
காலினார் தந்துடன் கொடு போக"

—திருப்புகழ்.

காவலென விரைய வோடி:—

முருகவேள் அடியார்க்குக் காவல்காரனாக நின்று அருள் புரிவார்.

"தொழுது வழிபடு மடியர் காவல்காரப் பெருமாளே"

—(ஒருபொழுதும்) திருப்புகழ்

அடிமை காண வருவதினி யெந்தநாளோ :—

"கால தூதர் பற்றி யிழுக்காமுன் தேவரீர் அடியேன் முன் ஓடிவந்து காட்சிதருவது எந்த நாளோ" என்று சுவாமிகள் ஏங்குகின்றார்.

ஆதிமறையவனும் :—

"தீயோம்பு மறை வாணர்க் காதியாம் திசைமுகன்"

—சம்பந்தர்.

"ஆதிப்பிரமனும்" —கம்பர்.

மறையவர்கட்குத் தலைவன் பிரம தேவன்.

உந்தி சோலை செறிவுள :—

உந்தி—காட்டாறு.

ஆறுகளும் சோலைகளும் சூழ்ந்துள்ள அரியதலம் விராலிமலை.

## கருத்துரை

விராலிமலை மீது மேவும் பெருமானே! உமது தரிசனந் தந்தருள்வீர்.

## கொடுங்குன்றம்

இது இப்போது பிரான்மலை என வழங்குகின்றது. திருஞான சம்பந்தருடைய தேவாரம் உடையது.

இராமநாதபுரம் மாவட்டம் திருப்புத்தூர் என்ற தேவாரப் பாடல் பெற்ற திருத்தலத்துக்கு வடமேற்கே 15 கல் தொலைவில் உள்ளது. இத்தலத்தில் அருணகிரிநாதருக்கு முருகன் திருநடனம் செய்து காட்சி தந்தருளினர்.

## 132

அனங்க னம்பொன் றஞ்சுந் தங்குங் கண்களாலே
அடர்ந்தெழும் பொன் குன்றங் கும்பங் கொங்கையாலே
முனிந்து மன்றங் கண்டுந் தண்டும் பெண்களாலே
முடங்கு மென்றன் தொண்டுங் கண்டின் றின்புருதோ
தெனந்தெ னந்தெந் தெந்தெந் தெந்தெந் தெந்தெனுஞ
செறிந்த டர்ந்துஞ் சென்றும் பண்பின் தும்பிபாடக்
குனிந்தி லங்குங் கொம்புங் கொந்துந் துன்றுசோலை
கொழுங்கொ டுந்திண் குன்றந் தங்குந் தம்பிரானே.

### பதவுரை

தெனந்தெ னந்தெந் தெந்தெந் தெந்தெந் தெந்தெ னுனு - தெனந் தெனந்தெந் தெந்தெந் தெந்தெந் தெந்தெனுனு என்று, செறிந்து அடர்ந்தும் சென்றும் - நெருங்கிச் சென்று, பண்பின் தும்பி பாட - நல்ல முறையில் வண்டுகள் பாட, குனிந்து இலங்கும்-வளைந்து விளங்கும், கொம்பும் - கொம்புகளும், கொந்தும் துன்று சோலை - பூங்கொத்துக்களும் நெருங்கிய சோலை சூழ்ந்துள்ள, கொழும் திண் - செழுமையும் திண்மையும் உடைய, கொடுங்குன்றம் தங்கும் - கொடுங்குன்றத்தில் வீற்றிருக்கும், தம்பிரானே- தனிப்பெருந் தலைவரே! அனங்கன் - மன்மதனுடைய, அம்பு ஒன்று அஞ்சும் தங்கும்-பொருந்திய கணைகள் ஐந்தும் தங்குகின்ற, கண்களாலே-கண்களினுலும், அடர்ந்து எழும் பொன் குன்றம்-நெருங்கி எழுந்துள்ள பொன்மலையும், கும்பம் - குடமும் போன்ற, கொங்கையாலே - தனங்களினுலும், முனிந்து - கோபங் கொண்டு, மன்றம் கண்டும் - பொதுச் சபை ஏறியும், தண்டும் - தமக்குரிய பொருளை வசூலிக்கும், பெண்களாலே - பொது மாதர்களினுல், முடங்கும் என்றன் - முடக்கம் அடைந்த அடியேனுடைய, தொண்டும் கண்டு இன்று இன்பு உருதோ - தொண்டினையும் கண்டு இன்று உமது திருவுள்ளம் இன்பம் அடையாதோ?

## பொழிப்புரை

தெனந் தெனந் தெந் தெந்தெந் தெந்தெந் தெந்தெனா என்று ஒலி செய்து கொண்டு ஒன்றுகூடி நெருங்கிச் சென்று நல்ல முறையில் வண்டுகள்பாட, அப்பாடலைக் கேட்டு வளைந்து விளங்கும் கொம்புகளும் பூங்கொத்துகளும் நெருங்கிய சோலைகள் சூழ்ந்த செழுமையும் திண்மையும் உடைய கொடுங்குன்றத்தில் எழுந்தருளியுள்ள தனிப் பெருந் தலைவரே! மன்மதனுடைய பொருந்திய ஐந்து கணைகளுந் தங்குகின்ற கண்களினாலும், நெருங்கி யெழுகின்ற பொன்மலையையும் குடத்தையும் ஒத்த தனங்களினாலும். கோபித்து நியாய சபையேறிப் பொன்னை வசூலிக்கும் விலைப்பெண்களினால் தடைபடுகின்ற அடியேனுடைய் தொண்டினைக் கண்டு இன்று தேவரீருடைய திருவுள்ளம் மகிழ மாட்டாதோ ?

## விரிவுரை

அனங்கன் :—

அங்கம்–சரீரம். மன்மதன் சிவபெருமானுடைய நெற்றிக் கண்ணால் எரிந்தான். இரதிதேவி வேண்டி முறையிட்டாள். சிவபெருமான் மன்மதனை யெழுப்பி, இரதிக்கு மட்டும் உருவமுள்ளவனாகவும், மற்றவர்க்கு அருவமாகவும் இருந்து அவனை அவனுக்குரிய தொழிலைப் புரியுமாறு பணித்தருளினார். அதனால் அனங்கன் ஆயினான்.

அம்பொன்றஞ்சுந்தங்குங் கண்கள் :—

மன்மதனுடைய கணைகள் ஐந்து மலர்கள். அவை மயக்கம் முதலிய ஐந்து வினைகள் செய்யும். இந்த மலர்க் கணைகள் செய்யும் ஐந்தொழில்களையும் விலைமகளிரது கண்கள் செய்யும். அதனால் அக்கணைகள் தங்குங் கண்கள் என்று கூறினார்.

முனிந்து மன்றங் கண்டுந் தண்டும் :—

விலைமகளிர் தம்பால் வந்து பழகிய ஆண்கள் பணந்தரச் சிறிது பின்வாங்குவார்களாயின், பொதுவாகவுள்ள நியாய சபையில் சென்று வழக்கினைக் கூறிப் பொருளை வசூலிப்பார்கள்.

முடங்குமென்றன் தொண்டுங்கண்டின் றின்புறுதோ :—

மாதர் மயலால் தடைபட்ட அடியேனுடைய தொண்டினைக் கண்டு, முருகா! உனது திருவுள்ளம் கருணையினால் மகிழ்ந்து இன்பம் அடையவேணும்.

தும்பி பாடக் குனிந்திலங்குங் கொம்பு :—

வண்டுகள்பாடுவதனுல், அப்பாடலின்இனிமைக்காக அசர மாய மரக்கொம்புகளும் உருகி வளைகின்றன. இது இசையின் பெருமையைத் தெரிவிக்கின்றது.

இசைக்குச் சராசரங்கள் அனைத்தும் ஈடுபடும் என்பதை ஆனுயர் சரிதையாலும் தெரிக.

இன்றும் நல்ல வாத்தியங்களின் ஒலியால் பயிர் வளர் கின்றது என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

கருத்துரை

கொடுங்குன்றத்தில் மேவிய குமாரக் கடவுளே! அடியேனுடைய தொண்டினை ஏற்று அருள்புரியும்.

## 133

எதிர்பொருது கவிகடின கச்சுக்க ளும்பொருது
குத்தித்தி றந்துமலை
யிவைகளென வதிம்ருகம தப்பட்டு நின்றொழுகி
முத்துச்செ றிந்தவட
மெனுநிகள மவையறவு தைத்திட்ட ணைந்துகிரி
னிற்கொத்து மங்குசநெ ருங்குபாகர்
எதிர்பரவ உரமிசைது கைத்துக்கி டந்துடல்ப
தைக்கக்க டிந்துமிக
இரதிபதி மணிமவுலி யெற்றித்ரி யம்பகனு
முட்கத்தி ரண்டிளகி
இளைஞருயிர் கவளமென மட்டித்த சைந்தெதிர்பு
டைத்துச்சி னந்துபொரு கொங்கையானை
பொதுவில்விலை யிடுமகளிர் பத்மக்க ரந்தழுவி
யொக்கத்து வண்டமளி
புகஇணைய வரிபரவு நச்சுக்க ருங்கயல்கள்
செக்கச்சி வந்தமுது
பொதியுமொழி பதறஅள கக்கற்றை யுங்குலைய
முத்தத்து டன்கருணை தந்துமேல்வீழ்

புதுமைதரு கலவிவலை யிற்பட்ட ழுந்தியுயிர்
தட்டுப்ப டுந்திமிர
புணரியுத தியில்மறுகி மட்டற்ற இந்திரிய
சட்டைக்கு ரம்பையழி
பொழுதினிலும் அருள்முருக சுத்தக்கொ டுங்கிரியி
னிர்த்தச்ச ரண்களைம றந் திடேனே
திதிதிதிதி திதிதிதிதி தித்தித்தி திந்திதிதி
தத்தத்த தந்ததத
தெததததெத தெததததெத தெத்தெத்த தெந்ததெத
திக்கட்டி கண்டிகட
ஜெகணகெண கெணஜெகுத தெத்தித்ரி யந்திரித
தக்கந்த குந்தகுர்த திந்திதீதோ
திகுடதிகு தொகுடதொகு திக்கட்டி கண்டிகட
டக்கட்ட கண்டகட
டிடிடுடுடு டிடிடுடுடு டிக்கட்டி கண்டிகட
டுட்டுட்டு டுண்டுடுடு
திகுதிகு திகுகுகுகு திக்குத்தி குந்திகுகு
குக்குக்கு குங்குகுகு என்றுதாளம்
முதிர்திமிலை கரடிகையி டக்கைக்கொ டுந்துடியு
டுக்கைப்பெ ரும்பதலை
முழவுபல மொகுமொகென வொத்திக் கொடும்பிரம
கத்திக்க ளும்பரவ
முகடுபுகு வெகுகொடிகள் பக்கத்தெ ழுந்தலைய
மிக்கக்க வந்தநிரை தங்கியாட
முதுகழுகு கொடிகருட னெக்கத்தி ரண்டுவர
வுக்ரப்பெ ருங்குருதி
முழுகியெழு பயிரவர்ந டித்திட்ட கண்டமும்வெ
டிக்கத்து ணிந்ததிர
முடுகிவரு நிசிசரரை முட்டிச்சி ரந்திருகி
வெட்டிக்க ளம்பொருத தம்பிரானே

## பதவுரை

திதிதிதிதி திதிதிதிதி தித்தித்தி திந்திதிதி தத்தத்த தந்ததத தெதத தெத தெததெதெத தெத்தெத்த தெந்தெத்த திக்கட்டி கண்டிகட ஜெகண கெண கெண ஜெகுத தெத்தித்ரி யந்திரித தக்கத்த குந்தகுர்த திந்தி தீதோ திகுடதிகு தொகுட திகு தொகுட தொகு திக்கட்டி கண்டிகட டக்கட்ட கண்டகட டுண்டுட்டு டுண்டுடுடு திகுகுதிகு திகுகுகுகு திக்குத்தி குந்திகுகு குக்குக்கு குங்குகுகு என்று தாளம் - திதிதிதி....குங்குகுகு என்ற ஒலியுடன் தாளங்கள், முதிர்திமிலை - முற்பட்டொலிக்கும் திமிலை, கரடிகை - கரடிகை, இடக்கை - இடக்கை, கொடுந்துடி உடுக்கை - வளைந்த துடியென்ற உடுக்கை, பெரும்பதலை - பெரிய பதலை, முழவு பல மொகு மொகு என ஒத்தி - முரசு முதலிய வாத்தியங்கள் மொகு மொகு என்று ஒலிக்கவும், கொடும் பிரமகத்திகளும் பரவ - கொடிய கொலைத் தொழிலால் ஏற்பட்ட பேயுருவங்கள் போற்றவும், முகடுபுகும் - மேலே உச்சியில் புகும், வெகு கொடிகள் - பல கொடிகள், பக்கத்து எழுந்து அலைய - பக்கங்களிலே பறந்து எழுந்து அலையவும், மிக்க கவந்த நிரை தங்கி ஆட - அதிகமாக கவந்தங்களின் வரிசை அங்கங்கு தங்கி ஆடவும், முது கழுகு - பழைய கழுகுகள், கொடி - காகங்கள், கருடன் - கருடன்கள், ஒக்கத் திரண்டுவர - இவை யாவும் ஒன்றுகூடித் திரண்டுவரவும், உக்ர பெரும் குருதி முழுகி எழும் - உக்கிரத்துடன் பெரிய உதிர வெள்ளத்தில் முழுகி எழுகின்ற, பயிரவர் நடித்திட்டு - பயிரவர் நடனஞ் செய்யவும். அகண்டமும் வெடிக்க - அண்டங்கள் எல்லாம் வெடிபடவும், அதிர - பூமி அதிரவும், துணிந்து . முடுகிவரு - துணிவுடன் முடுகி வந்த, நிசிசரரை முட்டி சிரம் திருகி - அசுரர்களின் தலைகளைத் தாக்கித் திருகி, வெட்டி களம் பொருத - வெட்டிப் போர்க்களத்தில் போர் புரிந்த, தம்பிரானே - தனிப்பெருந் தலைவரே! எதிர் பொருது கவி - எதிரில் போர் புரிவதுபோல் மூடப்பட்டுள்ள, கடின கச்சுக்களும் பொருது - கடினமான இரவிக்கையுடன் போர் செய்து, குத்தி திறந்து - அதைக் குத்தித் திறந்து கொண்டு, மலை இவைகள் என வதி - மலையே இவைகள் என்றுகூறும்படி இருக்கின்றனவும், ம்ருக மதம் பட்டு நின்று ஒழுகி - கஸ்தூரி பூசப்பட்டு அதில் நின்று ஒழுகவும், முத்து செறிந்த வடம் எனும் நிகளம் அவை அற - முத்து நிறைந்த மாலையாகிய சங்கிலிகள் இற்றுப் போகும்படி, உதைத்திட்டு அணைந்து - இடித்து அணைந்து, கொத்தும் உகிரினில் - கொத்துகின்ற நகங்களாகிய, அங்குசம் நெருங்கு பாகர் - அங்குசத்துடன் நெருங்குகின்ற பாகர்களாகிய காமுகர்கள், எதிர் பரவ - எதிரில் நின்று போற்ற, உரமிசை துகைத்து கிடந்து - மார்பை மிதித்து உழக்கிக் கிடந்து, உடல் பதைக்க கடிந்து - கண்டவர்களின் உடல் பதைக்கும்படி அடக்கி, மிக இரதிபதி - நன்குக இரதிதேவியின் கணவனாகிய மன்மதனுடைய, மணி மவுலி எற்றி - மணி மகுடத்தை மோதியும், த்ரியம்பகனும் உட்க - முக்கண்ணனும் அஞ்சும்படி, திரண்டு இளகி - பருத்தும் இளகியும். இளைஞர்

உயிர் கவளம் என - இளைஞர்களின் உயிரையே உண்ணும் கவளமாகக் கொண்டும், மட்டித்து அசைந்து - வட்ட வடிவுடன் நின்று அசைந்தும், எதிர் புடைத்து - முன்னே பருத்தும், சினந்து பொரு - கோபித்துப் போர் புரிகின்ற, கொங்கை யானை - யானை போன்ற கொங்கைகளை, பொதுவில் விலை இடும் மகளிர் - பொதுவான இடத்தில் நின்று விலைக்கு விற்கும் மாதர்களுடைய, பத்ம கரம் தழுவி - தாமரை போன்ற கரங்களைத் தழுவி, ஒக்க துவண்டு - ஒரு சேர நெகிழ்ந்து, அமளி புக இணைய - படிக்கையில் சென்று சேர, வரி பரவு - வரி பரந்துள்ள, நச்சு கரும் கயல்கள் - நச்சுத்தன்மையுள்ள கயல் மீன் போன்ற கண்கள், செக்க சிவந்து - நன்கு சிவக்கவும், அமுது பொதியும் மொழி பதற - அமுதம் கொண்ட சொற்கள் குழறவும், அளக கற்றையும் குலைய - கூந்தற்கட்டு குலைந்து அவிழவும், முத்தத்து உடன் - முத்தமிடுவதுடன், கருணை தந்து மேல் வீழ் - அன்பு செய்து மேலே விழுகின்ற, புதுமைதரு கலவி வலையில் பட்டு அழுந்தி - புதுமையான இன்பத்தைத் தருகின்ற புணர்ச்சி வலையில் அகப்பட்டு, உயிர் தட்டுபடும் - உயிர் தடைப்பட்டு, திமிர புணரி உததியில் மறுகி - இருண்ட ஆசைப் பெருங்கடலில் சுழன்று, மட்டு அற்ற - அளவிலாத, இந்திரிய சட்டை குரம்பை - இந்திரியந் தங்கும் சட்டையாகிய இந்த உடல், அழி பொழுதினிலும் - அழிகின்ற போதிலும், அருள் முருக - அருள்பாலிக்கும் முருக வேளே, சுத்த கொடுங்கிரியில் - தூய கொடுங்குன்றத்தில், நிர்த்த சரணங்களை - எனக்கு நீர் காட்சி யளித்து நடனஞ் செய்த திருவடிகளை, மறந்திடேனே - ஒருபோதும் அடியேன் மறக்க மாட்டேன்.

## பொழிப்புரை

*திதிதிதிதி திதிதிதிதி தித்தித்தி திந்திதிதி தத்தத்த தந்ததத தெததததெத தெததததெத தெந்தெத்த தெந்ததெத திக்கட்டி கண்டிகட ஜெகணகெண கெணஜெகுத தெத்தித்ரி யந்திரித தக்கத்த குந்தகுர்த திந்திதீதோ திகுடதிகு தொகுட தொகு திக்கட்டி கண்டிகட டக்கட்ட கண்டகட டிடிடுடுடு டுண்டுடுடு திகுகுதிகு திகுகுகுகு திக்குத்தி குந்திகுகு குக்குக்கு குங்குகுகு* என்று தாள ஒத்துடன், முற்பட்ட திமிலை, கரடிகை, இடக்கை, வளைந்த துடியாகிய உடுக்கை, பெரிய தபலை, பேரிகை முதலிய வாத்தியங்கள் பல மொகு மொகு என்று ஒலிக்கவும், கொடிய பிரமகத்திப் பேய்கள் போற்றவும், மேலே உச்சியிற் பறக்கும் கொடிகள் பக்கத்தில் பறந்து அலையவும், அதிகமாக கவந்தங்களின் வரிசை அங்கங்கே தங்கி யாடவும், பழைய கழுகுகளும், காக்கைகளும், கருடன்களும் ஒன்று கூடி வரவும், உக்கிரத்துடன் பெரிய உதிர வெள்ளத்தில் முழுகி ஒழுகின்ற பயிரவர்கள் நடனஞ் செய்யவும்,

உலகம் யாவும் வெடி படவும், பூமி யதிரத் துணிந்து வந்த அசுரர்களை எதிர்த்துத் தாக்கி அவர்களின் தலைகளைத் திருகியும் வெட்டியும் போரில் அமர செய்த தனிப் பெருந்தலைவரே! எதிர்த்துப் போர் புரிவது போல் [கவசம்போல்] மூடப்பட்டுள்ள வலிய இரவிக்கையுடன் போர் புரிந்து, அதைக்குத்தித் திறந்து. மலையே இவைகள் என்று இருக்கின்றனவும், கஸ்தூரி ஒழுகவும், முத்து மணிகளாலாய மாலையாகிய சங்கிலிகள் இற்றுப் போகும்படி இடித்து, நகங்களாகிய அங்குசத்துடன் நெருங்குகின்ற பாகர்களாகிய இளைஞர்கள் எதிர் நின்று புகழவும், மார்பை மிதித்து உழக்கிக் கிடந்தும், கண்டோர்களின் உடல் பதைக்கும்படி அடக்கியும், இரதியின் கணவனாகிய மன்மதனுடைய மணிமகுடத்தை மோதியும், முக்கண்ணரும் அஞ்சும்படிப் பருத்தும் நெகிழ்ந்தும் இளைஞரின் உயிராகிய கவளத்தையுண்பதும் வட்ட வடிவுடன் நின்று அசைந்து முன்னே பருத்தும் பொருதற்கு உற்றனவும் ஆகிய யானை போன்ற கொங்கைகளை, பொதுவில் நின்று விலைக்கு விற்கும் மாதர்களுடைய தாமரை மலர் போன்ற கரங்களைத் தழுவி, ஒரு சேர நெகிழ்ந்து, படுக்கையிற் சேர்ந்து, வரி பரந்துள்ள நச்சுக்கண்கள் சிவக்கவும், அமுதம் போன்ற மொழிகள் குழறவும், கூந்தல் அவிழவும், முத்தந் தந்து அன்புடன் மேல் வீழ்ந்து, புதுமையைத் தரும் புணர்ச்சி வலையிற்பட்டு உயிர் தடைபட்டு ஆசையாகிய இருட்கடலில் துன்புற்று, இந்திரியம் தங்கும் இந்த உடம்பாகிய கூடு அழிந்து போகும் பொழுதிலும், அருள் பாலிக்கும் முருகவேளே! தூய கொடுங்குன்றத்தில் அடியேனுக்குக் காட்டி யருளிய திருநடனத் திருவடியை அடியேன் மறவேன்.

## விரிவுரை

இந்தத் திருப்புகழின் முற்பகுதியில் மாதரின் தனத்தை யானையாக உருவகம் புரிகின்றார். 1087-வது திருக்குறளிலும் இந்தக் கருத்து வருகின்றது,

யானையின் முகபடாம் இரவிக்கை யென்றும், கஸ்தூரி மதம் ஒழுகுவது என்றும், முத்துமாலையான சங்கிலிகளை யறுப்பது என்றும், இளைஞர்கள் அதை யடக்கும் பாகர்கள் என்றும், அவர்களின் கை நகம் அங்குசம் என்றும், இளைஞரின் உயிர் யானையுண்ணும் கவளமென்றும் சமர்த்தாகக் கூறுகின்றார்.

அழிபொழுதினிலும் அருள்முருக சுத்தக் கொடுங்கிரியினிர்த்தச் சரண்களை மறந்திடேனே :—

அருணகிரிநாதருக்குக் கொடுங்குன்றத்தில், திருநடன தரிசனந் தந்தருளினர்.

"அந்த நடனகோலத்தை உயிர் போம் பொழுதும் மறவேன்" என்று சுவாமிகள் கூறுகிறார்கள்.

இத் திருப்புகழின் பிற்பகுதி போர்க்கள வருணனை.

கருத்துரை

கொடுங்குன்றக் குமரா! உன் திருநடனப்பதமலரை ஒரு போதும் மறவேன்.

குன்றக்குடி

134

அழகெ றிந்த சந்த்ர முகவ டங்க லந்த
அமுத புஞ்ச இன்சொல் மொழியாலே
அடிது வண்ட தண்டை கலிலெ னுஞ்சி லம்பொ
டணிச தங்கை கொஞ்சு நடையாலே
சுழியெறிந்து நெஞ்சு சுழல நஞ்ச ணைந்து
தொடுமி ரண்டு கண்க ளதனாலே
துணைநெ ருங்கு கொங்கை மருவு கின்ற பெண்கள்
துயரை யென்றொ ழிந்து விடுவேனோ
எழுது கும்ப கன்பி னிளைய தம்பி நம்பி
யெதிர டைந்தி றைஞ்சல் புரிபோதே
இதம கிழ்ந்தி லங்கை யசுர ரந்த ரங்க
மொழிய வென்ற கொண்டல் மருகோனே
மழுவு கந்த செங்கை அரனு கந்தி றைஞ்ச
மனுவி யம்பி நின்ற குருநாதா
வளமி குந்த குன்ற நகர்பு ரந்து துங்க
மலைவி ளங்க வந்த பெருமாளே.

## பதவுரை

எழுது - அடைக்கலம் புகும் பொருட்டு எழுந்து, கும்பகன் பின் இளைய தமபி - கும்பகர்ணனுடைய இளைய தம்பியாகிய விபீஷணன், நம்பி - நம்பிக்கையுடன், எதிர் அடைந்து - ஸ்ரீ ராமருடைய எதிரில் வந்து சேர்ந்து, இறைஞ்சல் புரி போதே - வணங்கிய சமயத்தில், இதம் மகிழ்ந்து - இதயம் மகிழ்ந்து, இலங்கை அசுரர் அந்தரங்கம் மொழிய - இலங்கையில் உள்ள அசுரர்களின் இரகசியங்களை எடுத்துரைக்க, வென்ற - வெற்றி பெற்ற, கொண்டல் - மேக நிறத்தராம் இராமரது, மருகோனே - திருமருகரே! மழு உகந்த செம்கை - மழுவை மகிழ்ச்சியுடன் ஏந்தும் சிவந்த கரத்தை யுடைய, அரன் உகந்து இறைஞ்ச - சிவபெருமான் மகிழ்ச்சியுடன் வணங்க, மநு இயம்பி நின்ற குரு நாதா - பிரணவ மந்திரத்தை உபதே சித்து நின்ற குருநாதரே! வளம் மிகுந்த - வளமை மிகுந்த, குன்றநகர் புரந்து - குன்ற நகரைக் காத்து, துங்கமலை விளங்க வந்த - தூய அம்மலை யில் வீற்றிருந்தருளும், பெருமாளே - பெருமையில் மிகுந்தவரே! அழகு எறிந்த - அழகு வீசும், சந்த்ர முகவடம் கலந்த - சந்திரனைப் போன்ற முக வட்டத்தினின்றும், அமுத புஞ்ச இன்சொல் மொழியாலே - அமுதம் போன்ற திரண்ட இனிய செஞ் சொல் பேச்சினாலே, அடி துவண்ட தண்டை-பாதத் தில் நெளிந்து கிடக்கும் தண்டை, கலில் எனும் சிலம்பு - கலீல் என ஒலிக் கும் சிலம்பு, அணி சதங்கை-அழகிய சதங்கை, கொஞ்சு நடையாலே-இந்த ஆபரணங்கள் கொஞ்சி ஒலிக்கின்ற நடையாலே, சுழி எறிந்து நெஞ்சு சுழல - உள்ளமானது நீர்ச்சுழிபோல் சுழல, நஞ்சு அணைந்து தொடும் - நஞ்சைக் கலந்திருக்கின்ற, இரண்டு கண்கள் அதனாலே - இருகண் களாலே அடியேன் கலங்கி, துணை நெருங்கு கொங்கை மருவுகின்ற பெண் கள் - ஒன்றோடொன்று இணைந்து நெருங்கும் கொங்கைகளை உடைய பெண்களின், துயரை என்று ஒழிந்து விடுவேனோ - மயக்கத்தால் வரும் துன்பத்தை என்று அடியேன் விடுவேனோ?

## பொழிப்புரை

கும்பகர்ணனுடைய தம்பியாகிய விபீஷணர், அடைக்கலம் புகுமாறு எழுந்து, நம்பிக்கையுடன் இராமருடைய திருமுன் வந்து வணங்கியபோது, இதயம் மகிழ்ந்து இலங்கையில் உள்ள அரக்கர்களின் இரகசியங்களை எடுத்துரைக்க, வெற்றி பெற்ற மேக வண்ணராம் ஸ்ரீராமரது திருமருகரே! மழுவை யேந்திய சிவந்த திருக்கரத்தையுடைய சிவபெருமான் வணங்க, பிரணவ மந்திரத்தை உபதேசித்த குருநாதரே! வளமை மிகுந்த குன்ற நகரைக் காத்து, அங்குள்ள தூய மலை மீது எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! அழகு வீசும் நிலாவைப் போன்ற முகவட்டத்தினின்றும் அமுதம் போன்ற

திரண்ட இன்னுரையாலும், பாதத்தில் துவண்டு கிடக்கும் தண்டையும், கலீல் என ஒலிக்கும் சிலம்பும், அழகிய சதங்கை யும் கொஞ்சும் நடையினாலும், என் உள்ளம் நீர்ச்சுழி போல் சுழல நஞ்சு கலந்த இருகண்களினாலும் அடியேன் கலக்க முற்று, நெருங்கிய இரு தனங்களையுடைய பொதுமாதர்களின் துயரை என்று விடுவேனோ?

## விரிவுரை

துயரை என்றொழிந்து விடுவேனோ? :—

ஆசை மூவகைப்படும்; மண்ணாசை, பொன்னாசை பெண்ணாசை.

மண்ணாசையும் பொன்னாசையும் மனிதனுக்கே உரியவை. மற்றப் பெண்ணாசை புழு முதல் சகல உயிர்களுக்கும் உண்டு, தேவரும் முனிவரும் பெண்ணாசையால் பேதுற்றார்கள். இந்திரனும் சந்திரனும் பெண்ணாசையால் பெருமை குன்றினார்கள். ஆகவே பெண்ணாசையை இறைவனுடைய திருவருள் துணையால் வந்த ஞானவொளியால் விலக்கவேண்டும். ஆதலால் சுவாமிகள் 'என்று விடுவேனோ?' என்று இங்கே வேலவனை வேண்டுகின்றார்.

எழுது கும்ப கன்பினிளைய தம்பி :—

எழுந்து என்ற சொல் சந்தத்தை நோக்கி எழுது என வந்தது.

விபீஷணன், அண்ணனைக் காட்டிக் கொடுத்த சகோதரத் துரோகி என்று சிலர் குறை கூறுவர். இது பிழை.

விபீஷணர் இராவணன் இனிது வாழவேண்டும் என்று அறவுரை பல பகர்ந்தார்.

அவர் இராவணனைப் பார்த்துக் கூறும் இனிய பாடலை இதோ உற்றுப் பாருங்கள்.

எந்தைநீ யாயுநீ எம்முன் நீயுயர்
வந்தனைத் தெய்வம்நீ மற்று முற்றும்நீ
இந்திரப் பெரும்பதம் இழக்கின் றாயென
நொந்தனன் ஆதலால் நுவல்வ தாயினேன்.

''அண்ணா! எனக்குத் தந்தை, தாய், தமையன், தெய்வம் எல்லாம் நீதான். இந்திரனுக்கும் எய்தா இனிய பதத்தை இழக்கின்றாய் என்று உள்ளம் உலைந்து உரைக்கின்றேன்''

என்கின்றார். இவருடைய அறவுரைகளை இராவணன் கேட்டிருந்தால் அவன் அழிந்திருக்கமாட்டான். முறைக்காய்ச்சல் உடையானுக்குக் கற்கண்டு கசப்பது போல், விபீஷணர் கூறிய இன்னுரைகள் அவனுக்குக் கசந்தது. அவரை வாள் கொண்டு வெட்டப் போனான்.

விபீஷணர் அவனைத் துறந்து, தென் கடற்கரையில் அமர்ந்துள்ள இராமரைச் சரணாகதி யடைந்தார்.

இவரை இராவணன் தம்பி என்று கூறாமல் கும்பகர்ணன் தம்பி யென்று சுவாமிகள் குறிப்பிடுகின்றார். ஏன்?

கும்பகர்ணன் உள்ளத்தால் உயர்ந்தவன். தன் தமையனுக்குப் பல முறை நீதி நெறிகளை இடித்து இடித்து எடுத்துரைத்தான்.

> ஆசில் பரதாரமவை அஞ்சிறை யடைப்போம்
> மாசில்புகழ் காதலுறு வோம்வளமை கூரப்
> பேசுவது மானம்இடை பேணுவது காமம்
> கூசுவது மானுடரை நன்று நம கொற்றம்.
>
> ஆனதோ வெஞ்சமம் அளவில்கற்புடை
> சானகி துயர்இன்னம் தீர்ந்த தில்லையோ
> மானமும் வையமும் உணர்ந்த வான்புகழ்
> போனதோ புகுந்ததோ பொன்றுங் காலமே.

இவ்வாறு இனிய அறவுரைகூறி, போர் மூண்டுவிட்டபடியால் தமையனுக்காகப் போர்புரிந்து, உயிரைத் தியாகம் புரிந்தான் கும்பகர்ணன்.

அதனால் கும்பகர்ணனுடைய தம்பி என்று கூறுகின்றார்.

இதமகிழ்ந்து :—

இதயம் மகிழ்ந்து என்ற சொல் இதம் மகிழ்ந்து என வந்தது. அன்றி இதமாக மகிழ்ந்து என்றுங் கொள்ளலாம்.

இலங்கை யசுரர் அந்தரங்கமொழியை :—

வீடணன் அடைக்கலம் புகுந்தபின் இராமர் அவரைப் பார்த்து,

> ஆர்கலி இலங்கையின் அரணும் அவ்வழி
> வாரகெழு கனைகழல் அரக்கன் வன்மையும்
> தார்கெழு தானையின் அளவும் தன்மையும்
> நீர்கெழு தன்மையாய் நிகழ்த்துவாய் என்றான்.

இப்படி இராமர் இலங்கை வாழ் அசுரரது அளவையும் ஆற்றலையும் கூறுமாறு வினவினர். விபீஷணர் அவையனைத்தையும் விவரமாக விளம்பினர்.

அரனுகந் திறைஞ்ச மநுவிளம்பிநின்ற :—

மநு-மந்திரம். அரன்-பாவங்களைப் போக்குபவர்.

ஹர ஹர என்ற நாமம் எங்கு ஒலிக்கப்படுகின்றதோ அங்கு துயரம் அகலும்.

"எல்லாம் அரன்நாமமே
சூழ்க; வையகந்துயர் தீர்கவே" —திருஞானசம்பந்தர்

## கருத்துரை

குன்றக்குடி மேவுங் குருபரா! மாதராசையைவிட அருள் செய்வீர்.

## 135

கருபநிலை குலையவிகல் மிகுபகடின் வலியுடைய
தந்தத்தி னைத்தடிவ தொந்தத் திரத்தையுள
அகிலமறை புகழ்பரமர் ஞெகிழிகல கலகலெனும்
அம்பொற் பதத்தர்தனு வம்பொற்பொ ருப்படர்வ
களபபரி மளமெழுகும் எழிலில்முழு குவமுளரி
யஞ்சப் புடைத்தெழுவ வஞ்சக் கருத்துமத
னபிஷேகங்

கடிவபடு கொலையிடுவ கொடியமுக படமணிவ
இன்பச் சுடர்க்கனக கும்பத் தரச்செருவ
பிருதில்புள கிதசுகமு மிருதுளமும் வளரிளைஞர்
புந்திக் கிடர்த்தருவ பந்தித் தகச்சடர்வ
கயல்மகர நிகரமிக வியன்மருவு நதியில்முதிர்
சங்கிப்பி முத்தணிவ பொங்கிக் கனத்தொளிர்வ
முலைமாதர்

வகுளமலர் குவளையிதழ் தருமணமு மிருகமத
மொன்றிக்க ருத்துமுகில் வென்றிட்டு நெய்த்தகுழ

லசையருசி யமுர்தக்ருத வசியமொழி மயில்குயிலெ
னும்புட் குரற்பகர வம்புற்ற மற்புரிய
வருமறலி யரணமொடு முடுகுசமர் விழியிணைகள்
கன்றிச் சிவக்கமகிழ் நன்றிச் சமத்துநக நுதிரேகை

வகைவகைமெ யுறவளைகள் கழலவிடை துவளவித
முண்டுட்ப்ர மிக்கநகை கொண்டுற் றணைத்தவதி
செறிகலவி வலையிலென தறிவுடைய கலைபடுத
லுந்திப் பிறப்பறநி னைந்திட்ட முற்றுனடி
வயலிநகர் முருகசெரு முயல்பனிரு கரகுமர
துன்றட்ட சிட்டகுண குன்றக்கு டிக்கதிப அருளாதோ

தகுகுதகு தகுதகுகு திகுகுதிகு திகுதிகுகு
தங்குத் தகுத்தகநு திங்குத் திகுத்திகிகு
சகணசக சகசகண செகணசெக செகசெகெண
சங்கச் சகச்சகண செங்கச்செ கச்செகண
தனனதன தனதனன தெனனதென தெனதெனன
தந்தத்த னத்தனன தெந்தத்தெ னத்தெனன தனனுன
தகுததகு தகுதகுதி திகுதிதிகு திகுதிகுதி
தங்குத் தகுத்தகுகு திங்குத் திகுத்திகுகு
டணணடண டணடணண டிணிணிடிணி டிணிடிணிணி
டண்டட்ட டட்டடண டிண்டிட்டி டிட்டிடிணி
தரரதர தரதரர திரிரிதிரி திரிதிரிரி
தன்றத் தரத்தரர தின்றித் திரித்திரிரி யெனதாளந்

தொகுதிவெகு முரசுகர டிகைடமரு முழவுதவில்
தம்பட்ட மத்தளமி னம்பட் டடக்கைபறை
பதலைபல திமிலைமுத லதிரவுதிர் பெரியதலை
மண்டைத் திரட்பருகு சண்டைத் திரட்கழுகு
துடர்நிபிட கருடனடர் தரகரட மொகுமொகென
வந்துற்றிடக்குடர்நி ணந்துற்றிசைத்ததிர முதுபேய்கள்

சுனகனரி நெறுநெறென வினிதினிது தினவினைசெய்
வெங்குக் குட்த்தகொடி துங்குக் குகுக்குகென
வடனமிடு திசைபரவி நடனமிட வடலிரவி
திங்கட்ப்ர பைக்கதிர்கள் மங்கப்ப்ர சித்தகுல
துரககஜ ரதகடக முரணரண நிருதர்விறல்
மிண்டைக் குலைத்தமர்செய் தண்டர்க் குரத்தையருள்
பெருமாளே.

## பதவுரை

தகுகு தகு தகுதகுகு திகுகுதிகு திகுதிகுகு தங்குத் தகுந்தககு திங்குத் திகுத் திகிரு சகணசக சகசகண செகணசெக செகசெகெண சங்கச் சகச்சகண செங்கச்செ கச்செகண தனனதன தனதனன தெனனதென தெனதெனன தந்தத்த னத்தனன தெந்தத்தெ னத்தெனன தனனுனு தகுத தகு தகுதகுதி திகுதிதிகுதி திகுதிகு தங்குத் தகுத்தகுகு திங்குத் திகுத் திகுகு டணணடண டணடணண டிணிணிடிணி டிணிடிணிணி டண்டட்ட டட்ட டண டிண்டிட்டி டிட்டிடிணி தரரதர தரதரர திரிரிதிரி திரிதிரிரி தன்றத் தரத்தரர தின்றித் திரித்திரிரி என — தகுகுதகு தகுதகுகு..............திரித் திரிரி என்ற ஒலிகளுடன், தாளம் தொகுதி - தாளக் கூட்டங்களும், வெகு முரசு - பலமுரசு வாத்தியங்களும், கரடிகை - கரடிகை, டமரு - உடுக்கை, முழவு - முழவு, தவில் - தவில், தம்பட்டம் - தம்பட்டம், மத்தளம் - மத்தளம், இனம் பட்டடக்கை - பறையினத்தைச் சேர்ந்த இடக்கை, பறை - பறை, பதலை - பதலை, பல திமிலை முதல் - பல திமிலைகள் முதலிய வாத்தியங்கள், அதிர - பேரொலியைச் செய்யவும், உதிர் பெரிய தலை மண்டை திரள் பருகு - போரில் அறுபட்டு உதிர்ந்த பெரிய தலை மண்டைக் குவியலை உண்ணுகின்ற, சண்டை திரள் கழுகு - சண்டையிடும் கழுகின் கூட்டங்களும், துடர் நிபிட கருடன் அடர்தர - அவைகளைத் தொடர்ந்து கூட்டமாய் கருடன்கள் நெருங்கி வரவும், கரடம் - காக்கைகள், மொகு மொகு என வந்து உற்றிட - மொகு மொகு என்று வந்து சேரவும், குடர் - குடலையும், நிணம் - மாமிசத்தையும், துற்று இசைத்து அதிர - உண்டு கூச்சலிட்டு இரையவும், முது பேய்கள் - பழைய பேய்கள், சுனகன் - நாய்களும், நரி - நரிகளும், நெறு நெறு என - நெறு நெறு என்ற ஓசையுடன், இனிது இனிது தின - சுவைக்கின்றது சுவைக்கின்றது தின்ன என்று, வினைசெய - உண்ணுந் தொழிலைச் செய்யவும், வெம்குக்குடத்த கொடி - வெப்பமான கோழிக் கொடி, துங்குக் குகுக்குக என - துங்குக் குகுக்குக என்று ஒலிக்கவும், அடனம் இடு திசை பரவி - அலைந்து திரியும் திசையைப் போற்றி செய்து, நடனம் இட - கூத்தாடவும், அடல் இரவி - வலிமை வாய்ந்த சூரியன், திங்கள் ப்ரபை கதிர்கள் மங்க - சந்திரன்

இவை தம் ஒளிக்கிரணங்கள் மங்கவும், ப்ரசித்தகுல - பேர் பெற்ற சிறந்த, துரக-குதிரை, கஜ - யானை, ரத - தேர், கடக - சேனை, முரண் அரண - வலிய கோட்டை இவைகளைக் கொண்ட, நிருதர் விறல் மிண்டை குலைத்து அமர் செய்து - அசுரர்களின் வலிமையையும் துடுக்கையும் அடக்கிப் போர் செய்து, அண்டர்க்கு உரத்தை அருள் - தேவர்கட்கு வலிமையை அருளிய, பெருமாளே - பெருமிதம் உடையவரே! ககுபம்நிலை குலைய - திசைகளின் நிலையைக் குலைக்கவல்ல, இகல் மிகு - வலிமை மிகுந்த, பகடின் யானையின், வலி உடைய - வலிமையுடைய, தந்தத்தினை தடிவ - தந்தங்களை அழிக்க வல்லனவும், தொந்த திரத்தை உள - புணர்ச்சிக்கு உரிய வலிமை கொண்டனவும், அகில் மறை புகழ் பரமர் - சகல வேதங்களும் புகழ்கின்ற பெரியவரும், ஞெகிழி கல கல கல எனும் - சிலம்பு கல கல கல என ஒலிக்கும், அம் பொன் பதத்தர் - அழகிய சிறந்த திருவடிகளையுடைய வருமாகிய சிவ பெருமான் ஏந்திய, தநு அம் பொன் பொருப்பு அடர்வ - வில்லாகிய அழகிய பொன் மலையாகிய மேருவைத்தாக்க வல்லனவும், பரிமள களப மெழுகும் - நறுமணமுள்ள களபச் சாந்து பூசப்பட்ட, எழிலில் முழுகுவ - அழகில் முழுகுவனவும், முளரி அஞ்சு புடைத்து எழுவ - தாமரையின் மொட்டு அஞ்சும்படி பருத்து எழுவனவும், வஞ்ச கருத்து மதன் - வஞ்சனையுள்ள எண்ணத்தையுடைய மன்மதனுடைய, அபிஷேகம் - முடியை, கடிவ - அடக்க வல்லனவும், படு கொலை இடுவ - பொல்லாத கொலைத் தொழிலுக்கு இடங் கொடுப்பனவும், கொடிய் முகபடம் அணிவ - கொடிதான மேலாடை அணிவனவும், இன்ப சுடர் - இன்பந்தரும் ஒளி பொருந்திய கனக கும்ப தர செருவ - தங்கக்குடத்துடன் தக்கபடி போர் புரிவனவும், பிருதில் - வெற்றிச் சின்னமாக, புளகித சுகமும் - புளகாங்கித சுகத்தாலும், மிருது உளமும் - மென்மையாலும், வளர் இளைஞர் புந்திக்கு இடர் தருவ - வளர்கின்ற இளைஞர்களின் புத்திக்கு வருத்தத்தைத் தருவனவும், பந்தித்த கச்சு அடர்வ - கட்டப்பட்ட இரவிக்கையால் நெருக்குண்பனவும், கயல் மகர - கயல்மீனும் மகரமீனும், நிகரம் - கூட்டமாக, மிக வியன் மருவு - மிகுந்துள்ள பெருமையுடைய, நதியில் முதிர் - ஆற்றில் முதிர்ந்துள்ள, சங்கு இப்பி முத்து அணிவ - சங்கு இப்பி முத்து இவைகளை அணிவனவும், பொங்கி கனத்து ஒளிர்வ - மேலெழுந்து பாரங்கொண்டு விளங்குவனவுமாகிய, முலை மாதர் - தனங்களையுடைய மாதர்கள், வகுள மலர் - மகிழம்பூ, குவளை இதழ் தருமணமும் - குவளை மலரின் இதழ்கள் தருகின்ற மணமும், மிருகமதம் ஒன்றி - கஸ்தூரியுங் கலந்து, கருத்து முகில் வென்றிட்டு - கருநிறத்தால் மேகத்தையும் வென்று, நெய்த்த குழல் அசைய - வாசனை எண்ணெய் பூசப்பட்ட கூந்தல் அசையவும், ருசி அமிர்த க்ருத - சுவையுள்ள அமுதமும் நெய்யும் போல், வசிய மொழி - வசியஞ் செய்யும் மொழியானது, மயில் குயில் எனும் புள் குரல் பகர - மயில் குயில் என்கின்ற பறவைகளின் குரலைக் காட்டவும், வம்பு உற்றமல் புரிய - வம்புத் தனமாகக் கலவிப் போர் புரியவும், வருமறலி அரணமொடு - வருகின்ற இயமனுடைய வேலையொத்து, முடுகு சமர் விழி இணைகள் - முடுகிப் போர் புரியும் இரு கண்களும், கன்றி

சிவக்க - மிகவும் சிவக்கவும், மகிழ் நன்றி சமத்து - மகிழ்ந்து கொடுத்த பொருளுக்கு நன்றி பாராட்டுவதான கலவிப் போரில், நக நுதி ரேகை வகை வகை மெய் உற - நகத்தின் நுனிக் குறிகள் வகை வகையாக உடலிற் பொருந்தவும், வளைகள் கழல - வளைகள் கழன்று விழவும், இடை துவள - இடுப்பு நெகிழ்ச்சியுறவும், இதழ் உண்டு - அதரத்தைப் பருகி, உள் ப்ரமிக்க - உள்ளம் அதிசயம் அடையவும், நசை கொண்டு - ஆசை பூண்டு, அணைத்து அவதி செறி - பொருந்தி அணைக்கும் துன்பம் நிறைந்த, கலவி வலையில் - புணர்ச்சி வலையில், எனது அறிவு உடைய கலைபடுதல் உந்தி - என்னுடைய அறிவு கொண்டுள்ள கலைகள் அழிவுபடுதல் நீங்கி, பிறப்பு அற - அடியேனுடைய பிறப்பு அறும்படியான வழியை, நினைந்து - தேவரீர் திருவுளத்தில் கருதி, இட்டம் உற்று - என்மீது அன்பு வைத்து, உன் அடி - உமது திருவடியை, வயலி நகர் முருக - வயலூர் வாழும் முருக வேளே! செரு முயல் பன் இருகர - போருக்கு முயலும் பன்னிரு கரங்களை யுடையவரே! குமர - குமாரக் கடவுளே! துன்று அட்ட சிட்டகுண - பொருந்திய சிரேஷ்டமான எண் குணங்களையுடையவரே! குன்றக்குடிக்கு அதிப - குன்றக்குடிக்குத் தலைவரே! அருளாதோ - தந்தருளாதோ?

## பொழிப்புரை

தகுதகு தகுதகுகு திகுகுதிகு திகுதிகுகு தங்குத் தகுத் தகுகு திங்குத் திருத் திகிகு சகணசக சகசகண செகணசெக செகசெகெண சங்கச் சகச்சகண செங்கச் செகச்செகண தனன தன தனதனன தெனனதென தெனதெனன தந்தத் தனத் தனன தெந்தத் தெனத்தெனன தனனுனு தகுததகு தகுதகுதி திகுதிதிகு திகுதிகுதி தங்குத் தகுத்தகுகு திங்குத் திகுத் திகுகு டணணடணடணடணணடிணிணிடிணிடிணிடிணிணிடண்டட்ட டட்டடண டிண்டிட்டி டிட்டிடிணி தரரதர தரதரர திரிரிதிரி திரிதிரிரி தன்றத் தரத்தரர தின்றித் திரித்திரிரி என்ற ஒலி யுடன் தாளக் கூட்டங்களும், பல முரச வாத்தியங்களும், கரடிகை, தமருகம், முழவு, தவில், தம்பட்டம், மத்தளம், இடக்கை, பறை, பதலை, திமிலை முதலிய வாத்தியங்கள் மிகவும் முழங்கவும், போரில் அற்று விழுந்த பெரிய தலை மண்டைகளை உண்ணும்-சண்டையிடும் கூட்டமான கழுகுகளும், அவை களைத் தொடர்ந்து நெருங்கிக் கூட்டமாக கருடன்கள் வரவும், காக்கைகள் மொகு மொகு என்று வந்து சேரவும், இவை யாவும் குடல் நிணம் இவைகளை யுண்டு இரைச்சலிடவும், பழம் பேய்கள், நாய்கள், நரிகள் சத்தஞ் செய்து இனிக்கின்றது என்று உண்ணவும், உக்கிரமான கோழிக் கொடி. துங்குக் குகுக்கு என்று ஒலிக்கவும், அலைந்து திரியும் திசையைப்

போற்றி செய்து நடன மிடவும், வலிமை மிகுந்த சூரிய சந்திரர்களின் ஒளிமங்கவும், சிறந்த குதிரை யானை, தேர், சேனை, கோட்டை மதில்களையுடைய அசுரர்களின் ஆற்றலையும் துடுக்கையும் அடக்கி ஒடுக்கிப் போர்புரிந்து, தேவர்களுக்கு வலிமையை அருளிய பெருமிதம் உடையவரே! திசைகளின் நிலையைக் குலைக்கவல்ல வலிமை மிகுந்த யானையின் வலிய தந்தங்களை அழிக்கவல்லனவும். புணர்ச்சிக்கு உரிய வலிமை பூண்டனவும், சகல வேதங்களும் புகழ்கின்ற பெரியவரும், சிலம்பு கலகல என்று ஒலிக்கும் அழகிய திருவடிகளையுடையவரும் ஆகிய சிவபெருமான் ஏந்திய வில்லாகிய அழகிய சிறந்த மலையாகிய மேருவைத் தாக்க வல்லனவும், நறுமணமுள்ள களபச் சாந்து பூசப்பட்ட எழிலில் முழுகுவனவும், தாமரையின் மொட்டு அஞ்சும்படி பெருத்து எழுவனவும், வஞ்சனைக் கருத்தையுடைய மன்மதனுடைய மகுடத்தை அடக்க வல்லனவும், கொடிய கொலைத் தொழிலுக்கு இடங்கொடுப்பனவும், கொடி போன்ற மேலாடை அணிவனவும், இன்பந் தரும் ஒளி பொருந்திய தங்கக் குடத்துடன் நன்ருகப் போர் புரிய வல்லனவும், வெற்றிச் சின்னமாக புளகாங்கித சுகத்தாலும், மென்மையாலும் வளர்கின்ற இளைஞர்களின் அறிவுக்குத் துன்பந் தருவனவும், கட்டப்பட்ட இரவிக்கையால் நெருக்குண்பனவும், கயல்மீன் மகரமீன் இவைகளின் கூட்டம் மிகுந்து சிறந்துள்ள நதியில் விளைகின்ற சங்கு, இப்பி, முத்து இவைகளை அணிவனவும், மேலெழுந்து பாரங் கொண்டு விளங்குவனவும் ஆகிய தனங்களையுடைய மாதர்களின், மகிழம்பூ குவளை மலரின் இதழ் இவைகளின் மணமும் கஸ்தூரியுங் கலந்து, கருநிறத்தால் மேகத்தையும் வென்று, வாசனை எண்ணெய் பூசப்பட்ட கூந்தல் அசையவும், இனிமையான அமுதம் போன்றதும் வசப்படுத்துவதுமாகிய மொழி மயில், குயில் என்கின்ற பறவைகளின் குரல்களைக் காட்டவும், வம்பு செய்கின்ற கலவிப் போர் செய்யவும், இயமனுடைய வேல் போல் போர் புரியுங் கண்கள் இரண்டும் மிகவுஞ் சிவக்கவும், மகிழ்ந்து நன்றி பாராட்டுவதான கலவிப் போரில் நகக் குறிகள் வகை வகையாக உடலில் பொருந்த வைத்தும், வளைகள் கழன்று விழவும், இடை நெகிழவும், அதரபானஞ் செய்தும், உள்ளம் அதிசயம் அடையவும், ஆசையுடன் அணைக்கும் அவதி நிறைந்த புணர்ச்சி வலையில் என்னுடைய கலைஞானம் அழிவு படுதல் நீங்கி, என் பிறவித்துயர் அகலும் வழியைத் தேவரீர்

திருவுளம்பற்றி, அடியேன்மீது அன்பு வைத்து, வயலூர் முருக வேளே! போருக்கு உற்ற பன்னிரு கரத்தையுடையவரே! எண்குணங்களையுடையவரே! குன்றக்குடிக்குத் தலைவரே! உமது பதமலரைத் தந்தருளாதோ!

## விரிவுரை

கருப நிலைகுலைய :—

கருபம்-திசை.

"கருபமேய எண்களிறு" —மாயூர புராணம்.

இத்திருப்புகழ் ஒருபாதி மாதரின் அவயவ நலத்தை விதந்து உரைக்கின்றது.

கலைபடுதல் உந்தி :—

"உந்தாத அன்பொடு உருத்திரம் சொல்லி"
—திருத்தொண்டர் திருஅந்தாதி.

பிறப்பற நினைந்து :—

"முருகா! அடியேனுடைய பிறவியறுமாறு தேவரீர் திருவுள்ளத்தில் நினைந்தருளவேண்டும்."

அட்ட சிட்ட குண :—

இறைவனுடைய எண் குணங்கள்: தன் வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பில் இன்பமுடைமை. இத் திருப்புகழின் பிற்பகுதி போர்க்களத்தின் வர்ணனைகளையும் வாசிக்கும் வாத்திய வகைகளையும் விரிவாகக் கூறுகின்றது.

## கருத்துரை

குன்றக்குடி மேவுங்குமரா! உமது திருவடியைத் தந்தருள்வீர்.

## 136

கடினதட கும்ப நேரென
    வளருமிரு கொங்கை மேல்விழு
    கலவிதரு கின்ற மாதரொ டுறவாடிக்
கனவளக பந்தி யாகிய
    நிழல்தனிலி ருந்து தேனுமிழ்
    கனியிதழை மென்று தாடனை செயலாலே

துடியிடைநு டங்க வாள்விழி
குழைபொரநி ரம்ப மூடிய
துகில்நெகிழ வண்டு கோகில மயில்காடை
தொனியெழவி ழைந்து கூடிய
கொடுநகமி சைந்து தோள்மிசை
துயிலவச இன்ப மேவுத லொழிவேனோ

இடிமுரச றைந்து பூசல்செய்
அசுரர்கள்மு றிந்து தூளெழ
எழுகடல்ப யந்து கோவென அதிகோப
எமபடரு மென்செய் வோமென
நடுநடுந டுங்க வேல்விடு
இரணமுக சண்ட மாருத மயிலோனே

வடிவுடைய அம்பி காபதி
கணபதிசி றந்து வாழ்தட
வயலிநகர் குன்ற மாநக ருறைவோனே
வகைவகைபு கழ்ந்து வாசவன்
அரிபிரமர் சந்த்ர சூரியர்
வழிபடுதல் கண்டு வாழ்வருள் பெருமாளே.

## பதவுரை

இடி முரசு அறைந்து - இடிபோல் முழங்கும் பேரிகைகளை ஒலித்து, பூசல் செய் - போர்செய்யும், அசுரர்கள் முறிந்து தூள் எழ - அசுரர்கள் மாண்டு துகளாகுமாறும், எழுகடல் பயந்து கோ என - ஏழு சமுத்திரங்களும் அஞ்சி "கோ" என்று ஓலமிடவும், அதி கோப - மிகுந்த கோபமுள்ள எமபடரும் என் செய்வோம் என - யமதூதர்களும் என் செய்வோம் என்று, நடுநடு நடுங்க - நடுக்கங் கொள்ளவும், வேல் விடு - வேலாயுதத்தை விடுத்தருளிய, இரணமுக - போர்க் களத்தில், சண்ட மாருத - பெருங் காற்றைப் போல் பறக்கும், மயிலோனே - மயில்வாகனரே! வடிவு உடைய அம்பிகா பதி - அழகு நிறைந்த பார்வதி நாதரும், கணபதி சிறந்து வாழ் - பொய்யாக் கணபதியும் சிறப்புடன் வாழ்கின்ற, தட வயலி நகர் - சக்தி தீர்த்தத்துடன் கூடிய வயலூரிலும், குன்றமாநகர் - குன்றக்குடியிலும், உறைவோனே - வாழ்பவரே! வகை வகை புகழ்ந்து - விதம் விதமாக உம்மைத் துதிசெய்து, வாசவன் - இந்திரனும், அரி - திருமாலும், பிரமர் - பிரமதேவனும், சந்த்ர

சூரியர் - சந்திரனும், சூரியனும் வழிபடுதல் கண்டு - வழிபடுவதைக் கண்டு, வாழ்வு அருள் - அவர்கட்கு நல் வாழ்வு தந்தருளிய, பெருமாளே-பெருமையிற் சிறந்தவரே! கடின தட - வலிமையும் விசாலமும் உள்ள, கும்பம் நேர் என-குடத்துக்கு நிகராக, வளரும்-வளர்கின்ற, இரு கொங்கை மேல் விழு - இரு தனங்களின் மேலே விழுகின்ற, கலவி தருகின்ற - கலவி இன்பத்தைத் தருகின்ற, மாதரொடு உறவு ஆடி - பொது மாதர்களின் நட்பு கொண்டு, கன அளக பந்தி ஆகிய - பெரிய கூந்தல் கட்டாகிய, நிழலில் இருந்து - நிழலில் இருந்து, தேன் உமிழ் கனி இதழை மென்று - தேன்துளிக்கின்ற கொவ்வைக் கனி போன்ற அதரத்தை மென்று, தாடனை செயலாலே - தட்டுதல் செய்து, துடி இடை நுடங்க - உடுக்கை போன்ற இடை துவளவும், வாள் விழி குழை பொர - ஒளி பெற்ற கண்கள் குழைகள் வரை சென்று போரிடவும், நிரம்ப மூடிய துகில் நெகிழ - நிரம்பவும் மறைத்திருக்கின்ற ஆடை தளர்ந்து விழவும், வண்டு கோகிலம் மயில் காடை தொனி எழ - வண்டு குயில் மயில் காடை என்ற பறவைகளின் ஒலி குரலில் உண்டாகவும். விழைந்து கூரிய கொடு நகம் இசைந்து - விரும்பி கூர்மையான நகக் குறிகள் வைத்தும், தோள் மிசை துயில் - அம் மகளிரின் தோள் மீது தூங்குகின்ற, அவச இன்பம் மேவுதல் - மயக்க இன்பத்தை விரும்புவதை, ஒழிவேனோ - ஒழிக்க மாட்டேனோ.

## பொழிப்புரை

இடிபோல் பேரிகைகளைக் கொட்டிப் போர்புரியும் அசுரர்கள் மடிந்து பொடியாகவும், ஏழுகடல்களும் அஞ்சி "கோ" என்று கதறவும், மிகுந்த கோபமுள்ள இயம தூதர்களும் என் செய்வோம் என்று நடுக்கங் கொள்ளவும் வேலை விடுத்தருளியவரே! போர்க்களத்தில் பெருங்காற்றைப் போல் பறக்கும் மயிலை வாகனமாக உடையவரே! அழகு நிறைந்த அக்கினீச்சுரரும் பொய்யாக் கணபதியும் சிறப்புடன் எழுந்தருளியுள்ள சக்தி தீர்த்தமுடைய வயலூரிலும், குன்றக்குடியிலும் வாழ்கின்றவரே! இந்திரன் திருமால் பிரமன் சந்திரன் சூரியன் ஆகிய இவர்கள் விதம் விதமாகப் புகழ்ந்து வழிபடுவதைக் கண்டு அவர்கட்கு நல்வாழ்வு தந்தருளும் பெருமிதமுடையவரே! வலிமையும் விசாலமும் பொருந்திய குடத்துக்குச் சமானமாக வளர்கின்ற தனங்களின் மேல் விழுகின்ற கலவியின்பத்தைத் தருகின்ற போது மாதர்களுடன் நட்பு கொண்டும், பெரிய கூந்தல் காட்டின் நிழலில் இருந்து, தேன் துளிக்கின்ற கனிபோன்ற வாயிதழைப் பருகி, தட்டுதல் செய்தும் உடுக்கை போன்ற இடை துவளவும், ஒளி பெற்ற கண்கள் காதுவரை

நீண்டு போரிடவும், நன்கு மூடிய ஆடை அகலவும் வண்டு குயில் மயில் காடை என்ற பறவைகளின் ஒலியை எழுப்பவும், கூரிய நகக் குறியமைத்தும் அம்மாதரின் தோள் மீது தூங்குகின்ற மயக்க இன்பத்தை விரும்புவதை ஒழிக்க மாட்டேனோ?

## விரிவுரை

இத் திருப்புகழில் முதற் பகுதி மாதர் மீதுள்ள மையல் அயலாக இறைவனை அடிகளார் வேண்டுகின்றார்.

எமபடரும் என்செய்வோமென :—

முருகப் பெருமான் போரில் வேல் ஏவியபோது உண்டாகிய அதிர்ச்சியினால் உலகமெல்லாம் அஞ்சின. அஞ்சுவது என்பதே அறியாத இயம படர்கள் இனி நாம் என்செய்வோம் என்று அஞ்சி நடுநடுங்கினார்கள்.

சண்டமாருத மயிலோனே :—

"மயில்வாகனம் பறக்கும் போது, அதன் பீலியின் காற்றினால் மகமேருகிரி அசைந்தது" என்கின்றார்.

"அருளிற் சீர் பொயாத கணபதி
திருவக்கீசன் வாழும் வயலியின்
அழகுக் கோயில் மீதில் மருவிய பெருமாளே"
—(கமலத்தேகு) திருப்புகழ்.

வடிவுடைய அம்பிகாபதி கணபதி சிறந்து வாழ்தட வயலி :—

வயலி-வயலூர். வயலூரில் முருகப் பெருமான் அருணகிரிநாதருக்கு அருள்புரிந்து, திருப்புகழில் வயலூரையும் வைத்துப் பாடு என்று அருளிச் செய்தார்.

ஒரு தலத்தை வைத்துப்பாடு என்று இறைவன் அருளினான் என்பது வேறு எங்கேயும் எந்த வரலாற்றிலும் இல்லாத ஒன்று.

மிகப் பெருந் தெய்வீகமுடைய தலம் வயலூர். அதனால் அருணகிரிநாதர் சென்ற சென்ற இடந்தொறும், இந்த வயலூரை மறவாது ஆங்காங்கே நினைந்து பாடுவாராயினர். வயலூரில் சிவமூர்த்தி-அக்கினீச்சுரர்; கணபதி-பொய்யாக் கணபதி.

"விசை கொண்ட வாகனப் பீலியின் கொத்து
அசைபடு கால்பட் டசைந்தது மேரு"
—கந்தரலங்காரம். (11)

**வகைவகை புகழ்ந்து வாசவன் அரிபிரமர் சந்த்ரசூரியர் வழிபடுதல் கண்டு வாழ்வருள் :—**

மூவர்க்குந் தேவர்க்குந் தனிப் பெருந் தலைவர் முருகப் பெருமானே யாகும். அப்பெருமானை வானோரும் ஏனோரும் போற்றி வழிபட்டு வாழ்வு பெறுகின்றார்கள்.

கருத்துரை

குன்றக்குடி வாழும் குமரேசா! மாதர் மயல் அயலாக அருள்செய்வீர்.

## 137

நேசா சாரா டம்பர மட்டைகள்
பேசா தேயே சுங்கள மட்டைகள்
நீசா ளோடே யும்பழ கிக்கவர் பொருளாலே
நீயே நானே யென்றொரு சத்தியம்
வாய்கூ சாதோ துங்க படத்திகள்
நேரா லேதா னின்று பிலுக்கிகள் எவர்மேலும்
ஆசா பாசா தொந்தரை யிட்டவர்
மேல்வீழ் வார்பால் சண்டிகள் கட்டழ
காயே மீதோ லெங்கு மினுக்கிகள் வெகுமோகம்
ஆகா தாவே சந்தரு திப்பொழு
தோகோ வாவா வென்று பகட்டிக
ளாகா மோகா வம்பிகள் கிட்டிலு முறவாமோ
பேசா தேபோய் நின்றுறி யிற்றயிர்
வாயா வாவா வென்று குடித்தருள்
பேரா லேநீள் கஞ்சன் விடுத்தெதிர் வருதூது
பேழ்வாய் வேதா ளம்பக டைப்பகு
வாய்நீள் மானு ளுஞ்சர ளத்தொடு
பேயா னுள்போர் வென்றெதி ரிட்டவன் மருகோனே
மாகூ டாடா டும்பகை யைப்பகை
சூரா ளோடே வன்செரு வைச்செறு
மாசூ ராபா ரெங்கு மருட்பொலி முருகோனே
வானா டேழ்நாடும் புகழ் பெற்றிடு
தேனா றேசூழ் துங்க மலைப்பதி
மாயூ ராவாழ் குன்றை தழைத்தருள் பெருமானே.

## பதவுரை

பேசாதே போய் நின்று - சத்தமுண்டாகாவண்ணம் மௌனமாகப் போய் ஆய்ச்சியர்களின் வீடுகளில் நின்று, உறியில் தயிர் - உறியில் வைத்திருந்த தயிரை யெடுத்து, வாய் ஆ ஆ ஆ என்று குடித்து அருள் - வாயில் அள்ளி ஆ ஆ ஆ என்று அவசரமாகக் குடித்தருளியும், பேராலே நீள் - எங்கும் புய பலத்தால் புகழ்பெறற, கஞ்சன் விடுத்து எதிர்வரு தூது - கம்சன் கண்ணனைக் கொல்லுமாறு விடுக்க தூதுபோல் எதிர்வந்த, பேழ்வாய் - பெரிய வாயை யுடையவளும், வேதாளம் - பூதம் போன்ற பெரிய சரீரத்தையுடையவளும், பகடைப் பகுவாய் - இடம்பமாகப் பேசிக் கொண்டு வந்த அகன்றவாயை யுடையவளும், நீள் மாணுளும் - நீண்ட பெண்ணுருவத்தைக் கொண்டவளும், சரளத்தொடு - தடையின்றி வந்தவளுமாகிய, பேய் ஆளுள் - பூதகியின், போர் - போரை, வென்று எதிர் இட்டவன் - வெற்றி பெற்றவருமாகிய திருமாலினது, மருகோனே - மருகரே! மாசு ஊடாடும் - குற்றத்துடன் கலந்து பழகியவனும், பகையைப் பகை - பகைவரைப் பகைப்பவனுமாகிய, சூர் ஆளோடே-சூரபன்மனோடு, வன் செருவைச் செறு-பொருது வலிபெற்ற போரை யொழித்த, மா சூரா- பெரிய சூரரே! பார் எங்கும் - உலகமுழுதும், அருள்பொலி - திருவருள் புரிந்து பொலிகின்ற, முருகோனே - முருகக் கடவுளே, வான் நாடு- வானவர் உலகமும், ஏழ்நாடு - சத்த தீவுகளும், புகழ் பெற்றிடு - புகழ்ந்து பேசும் பெருமை பெற்றுள்ளதும், தேன் ஆறு சூழ் - தேனாறு சூழப்பெற்றதும், தூங்க மலை பதி - தூய மலைத்தலமானதும் ஆகிய, மாயூரா - மயூர கிரி என்னும் தலத்தினரே! வாழ் குன்றை தழைத்து அருள் - வளம் வாழ்கின்ற குன்றக்குடி என்னும் அத்தலத்தில் எழுந்தருளியுள்ள, பெருமாளே - பெருமையின் மிக்கவரே! நேச ஆசார ஆடம்பர மட்டைகள் - பிறர் கண்டு நேசிக்கும் பொருட்டு ஆசாரம்போல் நடிக்கும் ஆடம்பரமான பயனற்றவர்களும், பேசாதே ஏசும் - வாய்ப்பேச்சில்லாமலேயே கையாலும் கண்ணாலும் ஜாடை காட்டி வையும், களம் அட்டைகள் - விஷம்போலும் அட்டை போலும் பிடித்துக் கொள்ளுபவர்களும், நீச ஆளோடேயும் பழகி-நீசகுணமுடையோருடனும் பழகி, கவர் பொருளாலே - அவரிடமிருந்து பறிக்கும் பொருள்பற்றி, நீயே நானே என்று - "நீயே நான்; நானே நீ" என்று, ஒரு சத்தியம் - ஒரு சத்தியத்தை, வாய் கூசாது ஓதும் கபடத்திகள் - வாய் கூசாமல் சொல்லும் கபடமுள்ளவர்களும், நேராலேதான் நின்று பிலுக்கிகள் - நேரில் மட்டும் ஒய்யாரமாக நின்று பகட்டுபவர்களும், எவர்மேலும் எத்தகையோரிடத்தும், ஆசாபாசா தொந்தரை இட்டு-ஆசைபாசம் வைத்தவர்போல் நடித்து தொந்தரை செய்து, அவர் மேல் வீழ்வார்பால் சண்டிகள் - அவர்கள்மேல் மயங்கி வீழ்ந்து தழுவுமவர்களிடம் கொடுமை செய்பவர்களும், கட்டழகாயே தோல் எங்கு மினுக்கிகள் - நல்ல அழகுடன் மேல் தோலை மினுக்குபவர்களும், வெகு மோகம் - உன்மீது மிகவும் மோகங் கொண்டுளேன், ஆகாது ஆவேசந் தருது . சகிக்க முடியவில்லை ஆவேசம்

வருகிறது, இப்பொழுது ஓகோ வாவா என்று பகட்டிகள் - இத்ததியில் ஓகோ விரைவில் வந்து என்னைச் சேர் என்று பகட்டு செய்பவரும், ஆகா மோகா வம்பிகள் கிட்டிலும் - தகுதியற்ற மோகத்தை யுடைய வம்பு செய்பவர்களுமாகிய விலைமகளிருடைய, உறவு ஆமோ - சம்பந்தம் தக்க தாமோ? (ஆகாது).

## பொழிப்புரை

மௌனமாகப் போய் கோபிகைகள் வீட்டிலே நின்று உறியில் உள்ள தயிரை ஆஆ என்று வாய் நிறையவுண்டு அருளினவரும், புயவலியாற் புகழ்பெற்ற கம்சன் (கண்ணனை) கொல்லுமாறு விடுக்க வந்தவளும், இடம்பமாகப் பேசும் பெரிய அகன்ற வாயையுடையவளும், பெண்போன்று தடையின்றி வந்தவளுமான பூதகி என்ற பேயைக் கொன்றவருமாகிய நாராயண மூர்த்தியினுடைய திருமருகரே! குற்றத்தோடு பழகுபவனும் பகைவரைப் பகைப்பவனுமாகிய சூரபன்மனுடன் பொருது வலிய போரையொழித்த பெரிய சூரரே! உலகமெங்கணு நின்று அருள் புரிந்து விளங்குகின்ற முருகக்கடவுளே! வானுலகிலும் ஏழுதீவுகளிலும் புகழப்பெற்றதும் தேனூறு பாயுந் திருவுடையதும் தூய மலைத்தலமுமாகிய மயூரகிரியினரே! வாழ்வுக்கிடமான அக்குன்றக்குடி தழைக்குமாறு எழுந்தருளியுள்ள பெருமிதமுடையவரே! பிறர் நேசிக்குமாறு ஆசாரம் போல் நடிக்கும் ஆடம்பரத்தையுடைய பயனற்றவர்களும், வாய்திறவாமல் கையாலுங் கண்ணாலும் ஜாடைகாட்டி வையும் விஷத்தை யொத்து அட்டைபோல் ஒட்டிக் கொள்பவர்களும், நீசமனிதருடன் பழகிப் பொருளைக்கவரும் பொருட்டு, "நீயே நான்; நானே நீ" என்று வாய்கூசாமல் சத்தியஞ் செய்யும் கபட குணமுடையவர்களும், நேரில்மட்டும் நின்று பகட்டுபவர்களும், எத்தகையோரிடத்தும் ஆசாபாசம் வைத்துத் தொந்தரை செய்து, தங்கள்மேல் மயங்கி வீழ்ந்து தழுவுவோர்பால் கொடுமை செய்பவர்களும், சிறந்த அழகுடன் தோலை எங்கும் மினுக்குபவர்களும், (காதல் கொண்டவரைக் கண்டு) "ஆகா! உம்மேல் மிகுந்த மோகங் கொண்டிருக்கின்றேன். என்னால் பொறுக்க முடியவில்லை; இப்பொழுது ஓகோ விரைவில் வந்து சேரும்" என்று பகட்டு செய்பவர்களுமாகிய தகுதியற்ற மோகத்தைச் செய்யும் விலைமாதர்களுடைய உறவு தகுதியாகுமோ? (ஆகாது).

## விரிவுரை

நேசாசாரா....... ...உறவாமோ :—

விலைமகளிரது மாயச் செயல்களை எடுத்து உரைக்குந் திறத்தை இதில் நன்கு காண்க. இதனைக் கண்டு உலகம் திருந்தி உய்க.

பேயாளுள் :—

கண்ணபிரான் ஆயர்பாடியில் நந்தகோபன் வீட்டில் யசோதையிடம் வளர்ந்துவர, மாயையால் அவர் தன்னைக் கொல்ல இருக்குந் தன்மையை உணர்ந்த கம்சன், பூதகி என்ற கொடிய ஒரு அரக்கியைக் கண்ணனைக் கொல்லுமாறு விடுத்தான். அவள் அரமடந்தை உருவெடுத்து உலகிலுள்ள குழந்தைகளை யெல்லாம் நச்சுப் பாலூட்டிக் கொன்று கொண்டு, இறுதியில் ஆயர்பாடிக்கு வந்தாள். வந்தவள் நந்தகோபர் வீட்டில் நுழைந்து ஒரு புறம் விளையாடிக்கொண்டிருந்த கமலக்கண்ணனை யெடுத்து, "கண்ணப்பா! என் முலையை உண்ணப்பா!" என்று முலையூட்டினள். அவள் வஞ்சனையை யுணர்ந்த கண்ணன்,

அறிந்து நகை யாடிமுலை யங்கைகொடு பற்றி
மறங்குலவு வஞ்சமகள் மாமுலை மணிக்கண்
திறந்தொழுகு பாலினொடு செய்ய தளிரென்னப்
பிறங்குகனி வாய்முகில் பிழிந்துயிர் குடித்தான்.

பூதகி உயிர்துறந்து ஒரு பெரிய கரியமலைபோல் விழுந்தாள். பெருமான் முலையுண்ட புண்ணியத்தால் முத்தி பெற்று உய்ந்தனள்.

பார் எங்கும் அருட் பொலி முருகோனே :—

உலகமுழுவதும் திருவருள்புரிந்து விளங்குகின்ற தெய்வமணி திருவேலிறைவனேயாம். கலியுகவரதனுங் கந்தக் கடவுளைக் கருதினவர்க்கு கருதிய யாவுங் கைகூடும்.

குன்றை :—

இது குன்றக்குடி எனவும் மயூரகிரி எனவும் பெயர் பெறும். காரைக்குடிக்கு அருகில் உள்ளது. இங்கு சுவாமி ஆறுதிருமுகங்களோடு விளங்குகின்ற காட்சி இரும்புநெஞ்சையும் உருக்கும்.

## கருத்துரை

திருமால் மருகரே! அருணலமிக்க முருகவேளே! குன்றக்குடி யமர்ந்த குமரகுருபர! விலைமகளிர் வலைப்படா வண்ணம் ஆண்டருள்வீர்.

## 138

பிறர்புக ழின்சொற் பயிலுமி ளந்தைப்
பருவம தன்கைச் சிலையாலே
பிறவித ருஞ்சிக் கதுபெரு கும்பொய்ப்
பெருவழி சென்றக் குணமேவிச்
சிறுமைபொ ருந்திப் பெருமைமு டங்கிச்
செயலும ழிந்தற் பமதான
தெரிவையர் தங்கட் கயலைவி ரும்பிச்
சிலசில பங்கப் படலாமோ
கெறுவித வஞ்சக் கபடமொ டெண்டிக்
கிலுமெதிர் சண்டைக் கெழுசூரன்
கிளையுடன் மங்கத் தலைமுடி சிந்தக்
கிழிபட துன்றிப் பொருதோனே
குறுமுனி யின்பப் பொருள்பெற அன்றுற்
பனமனு வுஞ்சொற் குருநாதா
குலகிரி துங்கக் கிரியுயர் குன்றக்
குடிவளர் கந்தப் பெருமாளே.

### பதவுரை

கெறுவித - கர்வமும், வஞ்சம் - வஞ்சனையும், கபடமொடு - சூதும் கொண்டு, எண் திக்கிலும் - எட்டுத் திசைகளிலும், எதிர் சண்டைக்கு எழு - எதிர்த்து சண்டைக்கு என்று எழுந்த, சூரன் - சூரபன்மன், கிளை உடன் மங்க - சுற்றத்தாருடன் மங்கி அழியுமாறு, தலை முடி சிந்த - அவர்களின் தலை முடிகள் சிதறவும், கிழிபட - அவர்களின் உடல் கிழிபட்டு அழியும்படியும், துன்றிப் பொருதோனே - நெருங்கிப் போர்புரிந்தவனே! குறுமுனி - அகத்தியமுனிவர், இன்ப பொருள் பெற - இன்பத்தைத்தரும் உண்மைப் பொருளையறியும்படி, அன்று உற்பன மனுவும் சொல் - அந்நாள் திருவுளத்தில் உதித்த மந்திரத்தை உபதேசித்த, குருநாதா - குருநாதரே! குலகிரி சிறந்தகிரியாகவும், துங்ககிரி - பரிசுத்தமான கிரியாகவும், உயர் - சிறந்துள்ள, குன்றக்குடி வளர் கந்த - குன்றக்குடியில் வீற்றிருந்தருளும் கந்தக்கடவுளே! பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! பிறர் புகழ் - மற்றவர்கள் புகழும், இன் சொல் பயிலும் - இனிய சொற்களைப் பயிலுகின்ற இளந்தை பருவம் - இளம்பருவமுள்ள, மதன் கை சிலையாலே - மன்மதனுடைய கையில் உள்ள வில்லாலே, பிறவிதரும் பிறவியினால் உண்டாகும்,

சிக்கு அது பெருகும் - சிக்கல்கள் பெருகுகின்ற, பொய் பெருவழி சென்று-பொய்யான பெரிய வழியில் சென்று, அதுண மேவி - அப்பொய்க் குணத்தையே பொருந்தி, சிறுமை பொருந்தி - அதனால் சிறுமையடைந்து, பெருமை முடங்கி - பெருமை சுருங்கி, செயலும் அழிந்து - செயல்கள் அழிந்து, அற்பம் அது ஆன - அற்பகுணமுள்ள, தெரிவையர் தம் - மாதர்களின், கண் கயலை விரும்பி - கயல்மீன் போன்ற கண்களை விரும்பி, சில சில பங்கம் படலாமோ - அதனால் சிலசில அவமானங்களை அடியேன் அடையலாமோ?

## பொழிப்புரை

கர்வமும், வஞ்சனையும் சூதும் கொண்டு எட்டுத் திசைகளிலும் எதிர்த்துப் போருக்கு எழுந்த சூரபன்மன், சுற்றத்தாருடன் மங்கி யழியவும் அவர்கள் தலைமுடிகள் சிந்தவும், உடல் கிழியவும் நெருங்கிப் போர் புரிந்தவரே! அகத்திய முனிவர் இன்பந் தரும் உண்மைப் பொருளை அறியும்படி அன்று திருவுளத்தில் தோன்றிய மந்திரத்தை உபதேசித்த குருநாதரே! சிறந்ததும், தூயதும் ஆகிய குன்றக்குடி என்ற திருமலைமீது எழுந்தருளியுள்ள, கந்தப் பெருமானே! பெருமிதமுடையவரே! பிறருடைய புகழும் இனிய சொற்களைப் பயிலுகின்ற இளம்பருவமுள்ள மன்மதனுடைய கையிலுள்ள வில்லால், பிறவியினால் உண்டாகின்ற சிக்கல்கள் பெருகும் பொய் வழியிற் சென்று, அப்பொய்மையே பொருந்தி, சிறுமை பெருகி. பெருமை யருகி, செயல்கள் கெட்டு, அற்பமான மாதர்களின் கயல்மீன் போன்ற கண்களை விரும்பி சிலசில அவமானங்களை அடியேன் அடையலாமோ?

## விரிவுரை

பிறர் புகழ் :—

மன்மதனை சிவஞானியர் அன்றி மற்றவர்கள் புகழ்வார்கள். அதனால் பிறர் புகழ் என்று இங்கு அடிகளார் அழகாகக் குறிப்பிடுகின்றார்.

இளந்தைப்பருவ மதன் :—

மன்மதன் இளமையான பருவமுள்ளவன். சிறுபிள்ளையாதலால் சதா குறும்பு செய்வான்.

பிறவிதரும் சிக்கது பெருகும் :—

பிறப்பின் தன்மையால் பல சிக்கல்கள் ஏற்படும். அது பிறவியின் குணமாகும். மரம் செடி கொடிகளில் காய்க்கும் காய்கள் ஒன்று போல் காய்க்கின்றன. ஒரு காய் உறைக்கும்; ஒன்று

புளிக்கும்; ஒன்று இனிக்கும் என்றில்லாமல் எல்லாம் ஒன்று போல்தான் இருக்கின்றன. ஆனால் ஒரு தாய் ஒரு தந்தையிடம் பிறக்கும் பிள்ளைகள் ஒன்று போல் மற்றொன்று இருப்பதில்லை.

உதாரணமாக, தந்தை விச்சிரவசு; தாய் கேகசி. இந்த இருவருக்கும் பிறந்த இராவணன் குணம் வேறு; கும்பகர்ணன் குணம் வேறு; விபீஷணன் குணம் வேறு; சூர்ப்பணகையின் குணம் வேறு. இதற்கு என்ன காரணம்?

இராவணன் கரு உதித்த நேரம் சந்தியா காலம் - மாலை; கும்பகர்ணன் கரு உதித்த நேரம் நடு இரவு; விபீஷணன் கரு உதித்த நேரம் பிரம்ம முகூர்த்தம்; சூர்ப்பனகை கருவுதித்த நேரம் காலை. சந்தியா காலம். அந்தந்த கருப் பதிந்த நேரத்துக்குத் தக்கவாறு குணங்கள் மாறுபட்டன. அதனால் பிறப்பினால் பலப்பல விதமான குணங்கள் ஏற்படுகின்றன.

பொய்ப் பெருவழி சென்றக் குணமேவி :—

மெய்வழி விடுத்துப் பொய் வழியடுத்து பொய்மையான குணங்களை யடைந்து ஆன்மாக்கள் கெடுகின்றன.

சிறுமை பொருந்திப் பெருமை முடங்கி :—

சிறுமை-நற்குணங்கள் இன்றி சிறுமையை யடைந்து, அதனால் பெருமை குன்றி மனிதர் மாய்கின்றனர்.

குறுமுனி யின்பப் பொருள்பெற அன்றுற்
பன மநுவுஞ் சொற் குருநாதா :—

அகத்தியர் குறிய வடிவமுள்ள பெரியவர். வடிவத்தால் சிறியவர்; மாதவத்தால் பெரியவர். அவருடைய கை கவிழ்ந்தது; விந்தமலை பாதல வுலகம் புகுந்தது. கை இப்படி மேல் பக்கம் புரண்டது. ஏழுகடல்களும் வற்றிவிட்டன.

உற்பனம்-தோற்றம். முருகவேள் தமது திருவுளத்தில் தோன்றிய பிரணவ மந்திரத்தை அவருக்கு உபதேசித்து அருளினார்.

குலகிரி துங்கக் கிரியுயர் குன்றக்குடி :—

குன்றக்குடி காரைக்குடிக்கு அருகில் உள்ள சிறந்த திருத்தலம். இத் திருமலையின் பெருமையை அடிகளார் குலகிரி "என்றும், துங்கக்கிரி" என்றும் இங்கு வியந்துரைக்கின்றார்.

கருத்துரை

குன்றக்குடி வளரும் குகனே! மாதர் வயப்பட்டு மங்காத வண்ணம் அருள்செய்வீர்.

## 139

தவள மதிய மெறிக்குந் தணலாலே
சரச மதனன் விடுக்குங் கணையாலே
கவன மிகவு முரைக்குங் குயிலாலே
கருதி மிகவு மயக்கம் படவோநான்
பவள நிகரு மிதழ்ப்பைங் குறமானின்
பரிய வரையை நிகர்க்குந் தனமேவுந்
திவளு மணிகள் கிடக்குந் திருமார்பா
திகழு மயிலின் மலைக்கண் பெருமாளே.

### பதவுரை

பவளம் நிகரும் இதழ் - பவளம் போன்ற அதரத்தையுடைய, பை குற மானின் - பச்சை வண்ணமுடைய வள்ளி பிராட்டியின், பரிய வரையை நிகர்க்கும் - பருத்த மலைக்கு ஒப்பான, தனம் மேவும் - தனத்தின் மீதுள்ள, திவளும் மணிகள் கிடக்கும் - ஒளி வீசும் மணிமாலைகள் பொருந்தும், திரு மார்பா - அழகிய மார்பினரே! திகழும் மயிலின் மலை கண் - விளங்குகின்ற மாயூர கிரியில் வாழ்கின்ற, பெருமாளே - பெருமையின் மிகுந்தவரே! தவளம் மதியம் எறிக்கும் தணலாலே - வெண்ணிறமுள்ள சந்திரன் வீசும் நெருப்பினாலும், சரச மதனன் விடுக்கும் கணையாலே - சரசமாக விளையாடும் மன்மதன் செலுத்தும் கணையினாலும், கவனம் மிகவும் உரைக்கும் குயிலாலே - கலக்க மிகும்படி கூவுகின்ற குயிலினாலும், கருதி மிகவும் மயக்கம் நான் படவோ - அடியேன் உம்மை நினைந்து மிகவும் மயக்கத்தை யடையலாமோ?

### பொழிப்புரை

**பவளம் போன்ற சிவந்த இதழையுடைய, மரகத வண்ணம் படைத்த வள்ளி நாயகியாரின் பருத்த மலைபோன்ற தனங்களில் திகழும், ஒளிவீசும் மணிமாலைகள் பொருந்தும் திருமார்பினரே! விளங்குகின்ற மாயூரகிரியில் வாழும் பெருமிதமுடையவரே! வெண்ணிறமுள்ள சந்திரன் வீசும் நெருப்பினாலும், சரச விளையாடல் புரியும் மன்மதன் விடும் கணையினாலும், கலக்கமடையும்படி கூவுகின்ற குயிலாலும், உம்மை நினைந்து தலைவியாகிய நான் மயக்கப்படுவது முறையோ?**

### விரிவுரை

**இத்திருப்புகழ் அகப்பொருள் துறையில் அமைந்தது. ஆன்மாவாகிய தலைவி முருகனாகிய தலைவனை நினைந்து**

நினைந்து, அப்பரமனைத் தழுவப் பெறுமையால் வருந்துகின்ற வருத்தத்தைக் கூறுகின்றது.

தவள மதிய மெறிக்குந் தணலாலே:—

தவளம்—வெண்மை. காமுகர்க்குச் சந்திரன் வெண்ணெருப்பாகக் கொளுத்தி வேதனை தருவான்.

சரசமதனன் விடுக்குங் கணையாலே :—

சரச லீலையைச் செய்யும் மன்மதன் சமயம் பார்த்துப் பூங்கணை பொழிந்து புண்படுத்துவான்.

கவன மிகவு முரைக்குங் குயிலாலே :—

கவனம்-கலக்கம். பிரிவுத்துயரைக் குயில் கூவி மிகுதிப் படுத்தும்.

"மெள்ளவரு சோலைக் குயிலாலே
மெய்யுருகு மானைத் தழுவாயே"—(துள்ளுமத) திருப்புகழ்.

கருதி மிகவு மயக்கம் படலாமோ :—

"முருகா! உன்னையே கருதி பெண்ணாகிய நான் மயக்கப் பட்டுத் துன்புறுவது முறையாகுமா? விரைவில் என்னைத் தழுவி என் வேதனையை நீக்கியருள்".

பவளநிகரு மிதழ்ப் பைங்குறமாது :—

வள்ளியம்மை பச்சை நிறம். இதழ் பவள நிறம். நிறம் மாறுபட்டால் அழகு மிகுதியடையும். "பச்சைமா மலைபோல் மேனி பவளவாய்" என்று ஆழ்வாருங் கூறுகின்றார்.

மயிலின்மலை :—

குன்றக்குடிக்கு மாயூரகிரி என்ற மற்றொரு பேருமுண்டு.

## விரிவுரை

குன்றக்குடிக் குமரா! தலைவியாகிய என்னைத் தழுவியாட்கொள்வீர்.

## 140

நாமேவு குயிலாலு மாமார னயிலாலு
நாடோறு மதிகாயும் வெயிலாலும்
நார்மாதர் வசையாலும் வேயூது மிசையாலு
நாடாசை தருமோக வலையூடே

ஏமாறி முழுநாளு மாலாகி விருதாவி
லேவாரும் விழிமாதர் துயரூடே
ஏகாம லழியாத மேலான பதமீதி
லேகீயு னுடன்மேவ அருள்தாராய்
தாமோக முடனூறு பால்தேடி யுரலூடு
தானேறி விளையாடு மொருபோதில்
தாயாக வருசோதை காணாது களவாடு
தாமோத ரன்முராரி மருகோனே
மாமாது வனமாது கார்மேவு சிலைமாது
மாலாகி விளையாடு புயவீரா
வானாடு புகழ்நாடு தேனாறு புடைசூழு
மாயூர கிரிமேவு பெருமாளே.

## பதவுரை

தாம் மோகம் உடன் - தாம் ஆசையோடு, ஊறுபால் தேடி - கறந்த பாலைத் தேடி, உரலூடுதான் ஏறி விளையாடும் ஒரு போதில் - உரலுடன் ஏறி விளையாடிய ஒரு பொழுதில், தாய் ஆகவரு சோதை - தாயாக வந்த யசோதை, காணாது - காணவண்ணம், களவு ஆடு - பாலைத் திருடிய, தாமோதரன் - தாமோதரன், முராரி - முராரி எனப்படும் திருமாலின், மருகோனே-திருமருகரே! மா மாது - இலக்குமியின் மகளாகிய, வனமாது - வனத்தில் வளர்ந்த வள்ளியம்மை, கார்மேவு சிலைமாது - மேகந்தவழும் வள்ளி மலையில் வாழ்ந்த மாது, மால்ஆகி - அன்பு பூண்டு, விளையாடு புய வீரா - விளையாடுகின்ற புயங்களையுடைய வீரரே! வான் நாடு புகழ் நாடு - விண்ணுலகத்தோரும் புகழ்கின்ற நாட்டில், தேன் ஆறு புடைசூழும் - தேனாறு அருகில் சூழ்ந்து ஓடுகின்ற, மாயூரகிரி மேவும் - மாயூரகிரியில் எழுந்தருளியுள்ள, பெருமாளே - பெருமையின் மிகுந்தவரே! நா மேவு குயிலாலும் - அச்சத்தைத் தரும் குயிலாலும், மா மாரன் அயிலாலும் - சிறந்த மன்மதனுடைய கணையினாலும், நாள்தோறும் மதிகாயும் வெயிலாலும் - தினந்தோறும் சந்திரன் காய்கின்ற வெயிலினாலும், நார் மாதர் வசையாலும், வேய் ஊதும் இசையாலும் - புல்லாங்குழல் இசையினாலும், நாடு ஆசை தரும் மோக வலையூடே - விரும்புகின்ற ஆசையால் வரும் மோக வலைக்குள்ளே அடியேன் சிக்கி, ஏமாறி - ஏமாற்றம் அடைந்து, முழு நாளும் மால் ஆகி - நாள் முழுவதும் மயக்கங் கொண்டு, விருதாவிலே - வீணாக, வாரும் விழி மாதர் துயரூடே - நீண்ட கண்களையுடைய மாதர்களால் வரும் துன்பத்துக்குள்ளே, ஏகாமல் - செல்லாமல், அழியாத மேல் ஆன பதம்

மீதில் ஏகி - அழிவில்லாததும் மேலானதும் ஆகிய பதத்தை அடைந்து, உன் உடன் மேவ அருள் தாராய் - தேவரீருடன் மருவியிருக்கத் திரு வருளைத் தருவீராக.

## பொழிப்புரை

கறந்த பாலைத் தாம் மோகமுடன் தேடிச்சென்று, உரலின் மீது ஏறி விளையாடிய போதில், தாயாக வந்த யசோதை காணாதபடி பாலைக் களவு செய்த தாமோதரனும் முராரியும் ஆகிய திருமாலின் திருமருகரே! இலட்சுமியின் புதல்வியும், காட்டில் வளர்ந்தவரும், மேகந் தவழும் வள்ளிமலையில் வாழ்ந்தவருமாகிய வள்ளி பிராட்டியார் அன்பு கொண்டு விளை யாடுகின்ற புயங்களையுடைய வீரரே! தேவ வுலகம் புகழ்கின்ற நாட்டில் தேனாறு ஓடுகின்ற மாயூரகிரியில் வாழ்கின்ற பெரு மிதம் உடையவரே! அச்சத்தைத்தருங்குயிலினாலும், சிறந்த மன் மதனுடைய கணையினாலும், நாள் தோறும் சந்திரன் காயும் வெயிலினாலும், அன்புள்ள பெண்கள் கூறும் வசை மொழி யாலும், புல்லாங்குழலின் இசையாலும், விரும்புகின்ற ஆசை யால் விளைந்த மோகவலையிற் சிக்கிய அடியேன், ஏமாற்றம் அடைந்து, மயக்கமுற்று வீணாக நீண்ட கண்களையுடைய மாதர் களால் உண்டாகுந் துன்பத்துக்குள் சென்று துன்பத்தை யடையாத வண்ணம், அழிவில்லாததும் மேலானதுமான நிலையை அடைந்து உம்முடன் இருக்கும் பதத்தை அருள்புரி வீராக.

## விரிவுரை

நாமேவு குயிலாலும் :—

நாம்-அச்சம். காமுகர்க்கு குயிலின் ஓசை ஆசையை அதிகரிக்கச் செய்யும்.

" விருது குயிலது கூவ " —(இரவியென) திருப்புகழ்

நாடோறு மதிகாயும் வெயிலாலும் :—

காமுகர்க்குச் சந்திரனுடைய குளிர்ந்த கிரணம் வெப்பத் தைக் கொடுக்கும்.

" இரவியென வடவையென ஆலால விடமதென
உருவுகொடு ககனமிசை மீதேகி மதியும் வர " —திருப்புகழ்

நார்மாதர் வசையாலும் :—

நார்—அன்புள்ள. அன்புள்ள பெண்கள் வசைமொழி பகர்வார்கள்.

" தெருவினில் நடவாமடவார் திரண்டொறுக்கும்
வசையாலே " —திருப்புகழ்

மாதர் துயரூடே ஏகாமல் :—

பெண்களினால் வரும் துன்பத்துக்குள் செல்லாமல், திருவருள் நெறியில் செல்லவேண்டும்.

உனுடன் மேவ அருள்தாராய் :—

முருகனுடன் இருக்கும் பதம்.

தாயாகவருசோதை காணாது களவாடு தாமோதரன் :—

தாம-உதரன்: தாமம்-கயிறு. உதரன்—வயிற்றை யுடையவன்.

கண்ணபிரான் தாயாக வந்த யசோதைக்குத் தெரியாமல் பால் தயிர் வெண்ணெயைத் திருடியுண்ட போது, அவள் கயிற்றினால் வயிற்றைக் கட்டினாள். அதனால் தாமோதரன் என்று பேர் பெற்றார். விளக்கம் திருப்புகழ் விரிவுரை 5-ம் தொகுதி. 110-ம் பக்கத்தில் காணலாம்.

" தயிர்நெய் விழுங் கிட்டு ஆய்ச்சியர்
தாம்பினால் ஆர்க்கத் தழும்பிருந்த தாமோதரா "
—பெரிய திருமொழி.

முராரி :—

முரன் என்ற அரக்கனைக் கொன்றதனால் முராரி எனப் பேர் பெற்றனர்.

சிலைமாது மாலாகி விளையாடு புய வீரா :—

வள்ளிநாயகி முருகவேள் மீது மிகவும் அன்புவைத்து புயமாகிய மலையில் விளையாடினாள்.

"குறமாது தனக்கு விநோத
கவினாரு புயத்தி லுலாவு விளையாடிக்
களிகூரும்..............." —(நிலையாத) திருப்புகழ்.

தேனாறு புடைசூழு மாயூரகிரி :—

கானாறும் தேனாறும் ஓடும் வளமையுள்ள மலை குன்றக்குடி.

## கருத்துரை

குன்றக்குடி மேவு குமரா! உன் உடனாகும் பதத்தைத் தந்தருள்வீர்.

## திருச்செங்கோடு

இது கொடிமாடச் செங்குன்றூர் என்று தேவாரத்தில் வழங்கும். திருஞானசம்பந்தர் விஷ சுரந்தீர "அவ்வினைக் கிவ்வினை" என்று தேவாரம் பாடிய தலம்.

சங்ககிரி துர்க்கம் என்ற புகை வண்டி நிலயத்திலிருந்து 6 கல். கோயில் மலையின்மீது விளங்குகின்றது. இங்கே சுவாமி அர்த்தநாரீச்சுரர். இம்மூர்த்தியின் திருவுருவமும், முருக வேளின் திருவுருவமும், நவபாஷாணத்தால் ஆகியது. வெண்மையாக விளங்கும். முருகன் திருவுருவம் மிகவும் அழகியது.

"செங்கோடனைச் சென்று கண்டு தொழ நாலாயிரங் கண் படைத்திலனேயந்த நான்முகனே" என்று அருண கிரியார் பாடுகின்றார். இத்தலத்து முருகப் பெருமான்மீது அருணகிரியாருக்கு நிரம்பவும் காதல். பலப்பல இடங்களில் இத்தலத்தைப் பாராட்டுகின்றார். நாகவடிவாக இருப்பதனால் இதற்கு நாகாசலம் என்றும் பேருண்டு.

### 141

அன்பாக வந்து உன்றாள் பணிந்து
ஐம்பூத மொன்ற நினையாமல்
அன்பால் மிகுந்து நஞ்சாரு கண்க
ளம்போரு கங்கள் முலைதானும்
கொந்தே மிகுந்து வண்டாடி நின்று
கொண்டாடு கின்ற குழலாரைக்
கொண்டே நினைந்து மன்பேது மண்டி
குன்று மலைந்து அலைவேனோ
மன்றாடி தந்த மைந்தா மிகுந்த
வம்பார் கடம்பை யணிவோனே
வந்தே பணிந்து நின்றார் பவங்கள்
வம்பே தொலைந்த வடிவேலா
சென்றே யிடங்கள் கந்தா எனும்பொ
செஞ்சேவல் கொண்டு வரவேணும்
செஞ்சாலி கஞ்ச மொன்றாய் வளர்ந்த
செங்கோ டமர்ந்த பெருமாளே.

## பதவுரை

மன்று ஆடி தந்த மைந்தா-சபையில் ஆடிய நடராஜப் பெருமானுடைய குமாரரே! மிகுந்த வம்பு ஆர் கடம்பை அணிவோனே - மிக்க வாசனை நிறைந்த கடப்ப மலரை யணிபவரே! வந்தே பணிந்து நின்றோர் பவங்கள் - சந்நிதிக்கு வந்து பணிந்து நின்ற அடியார்களின் பிறப்புக்களின், வம்பே தொலைந்த வடிவேலா - துயரத்தைக் களைந்த கூரிய வேலாயுதரே! சென்றே இடங்கள் - அடியேன் சென்ற இடங்களில், கந்தா எனும் பொ - கந்தக் கடவுளே என்று அழைக்கும் பொழுது, செம் சேவல் கொண்டு வரவேணும் - செவ்விய சேவலை ஏந்தி என் முன் வரவேண்டும், செம் சாலி - செந் நெற் பயிரும், கஞ்சம் - தாமரையும், ஒன்றாய் வளர்ந்த - ஒன்றுபட்டு வளர்ந் துள்ள, செங்கோடு அமர்ந்த - திருச்செங்கோட்டில் வீற்றிருக்கும், பெரு மாளே - பெருமையில் மிகுந்தவரே! அன்பாக வந்து - அன்பாக வந்து, உன்தாள் பணிந்து - உமது திருவடியைப் பணிந்து, ஐம்பூதம் ஒன்ற நினை யாமல் - ஐம்பெரும் பூதங்களும் ஒன்றுபட்டுத் தேவரீரை நினையாமல், அன் பால் மிகுந்து - அன்பு மிகுந்து, நஞ்சு ஆரும் கண்கள் - விடம் நிறைந்த கண்கள், அம்போருகங்கள் முலைதானும் - தாமரை மொட்டு போன்ற தனங்கள், கொந்தே மிகுந்து - பூங் கொத்துக்கள் நிரம்பி, வண்டு ஆடி நின்று கொண்டாடுகின்ற குழலாரை - வண்டுகள் விளையாடி மகிழ்கின்ற கூந்தல் இவைகளையுடைய பொது மாதரை, கொண்டே நினைந்து - மனதில் கொண்டு நினைந்து, மன் பேது மண்டி - நிலை பெற்ற அறியாமை நிறைந்து, குன்றா மலைந்து அலைவேனோ - மனம் குன்றி ஒரு வழிப் படாமல் அலைச்சல் உறுவேனோ?

## பொழிப்புரை

**சபையில் நடனம்புரிகின்ற நடராஜப் பெருமானுடைய திருக்குமாரரே! மிகுந்த வாசனை நிறைந்த கடப்ப மலர்மாலை புனைந்தவரே! உமது சந்நிதிக்கு வந்து பணிந்த அடியார்களின் பிறவித் துயரைக் களையும் வடிவேலவரே! அடியேன் சென்ற இடங்களில் "கந்தா!" என்று அழைப்பேனாயின் அங்கு நீர் சேவல் கொடியை ஏந்திக் கொண்டு என்முன் வந்தருள வேண்டும். செந்நெற்பயிரும் தாமரையும் ஒன்றுபட்டு வளர் கின்ற திருச்செங்கோட்டில் அமர்ந்த பெருமிதமுடையவரே! அன்புடன் வந்து உமது பாத மலரைப் பணிந்து ஐம்பூதங் களும் ஒருமைப்பட உம்மை நினையாமல், அன்பு மிகுந்த நஞ்சு நிறைந்த கண்களும் தாமரை மொட்டுக்கள் போன்ற தனங் களும், பூங்கொத்துக்களும் நிரம்பி வண்டுகள் விளையாடுகின்ற கூந்தலும் படைத்த பொது மாதரை மனதில் கொண்டு நினைந்து நிலைபெற்ற அறியாமை நிறைந்து மனம்குன்றி ஒரு வழிப்படாது அலைச்சல் உறுவேனோ?**

## விரிவுரை

அன்பாக வந்து உன்றாள் பணிந்து :—

முருகனிடம் சென்று அன்போடு என்புருக வழிபட்டு வணங்குதல் வேண்டும்.

ஐம்பூதமொன்ற நினையாமல் :—

இறைவனை மண், நீர், கனல், காற்று, விண் என்ற ஐம் பூதங்களும் ஒரு வழிப்பட நினைக்க வேண்டும். ஐம்பூதங்களும் ஒன்றுபட்டால் அதன் சூட்சும்மான சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐம்புலன்களும் ஒன்றுபடும்.

மன் பேது மண்டி :—

மன்-நிலைபேறு. பேது-அறியாமை. -நிலைபெற்ற அறி யாமையுடன் கூடியது ஆன்மா.

குன்றுமலைந்து அலைவேனோ :—

குன்று-குன்றுதலையடைந்து. மலைதல்-ஒருவழிப்படாது திற்றல்.

மன்றாடி :—

சிவபெருமான் மன்றுதோறாடுபவர். முருகப்பெருமான் குன்றுதோறாடுபவர்.

வந்தேபணிந்து நின்றார் பவங்கள் வம்பே தொலைந்த வடிவேலா :—

முருகப் பெருமான் திருமுன்வந்து பணிந்தவர்களின் பிற வித்துயரைத் தொலைத்து ஆட்கொள்ளுவார்.

> "அறிவாலறிந்து னிருதாளி றைஞ்சும்
> அடியாரிடைஞ்சல் களைவோனே"
>
> —(விறல்மார) திருப்புகழ்.

தொலைத்த என்ற சொல் தொலைந்த என்று சந்தத்துக் காக நின்றது.

சென்றே யிடங்கள் கந்தா எனும்பொ செஞ்சேவல் கொண்டு வரவேணும் :—

இந்த அடி மிக அருமையானது; சுவையானது. அன்பர் கள் மனதில் மறவாமல் பதித்துக் கொள்ள வேண்டியது.

"முருகா! அடியேன் சென்ற சென்ற இடங்களில் "கந்தா" என்று உன்னை அழைப்பேனாயின் நீ சேவல் கொடியைக் கையில் ஏந்திக் கொண்டு என்முன் வந்து காட்சிதர வேணும்"

என்று அருணகிரி சுவாமிகள் உருக்கமாக வேண்டிக் கொள்ளு கின்றார்.

முருகவேள் அடியவரது அல்லலை யகற்றச் செல்லும்போது சேவல் கொடியுடன் சென்றருள்வார். சயந்தன் கனவில் கந்தவேள் சென்று காட்சிதந்தபோது சேவல் கொடியுடன் சென்றார் என்று கந்தபுராணங் கழறுகின்றது.

"வீறு கேதனம் வச்சிரம் அங்குசம் விசிகம்
...........அறுமுகங் கொண்டு வேளடைந்தான்"
—கந்தபுராணம்.

எனும் பொழுது என்ற சொல், எனும்பொ எனவந்தது.

செஞ்சாலி கஞ்சம் ஒன்றாய் வளர்ந்த செங்கோடு :—

செஞ்சாலி-நெற்பயிர். கஞ்சம்-தாமரை.

நெற்பயிர் பசியைத் தீர்ப்பது. தான்யம் தான்ய லட்சுமி:- தாமரையில் இருப்பவள் தனலட்சுமி. செந்நெல்லும் தாமரை யும் ஒன்றுபட்டிருப்பது, தான்ய லட்சுமியும் தனலட்சுமியும் ஒன்றுபட்டு காட்சியளிப்பது போல்திகழ்கின்றது.

கருத்துரை

திருச்செங்கோட்டு வேலவரே! அறியாமையால் அலையா வண்ணம் ஆண்டருள்வீர்.

## 142

பந்தாடி யங்கை நொந்தார் பரிந்து
பைந்தார் புனைந்த குழல்மீதே
பண்பார் சுரும்பு பண்பாடு கின்ற
பங்கே ருகங்கொள் முகமீதே
மந்தார மன்றல் சந்தார மொன்றி
வன்பாத கஞ்செய் தனமீதே
மண்டாசை கொண்டு விண்டாவி நைந்து
மங்காம லுன்ற னருள்தாராய்
கந்தா அரன்றன் மைந்தா விளங்கு
கன்று முகுந்தன் மருகோனே
கன்று விலங்க லொன்றுறு கண்ட
கண்டா வரம்பை மணவாளா

செந்தா தடர்ந்த கொந்தார் கடம்பு
திண்டோள் நிரம்ப அணிவோனே
திண்கோ டரங்க ளெண்கோ டுறங்கு
செங்கோட மர்ந்த பெருமாளே.

## பதவுரை

கந்தா - கந்தவேளே! அரன் தன் மைந்தா - சிவபெருமானுடைய திருப்புதல்வரே! விளங்கு - விளங்குகின்றவரும், கன்று - கோபிக்காத வருமாகிய, முகுந்தன் மருகோனே - முகுந்தனுடைய மருகரே! கன்று - கோபித்து, விலங்கல் ஒன்று ஆறு கண்ட - மலை ஒன்றை வழிதிறக்கச் செய்த, கண்டா - வீரரே! அரம்பை மணவாளா - தேவமாதாகிய தெய்வ யானைக்கு நாயகரே! செம்தாது அடர்ந்த - செவ்விய பூந்தாது நிரம்பிய, கொந்து ஆர் - பூங்கொத்துக்கள் நிறைந்துள்ள, கடம்பு - கடப்பமலர் மாலையை, திண் தோள் நிரம்ப அணிவோனே - வலிய தோளின் மீது நிரம்பவுந் தரித்துக் கொள்பவரே! திண் கோடரங்கள் - வலிமையுடைய குரங்குகள், எண்கோடு உறங்கும் - கரடிகளுடன் தூங்குகின்ற, செங்கோடு அமர்ந்த - திருச்செங்கோட்டில் எழுந்தருளியுள்ள, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! பந்து ஆடி - பந்து விளையாடி, அம் கை - அழகிய கை நொந்துள்ள மாதர்கள், பரிந்து - ஆசையுடன், கொந்தார் - பைந்தார் புனைந்த - பசுமை வாய்ந்த பூமாலை தரித்துள்ள, குழல் மீதே - கூந்தல் மேலும், பண்பு ஆர் சுரும்பு - அழகு நிறைந்த வண்டுகள், பண்பாடுகின்ற - இசைபாடுகின்ற, பங்கேருகங்கொள் - தாமரை போன்ற, முகமீதே - முகத்தின்மீதும், மந்தார மன்றல் - மந்தார மலரின் வாசனையும்; வன் சந்து - சந்தனமும், ஆரம் - முத்து மாலையும், ஒன்றி - சேர்ந்து, பாதகம செய் - கொடிய பாதகங்களைச் செய்யத்தூண்டுகின்ற, தனமீதே - கொங்கைகளின்மீதும், மண்டு ஆசை கொண்டு - நிறைந்த ஆசையைக் கொண்டு, விண்டு ஆவி நைந்து - ஆவி பிரிவதுபோன்ற துன்பத்தை யடைந்து, மங்காமல் உன்றன் அருள்தாராய் - அடியேன் அழிந்து போகா வண்ணம் உமது திருவருளைத் தந்தருளுவீர்.

## பொழிப்புரை

கந்தவேளே! சிவகுமாரரே! கோபிக்காமல் விளங்குகின்ற முகுந்தனுடைய திருமருகரே! கோபித்து கிரவுஞ்ச மலையைப் பிளந்து வழிகண்ட வீரமூர்த்தியே! தெய்வயானையின் கணவரே! சிவந்த பூந்தாதுகள் நிரம்பிய கடம்ப மலர்க் கொத்துக்களால் ஆகிய மாலையை வலிமையுடைய தோளில் தரித்தவரே! வலிய குரங்குகள் கரடிகளுடன் தூங்குகின்ற திருச்செங்கோட்டில் எழுந்தருளியுள்ள பெருமிதமுடையவரே! பந்து விளையாடி



திருச்செங்கோடு
(மலையின்மேல் கோயில் கோபுரமும்,
அடிவாரத்தில் ஊரின் தோற்றமும் காணலாம்)

அழகிய கரங்கள் நொந்த மாதர்கள் விரும்பி புதிய பூமாலையை யணிந்த கூந்தலின் மீதும், அழகிய வண்டுகள் இசைபாடுகின்ற தாமரை மலர் போன்ற முகத்தின் மீதும், மந்தார மலரின் வாசனை, சந்தனம், முத்துமாலை இவைகள் பொருந்தி, கொடிய பாதகங்களைச் செய்ய இடந்தரும் தனங்களின் மீதும், மிகுந்த ஆசை கொண்டு ஆவி பிரிவதுபோல் நொந்து அடியேன் மங்காமல் உமது திருவருளைத் தந்தருள்வீராக.

## விரிவுரை

பந்தாடி யங்கை நொந்தார் :—

பெண்கள் பந்தாடிக் களைத்துப் போவார்கள். பந்தாட்டம் பெண்களுக்கே உரியது.

" பந்தாடுமங்கையர் செங்கயல் பார்வையில் "

—கந்தரலங்காரம் (79)

பகைவர் இங்கு வந்தால் பெண்களைப் போல் பந்து ஆட வேண்டும் என்று குறிக்கும் பொருட்டு மதுரை கோபுரவாயிலில் பந்தையும் பாவையையும் தொங்க விட்டிருக்கின்றார்கள்.

" வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போர் அரு வாயில் "

—திருமுருகாற்றுப்படை.

கன்று முகுந்தன் :—

கன்றுதல்-கோபித்தல். கோபிக்காத காருண்யமூர்த்தி திருமால்.

கன்று ஆ முகுந்தன். கன்றுகளையும் பசுக்களையுங் காத்தவன் என்றும் பொருள்படும்.

முகுந்தன்-மு-முத்தி, கு-பூதலச் செல்வம், இகபர சித்திகளை வழங்குபவர் முகுந்தர்.

கன்று விலங்கல் ஒன்றுறு கண்ட கண்டா :—

கன்று-சினந்து. விலங்கல்-மலை. கிரவுஞ்சம்.

வீரவாகுதேவர் முதலியோர் அம்மலையில் சென்று மயங்க, முருகவேள் வேலால் பிளந்து வழியை உண்டாக்கி யருள் புரிந்தார்.

திண்கோடரங்கள் எண்கோடுறங்கு :—

கோடரம்-குரங்கு. எண்கு-கரடி. குரங்கு சாதுவானது. கரடி கொடியது. இரண்டும் ஒற்றுமைப்பட்டு உறங்குகின்றன. இறைவனுடைய சந்நிதியில் எல்லாம் ஒன்றுபடுகின்றன.

### கருத்துரை

திருச்செங்கோட்டுத் திருமுருகா! ஆசையால் அடியேன் மங்காதவண்ணம் அருள்செய்வீர்.

### 143

வண்டார் மதங்க ளுண்டே மயங்கி
வந்தூரு கொண்ட லதனோடும்
வண்காம னம்பு தன்கால் மடங்க
வன்போர் மலைந்த விழிவேலும்
கொண்டே வளைந்து கண்டார் தியங்க
நின்றூர் குரும்பை முலைமேவிக்
கொந்தா ரரும்பு நின்தாள் மறந்து
குன்றாம லுன்ற னருள்தாராய்
பண்டாழி சங்கு கொண்டாழி தங்கு
பண்போ னுகந்த மருகோனே
பண்சார நைந்து நண்போது மன்பர்
பங்காகி நின்ற குமரேசா
செண்டாடி யண்டர் கொண்டாட மன்றில்
நின்றாடி சிந்தை மகிழ்வாழ்வே
செஞ்சாலி மிஞ்சி மஞ்சாடு கின்ற
செங்கோ டமர்ந்த பெருமாளே.

### பதவுரை

பண்டு ஆழி சங்கு கொண்டு - பழமையான சக்கரமும் சங்கும் கொண்டு, ஆழி தங்கும் - கடலில் தங்கியுள்ள, பண்போன் உகந்த - பண்புடைய திருமால் மகிழ்ந்த, மருகோனே - திருமருகரே! பண் சார - இசை பொருந்தவும், நைந்து - உள்ளம் உருகவும், நண்பு ஓதும் அன்பர் - துதிகளை ஓதுகின்ற அடியார்களின், பங்கு ஆகி நின்ற - பக்கத்தில் துணையாகிநின்ற, குமர ஈசா - குமாரக் கடவுளே! செண்டு ஆடி - அசுரர் களைச் சிதற அடித்து, அண்டர் கொண்டாட - தேவர்கள் புகழும்படி, மன்றில் நின்று ஆடி-சபையில் நின்று ஆடுகின்ற சிவபிரான், சிந்தை மகிழ் வாழ்வே - திருவுள்ளத்தில் மகிழ்கின்ற செல்வமே! செம் சாலி மிஞ்சி - செந்நெல் மிகுந்து, மஞ்சு ஆடுகின்ற - மேகங்கள் உலாவுகின்ற, செங்

கோடு அமர்ந்த - திருச்செங்கோட்டில் எழுந்தருளியுள்ள, பெருமாளே பெருமையில் மிகுந்தவரே! வண்டார் - வண்டுகள், மதங்கள் உண்டே - தேனை யுண்டு, மயங்கி வந்து ஊரு - மயக்கத்துடன் வந்து மொய்க்கின்ற, கொண்டல் அதனோடும் - மேகம் போன்ற கூந்தலுடன், வண் காமன் அம்பு தன் கால் மடங்க - வளப்பம் பொருந்திய மன்மதனுடைய மலர்ப் பாணத்தின் செவ்வி குறைய, வன் போர் மலேந்த விழி வேலும் - வலிய போரை எதிர்த்த கண் என்ற வேற்படையையும், கொண்டே வளைந்து - கொண்டுவளைந்து, கண்டார் தியங்க நின்றுர் - பார்த்தவர்கள் அப்படியே தியங்கும்படி நின்றவர்களாம் பொதுமாதர்களின், குரும்பை முலே மேவி - தென்னங் குரும்பை போன்ற தனத்தின்மீது விருப்பம் வைத்து, கொந்து ஆர் அரும்பும் - பூங்கொத்துக்கள் நிரம்பித் தோன்றும், நின்தாள் மறந்து - உமது திருவடியை மறந்து, குன்றுமல் - அடியேன் அழியா வண்ணம். உன்றன் அருள் தாராய் - உமது திருவருளைத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

பழமையான சக்கரமும் சங்கும் ஏந்தி, கடலில் தங்கியுள்ள பண்புடைய திருமால் மகிழ்ந்த திருமருகரே! இசை பொருந்தவும் உள்ளம் உருகவும் துதிக்கின்ற அன்பர்களின் அருகில் நிற்கின்ற குமாரக் கடவுளே! அரக்கர்களைச் சிதற அடித்துத் தேவர்கள் கொண்டாடும்படி சபையில் நின்று நடிக்கின்ற சிவபெருமான் திருவுள்ளத்தில் மகிழ்கின்ற செல்வமே! செந்நெல் மிகுந்து, மேகங்கள் உலாவுகின்ற திருச் செங்கோட்டில் எழுந்தருளியுள்ள, பெருமிதம் உடையவரே! வண்டுகள் தேனையுண்டு மயங்கி வந்து மொய்க்கின்ற மேகம் போன்ற கூந்தலையும், வளப்பமுள்ள மன்மதனுடைய மலர்க் கணையின் செவ்வி குறைய வலிய போர் புரிந்த கண்களாகிய வேலையுங் கொண்டு கண்டவர் தியங்குமாறு வளைந்து நிற் கின்ற பொது மாதரின் குரும்பை போன்ற தனத்தை விரும்பி, பூங்கொத்துக்கள் நிறைந்த உமது திருவடியை மறந்து அடி யேன் அழியாதபடி உமது திருவருளைத் தந்தருளுவீராக.

## விரிவுரை

**வண்டார் :—**

வண்டுகள். அஃறிணையை உயர் திணையாகக் கூறினர். திணைவழுவமைதி. (நன்னூல் 379.)

"விரகின்மை கொண்ட குருகார்" —கந்தபுராணம்

**மதங்கள் :—**

மதம்-தேன். "மதங் கமழ் கோதை" (சிந்தாமணி)

கொண்டல் :—

கொண்டல்-மேகம். உவம ஆகுபெயராகக் கூந்தலைக் குறிக்கின்றது.

கால் மடங்க :—

கால்-செவவி.

பண்டாழி சங்கு கொண்டாழி தங்கு பண்போன் :—

பண்டு-பழமை. சக்கரமும் சங்குந் தாங்கி ஆழியில் துயின்ற திருமால்.

பண்சார நைந்து நண்போது மன்பர் பங்காகி நின்ற குமரேசா :—

பண்-இராகம். நல்ல இசையுடன்பாடி உள்ளம் உருகும் அன்பர்களின் அருகில் நின்று முருகன் கருணை புரிகின்ருன்.

செஞ்சாலிமிஞ்சி :—

அருணகிரியார் திருச்செங்கோட்டைப் பாடுகின்ற போது பல இடங்களில் செந்நெல் விளையுந் திருத்தலம் என்றே குறிப் பிடுகின்ருர்.

" செஞ்சாலி கஞ்சம் ஒன்ருய் வளர்ந்த செங்கோடு "
—(அன்பாகவந்து) திருப்புகழ்.

" செகதல மிடிகெட விளைவன வயலணி செங்கோடு "
—(கரையறவுருகு) திருப்புகழ்.

## கருத்துரை

திருச்செங்கோட்டுத் தெய்வமே! உமது திருவடியை மறவாத வரம் தந்தருள்வீர்.

## 144

கரையற வுருகுதல் தருகயல் விழியினர்
கண்டான செஞ்சொல் மட்மாதர்
கலவியில் முழுகிய நெறியினி லறிவுக
லங்காம யங்கும் வினையேனும்
உரையையு மறிவையும் உயிரையு முணர்வையும்
உன்பாத கஞ்ச மலர்மீதே
உரவொடு புனைதர நினைதரு மடியரொ
டொன்ருக என்று பெறுவேனே

வரையிரு துணிபட வளைபடு சுரர்குடி
வந்தேற இந்த்ர புரிவாழ
மதவித கஜரத துரகத பததியின்
வன்சேனை மங்க முதுமீன
திரைமலி சலநிதி முறையிட நிசிசரர்
திண்டாட வென்ற கதிர்வேலா
ஜெகதல மிடிகெட விளைவன வயலணி
செங்கோ டமர்ந்த பெருமாளே.

## பதவுரை

வரை இரு துணிபட - கிரவுஞ்சமலை இருதுண்டாகும்படியும், வளைபடு சுரர் - விலங்குபட்டிருந்த தேவர்கள், குடிவந்து ஏற - தமது ஊரில் குடிபுகுமாறும், இந்த்ரபுரி வாழ - தேவேந்திரனுடைய அமராவதி நகரம் வாழும்படியும், மதவித கஜரத துரகத பததியின் - மதம் பொழியும் யானை தேர் குதிரை காலாள் என்ற, வன்சேனை மங்க - வலிய சேனைகள் மங்குமாறும், முதுமீன - பழமையான மீன்கள் வாழும், திரைமலி - அலைகள் நிறைந்த, சலநிதி முறை இட - சமுத்திரம் முறையிடுமாறும், நிசிசரர் திண்டாட - அசுரர்கள் துன்பமுறும்படியும், வென்ற கதிர் வேலா - வெற்றி பெற்ற ஒளி மிகுந்த வேலாயுதரே! ஜெகதல மிடி கெட - உலகத்தின் வறுமை தீரும்படி, விளைவன வயல் அணி - விளைகின்ற வயல்கள் அலங்கரிக்கின்ற, செங்கோடு அமர்ந்த - திருச்செங்கோட்டில் எழுந்தருளியுள்ள, பெருமாளே - பெருமையில் மிகுந்தவரே! கரை அற உருகுதல் தரு - எல்லையில்லாமல் உருகும்படிச் செய்யும், கயல் விழியினர் - மீன் போன்ற கண்ணினர், கண்டு ஆன செம் சொல் - கற்கண்டு போன்ற செவ்விய சொல்லினராகிய, மடமாதர் - பொதுமாதர்களின், கலவியில் முழுகிய நெறியினில் - சேர்க்கையாகிய மயல் வெள்ளத்தில் முழுகிய வழியினில், அறிவு கலங்கா மயங்கும் - அறிவு கலங்கி மயங்கும், வினையேனும் - வினையையுடைய அடியேன், உரையையும் அறிவையும் உயிரையும் உணர்வையும் - சொற்களையும் அறிவையும் உயிரையும் உணர்வையும், உன் பாத கஞ்ச மலர் மீது - உமது பாத தாமரை மலர் மீது, உரவொடு - உறுதியுடன், புனைதர நினைதரும் - அணிவிக்கக்கருதும், அடியரொடு ஒன்றுக என்று பெறுவேனோ - அடியார்களுடன் ஒன்றுபடும் பேற்றினை என்று அடியேன் பெறுவேனோ?

## பொழிப்புரை

**கிரவுஞ்சமலை இருகூறு படவும், சிறைப்பட்டிருந்த தேவர்கள் தம் ஊரில் குடியேறவும், அமராவதி நகரம் வாழவும், மும்மதம் பொழியும் யானை தேர் குதிரை காலாள் என்ற வலிய**

சேனைகள் அழியவும், பழைய மீன்கள் வாழும் அலைமிகுந்த கடல் முறையிடவும், அசுரர்கள் வருந்தவும் வெற்றி பெற்ற கதிர் வேலவரே! உலகத்தின் வறுமை நீங்குமாறு விளைகின்ற வயல்களால் அலங்கரிக்கப்பட்ட திருச்செங்கோட்டில் எழுந்தருளியுள்ள பெருமிதமுடையவரே! எல்லை கடந்து உருகும் படிச் செய்யும் மீன்போன்ற கண்ணையுடையவரும், கற்கண்டு போன்ற செவ்விய மொழிகளையுடையவருமாகிய மடமாதர் களாகிய பொருட் பெண்டிரின் சேர்க்கையால் வரும் மயக்கக் கடலில் முழுகிய வழியில் அறிவு கலங்கி மயங்கும் வினையேனாகிய சிறியேன், மொழிகளையும் அறிவையும் உயிரையும் உணர்வையும் உமது பாத தாமரை மலர் மீது உறுதியுடன் அர்ச்சிக்க நினையும் அடியார்களுடன் ஒன்றுபடும் பேற்றினை என்று பெறுவேனோ?

## விரிவுரை

கரையறவுருகுதல் தருகயல் விழியினர் :—

தம் பார்வையால் ஆடவர் ஒரு எல்லையின்றி உருகுமாறு செய்யும் விழியையுடையவர்கள் பொருட் பெண்டிர்.

அடியார்கள், தம் மொழி உயிர் அறிவு உணர்வு என்ற அனைத்தையும் முருகன் திருவடியில் மலர்களைப் போல் அர்ச்சித்து விடுவார்கள்.

அடியரொடொன்றுக என்று பெறுவேனோ :—

அடியாருடன் ஒன்றுபடுவதே பெறுதற்கு அரிய பெரும் பேறாகும்.

கண்ணில்லாத பசு பசுமந்தையில் சேர்ந்தவுடன் சுற்றியுள்ள மாடுகளுடன் உராய்ந்து ஊர் புகுமாப் போல், ஞானக் கண்ணில்லாத நாம் அடியவர் குழாத்துள் கூடிவிடுவோமாயின், அடியவர் சேர்க்கை நம்மை முக்தியுலகில் சேர்க்கும் எனவுணர்க.

சூரிற் கிரியிற் கதிர் வேலெறிந்தவன் தொண்டர் குழாம்
சாரிற் கதியின்றி வேறில்லை காண் தண்டு தாவடிபோய்
தேரிற் கரியிற் பரியிற் றிரிபவர் செல்வமெல்லாம்
நீரிற் பொறி யென்றறி யாதபாவி நெடு நெஞ்சமே.
— கந்தரலங்காரம் (49)

"துரும்பனேன் என்னினும் கைவிடுதல் நீதியோ
தொண்டரொடு கூட்டு கண்டாய்"
—தாயுமானர்.

வரையிரு துணிபட :—

கிரவுஞ்சமலை என்பது சஞ்சித வினைத் தொகுதி.

திரைமலி சலநிதி முறையிட :—

கடலை முருகன் முனிந்தான் என்பது பிறவிப் பெருங் கடலை வற்ற வைத்தான் என்பதாகும்.

### கருத்துரை

திருச்செங்கோடு அமர்ந்த தேவனே! அடியாருடன் ஒன்றுபட்டு உய்யும்படி அருள் செய்வீர்.

## 145

இடம்பார்த் திடம்பார்த் திதங்கேட் டிரந்தேற்
றிணங்காப் பசிப்பொங் கனல்மூழ்கி
இறுங்காற் கிறுங்கார்க் கிரும்பார்க் குநெஞ்சார்க்
கிரங்கார்க் கியற்றண் டமிழ்நூலின்
உடம்பாட் டுடன்பாட் டியம்பாத் தயங்காத்
துளங்காத் திடப்புன் கவிபாடி
ஒதுங்காப் பொதுங்காப் பதுங்காப் புகன்றேத்
துறும்பாற் குணக்கன் புறலாமோ
கடந்தோற் கடந்தோற் றறிந்தாட் கருந்தாட்
கணைந்தாட் கணித்திண் புயமீவாய்
கரும்போற் கரும்போர்க் குளங்காட் டிகண்டேத்
துசெங்கோட் டில்நிற்குங் கதிர்வேலா
அடைந்தோர்க் குணந்தோர்க் களிந்தோர்க் கமைந்தோர்க்
கவிழ்ந்தோர்க் குணற்கொன் றிலதாகி
அலைந்தோர்க் குலைந்தோர்க் கினைந்தோர்க் கலந்தோர்க்
கறிந்தோர்க் களிக்கும் பெருமாளே.

### பதவுரை

கடம் - மதம் பொழியும், தோல் - யானை, கடம் தோற்ற - காட்டில் எதிர்ப்பட, அறிந்தாட்கு - அறிந்தவளாய், அரும் தாட்கு அணைந்தாட்கு - அருமையான திருவடியை அணைந்த வள்ளி நாயகிக்கு, அணி திண்புயம் ஈவாய் - அழகிய வலிய புயத்தைத் தந்தவரே! கரும்போற்கு அரும் போர் -

கரும்பு வில்லை யேந்திய மன்மதனுக்கு அரிய போராக, குளம் காட்டி - நெற்றிக் கண்காட்டிய சிவபெருமான், கண்டு ஏத்து - கண்டு போற்றும், செங்கோட்டில் நிற்கும் - திருச்செங்கோட்டில் நிற்கின்ற, கதிர் வேலா - ஒளி மிகுந்த வேலவரே! அடைந்தோர்க்கு - உம்மைச் சரணம் என அடைந்தோர்க்கும், உணங்தோர்க்கு - மெலிந்தவர்க்கும், அளிந்தோர்க்கு - கருணையுள்ளம் படைத்தோர்க்கும், அமைந்தோர்க்கு - மன அமைதி கொண்டவர்க்கும், அவிழ்ந்தோர்க்கு - பக்தியால் உள்ளம் நெகிழ்ந்தவர்க்கும், உணற்கு ஒன்று இலது ஆகி அலைந்தோர்க்கு - உண்பதற்கு ஒன்றும் இல்லாதவராகி அலைகின்றவர்க்கும், உலைந்தோர்க்கு - நிலைகுலைந்தவர்க்கும், இளைந்தோர்க்கு - கவலையால் வருந்துபவர்க்கும், அலந்தோர்க்கு - துன்பம் உற்றவர்க்கும், அறிந்தோர்க்கு - ஞானிகட்கும், அளிக்கும் - திருவருள் பாலிக்கும், பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! இடம் பார்த்து, இடம் பார்த்து - இடம் பார்த்து இடம் பார்த்து, இதம் கேட்டு - இதமான மொழிகளை அவர்கள் கேட்கும்படிச் சொல்லி, இரந்தேற்கு - யாசிக்கின்ற அடியேனுக்கு, இணங்கா - யாசிப்பதற்கே மனம் பொருந்தி, பசி பொங்கு அனல் மூழ்கி - பொங்கி எழுகின்ற பசி நெருப்பில் மூழ்கி, இறும் காற்கு - அழிந்து போகும் காலத்தில் கூட, இறும் காக்கு - உள்ளம் உறுதியடையாதவரிடம், இரும்பார்க்கு நெஞ்சார்க்கு - இரும்பு போன்ற கடின நெஞ்சத்தவரிடம், இரங்கார்க்கு - இரக்கம் இல்லாதவரிடம், இயல் தண்தமிழ்நூலின் - தகுதி பெற்ற குளிர்ந்த தமிழ் நூல்களில், உடம் பாட்டுடன் - மன ஒருமையுடன், பாட்டுஇயம்பா - பாடல்களைக் கூறி, தயங்கா - வாட்ட முற்று, துளங்கா - மனத்தில் கலக்கங் கொண்டு, திடபுன் கவிபாடி - உறுதியுடன் புல்லிய கவிகளைப் பாடி, ஓதும் காப்பு ஒதுங்கா - சொல்லப்பட்ட காவலுக்கு ஒதுங்கியும், பதுங்கா - பதுங்கியும், புகன்று ஒத்து உறும்பால் - தான் கூறிய பாடல்களை மறுபடியும் புகழும் இயல்பினைக் கொண்ட, குணக்கு அன்பு உறலாமோ - குணத்துக்கு நான் அன்பு வைக்கலாமோ?

## பொழிப்புரை

மதம் பொழியும் யானை காட்டில் தோன்ற, அறிந்தவளாய், உமது அருமையான திருவடிகளை அணைந்த வள்ளிநாயகிக்கு அழகிய வலிய திருப்புயங்களைத் தந்தவரே! கரும்பு வில்லுடைய மன்மதனுக்கு அரிய போராக, நெற்றிக் கண்ணைக் காட்டிய சிவபெருமான் கண்டு போற்றும் திருச்செங்கோட்டில் விளங்கி நிற்கும், ஒளி பெற்ற வேலாயுதரே! உம்மைத் தஞ்சமாக அடைந்தவர்க்கும், மெலிந்தவர்க்கும், கருணையுடையவர்க்கும், மன அமைதியுடையவர்க்கும், பக்தியால் உள்ளம் நெகிழ்ந்தவர்க்கும், உணவு இன்றி அலைகின்றவர்க்கும், நிலையற்று அலைபவர்க்கும், கவலையால் வருந்துவோர்க்கும், துன்பம் உற்றவர்க்கும், ஞானிகட்கும் அருள் புரியும் பெருமிதம் உடையவரே!

எங்கு எவரிடம் போனால் பொருள் கிடைக்கும் என்று, இடம் பார்த்து இடம் பார்த்துப் போய் இதமான மொழிகளைச் சொல்லி, யாசிக்கின்ற அடியேன், இணக்கமாக நடந்து, பசித் தீயில் முழுகி, இறக்குந்தருவாயினும், உறுதியான உள்ளம் இன்றி, இரும்பு போன்ற கடின மனத்தவரிடம்—இரக்கம் இல்லாதவரிடம், இயலுடன் கூடிய இனிய தமிழ் நூலில், மன ஒருமைப்பாட்டுடன், பாடல்களைக் கூறியும், வாட்டமும் கலக்கமும் அடைந்து, திடத்துடன் புல்லிய கவிகளைப் பாடி, சொல்லுகின்ற காவலுக்கு ஒதுங்கியும் பதுங்கியும், மறுபடியும் பாடல் சொல்லிப் புகழும் குணத்துக்கு அடியேன் அன்பு கொள்ளலாமோ?

## விரிவுரை

இத் திருப்புகழில் சுவாமிகள் தமிழ்ப் புலவர்கள், பொருளுடையாரைப் புகழ்ந்து பாடி புன்மையுறும் அவல நிலையைக் கண்டிக்கின்றார்.

இடம் பார்த்து இடம் பார்த்து :—

"இன்று எங்கே போனால் பொருள் கிடைக்கும்? யாரிடம் போனால் பணம் கிடைக்கும் ?" என்று சிந்தித்துச் செல்லுவார்கள். இடம் பார்த்து இடம் பார்த்துச் சென்று பாடுவார்கள்.

இரந்தேற்கு :—

இரந்தவரே இறந்தவர். இறந்தவர் இறந்தவரல்லர்.

மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கள்; மாயா
தேந்திய கைகொ டிரந்தவர் எந்தாய்
வீய்ந்தவர் என்பவர் வீய்ந்தவ ரேனும்
ஈய்ந்தவ ரல்ல திருந்தவர் யாரே.

உலகிலே எல்லாத் தொழிலும் இழிந்தவையல்ல; ஏற்பது ஒன்றே இகழ்ச்சி.

பசிப் பொங்கனல் மூழ்கி :—

பசித் தீ கொடிய அனலுக்கு நிகரானது. பசி வந்தால் மானங் குலங் கல்வி முதலிய பத்தும் பறந்து போம்.

பசி வந்தபோது கண் பார்வை குறையும்; கை கால்கள் தள்ளாடும்; நாடி நரம்பு தளரும்; க்ஷயம், குஷ்டம், ஆஸ்துமா முதலிய நோய்கள் வந்தால் பல வருஷம் அவைகளுடன் போராடிக் காலந் தள்ளலாம்; பசி நோய் வந்தால் சில நிமிஷங்கள் கூட அதனைத் தாங்கிக் கொள்ள முடியாது.

இறுங்காற் கிறுங்கார்க்கு :—

இந்தத் திருப்புகழில் சுவாமிகள் பதங்களை அமைத்திருக்கின்ற அழகு மிக மிக வியப்பாக உளது.

இறுங் காற் கிறுங்கார்க்
உடம் பாட்டுடன் பாட்
ஓதுங் காப் பொதுங்கா
கடந்தோற் கடந்தோற்
கரும்போற் கரும்போர்க்

இவைகள் மிகவும் சமத்காரமான பிரயோகங்கள். இறும் கால்—அழிந்து போகுங் காலம். இறுகுதல்—உறுதி யடைதல். இறுங்கார்க்கு—உள்ளம் உறுதியடையாதவர். தனக்கு அழிவு வந்த போதும், பக்தி ஞானம் எய்தி உறுதியை நாடாதவர்கள்.

இரும்பார்க்கு நெஞ்சார்க்கு :—

இரும்பு போன்ற நெஞ்சு படைத்தவர்; ஏழை எளியவர்களிடத்தில் சிறிதும் கருணையின்றி இரும்பு மனத்துடன் இருப்பர்.

இரங்கார்க்கு :—

பிறர் படுந் துன்பங்களைக் கண்டு உள்ளம் பச்சாத்தாபப் படாது இருப்பர்.

ஓதுங்காப் பொதுங்கா :—

ஓதுங் காப்பு ஒதுங்கா. ஓதும் காப்பு என்ற சொல் சந்தத்துக்காக ஓதுங் காப்பு என வந்தது. காவலர், "அப்படி போ; இப்படி வா" என்று ஓதுவார்கள்.

குணக்கன் புறலாமோ :—

குணத்துக்கு என்ற சொல் குணக்கு என வந்தது. நல்ல இனிய தமிழைக் கற்று, செந்தமிழால் இறைவனைப் பாடாது, காமதேனுவின்பாலைக் கமரில் விட்டது போல், இனிய தமிழை கொடாத லோபிகளைப் பாடி அவமாக்குவர். அந்தக் குணம் கூடாது என்று இங்கே அடிகளார் கூறுகின்றார்.

கடந்தோற் கடந்தோற்றறிந்தாள் :—

கடம் தோல் கடம் தோற்ற அறிந்தாள். கடம்—மதம்; தோல்—யானை. கடம்—காடு.

மதம் பொழியும் யானையாக விநாயகர் காட்டில் வர வள்ளியம்மை யஞ்சி இறைவனை அடைக்கலம் புகுந்த வரலாற்றை இது தெரிவிக்கின்றது.

கரும் போர்க் கரும் போர்க்குளம் :—

கரும்போன்—கரும்பு வில்லை யுடைய மன்மதன். அவனுக்கு அரும் போராக. சிவபெருமான் நெற்றிக் கண்ணால் தண்டனை விதித்தார். குளம்—நெற்றிக் கண்.

அடைந்தோர்க் குணந்தோர்க் களிந்தோர்க் கமைந்தோர்க் கவிழ்ந்தோர்க் குணற்கொன்றிலதாகி அலைந்தோர்க் குலைந்தோர்க் கினைந்தோர்க் கலந் தோர்க் கறிந்தோர்க் களிக்கும் :—

சரணமடைந்தவர்; மெலிந்தவர்; இரக்கமுள்ளவர்; உள்ளம் நெகிழ்ந்தவர்; அமைதியுள்ளவர்; உணவின்றி அலைபவர்; உலைபவர்; துன்பத்தால் துடிப்பவர்; வருத்தமுள்ளவர்; அறிஞர்கள்; ஆகிய அனைவர்க்கும் முருகப் பெருமான் அருள் பாலிக்கின்றார்.

## கருத்துரை

திருச்செங்கோட்டுத் திருமுருகா! மனிதனைப் பாடாத வரம் அருள் செய்வீர்.

## 146

கலக்குங் கோதற வடிக்குஞ் சீரிய
    கருப்பஞ் சாறெனு மொழியாலே
  கருத்தும் பார்வையு முருக்கும் பாவிகள்
    கடைக்கண் பார்வையி லழியாதே
விலக்கும் போதக மெனக்கென் றேபெற
    விருப்பஞ் சாலவு முடையேனன்
  வினைக்கொண் டேமன நினைக்குந் தீமையை
    விடற்கஞ் சேலென அருள்வாயே
அலைக்குந் தானவர் குலத்தின் சேனையை
    அறுக்குங் கூரிய வடிவேலா
  அழைத்துன் சீரிய கழற்செந் தாமரை
    யடுக்கும் போதக முடையோராம்
சிலர்க்கன் றேகதி பலிக்குந் தேசிக
    திருச்செங் கோபுர வயலூரா
  திதிக்கும் பார்வயின் மதிப்புண் டாகிய
    திருச்செங் கோடுறை பெருமாளே.

## பதவுரை

அலைக்கும் தானவர் குலத்து - தேவர் முதலிய சாதுக்களை அலைத்து வருத்திய அசுரர்களின் குலத்துவந்த, சேனையை அறுக்கும் - சேனைக் கூட்டங்களை அறுத்த, கூரிய வடிவேலா - கூர்மை பொருந்திய வடிவேலவரே! அழைத்து - அன்புடன் அழைத்து! உன் சீரிய கழல் செம் தாமரை அடுக்கும் - உமது சிறந்த செந்தாமரை போன்ற திருவடிகளைப் பற்றியுள்ள, போதகம் உடையோராம் - ஞானத்தையுடையவர்களாகிய, சிலர்க்கு - சிலருக்கு, அன்றே கதி பலிக்கும் - அப்பொழுதே வீடு பேற்றினைத் தந்தருளும், தேசிக - குருமூர்த்தியே! திருசெம் கோபுர வயலூரா - அழகும் செவ்வையும் உடைய கோபுரம் அமைந்த வயலூராண்டவரே! திதிக்கும் பார்வயின் - தேவரீர் காத்தருளும் இந்த பூமியிடத்தே, மதிப்பு உண்டாகிய - மதிப்பு ஓங்கியுள்ள, திருச்செங்கோடு உறை - திருச்செங்கோட்டில் வாழ்கின்ற, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! கலக்கும் கோது அற - கலக்கத்தைத்தரும் சக்கைகள் நீங்க, வடிக்கும் சீரிய கருப்பம் சாறு எனும் மொழியாலே - வடித்தெடுத்த சிறந்த கரும்பின் சாறு போன்ற மொழியினால், கருத்தும் பார்வையும் உருக்கும் பாவிகள் - உள்ளத்தையும் பார்வையையும் உருக்குகின்ற பாவிகளாகிய பொது மாதர்களின், கடை கண் பார்வையில் அழியாதே - கடைக்கண் பார்வையினால் அடியேன் அழியாதவாறு, விலக்கும் போதகம் - அறியாமையை விலக்கவல்ல ஞானோபதேசத்தை, எனக்கு என்றே பெற - அடியேனுக்கு என்றே பெறுமாறு, விருப்பம் சாலவும் உடையேனும் - மிகவும் அன்பு கொண்டுள்ள அடியேன், வினை கொண்டே - ஊழ்வினையின் பயனாக, மனம் நினைக்கும் தீமையை விடற்கு - மனதில் தீய குணங்களை விட்டு உய்யும் பொருட்டு, அஞ்சேலென அருள்வாயே - அஞ்சேல் என்று கூறி என்னைக் காத்தருளுவீராக.

## பொழிப்புரை

தேவர்கள் முதலிய நல்லோர்களை அலைக்கழித்த அசுர குலத்துச் சேனைகளை அழித்த கூரிய வடிவேலவரே! உமது செந்தாமரை போன்ற திருவடியைச் சார்ந்து சிவஞானமுடைய சிலரை அழைத்து அப்பொழுதே முத்தி நலத்தை வழங்கியருளும் குருநாதரே! அழகிய சிறந்த கோபுரம் விளங்கும் வயலூர் அரசே! தேவரீர் காத்தளிக்கும் இப்பூமியில் மதிப்பு மிகுந்த திருச்செங்கோட்டில் வாழும் பெருமித முடையவரே! கலக்கத்தைத்தரும் சக்கைகள் நீங்க, வடித்து எடுத்த சிறந்த கருப்பஞ்சாறு போன்ற இனிய மொழியால், உள்ளத்தையும் பார்வையையும் உருக்குகின்ற பாவிகளாகிய பொதுமாதர்களின் கடைக்கண் பார்வையினால் அடியேன் அழியாதபடி, அறியாமையை விலக்கும் ஞானோபதேசத்தை, அடியேனுக் கென்றே

பெறும்படி, மிகவும் விருப்பங் கொண்டுள்ள அடியேன், ஊழ் வினையினால், மனத்தில் நினைக்கின்ற தீய குணங்களை விட்டு உய்யும்படி அஞ்சேல்'' என்று கூறி அருள்புரிவீராக.

## விரிவுரை

கலக்குங் கோதற வடிக்குஞ்சீரிய கருப்பஞ்சாறெனு மொழியாலே :—

கோது முதலிய குற்றம் அகன்ற கருப்பஞ் சாறுபோல இனிக்க இனிக்கப் பொதுமாதர்கள் பேசுவார்கள். அவ்வாறு பேசி ஆடவர்களின் உள்ளத்தையும் உணர்வையும் நீராக உருக்கி விடுவார்கள்.

போதகம் எனக் கென்றே பெற விருப்பம் சாலவும் உடையேனுன் :—

அருணகிரிநாதர் யாரும் பெறாத ஞானத்தையும், வாக்கு வன்மையையும் பெறவேண்டும் என்ற விருப்பங் கொண்டிருந் தார். "பிறருக்குக் கிட்டாத வகையில் சிறப்பாக நான்ஞானம் பெற்று விளங்க வேண்டும்'' என்று விரும்புகின்றார்.

"எனக்கென்றப் பொருள் தங்க
தொடுக்கும் சொல் தமிழ் தந்திப் படியாள்வாய்"
—(பருத்தந்தம்) திருப்புகழ்.

"சீருந்திருவும் பொலியச் சிவலோக நாயகன் சேவடிக்கீழ்
ஆரும் பெறாத அறிவுபெற்றேன்; பெற்றது ஆர்பெறுவார்"
—திருப்பல்லாண்டு

அழைத்துன் சீரிய கழற் செந்தாமரை அடுக்கும் போதகமுடை யோராம் சிலர்க் கன்றேகதி பலிக்குந்தேசிக :—

முருகனுடைய திருவடிகளைச் சார்ந்து சிவஞான போதகம் உடைய அடியார்களை, முருகன் தானே வலிய அழைத்துத் தாமதம் இன்றி அப்பொழுதே அருள் வழங்குவான். பாலிக் கும் என்ற சொல் பலிக்கும் என வந்தது.

"அடியவர் இச்சையில் எவையெவை யுற்றன
அவை தருவித்தருள் பெருமாளே"
—(கலகலென்சிகில) திருப்புகழ்.

கூப்பிட்டு அருள் வழங்கும் அருளாளன் ஆறுமுகன்.

திருச்செங்கோபுர வயலூரா :—

வயலூரில் அழகிய கோபுரம் அருணகிரியார் காலத்தி லேயே சிறந்திருந்தது.

திதிக்கும் பார்வயின் மதிப்புண்டாகிய திருச்செங்கோடு :—

*திதிக்கும்—காத்தல், பார் வயின்—பூமியிடத்தே. முருகப் பெருமானுல் காப்பாற்றப்படுகின்ற இப்பூமியின் கண் மிகவும் மதிப்புடைய திருத்தலம் திருச்செங்கோடு என சுவாமிகள் தெரிவிக்கின்றுர்கள்.*

### கருத்துரை

திருச்செங்கோட்டு வேலவா! மனமாசு அற அஞ்சேல் என்று கூறி ஆட்கொள்வீர்.

## 147

துஞ்சு கோட்டிச் சுழற்கண் காட்டிக்
கொங்கை நோக்கப் பலர்க்குங் காட்டிக்
கொண்ட ணுப்பித் துலக்கஞ் சீர்த்துத் திரிமாஞர்
தொண்டை வாய்ப்பொற் கருப்பஞ் சாற்றைத்
தந்து சேர்த்துக் கலக்குந் தூர்த்தத்
துன்பவாழ்க்கைத் தொழிற்பண்டாட்டத் துழலாதே
கஞ்சம் வாய்த்திட் டவர்க்குங் கூட்டிக்
கன்று மேய்த்திட் டவர்க்குங் கூற்றைக்
கன்ற மாய்த்திட் டவர்க்குந் தோற்றக் கிடையாநீ
கண்டு வேட்டுப் பொருட்கொண் டாட்டத்
தின்ப வாக்யத் தெனக்குங் கேட்கத்
தந்து காத்துத் திருக்கண் சாத்தப் பெறுவேனே
வஞ்ச மாய்ப்புக் கொளிக்குஞ் சூற்கைத்
துன்று சூர்ப்பொட் டெழச்சென் ருேட்டிப்
பண்டுவாட்குட்களிக்குந் தோட்கொத் துடையோனே
வண்டு பாட்டுற் றிசைக்குந் தோட்டத்
தண்கு ராப்பொற் புரக்கும் பேற்றித்
தொண்டர்கூட்டத்திருக்குந் தோற்றத் திளையோனே
கொஞ்சு வார்த்தைக் கிளித்தண் சேற்கட்
குன்ற வேட்டிச் சியைக்கண் காட்டிக்
கொண்டுவேட்டுப்புனப்பைங் காட்டிற் புணர்வோனே
கொங்கு லாத்தித் தழைக்குங் காப்பொற்
கொண்ட லார்த்துச் சிறக்குங் காட்சிக்
கொங்கு நாட்டுத் திருச்செங்கோட்டுப்பெருமாளே.

## பதவுரை

வஞ்சம் ஆய் புக்கு ஒளிக்கும் - வஞ்சகமாகப் புகுந்து ஒளிக்கும், சூல் கை - சூலம் ஏந்திய கையையுடைய, துன்று சூர்பொட்டு எழ - நெருங்கிய சூரபன்மன் அழியும்படி, சென்று ஓட்டி - போர்க்களஞ் சென்று அவனை ஓட வைத்து, பண்டு வாட்கு உள் களிக்கும் - முன்னாள் வாளாயுதத்துள் செலுத்தி மகிழும், தோள் கொத்து உடையோனே-கொத்தாக தோள்களை யுடையவரே! வண்டு பாட்டு உற்று இசைக்கும் - வண்டு பொருந்திய பாடல் பாடும், தோட்ட - தோட்டத்தில் உள்ள, தண் குரா பொற்பு உர - குளிர்ந்த குராமலர் அணிந்த அழகிய திருமார்பையுடையவரே! கும்பு ஏற்றி தொண்டர் கூட்டத்து இருக்கும் தோற்றத்து இளையோனே - கும்பு கூட்டி அடியார் கூட்டத்தில் இருந்து காட்சியளிக்கும் இளம் பூரணரே! கொஞ்சு வார்த்தை கிளி - கொஞ்சும் சொற்களையுடைய கிளி போன்றவரும், தண் சேல்கண் - குளிர்ந்த சேல் மீன் போன்ற கண்களையுடையவரும், குன்ற வேட்டிச்சியை - மலையில் வாழும் வள்ளி நாயகியாரை, கண் காட்டி கொண்டு - கண்காட்டி அழைத்துபோய், வேட்டு புன பைகாட்டில் புணர்வோனே - அவரை விரும்பி தினைப்புனத்துக்கு அடுத்த பசுங்காவில் அணைந்தவரே! கொங்கு உலாத்தி - வாசனையை வீசி உலவச்செய்து, தழைக்கும் கா - தழைத்துள்ள சோலைகளில், பொன் கொண்டல் ஆர்த்து சிறக்கும் காட்சி - அழகிய மேகங்கள் நிறைத்து சிறக்குங் காட்சியைக் கொண்ட, கொங்கு நாட்டு - கொங்கு நாட்டில் உள்ள, திருச்செங்கோட்டு - திருச்செங்கோட்டில் எழுந்தருளி யுள்ள, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! துஞ்சு கோட்டி சுழல் கண்காட்டி - சோர்வு உற்றது போல் கண்களைச் சுழற்றிக்காட்டி, கொங்கை நோக்க பலர்க்கும் காட்டி - தனங்கள் தெரியும்படி பலருக்கும் காட்டி, கொண்டு அணுப்பி - அழைத்துக் கொண்டு போய் ஏமாற்றி, துலக்கம் சீர்த்து - தங்கள் பெருமை விளங்க, திரிமானார் - திரிகின்ற மாதர்களின், தொண்டை வாய் - கொவ்வைக்கனி போன்ற வாயிதழின், பொன் கருப்பம் சாற்றை தந்து - அழகிய கருப்பஞ் சாற்றினைப் போன்ற இனிமையைத் தந்து, சேர்த்து கலக்கும் தூர்த்த - அணைத்துச்சேரும் கொடிய, துன்ப வாழ்க்கை தொழில் - துன்ப வாழ்க்கைத் தொழிலாகிய, பண்டு ஆட்டத்து உழலாதே - பழைய ஆட்டங்களில் சுழன்று திரியாமல், கஞ்சம் வாய்த்திட்டவர்க்கும் - தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமனுக்கும், கூட்டி கன்று மேய்த்திட்டவர்க்கும் - ஒன்று சேரச்செய்து கன்றுகளை மேய்த்த திருமாலுக்கும், கூற்றை கன்ற மாய்த்திட்டவர்க்கும் - இயமன் வாட்டமுற்று மாயும் படிச்செய்த சிவமூர்த்திக்கும், தோற்ற கிடையா நீ - காண்பதற்கு அரியவராகத் திகழும் தேவரீர், கண்டு - அடியேனைப் பார்த்து, வேட்டு - என்மீது விருப்பம் வைத்து, பொருள் கொண்டாட்டத்து - கொண்டாடத் தக்க பொருள் அமைந்த, இன்ப வாக்யத்து - இன்ப உபதேச வாக்கியத்தை, எனக்கும் கேட்க - அடியேனும் கேட்குமாறு, தந்து காத்து - உபதேசித்துக் காத்தருளி, திருக்கண் சாத்த பெறுவேனோ - உமது திருக்கண்ணோக்கம் படுமாறு அருளும் பெரும் பேற்றினை அடியேன் பெறுவேனோ?

## பொழிப்புரை

வஞ்சனையாய் கடலிற் சென்று ஒளித்த—சூலத்தையேந்திய சூரபன்மனை ஓடச்செய்து, அவனை வேலினால், அழியும்படிச் செய்து மகிழும் பன்னிரு தோள்களையுடையவரே! வண்டுகள் சென்று இசைபாடும் சோலையில் மலரும் குளிர்ந்த குராமலர் அணிந்த அழகிய திருமார்பையுடையவரே! கூட்டமாகக்கூடிய அடியார்களின் சபை நடுவில் காட்சியளிக்கும் இளம்பூரணரே! கொஞ்சும் கிளிபோன்ற சொற்களையுடையவரும், குளிர்ந்த சேல்மீன் போன்ற கண்களையுடையவரும், மலையில் வாழ்பவருமாகிய வள்ளி பிராட்டியாரைக் கண்காட்டி அழைத்துக் கொண்டு போய், வேடர்களின் தினைப்புனம் உள்ள கானகத்தில் தழுவிக் கொண்டவரே! வாசனை வீசிப் பரப்பித் தழைக்கின்ற சோலைகளில் மேகங்கள் நிறைந்து சிறக்குங் காட்சியுடைய கொங்கு நாட்டில் விளங்கும் திருச்செங்கோட்டில் வாழும் பெருமிதம் உடையவரே! சோர்வுற்றது போல் கண்களைச் சுழற்றிக் காட்டி, தனங்கள் தெரியும்படி பலருக்குங் காட்டி, அழைத்துக் கொண்டு போய் ஏமாற்றித் தங்கள் பெருமை ஓங்கத்திரிகின்ற பொது மாதர்களின், கொவ்வைக் கனி போன்ற வாயிதழின் கரும்புச்சாறு போன்ற இனிமையைத் தந்து மருவுகின்ற கொடிய துன்ப வாழ்க்கைத் தொழிலாகிய பழைய ஆட்டங்களில் அடியேன் சுழன்று திரியாமல், தாமரை மலரில் வாழும் பிரம தேவனுக்கும், ஒன்றுபடுத்திப் பசுவின் கன்றுகளை மேய்த்த திருமாலுக்கும். இயமனை வாடும்படிமாய்த்த சிவமூர்த்திக்கும் காண்பதற்கு அரியவரான தேவரீர், அடியேனை ஒரு பொருளாகக் கருதி என்னைக்கண்டு விரும்பி, கொண்டாடத்தக்க பொருள் அமைந்த இன்ப உபதேச வாக்கியத்தை அடியேன் கேட்டு உணரும்படி திருக்கண்ணோக்கம் செய்யும் பெரும் பேற்றினை அடியேன் பெறுவேனோ?

## விரிவுரை

துன்ப வாழ்க்கைத் தொழிற்பண்டாட்டத் துழலாதே :—

ஆசாபாசத்தில் சிக்கிக் கொண்டாட்டம் என்று துன்பத்தினால் துடித்து வாடுவது மாந்தர் இயல்பு.

கஞ்சம் வாய்த்திட்டவர்க்கும் கூட்டிக் கன்று மேய்த்திட்டவர்க்கும் கூற்றைக்
கன்ற மாய்த் திட்டவர்க்குந் தோற்றக் கிடையா நீ கண்டுவேட்டு:—

இந்த அடியில் முருகப் பெருமானுடைய பரத்துவங் கூறப்படுகின்றது.

பிரமதேவனுக்கும் திருமாலுக்கும், உருத்திர மூர்த்திக்குங் காணக் கிடையாதவர். இங்கு வரும் உருத்திரன் என்பவர் மூவரில் ஒருவர்; சிவம் வேறு, உருத்திரர் வேறு. அயன் அரி அரன் என்ற மூவருக்கும் அரியர் முருகர்.

"இத்தகைய மூவர்க்குங் கிடையாத நீர் சிறியவனாகிய அடியேனை வலியவந்து கண்டு, என்னை விரும்பியாட் கொள்ள வேண்டும்" என்று சுவாமிகள் மிகவும் உருக்கமாக விண்ணப் பஞ் செய்கின்றார்.

பொருட் கொண்டாட்டத் தின்ப வாக்யத் தெனக்குங் கேட்கத் தந்து காத்து :—

"கொண்டாடத் தக்க பொருள் அமைந்த இன்ப உபதேச வாக்கியத்தை அடியேனுங் கேட்டு உய்யும்படி உபதேசித் தருளுவீர்."

இந்தப் பாடலில் சுவாமிகள் விண்ணப்பித்தவாறு, முருகன் அவருக்கு உபதேசித்தருளினார்.

தேனென்று பாகென்றுவமிக் கொணு மொழித் தெய்வ வள்ளிக்
கோனன் றெனக்குப தேசித்த தொன்றுண்டு கூறவற்றே
வானன்று காலன்று தீயன்று நீரன்று மண்ணுமன்று
தானன்று நானன்று அசரீரியன்று சரீரியன்றே. —கந்தரலங்காரம் (9)

திருக்கண் சாத்தப் பெறுவேனோ :—

"முருகா! உமது திருக்கண்ணால் அடியேனை நோக்கி அருள் புரியும்" என்று இப்பாடலில் வேண்டுகின்றார். இந்த விண்ணப்பத்தின் படியே முருகன் அருணகிரிநாதரை அருட் கண்ணால் நோக்கி ஆட்கொண்டார்.

"கனகத்தினு நோக்கினிதாயடி
யவர் முத்தமிழாற் புகவே பர
கதி பெற்றிட நோக்கிய பார்வையு மறவேனே"
—(சதுரத்தரை—திருப்புகழ்)

தொண்டர் கூட்டத்திருக்குந் தோற்றத் தினையோனே :—

அடியார்களின் திருக்கூட்டத்தில் முருகவேள் இருந்து அருள்புரிவார்.

"பத்தர் கணப்ரிய நிர்த்த நடித்திகு
பட்சிந டத்திய குக" —திருப்புகழ்.

## கருத்துரை

திருச்செங்கோட்டுத் திருமுருகா! அடியேனுக்கு அருள் உபதேசம் புரிந்து அருட் கண்ணோக்கஞ் செய்தருள்வீர்.

## 148

நீலமஞ் சானகுழல் மாலைவண் டோடுகதி
நீடுபந் தாடுவிழி யார்பளிங் கானநகை
நீலபொன் சாபநுத லாசையின் தோடசையு
நீள்முகந் தாமரையி னூர்மொழிந் தாரமொழி
நேர்சுகம் போலகமு கானகந் தாரர்புய
நேர்சுணங் காவிகிளையேர்சிறந் தார்மலையி
ரண்டுபோல்

நீளிபங் கோடிளநிர் தேனிருந் தாரமுலை
நீடலங் காரசர மோடடைந் தார்மருவி
நீள்மணஞ் சாறுபொழி யாவளம் போதிவையி
னீலவண் டேவியநல் காமனங் காரநிறை
நேசகந் தானஅல்குல் காமபண் டாரமுதை
நேருசம் போகரிடை நூலொளிர்ந் தாசையுயிர்
சம்பையாரஞ்

சாலுபொன் தோகையமை பாளிதஞ் சூழ்சரண
தாள்சிலம் போலமிட வேநடந் தானநடை
சாதிசந் தானெகின மார்பரந் தோகையென
தானெழுங் கோலவிலை மாதரின் பார்கலவி
தாவுகொண் டேகலிய நோய்கள்கொண் டேபிறவி
தானடைந் தாழுமடி யேனிடஞ் சாலும்வினை
யஞ்சியோடத்

தார்கடம் பாடுகழல் பாதசெந் தாமரைகள்
தாழ்பெரும் பாதைவழி யேபடிந் தேவருகு
தாபம்விண் டேயமுத வூரியுண் டேபசிகள்
தாபமுந் தீரதுகிர் போனிறங் காழ்கொளுரு
சாரவுஞ் சோதிமுரு காவெனுங் காதல்கொடு
தானிருந்தோதஇரு வோர்கம் பேறுறுக
விஞ்சைதாராய்

சூலியெந் தாய்கவுரி மோகசங் காரிகுழை
தோடுகொண் டாடுசிவ காமசுந் தாரிநல
துளபணந் தாளிநிரு வாணியங் காளிகலை
தோகைசெந் தாமரையின் மாதுநின் றேதுதிசெய்
தூயஅம் பாகமைகொள் தோளிபங் காளக்ருபை
தோய்பரன் சேயெனவு மேபெரும் பார்புகழும்
விந்தையோனே

சூரசங் காரசுரர் லோகபங் காவறுவர்
தோகைமைந் தாகுமர வேள்கடம் பாரதொடை
தோளகண் டாபரம தேசிகந் தாவமரர்
தோகைபங் காஎனவெ தாகமஞ் சூழ்சுருதி
தோதகம் பாடமலை யேழுதுண் டாயெழுவர்
சோரிகொண் டாறுவர வேலெறிந் தேநடன
முங்கொள்வேலா

மாலியன் பாறவொரு ஆடகன் சாகமிகு
வாலியும் பாழிமர மோடுகும் பாகனனு
மாழியுங் கோரவலி ராவணன் பாறவிடு
மாசுகன் கோலமுகி லோனுகந் தோதிடையர்
மாதுடன் கூடிவிளை யாடுசம் போகதிரு
மார்பகன் காணமுடி யோனணங் கானமதி
யொன்றுமானே

மார்புடன் கோடுதன பாரமுஞ் சேரஇடை
வார்துவண் டாடமுக மோடுகந் தீரரச
வாயிதங் கோதிமணி நூபுரம் பாடமண
வாசைகொண் டாடுமயி லாளிதுங் காகுறவி
மாதுபங் காமறைகு லாவுசெங் கோடைநகர்
வாழவந் தாய்கரிய மாலயன் தேவர்புகழ்
தம்பிரானே.

**பதவுரை**

சூலி - சூலத்தை யேந்தியவள், எம்தாய் - எங்கள் அன்னை, கவுரி - பொன்னிறமுடையவள், மோக சங்காரி - ஆசையை யறுப்பவள், குழை

தோடு கொண்டு ஆடு - குழையும் தோடும் பூண்டு நடனஞ் செய்கின்ற, சிவ காம சுந்தரி - சிவத்தை விரும்புகின்ற அழகி, நல தூள் அணிந்து ஆளி - நல்ல விபூதியணிந்து ஆள்பவள், நிருவாணி - திகம்பரி, அம்காளி - அழகிய காளி, கலைதோகை - கலைமகளும், செம் தாமரையின் மாது-சிவந்த தாமரை யில் வாழுகின்ற இலக்குமியும், நின்றே துதி செய்-நின்று துதிக்கின்ற, தூய அம்பா - பரிசுத்தமான அன்னை, கழை கொள் தோளி - மூங்கில் போன்ற தோளையுடையவளாய் விளங்கும் தேவியை, பங்காள - பங்கில் உடைய வராய், க்ருபை தோய் பரன் - கருணை நிறைந்த சிவபெருமானுடைய, சேய் எனவும் - திருக்குமாரர் என்று, பெரும் பார் புகழும் - பெரிய உலகம் புகழு கின்ற, விந்தையோனே - விசித்திரமுடையவரே! சூர சங்கார - சூரனை சங் கரித்தவரே! சுரா லோக பங்கா - தேவலோகத்துக்கு வேண்டியவரே! அறு வர் தோகை மைந்தா - ஆறு கார்த்திகைப் பெண்களின் புதல்வரே! குமர வேள் - குமரவேளே! கடம்பு ஆர தொடை தோள - கடப்ப மலர் நிறைந்த மாலையணிந்த தோளனே! கண்டா - வீரரே! பரம தேசிக - பெரிய குரு நாதரே! அந்தா - அழகரே! அமரர் தோகை பங்கா என - தேவகுமாரியாகிய தெய்வயானையின் கணவரேயென்று, வேதாகமம் சூழ் - வேதாகமங்கள் ஆய்ந்த தேவர்கள், சுருதி - முறையீடு, தோதகம் பாட - தங்கள் வருத்தத் தை எடுத்துக்கூற; மலை ஏழு துண்டாய் - ஏழுமலைகளும் துண்டாகிப் பொடி பட, எழுவர் - அம்மலைகளிலிருந்து எழுந்த அசுரர்கள், சோரி கொண்டு ஆறுவர - உதிரம் ஆறுகப் பெருகிவர, வேல் எறிந்தே - வேலாயுதத்தை விடுத்து, நடனமும் கொள் - நடனஞ் செய்த, வேலா - வேலாயுதத்தையுடை யவரே! மாலியன் பாற - மாலியவான் சாகவும், ஒரு ஆடகன் சாக - ஒப் பற்ற இரணியன் இறக்கவும், மிகு வாலியும் - வலி மிகுந்த வாலியும், பாழி மரமோடு - பருத்த மரமும், கும்பாகனனும் - கும்பகர்ணனும், ஆழியும் - கடலும், கோர வலி ராவணன் பாற விடும் - பயங்கரமான வலிமை கொண் டிருந்த இராவணனும் இறக்குமாறு விடுத்த, ஆசுகன் - அம்பினையுடைய வரும், கோல முகிலோன் - அழகிய மேக நிறத்தினனும், உகந்து ஓது இடை யர் மாதுடன் கூடி - மகிழ்ச்சியுடன் துதிக்கின்ற ஆயர் குலமாதர்களுடன் சேர்ந்து, விளையாடு சம்போக - விளையாடி மருவியவரும், திருமார்பகன் - இலக்குமியை மார்பில் கொண்டவரும், கானமுடியோன் - பொன் முடியி னரும் ஆகிய திருமாலின், அணங்கு ஆன - புதல்வியாகிய, மதி ஒன்றும் ஆனை - அறிவு பொருந்திய தெய்வயானையின், மார்புடன் - திருமார்பும், கோடு தனபாரமும் சேர - மலை போன்ற தனபாரமும் பொருந்த, இடைவார் துவண்டாட - இடையின் நுண்மை நெகிழ்ந்து அசையவும், முகமோடு உகந்து - அவருடைய திருமுகத்தில் மகிழ்ச்சியுற்று, ஈரரச - கருணைரசத் துடன், வாய் இதம் கோதி - வாயிலிருந்துவரும் இனிமையை அனுபவித்து, மணி நூபுரம் பாட-இரத்தினச் சிலம்பு ஒலிக்க, மண ஆசை கொண்டாடும் மயிலாளி - அவரை மணக்கும் காதலைப் பாராட்டும் மயில் வாகனரே! துங்கா - தூயவரே! குறவி மாதுபங்கா - வள்ளியம்மையின் கணவரே! மறை குலாவு - வேதம் முழங்கும், செங்கோடை நகர் வாழ வந்தாய் -

திருச்செங்கோட்டு நகரில் வாழ வந்தவரே! கரியமால் அயன் தேவர் புகழ் - கரிய நிறமுள்ள திருமாலும் பிரமனும் தேவர்களும் புகழுகின்ற! தம்பிரானே - தனிப்பெருந்தலைவரே! நீல மஞ்சு ஆனகுழல் - கரிய மேகம் போன்ற கூந் தலில் உள்ள, மாலை வண்டு ஓடு கதி - வண்டுகள் மொய்க்கின்ற நிலையும், பந்து ஆடு - பந்தாடுவது போல் அங்கும் இங்கும் புரள்கின்ற, நீடு விழியார் - நீண்ட கண்களையுடையவர்கள், பளிங்கு ஆன நகை - பளிங்கு போன்ற வெண்மையான பற்களும், நீல பொன் சாபந்தல் - கரிய அழகிய வில் போன்ற புருவமும், ஆசையின் தோடு அசையும் - பொன்தோடு அசை கின்ற, நீள்முகம் தாமரையினர் - ஒளி நீளுகின்ற தாமரை போன்ற முகத் துடன் விளங்குபவர்கள், மொழிந்து ஆரமொழி சுகம் போல நேர் - பேசி நிறையும் பேச்சுக்கள் கிளியின் மொழியை நிகர்ப்பவர்கள், கமுகு ஆன கந் தரர் - பாக்கு போன்ற கழுத்தினர், புயம் நேர் - தோள்கள் பொருந்திய, சுணங்கு - தேமலோடு, ஆவி - வாசனை கொண்டு, கிளை ஏர் சிறந்தார்-மூங் கிலின் அழகைக் கொண்ட சிறப்பினர்கள், மலை இரண்டு போல - இரண்டு மலைகள் போலவும், நீளியங்கோடு - நீண்ட யானைக் கொம்பு, இளநிர் - இளநீர், தேன் இருந்த ஆர முலை - தேன் போன்று இனிக் கும் முத்துமாலை யணிந்த கொங்கையர், நீடு அலங்கார சரமோடு அடைந்தார் - நீண்ட அலங்காரமான கழுத்து அணியுடன் கூடியவர்கள், மருவி நீள்மணம் சாறு பொழி அ வளம் - மிகுந்த நறுமணம் பொருந்திய கலவைச் சந்தனம் உள்ள அந்த வள்ளம் போன்ற வயிற்றினர்; போது இவையின் நீலவண்டு ஏவிய - மலர்க்கணைகளுள் நீலோற்பல பாணத்தை ஏவிய, நல்காமன் அங்காரம் நிறை - நல்ல மன்மதனுடைய அகங்காரம் நிறைந்ததும், நேச சந்தான - அன்புள்ள சந்ததியைத் தருகின்றதுமான, அல்குல் காமபண்டார அமுதை நேரும் சம்போகர் - அல்குலாகிய காம நிதியான அமுதத்தைத் தருகின்ற சம்போகத்தினர்; இடை நூல் ஒளிர்ந்து - இடையானது நூல் போல மெல் லியதாய் விளங்கி, ஆசை உயிர் சம்பை யார் - திசைகளில் வாய்விட்டு மின்னும் மின்னலைப் போன்றவர்கள், அம் சாலும் பொன் தோகை அமை - அழகு நிறைந்த பொன் சரிகையிட்ட முன் தானையமைந்த, பாளிதம் சூழ் சரணதாள் - பட்டுப்புடவை சூழ்ந்துள்ளதும் இளைஞர்கள் சரணம் அடையக் கூடியதுமான பாதத்தில், சிலம்பு ஓலம் இட நடந்து - சிலம்பு ஒலிக்க நடந்து, ஆன நடை - கூடிய நடையானது, சாதி சந்தான் எகினை - உயர்ந்த வமிசத்து அன்னம் எனவும், மார்பர் - மார்பையுடையவராய், அம் தோகை என தான் - அழகிய மயில் என்னவும், எழும் கோல விலை மாதர் - எழுந்து தோன்றும் அழகிய விலை மகளிரின், இன்பு ஆர் கலவி - இன்பம் நிறைந்த சேர்க்கையில், தாவு கொண்டே - பாய்தலைக்கொண்டு, கரிய நோய்கள் கொண்டே - துன்பத்தைத்தரும் நோய்களையடைந்து, பிறவிதான் அடைந்து ஆழும் - பல பிறவிகளையடைந்து துன்பத்தில் அழுந்துகின்ற, அடியேன் இடம் - அடியேனிடத்தில், சாலும் வினை அஞ்சி ஓட - நிறைந்த வினைகள் அஞ்சி விலக, தார் கடம்பு ஆடு - கடப்ப மலர் மாலை அசைகின்றதும்,

கழல் - வீரக் கழலையணிந்ததுமான, பாத செந்தாமரைகள் - பாதமாகிய செந்தாமரையை, தாழ் பெரும் பாதை வழியே படிந்து - வணங்குகின்ற பெரிய வழியில் பொருந்தி, வருகு தாபம் விண்டே-அடுத்துவரும் தாகங்களை ஒழித்து, அமுத வாரி உண்டே - அமுத வெள்ளத்தைப்பருகி, பசிகள் தாபமும் தீர - பசியுந் தாகமுந் தீர, துகிர் போல் நிறம் - பவளம் போல நிறமும், காழ்கொள் உரு சாரவும் - ஒளி கொண்ட உருவம் பொருந்த, சோதி முருகா எனும் காதல் கொடு - "ஜோதி முருகா" என்று கூறும் விருப்பத்தைக் கொண்டு, தான் இருந்து ஓத - மன அமைதியுடன் இருந்து ஓத, இரு ஓர் அகம் பேறு உறுக - பெருமை பொருந்திய ஒப்பற்ற உள்ளம் பேறு பெறும்படியான, விஞ்சை தாராய் - ஞானத்தைத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

திரிசூலத்தை ஏந்தினவளும், எமது அன்னையும், பொன்னிறமுடையவரும், ஆசையைப் போக்குபவளும், குழையுந் தோடும் பூண்டு ஆடுகின்ற சிவபெருமானை விரும்பும் அழகியும், நல்ல விபூதியை அணிந்து காப்பாற்றுபவளும், திகம்பரியும், அழகிய காளியும், கலைமகளும் திருமகளும் நின்று துதிக்கின்ற தூய அன்னையும், மூங்கில் போன்ற திரண்ட தோளையுடையவளும் ஆகிய உமாதேவியைப் பாகத்தில் கொண்ட கருணை நிறைந்த பரசிவத்தின் புதல்வர் என்று பெரிய உலகத்தவர் புகழும் விசித்திரமுடையவரே! சூரனைச் சங்கரித்தவரே! தேவலோகத்துக்கு உரியவரே! ஆறு கார்த்திகை மாதர்களின் மைந்தரே! குமாரக் கடவுளே! உபகாரியே! கடப்ப மலர்மாலையணிந்த புயத்தையுடையவரே! வீரரே! சிவகுருவே! அழகரே! தேவ குமாரியாகிய தெய்வயானையின் கணவரே! என்று வேதங்களையும் ஆகமங்களையும் ஆய்ந்த தேவர்கள் முறையிட்டின் ஒலியானது உமது ஆற்றலைப்பாட, ஏழுமலைகளும் துண்டாகப் பொடிபட, அம்மலைகளிலிருந்து எழுந்திருந்த அசுரர்களின் உதிரம் பெருகி ஆறாகிவர, வேலைவிடுத்து நடனம் கொண்ட வேலவரே! மாலியவான் இறக்கவும் ஒப்பற்ற இரணியன் அழியவும், வலிமை மிகுந்த வாலியும், பருத்த மராமரமும், கும்பகர்ணனும், கடலும், பயங்கரமான வலிமை கொண்ட இராவணனும் அழியவும், செலுத்திய அம்பையுடையவரும், அழகிய மேகவண்ணரும், மகிழ்ச்சியுடைய கோபிகைகளுடன் கூடி விளையாடிக் கலந்தவரும், இலக்குமியைத் தரித்த திருமார்பினரும், பொன்மகுடம் பூண்டவருமாகிய திருமாலின் புதல்வியாகிய அறிவு நிறைந்த தெய்வயானையம்மையின் மார்பும் மலை போன்ற தனமும் பொருந்தவும், இடையின் நுட்பம்

நெகிழ்ந்து அசையவும், திருமுகத்தில் மகிழ்ச்சியுற்று, கருணா ரசத்துடன் வாயிலிருந்து வரும் இனிமையை நுகர்ந்தும், இரத்தினச் சிலம்பு ஒலிக்கவும், அவரை மணக்குங் காதலைப் பாராட்டியும் மகிழ்ந்த மயில் வாகனரே! தூயவரே! வள்ளி நாயகிக்கு நாயகரே! வேதமுழக்கம் விளங்கும் திருச்செங்கோட்டு நகரில் வாழ வந்தவரே! கருநிறம் படைத்த திருமாலும் பிரமனும் தேவர்களும் புகழும் தனிப் பெருந்தலைவரே! கரிய மேகம் போன்ற கூந்தலில் உள்ள மாலையில் வண்டுகள் மொய்க்கின்ற நிலையும், பந்துபோல் புரள்கின்ற நீண்ட கண்களும் உடையவர்கள்; பளிங்கு போன்ற வெண்ணிறமுடைய பற்களும், கரிய வில் போன்ற அழகிய புருவமும், பொன்தோடு அசையும் ஒளிமிக்க தாமரை போன்ற முகமும் உடையவர்கள்; கிளியைப் போல் கொஞ்சும் மொழியை உடையவர்கள், பாக்கு போன்ற கழுத்தினர், தேமலும் வாசனையும் பொருந்திய மூங்கில் போன்ற தோள்களையுடையவர்கள்; இரு மலைகள் போலவும், நீண்ட யானைக்கொம்பு, இளநீர் போலவும், தேன்போல் இனித்தும், முத்துமாலை தரித்தும் விளங்குவதுமாகிய தனத்தினர்; நீண்ட அலங்காரமான கண்டசரம் தரித்தவர்கள்; நறுமணம் பொருந்திய கலவைச் சந்தனக்கிண்ணம் போன்ற வயிற்றினர்; நீலோற்பலக் கணையை ஏவிய நல்ல மன்மதனுடைய இறுமாப்பு நிறைந்ததும் அன்புக்கு இடமானதும் சந்ததியைத் தருகின்றதுமான அல்குல் என்ற காமநிதியாம் அமுதத்தைத்தரும் சம்போகத்தினர்; திக்குகளில் மின்னும் மின்னலைப் போன்ற-நூல் போன்ற நுண்ணிய இடையினர்; அழகு நிறைந்த பொற்சரிகையிட்ட முன்தானை அமைந்த பட்டுப்புடவை சூழ்ந்துள்ளதும் இளைஞர்கள் சரணம் புகுவதுமான காலில் சிலம்பு ஒலிக்க நடந்து, உயர்ந்த குலத்து அன்னம் போன்ற நடையினர்; அழகிய மார்பினர்; அழகிய மயில் போன்றவர்கள்; ஆகிய விலைமாதர்களின் இன்பம் நிறைந்த சேர்க்கையில் தாவிப்பாய்வதைக் கொண்டு, துன்பத்தைத் தருவதான நோய்களை யடைந்து, பல பிறவிகளை யடைந்து, வேதனையில் அழுந்தும் அடியேனிடத்தில் நிரம்பி வரும் வினைகள் அஞ்சியகல, கடப்பமலர் மாலை அசைகின்றதும், வீரக்கழலை யணிந்ததும், செந்தாமரை போன்றதுமாகிய திருவடியை விரும்பும் அப் பெருநெறியில் பொருந்தி, ஆசைகளை ஒழித்து, அருள் அமுத வெள்ளத்தைப் பருகி, பசியுந் தாகமும் நீங்க, பவள நிறமும் ஒளியுங் கொண்ட உருவமும்

பொருந்த, "ஜோதி முருகா" என்று கூறும் விருப்பங் கொண்டு, மன அமைதியுடன் இருந்து ஓத பெருமை வாய்ந்த ஒப்பற்ற உள்ளம் பேறு பெறும்படியான ஞானத்தைத் தந்தருள்வீராக.

## விரிவுரை

இத்திருப்புகழில் முதல் மூன்று அடிகள் பெண்களின் கேசாதிபாத வருணனையைக் கூறுகின்றார்.

சுணங்காவி கிளை :—

சுணங்கு—தேமல். ஆவி—வாசனை. கிளை—மூங்கில். பெண்களின் தோள் மூங்கிலைப் போலவும், தேமலும் வாசனையும் நிறைந்து அழகு செய்யும்.

சாறு பொழியாவளம் :—

சாறு பொழி அ வளம். வள்ளம்—என்ற சொல் வளம் என வந்தது. வள்ளம்—கிண்ணம். இது வயிற்றுக்கு உவமையாயிற்று.

நீலவண்டேவி :—

நீலம்—நீலோற்பல மலர். வண்டு—கணை.

அங்கார நிறை :—

அகங்காரம்—இறுகாப்பு. இறுமாப்பு நிறைந்த. அகங்காரம் என்ற சொல் அங்காரம் என வந்தது.

ஆசை உயிர் சம்பையார் :—

ஆசை—திசை. திசைகளில் வாய்விட்டு மின்னும் மின்னல் போன்ற இடையை உடையவர்கள்.

அஞ்சாறு பொன்தோகையமை பாளிதம் :—

அம்—அழகு. சாலும்—மிகுந்த. அழகு மிகுந்த பொன் சரிகைக் கரையமைந்த் முன்தானையுடன் கூடிய புடவை சூழ்கின்ற பாதம்.

பாத செந்தாமரைகள் தாழ் பெரும்பாதை வழியே படிந்து :—

முருகப் பெருமானுடைய திருவடியை வணங்குவதே உய்யும் பெருநெறியாகும். "பெருநெறி பிடித்தொழுக வேண்டும்" என்பர் இராமலிங்கர்.

அமுத வூாரியுண்டே பசிகள் தாபமுந் திர :—

இறைவனுடைய திருவருளாகிய ஆரமுதம் உண்டவர்க்குப் பசி தாகங்கள் பொருந்த மாட்டா.

"குகனெ குருபர னே என நெஞ்சிற்
புகழ அருள்கொடு நாவினில் இன்பக்
குமுளி சிவவமு தூறுக உந்திப் பசியாறி"
—திருப்புகழ்.

சோதி முருகா எனுங்காதல் கொடு தானிருந்தோத :—

"சோதி முருகா!" "சோதி முருகா!" என்று காதலுடன் தனிமையிலிருந்து ஓதுதல் வேண்டும்.

"காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார்" —தேவாரம்.

இரு வோரகம் பேறு :—

இரு—பெரிய—பெருமை. ஓர் —ஒப்பற்ற, அகம்—உள்ளம். பெருமை தங்கிய ஒப்பற்ற உள்ளத்தில் பேறு பெறும் ஞானத்தைத் தந்தருள்.

கவுரி :—

கவுரம்—பொன்னிறம்.

தூளணிந்தாள் :—

தூள்—விபூதி.

கழைகொள் தோளி :—

கழை—மூங்கில். மூங்கில் போன்ற உருண்ட தோள்களையுடையவள்.

"வேயுறு தோளிபங்கன்" —தேவாரம்.

பரம தேசிகந்தா :—

பரம தேசிக அந்தா. பரமனுக்குக் குருவே! அழகனே!

தோதகம் பாட :—

தோதகம்—வல்லமை. முருகனுடைய வல்லமையைப் பாடித் துதித்தார்கள்.

வேலெறிந்தே நடனமும் கொள்வோர் :—

வேலால் சூரனைச் சங்கரித்தவுடன் முருகவேள் துடிக் கூத்து ஆடியருளினார்.

"மாக்கடல் நடுவண் சூர்த்திறங் கடந்தோன்
ஆடிய துடியும்" —சிலப்பதிகாரம்

மாலியன் :—

மாலியவான். இவன் இராவணனுடைய சிறிய பாட்டன். தலைமை அமைச்சனுமாக இருந்து அறவுரை பகர்ந்தான்.

"மதிநெறி யறிவு சான்ற மாலியவான்" —கம்பராமாயணம்.

காண முடியோன் :—

காணம்—பொன்.

"காண மொன்றில்லை" —தேவாரம்

மறைகுலாவு செங் கோடை நகர் :—

திருச்செங்கோட்டில் எப்போதும் வேத முழக்கம் முழங்குகின்றது.

செழுமறை தேர் தென்றலை யம் புசகபூதர. —கந்தரந்தாதி (82)

கருத்துரை

திருச்செங்கோடடு முருகா! ஞானத்தைத் தந்தருள்வீர்.

149

பொன்ற லைப்பொய்க் கும்பி றப்பைத்
தும்ப றுத்திட் டின்று நிற்கப்
புந்தி யிற்சற் றுங்கு றிக்கைக் கறியாமே
பொங்கி முக்கிச் சங்கை பற்றிச்
சிங்கி யொத்தச் சங்கடத்துப்
புண்ப டைத்துக் கஞ்ச மைக்கட் கொடியார்மேல்
துன்று மிச்சைப் பண்ட னுக்குப்
பண்ப ளித்துச் சம்ப்ர மித்துத்
தும்பி பட்சிக் கும்ப்ர சச்செய்ப் பதிமீதே
தொண்டு பட்டுத் தெண்ட னிட்டுக்
கண்டு பற்றத் தண்டை வர்க்கத்
துங்க ரத்தப் பங்க யத்தைத் தருவாயே
குன்றெ டுத்துப் பந்த டித்துக்
கண்சி வத்துச் சங்க ரித்துக்
கொண்ட லொத்திட் டிந்த்ர னுக்கிச் சுரலோகா
கொம்பு குத்திச் சம்ப ழுத்தித்
திண்ட லத்திற் றண்டு வெற்பைக்
கொண்ட முக்கிச் சண்டை யிட்டுப் பொரும்வேழம்
சென்று ரித்துச் சுந்த ரிக்கச்
சந்த விர்த்துக் கண்சு கித்துச்
சிந்தை யுட்பற் றின்றி நித்தக் களிகூருஞ்
செண்ப கத்துச் சம்பு வுக்குத்
தொம்ப தத்துப் பண்பு ரைத்துச்
செங்கு வட்டிற் றங்கு சொக்கப் பெருமாளே.

## பதவுரை

குன்று எடுத்து - கிரவுஞ்சமலையை எடுத்து, பந்து அடித்து - பந்தடிப்பது போல் வேலால் எடுத்து எறிந்து, கண் சிவத்து - கண்கள் சிவந்து, சங்கரித்து - அதனை அழித்து, கொண்டல் ஒத்திட்டு - மேகத்தை யொத்துக் கைமாறு கருதாமல், இந்திரனுக்கு இ சுரலோகா - தேவலோகத்தை இந்திரனுக்கு ஈந்தவரே! கொம்பு குத்தி - கொம்பால் குத்தியும், சம்பு அழுத்தி - சம்பங்கோரை போன்ற நுனியால் அழுத்தியும், திண்தலத்தில் - திண்ணிய இப்பூமியில், தண்டு வெற்பை கொண்டு அமுக்கி - கதையையும் மலையையுங் கூட அடக்கி, சண்டை இட்டு - போர் செய்து, பொரும் வேழம் - எதிர்த்த யானையை, சென்று உரித்து - சென்று அதை உரித்து, சுந்தரிக்கு அச்சம் தவிர்த்து கண்சுகித்து - பார்வதிக்கு இருந்த பயத்தைப் போக்கிக் கண்களிப்புடன், சிந்தையில் பற்று இன்றி - திருவுள்ளத்தில் எதனிடத்தும் பற்று இன்றி, நித்தம் களிகூரும் - நாள்தோறும் மகிழும், செண்பகத்து - செண்பக மலரணியும், சம்புவுக்கு - சிவபெருமானுக்கு, தொம் பதத்து - த்வம் என்ற சொல்லுக்கு, பண்பு உரைத்து - விளக்க இயல்பை உபதேசித்து, செங்குவட்டில் தங்கு - திருச்செங்கோட்டில் வீற்றிருக்கும், சொக்க - அழகிய, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! பொன்றலை - இறத்தலையுடையதாய், பொய்க்கும் - நிலையில்லாததாயுள்ள, பிறப்பை - பிறப்பு என்பதை, தும்பு அறுத்திட்டு-அதன் தும்பினை அறுத்து, இன்று நிற்க - இன்று ஒரு நிலையில் நிற்கும்படி, புந்தியில் சற்றும் குறிக்கைக்கு அறியாமே - புத்தியில் சற்றேனும் குறித்து மேற் கொள்ள அறியாமல், பொங்கி முக்கி - சினந்தும் முயற்சிசெய்தும், சங்கை பற்றி - சந்தேகங் கொண்டும், சிங்கி ஒத்த சங்கடத்து புண்படைத்து - விஷம் போன்ற துன்பங்களால் மனம் புண்ணாகி, கஞ்ச மை கண் - தாமரை யொத்த மை பூசிய கண்களையுடைய, கொடியார்மேல்-மாதர்கள் மீது, துன்றும் இச்சை பண்டனுக்கு - ஆசை பொருந்திய பொருளாகிய எனக்கு, பண்பு அளித்து - நற்குணத்தை அளித்து, சம்ப்ரமித்து - சிறப்புறச்செய்து, தும்பி பட்சிக்கும் ப்ரச - வண்டு உண்ணும் தேனையுடைய, செய் பதிமீது - வயலூர் தலத்தில், தொண்டுபட்டு - தொண்டு செய்யும் தன்மையைக் கொண்டு, தெண்டன் இட்டு - அட்டாங்கமாக வீழ்ந்து கும்பிட்டு, கண்டு பற்ற - அடியேன் தெரிசித்து பற்றுமாறு, தண்டை வர்க்க - தண்டை முதலிய அணிகலன் அணிந்துள்ள, துங்க அரத்த பங்கயத்தை - தூய்மையும் செம்மையும் உடைய பாததாமரையை, தருவாயே - தந்தருளுவீராக.

## பொழிப்புரை

**கிரவுஞ்ச மலையை வேலாயுதத்தால் பந்து போல் எறிந்து கண்சிவந்து, அதனை அழித்து, மேகம் போல் கைமாறு கருதாது இந்திரனுக்குத் தேவலோகத்தை ஈந்தவரே! கொம்பினால் குத்தியும் சம்பங்கோரை போன்ற நுனியால் அழுத்தியும், திண்ணிய பூமியில் கதாயுதத்தையும் மலையையுங்கூட**

அடக்கக் கூடிய வலிமையுடன் போர் புரிந்த யானையை, அதன் முன் சென்று அதன் தோலை உரித்து, பார்வதிக்கு இருந்த அச்சத்தை யகற்றிக் கண் களிப்புடன், திருவுளத்தில் பற்று ஒன்றும் இன்றி தினந்தோறும் மகிழ்ச்சியடையும், செண்பக மலரணியும் சிவபெருமானுக்கு த்வம் என்ற சொல்லுக்கு விளக்கத்தை உபதேசித்துத் திருச்செங்கோட்டில் வீற்றிருக்கும் அழகிய பெருமிதம் உடையவரே! நிலையின்றி இறத்தலையுடைய பிறப்பின் தும்பையறுத்து, இன்று ஒரு ஒழுக்கத்தில் நிலைத்து நிற்கப் புத்தியில்சற்றேனும்மேற்கொள்ள அறியாமல்,சினந்தும் முயன்றும், சந்தேகங் கொண்டும், விஷம் போன்ற துன்பங்களால் மனம் புண்ணாகித் தாமரை போன்ற மை பூசியகண்களையுடைய மாதர்களின் மீது, ஆசை பொருந்தி நெருங்கிய எனக்கு நற்குணத்தையளித்து, வண்டு உண்ணுந் தேன் பொருந்திய பூந்தாதுக்களுடன் கூடிய வயலூரில் தொண்டுபட்டு, அஷ்டாங்க வணக்கம் செய்து உம்மைத் தெரிசித்துப் பற்றுதற்கு, தண்டை முதலிய அணிகலன்கள் அணிந்த, தூய சிவந்த பாத தாமரையைத் தந்தருளுவீராக.

## விரிவுரை

பொன்றலைப் பொய்க்கும் பிறப்பு :—

பொன்றுதல்—இறத்தல். பொய்—நிலைபேறு இல்லாதது. இறத்தலும் தோன்றி மறையுந் தன்மையும் உடையது இப் பிறப்பு.

தும்பறுத்து :—

பிறப்பையுண்டாக்கும் தும்பு போன்றது வினை. வினையொழிந்தால் பிறப்பு ஒழியும்.

துன்றுமிச்சைப் பண்டன்:—

இச்சை நெருங்கிய பொருளன். பண்டம்—பொருள்.

தும்பி பட்சிக்கும் ப்ரசம் :—

பிரசம்—தேன். வண்டு பருகுவது தேன்.

செய்ப்பதி மீதே தொண்டுபட்டுத் தெண்டனிட்டு :—

அருணகிரியாரை ஆட்கொண்ட திருத்தலம் வயலூர். அங்கு அருணகிரியார் தொண்டுபட்டார்.

தண்டைவர்க்கத் துங்கரத்தப் பங்கயம் :—

தண்டை, சிலம்பு, கிண்கிணி முதலிய அணிகலங்கள் அணிந்த பாதம்.

துங்கம் அரத்தம். துங்கம்—தூய்மை. அரத்தம்—சிவப்பு. தூய சிவந்த தாமரைத்தாள்.

சம்பழுத்தி :—

சம்பு—சம்பங்கோரை, சம்பங்கோரை போல் நுனியால் அழுத்தி.

சென்றுரிந்து :—

சிவபெருமான் கஜசம்மாரம் புரிந்த பெருமையை இது குறிக்கின்றது.

தொம்பதர் :—

தத்வமஸி. இது சாமவேத மகா வாக்கியம்.

தத்—அது, த்வம்—நீ, அஸி—ஆகின்றாய். அது நீ ஆகின்றாய்.

மஹா வாக்கியங்கள் நான்கு. அவைகளின் விவரம்.

தத்வமஸி :

சாமவேத சாந்தோக்ய உபநிடதம். இதன் பொருள் : அது நீ ஆகின்றாய்.

ப்ரக்ஞானம் பிரமம் :

ருக்வேதம்—ஐதரேயாரண்யகம்.

இதன் பொருள் : பெரிய ஞானமே சொரூபமாகவுள்ளது பிரமம்.

அயமாத்மா பிரம்மம் :

அதர்வணம் மாண்டூக்யம்.

அயம் ஆத்மா—இந்த ஆத்மா. ப்ரஹ்ம—பெரியது.

அஹம்ப்ரஹ்மாஸ்மி :—

யஜுர் வேதம். ப்ருஹதாரண்யகம்.

அஹம்—நான், பிரஹ்ம அஸ்மி—பிரம்மமாக இருக்கின்றேன். இவைகளின் சுருக்கம் ஸோஹம்.

இந்த நான்கு மகா வாக்கியங்களை சிரவணம் (1). மனனம் (2). நிதித்யாசனம் (தெளிதல்) (3). நிட்டை கூடுதல் (சமாதி) (4). என்று ரிபு கீதை கூறுகின்றது.

## கருத்துரை

திருச்செங்கோட்டுத் தெய்வமே! உமது பாத பங்கயந் தந்தருள்வீர்.

## 150

மந்தக் கடைக்கண் காட்டுவர்
கந்தக் குழற்பின் காட்டுவர்
மஞ்சட் பிணிப்பொன் காட்டுவ ரநுராக

வஞ்சத் திரக்கங் காட்டுவர்
நெஞ்சிற் பொருத்தங் காட்டுவர்
வண்பற் றிருப்புங் காட்டுவர் தனபாரச்

சந்தப் பொருப்புங் காட்டுவர்
உந்திச் சுழிப்புங் காட்டுவர்
சங்கக் கழுத்துங் காட்டுவர் விரகாலே

சண்டைப் பிணக்குங் காட்டுவர்
பண்டிட் டொடுக்கங் காட்டுவர்
தங்கட் கிரக்கங் காட்டுவ தொழிவேனோ

பந்தித் தெருக்கந் தோட்டினை
யிந்துச் சடைக்கண் சூட்டுமை
பங்கிற் றகப்பன் றாட்டொழு குருநாதா

பைம்பொற் பதக்கம் பூட்டிய
அன்பற் கெதிர்க்குங் கூட்டலர்
பங்கப் படச்சென் றோட்டிய வயலூரா

கொந்திற் புனத்தின் பாட்டிய
லந்தக் குறப்பெண் டாட்டொடு
கும்பிட் டிடக்கொண் டாட்டமொ டணைவோனே

குன்றிற் கடப்பந் தோட்டலர்
மன்றற் ப்ரசித்தங் கோட்டிய
கொங்கிற் றிருச்செங் கோட்டுறை பெருமாளே.

### பதவுரை

பந்தித்த - கட்டப்பட்ட, எருக்கம் தோட்டினை - எருக்கம் பூ மாலையை, இந்து சடை கண்சூடு - சந்திரனுடன் கூடிய சடையில் சூடுபவரும், உமை பங்கில்-உமாதேவியை ஒரு பாகத்தில் உடையவருமாகிய, தகப்பன் தாள்

தொழு - தந்தையாருடைய திருவடியைத் தொழுகின்ற, குரு நாதா - குரு நாதரே! பை பொன் பதக்கம் பூட்டிய - பசுமையாகிய பொன்னாலாகிய பதக்கத்தை அணிவித்த, அன்பர்க்கு எதிர்க்கும் கூட்டலர் பங்கப்பட - பக்தனை எதிர்த்து வந்த பகைவர்கள் தோல்வியடையும்படி, சென்று ஓட்டிய - அங்கு சென்று அவர்களைப் புறங்காட்டி ஓடச் செய்த. வயலூரா - வயலூர் வள்ளலே! கொந்தில் புனத்தின் பாட்டு இயல் - பூங்கொத்துக்கள் உள்ள தினைப் புனத்தில் பாடிக்கொண்டு இருந்த, அந்த குற பெண்டு ஆட்டொடு-அந்தக் குறமகளுடன் விளையாடி, கும்பிட்டிட கொண்டாட்டமொடு-கும்பிடுவதற்கு மிகுந்த மகிழ்ச்சி கொண்டு, அணைவோனே - தழுவியவரே! குன்றில் கடப்பம் தோட்டு அலர் - மலையில் கடப்ப மலர் மலரும், மன்றல் ப்ரசித்தம் கோட்டிய - வாசனையால் வரும் புகழைக் கொண்ட, கொங்கில் திருச்செங்கோடு உறை - கொங்கு நாட்டில் திருச்செங்கோட்டில் வாழ்கின்ற, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! மந்த கடைகண் காட்டுவர் - மெல்ல கடைக்கண்ணைக் காட்டுவர், கந்த குழல் பின் காட்டுவர் - வாசனை பொருந்திய கூந்தலை பின்பு காட்டுவர், மஞ்சள் பிணி பொன் காட்டுவர் - மஞ்சள் அணிந்த அழகைக் காட்டுவர், அநுராக வஞ்சத்து இரக்கம் காட்டுவர் - காமப்பற்று உள்ளவர் போல் வஞ்சனை செய்து இரக்கத்தைக் காட்டுவர்; நெஞ்சில் பொருத்தம் காட்டுவர் - உள்ளத்தில் பொருத்தம் இருப்பதாகக் காட்டுவர், வண் பல் திருப்பும் காட்டுவர் - வளப்பமான பற்களின் பாகங்களைக் காட்டுவர், தனபார சந்த பொருப்பும் காட்டுவர் - தனமான பாரமுள்ள அழகிய மலையையுங் காட்டுவர், உந்தி சுழிப்பும் காட்டுவர் - உந்தியின் சுழியையுங் காட்டுவர், சங்க கழுத்தும் காட்டுவர் - சங்குபோன்ற கழுத்தையுங் காட்டுவர், விரகாலே சண்டை பிணக்கும் காட்டுவர் - தந்திரமாக சண்டையிட்டு ஊடுதலையுங் காட்டுவர், பண்டு இட்டம் ஒடுக்கம் காட்டுவர் - பழமையான நேசம் ஒடுங்குதலையுங் காட்டுவர், தங்கட்கு இரக்கம் காட்டுவது ஒழிவேனோ - அத்தகைய பொது மகளிருக்கு தயைகாட்டுவதை அடியேன் விட மாட்டேனோ?

## பொழிப்புரை

**கட்டப்பட்ட எருக்க மலர்மாலையை, சந்திரனையணிந்த சடையிலே சூடுபவரும், உமையொருபாகரும் ஆகிய தந்தையின் திருவடியைத் தொழுகின்ற குருநாதரே! பசும்பொன்பதக்கத்தைச் சமர்ப்பித்த அன்பனை எதிர்த்து வந்த பகைவர்கள் தோல்வியுற்றுப் புறங்காட்டி யோடுமாறு செய்த வயலூர் வள்ளலே! பூங்கொத்துக்களுடன் கூடிய தினைப்புனத்தில் பாடிக்கொண்டிருந்த அந்தக் குறமாதை விளையாட்டாகக் கும்பிட்டு மகிழ்ச்சியுடன் மருவியவரே! மலையில் கடப்ப மலரின் வாசனையின் புகழ் கொண்ட, கொங்கு நாட்டில் திருச்செங்கோட்டில் எழுந்தருளியுள்ள பெருமிதமுடையவரே! மெல்லக்**

கடைக்கண் காட்டுவர், வாசனையுடைய கூந்தலைப்பின்பு காட்டுவர், மஞ்சள் அணிந்த அழகைக் காட்டுவர், மோகப்பற்று உடையவர் போல் வஞ்சனையாக நடித்து தங்கள் இரக்கத்தைக் காட்டுவர்; உள்ளத்தில் பொருத்தம் இருப்பதாகக் காட்டுவர், வளமையான புன்சிரிப்பைக் காட்டுவர், மலைபோன்ற அழகிய பெரிய தனங்களைக் காட்டுவர், சுழிந்த தொப்புளைக் காட்டுவர், சங்கம் போன்ற கழுத்தைக் காட்டுவர், தந்திரமாகச் சண்டையிட்டுப் பிணங்குவதைக் காட்டுவர், முன் இருந்த விருப்பத்தைக் குறைத்துக் காட்டுவர், இத்தகைய பொது மாதரிடம் தயை காட்டுவதை அடியேன் விடமாட்டேனோ?

## விரிவுரை

மந்தக்கடைக் கண் காட்டுவர் :—

மந்தம்—தாமதம். பொதுமாதர் மெதுவாகத் தமது கடைக்கண் பார்வையால் இளைஞரை ஈர்த்து வசப்படுத்துவார்கள்.

வண்பற்றிருப்புங் காட்டுவர் :—

வண் பல் திருப்பு. வளப்பமான பல்லின் பல திருப்பங்களைக் காட்டுவர்.

வண் பற்று இருப்பு. வளமையான ஆசையின் உறைவிடத்தைக் காட்டுவர் எனினும் அமையும்.

தகப்பன் தாட்டொழு குருநாதா :—

தகப்பனுருடைய தாளைத் தொழுகின்ற குருநாதா! தகப்பன் உமது தாளைத் தொழநின்ற குருநாதா! என்று இரு பொருள்கள் பயக்க நின்ற அருமைப்பாடுடையது.

பைம்பொன் பதக்கம்பூட்டிய அன்பற் கெதிர்க்கும் கூட்டலர் பங்கப்படச் சென் றேட்டிய வயலூரா :—

நல்லியக் கோடன் என்ற அரசன் முருக பக்தன். பகைவர்கள் அவனுடைய நகரை வளைத்துக் கொண்டார்கள். அவன் அஞ்சி முருகனை வழிபட்டான். முருகவேள் அவன் கனவில் தோன்றி ஒரு கேணியில் உள்ள தாமரை மலர்களைப் பறித்துப் பகைவர்கள் மீது ஏவுமாறு பணித்தருளினர். அவ்வாறே நல்லியக்கோடன் கேணியில் மலர்ந்துள்ள தாமரை மலர்களைப் பறித்து எறிந்தான். அவை வேல்களாகச் சென்று பகைவரை ஓட்டின. வேல் எறிந்து வென்ற ஊர் "வேலூர்"

என்று பேர் பெற்றது. இவன் வரலாறு சிறுபாணாற்றுப்படை என்ற சங்க நூலில் வருகின்றது.

" திறல்வேல் நுதியில் பூத்தகேணி
விறல் வேல் வென்றி வேலூர் "

இம்மன்னன் பைம் பொன்பதக்கம் சூட்டி முருகனை வழி பட்டிருக்க வேண்டும். அல்லது வேறு முருகனடியார் வரலாற்றைக் குறிக்கலாம். எத்தனையோ இனிய வரலாறுகள் விளக்கம் இன்றி மறைந்துவிட்டன.

கருத்துரை

திருச்செங்கோட்டில் விளங்கும் தேவ தேவா! பொது மாதரின் மையல் அற அருள்செய்வீர்.

## 151

மெய்ச்சார் வற்றே பொய்ச்சார் வுற்றே
நிச்சார் துற்பப் பவவேலை
விட்டே றிப்போ கொட்டா மற்றே
மட்டே யத்தத் தையர்மேலே
பிச்சா யுச்சா கிப்போ ரெய்த்தார்
பத்தார் விற்பொற் கழல்பேணிப்
பிற்பால் பட்டே நற்பால் பெற்றோர்
முற்பா லைக்கற் பகமேதான்
செச்சா லிச்சா லத்தே றிச்சே
லுற்று ணித்துப் பொழிலேறுஞ்
செக்கோ டைக்கோ டுக்கே நிற்பாய்
நித்தா செக்கர்க் கதிரோனல்
முச்சா லிச்சா லித்தாள் வெற்பாள்
முத்தார் வெட்சிப் புயவேளே
முத்தா முத்தீ யத்தா சுத்தா
முத்தா முத்திப் பெருமாளே.

பதவுரை

செம் சாலி சாலத்து ஏறி - செந்நெல் கதிர்க் கூட்டத்தில் ஏறி, சேல் உற்று - சேல்மீன்கள் அடைந்து, அணித்து பொழில் ஏறு - அருகில் உள்ள

சோலைகளில் சென்று சேரும் வளமையுள்ள, செங்கோட்டைக் கோடுக்கே நிற்பாய் - திருச்செங்கோட்டு மலையின் உச்சியில் நிற்பவரே! நித்தா - அழிவில்லாதவரே! செக்கர் கதிர் ஏனல் - சிவந்த கதிர்களைக் கொண்ட தினை. முசாலி சாலிதாள் வெற்பாள் - மூன்று போகம் விளையும் நெற்பயிர்தான் நிறைந்த மலையில் வாழும் வள்ளி பிராட்டியின், முத்து ஆர் - முத்துமாலை நிறைந்த, வெட்சி புயவேளே - வெட்சிமாலை அணிந்த புயத்தையுடைய உபகாரியே! முத்தா - முத்தி நிலைக்கு அதிபரே! முத்தி அத்தா - காருகபத்தியம் ஆகவனீயம் தட்சிணாக்கினி என்ற மூன்று வேதாக்கினிக்கும் தலைவரே!, சுத்தா - தூயவரே! முத்தா - முத்துககுமார சுவாமியே! முத்தி பெருமாளே - முத்தியைத் தரும் பெருமையிற் சிறந்தவரே! மெய் சார்வு அற்றே - உண்மையான சார்பை விட்டு, பொய் சார்வு உற்றே-பரமெய்யான துணையைப்பற்றி, நிச்ச ஆர் துற்ப - எப்பொழுதும் நிறைந்த துன்பமுள்ள, பவவேலைவிட்டு ஏறி - பிறவிப் பெருங்கடலைக் கடந்து கரையேறி, போக ஒட்டாமல் - அப்புறம போக வொட்டாமல், தேம் மட்டே - தேனும் இனிமையில் குறைந்ததுவேயென்று சொல்லத்தக்க, அ தத்தையர் மேலே- அந்த கிளிபோன்ற பொது மாதர் மீது, பிச்சு ஆய் - பைத்தியமாகி, உச்சாகி - உச்ச நிலையடைந்தவராகி, போர் எய்த்தார் - கலவிப் போரில் இளைத்தவர்கள், பத்தார் - பக்தர்களின், வில்பொன் கழல் பேணி - ஒளியும் அழகும் பொருந்திய திருவடியை விரும்பி (அந்த நல்ல தொண்டுகுருல்) பின் பால்பட்டே - பின்பு நல்ல வழியில் நின்று, நல் பால் பெற்றார் முன் - நல்ல ஒழுக்கத்தைப் பெற்றவர்களிடத்தின் முன், பாலை கற்பகமேதான் - தேவரீர் பாலை வனத்தில் கிடைத்த கற்பகமாம்போல் அருள்வாய்.

## பொழிப்புரை

செந் நெற்பயிர்க் கூட்டங்களின் மீது சேல் மீன்கள் ஏறி, அருகில் உள்ள சோலைகளில் செல்லும் வளமை மிக்க, திருச்செங்கோட்டின் மலையின் உச்சியில் நிற்பவரே! என்றும் உள்ளவரே! சிவந்த கதிர்களையுடைய தினைப்பயிரும், முப்போகம் விளையும் செந் நெல் வயலும் சூழ்ந்துள்ள மலையில் வாழும் வள்ளிநாயகின் மார்பில் உள்ள முத்துமாலைகள் பொருந்தும் வெட்சியணிந்த புயங்களுடைய உபகாரியே! அநாதி மல முத்தரே! ஆகவனீயம், காருகபத்தியம், தட்சிணாக்கினி என்ற மூன்று வகையாய வேதாக்கினிகட்குத் தலைவரே! தூயவரே! முத்தையரே! முத்தி நலம் வழங்கும் பெருமிதமுடையவரே! உண்மையான சார்பினைத் துறந்து, பொய்ம்மையான சார்பையடைந்து, நாளும் நிறைந்த துன்பத்தைத் தரும் பிறவிக் கடலைத் தாண்டிக் கரையேறி, அப்பால் போகாதபடி, தேனினும் இனிய சொற்களையுடைய கிளி போன்ற பொது மாதர்களின் மீது, பைத்தியமாய், உச்ச நிலையிற் சேர்ந்தவராகி,

கலவிப் போரில் இளைத்தவர்கள், பக்தர்களின் ஒளியும் அழகும் பொருந்திய திருவடிகளைப் பணிந்து, அந்த நல் தொண்டினால், பின்பு நல்ல வழியில் நின்று, நற்குணம் பெற்றவர்களிடத்தில். தேவரீர் பாலைவனத்தில் கிடைத்த கற்பகம் போல் அருள்புரிவீர்.

## விரிவுரை

மெய்ச்சார்வற்றே :—

ஆன்மா நல்ல உத்தமமான சார்பையடைதல் வேண்டும்.

> சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்
> சார்தரா சார்தரும் நோய். —திருக்குறள்

மூடர்கள் உத்தமரின் சார்பை விடுத்து பொய்ச்சார் படுத்துக் கெடுவர்.

நிச்சார் துற்பப் பவவேலே :—

நிச்ச ஆர் துற்பம். நிச்சம்—நித்தம். ஆர்—நிறைந்த. துற்பம்—துன்பம். பவவேலை—பிறவிக்கடல்.

விட்டேறிப் போ கொட்டாமல் :—

விட்டு ஏறிப்போக வொட்டாமல் தடுக்கும் மாதராசை.

தே மட்டே :—

தேம்—இனிமை, தேன். மட்டு—குறைவு.

மாதர்கள் சொல்லின் இனிமையை நோக்க தேனின் இனிமை குறைந்தது என்று சொல்லுவர் காமுகர்.

தத்தையர் :—

தத்தை-கிளி. கிளி போல் கொஞ்சிப் பேசும் பொதுமாதர்.

பிச்சாயுச்சாகி :—

அம்மாதர் மீது பிச்சு—பயித்தியமாவர். உச்சம்—அப் பைத்தியம் உச்சத்தையடைவர்.

போர் எய்த்தார் —

போர்—கலவிப் போர். எய்த்தல்—இளைத்தல். பொது மாதரின் சேர்க்கைப் போரில் இளைத்த இளைஞர்கள்.

பத்தார் விற் பொற் கழல் பேணி :—

பத்தர்களின் திருவடி ஒளியும் அழகும் பொருந்தியது. வில்—ஒளி. பொன்—அழகு.

பிற்பால் பட்டே :—

அவ்வாறு அடியார்களின் பாதத்துக்குத் தொண்டாகிய பின், அந்த அரிய தொண்டின் பயனால் நல்வழியில் நிற்கும் தன்மையுண்டாகும். பால்-தகுதி.

நற்பால் பெற்றூர் :—

பால்—குணம். நற்குணம் பெற்றவர்கள்.

பாலை கற்பகமே தான் :—

நிழலே இல்லாத—ஈரமே யில்லாத பாலைவனத்தில் ஒரு கற்பகம் எதிர்ப்பட்டால் எத்துணை இன்பம் பயக்கும். அது போல் முருகன் அடியார்க்கு அருள்புரிவார்.

அழல் மண்டு போழ்தின் அடைந்தவர்கட் கெல்லாம்
நிழல்மரம்போல் நேரொப்பத் தாங்கிப்—பழுமரம்போல்
பல்லார் பயன்துய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன்.

—நாலடியார்.

" நிழலின் நீளிடைத் தனிமரம்போல
இரவலர்க்கீயும் வள்ளியோன் "

—புறநானூறு 119

" அருஞ்சுரத்தின் மரம்போல் அடைந்தார்க்
களித்தல் அவற்கியல்பு "

—நச்சினார்க்கினியர் உரை.

மனிதன் முதலில் பிழை புரிந்திருப்பினும், பின்னர் பிழை செய்தோமே என்று வருந்தி, அதனின்றுந் திருந்தி, அடியாருடன் பொருந்தி நிற்பானேல், முன் செய்த பிழைகளை முருகவேள் மன்னித்து, பாலைவனத்தின் கற்பகம் போல் அருள்புரிவான் என்று சுவாமிகள் திருப்புகழில் மிகமிக அருமையாக உரைக்கின்றூர்.

அருணகிரியார் தம் வரலாற்றில் கண்ட அநுபவத்தையே இங்கு கூறுகின்றூர். புல்லறிவினுல் உழன்றவர்க்கு நல்லறிவு தோன்ற "பாலைக்கற்பகம்" பன்னிருகைப் பரமன் என்று மிக அற்புதமாகக் கூறும் அழகு மிகவும் அருமைப்பாடுடையது. தித்திக்குஞ் சொல்.

செச்சாலிச் சாலத் தேறிச் சேல் :—

திருச்செங்கோட்டின் வளமையைக் கூறுகின்ற அழகு சுவையாகவுளது. செஞ்சாலி என்ற சொல், செச்சாலி என வந்தது.

சாலி—நெற்பயிர். சாலம்—கூட்டம். சேல் மீன்கள் நெற்பயிர்கள் மீது ஏறி சோலையில் சென்று உலாவும் வளமையுடைது திருச்செங்கோடு.

முச்சாலிச் சாலித்தாள் வெற்பாள் :—

மூன்று போகம் விளையும் நெல்லின் தாள்களும் தினைக் கதிர்களும் சூழ்ந்த மலையில் வாழ்ந்த வள்ளி.

முத்தி :—

வேதாக்கினிகள் மூன்று. வட்ட வடிவாகவும், சதுர வடிவாகவும், அர்த்த சந்திர வடிவாகவும் உள்ள குண்டத்தில் வளர்க்கும், காருகபத்தியம், ஆகவனீயம், தக்ஷிணாக்கினி என்ற மூவகை வேள்வித்தீ.

### கருத்துரை

செங்கோட்டுத் திருமுருக! நீ அடியார்க்குப் பாலைக் கற்பகம் போன்றவன்.

## 152

வருத்தங் காண நாடிய குணத்தன் பான மாதரு
மயக்கம் பூண மோதிய துரமீதே
மலக்கங் கூடி யேயின வுயிர்க்குஞ் சேத மாகிய
மரிக்கும் பேர்க ளோடுற வணியாதே

பொருத்தும் பாவ நீடிய மலத்தின் தீமை கூடிய
பிறப்புந் தீர வேயுன திருதாளே
பெறத்தந் தாள வேயுயர் சுவர்க்கஞ் சேர வேயருள்
பெலத்தின் கூர்மை யானது மொழிவாயே

இரத்தம் பாய மேனிக ளுரத்துஞ் சாடி வேல்கொடு
எதிர்த்துஞ் சூரர் மாளவெ பொரும்வேலா
இசைக்குந் தாள் மேளமெ தனத்தந் தான தானன
எனத்திண் கூளி கோடிகள் புடைசூழத்

திருத்தன் பாக வேயொரு மயிற்கொண் டாடி யேபுகழ்
செழித்தன் பாக வீறிய பெருவாழ்வே
திரட்சங் கோடை வாவிகள் மிகுத்துங் காவி சூழ்தரு
திருச்செங் கோடு மேவிய பெருமாளே.

### பதவுரை

இரத்தம் பாய - உதிரம் பெருகிப்பாயும்படி, மேனிகள் உரத்தும் சாடி - உடலிலும் மார்பிலுந் தாக்கி, வேல் கொடு - வேலாயுதத்தைக் கொண்டு,

எதிர்த்தும் - எதிர்த்தும், சூர் மாளவெ பொரும் வேலா - சூரபன்மன் இறக்கப் போர் புரிந்த வேலவரே! இசைக்கும் தாளமேளம் - ஒலிக்கின்ற தாளமும் மேளமும், தனத்தந் தான தானனஎன - தனத்தந்தான தானன என்று முழக்கஞ் செய்ய, திண் கூளி கோடிகள் புடைசூழ - வலிமையுடைய சிவ கணங்களாகிய பூத கணங்கள் கோடிக் கணக்கில் அருகில் சூழ, திருத்து அன்பாக - திருந்திய அன்புடன், ஒரு மயில் கொண்டாடியே - ஒப்பற்ற மயிலை விரும்பி ஏறியே, புகழ் செழித்து - புகழ் மிக வளர்ந்து, அன்பாக வீறிய - அன்பே வுருவாக மேம்பட்டு விளங்கும், பெருவாழ்வே - பெருஞ் செல்வமே! திரள் சங்கு ஓடை - திரண்ட சங்குகள் உள்ள ஓடைகளும், வாவிகள் மிகுத்து - குளங்களும் மிகுத்து, காவி சூழ் தரு - குவளைமலர்கள் சூழ்ந்து மலரும், திருச்செங்கோடு மேவிய திருச்செங்கோட்டில் விரும்பி எழுந்தருளிய, பெருமாளே - பெருமையில் மிகுந்தவரே! வருத்தம் காண நாடிய - வருத்தம் உண்டாகும் வழியையே தேடும், குணத்து அன்பான மாதரும் - குணத்தில் அன்பு கொண்ட மாதர்களும், மயக்கம் பூண மோதிய - மயக்கங் கொள்ளும்படி அவர்களுடன் தாக்குண்ட, துரமீதே - இந்த சுமையான உடல் மீதும், மலக்கம்கூடி ஏயின - துன்பங்களோடு கூடிப்பொருந்திய, உயிர்க்கும் சேதம் ஆகிய - உயிர்கள் நற்கதி காணாது கேடு அடையுமாறு, மரிக்கும் பேர்களோடு - இறந்து போகும் மக்களுடைய, உறவு அணியாதே - உறவைக் கொள்ளாமல், பெருத்தும் பாவம் நீடிய - பெருத்து வளரும் பாவம்மிக்க, மலத்தின் தீமைகூடிய - மும்மலங்களின் கொடுமைகூடிய, பிறப்பும் தீரவே - இப்பிறப்பு ஒழியவே, உனது இருதாளே - உமது இரண்டு திருவடிகளை, பெற தந்து ஆளவே - அடியேன் பெறுமாறு தந்து என்னை ஆண்டருளவும், உயர் சுவர்க்கம் சேரவே- மேலான முத்தியுலகை அடியேன் சேரவும், அருள் பெலத்தின் கூர்மையானது மொழிவாயே - தேவரீர் அருள் பாலிக்கும் சக்தியின் நுண்பொருளை எனக்கு மொழிந்தருளுவீர்

## பொழிப்புரை

**உதிரம் பெருகிப்பாய உடலிலும் மார்பிலுந் தாக்கி சூரபன்மன் இறக்க எதிர்த்து வேல் கொண்டு போர் புரிந்த வேலவரே! ஒலிக்கின்ற தாளமும் மேளமும் தனத்தந்தான தானன என்று முழங்க,வலிமைமிக்ககோடிக்கணக்கான சிவபூத கணங்கள் அருகில் சூழ, திருந்திய அன்புடன், ஒப்பற்ற மயிலின்மீது விரும்பி ஏறி, புகழ் மிக வளர்ந்து, அன்பே ஒருவுருவாக மேம்பட்டு விளங்கும் பெருஞ் செல்வமே! திரண்ட சங்குகள் நிறைந்த ஓடைகளும் குளங்களும் குவளை மலர்களுடன் சூழ்ந்துள்ள, திருச்செங்கோட்டில் விரும்பி வாழும் பெருமிதமுடையவரே! வருத்தம் உண்டாகும் வழியையே தேடும் குணத்தில் ஈடுபட்ட மாதர்களும், அவர்களுடன் தாக்**

குண்ட உடற் சுமையும் ஆகிய துன்பங்கள் கூடிய உயிர்கள் நற்கதி காணுது கேடு அடைய இறந்துபோகும் கீழ்மக்களின் உறவைக் கொள்ளாமல், பெருத்து வளரும் பாவம் மிக்க மும்மலங்களின் கொடுமை கூடிய, இப்பிறப்பு நீங்கும்படி, உமது இருபாதகமலங்களை அடியேன் பெறுமாறு, அடியேனுக்குத் தந்து, என்னை ஆண்டருளவும், மேலான முத்தியுலகத்தில் அடியேன் சேரவும், நீர் அருளும் சக்தியின் நுண் பொருளை அடியேனுக்கு உபதேசித்தருளுவீராக.

## விரிவுரை

வருத்தங்காண நாடிய குணத்தன்பான மாதர் :—

பொதுமாதர்கள் தம்பால் வரும் ஆடவர் வருத்தம் அடையும் வழியையே சதா நாடிச் செய்வர்.

மரிக்கும்பேர்களோடுற வணியாதே :—

அவமே மாண்டு போகும் கீழ்மக்களுடைய உறவு தீமை பயக்கும். ஆதலால் கீழோர் உறவையகற்ற வேண்டும்.

பிறப்புந் தீர :—

ஒவ்வொருவரும் விரும்பி வேண்டுவது பிறவாமை ஒன்றேயாகும். அது வேண்டாமையைப் பெற்ருல் கிடைக்கும்.

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும். —திருக்குறள்.

பெலத்தின் கூர்மை :—

பெலம்—சக்தி. கூர்மை—நுண்பொருள். சக்தியின் நுண் பொருளை உபதேசிக்குமாறு இங்கே அடிகளார் இறைவனை வேண்டுகின்ருர்.

திரட்சங்கோடை வாவிகள் :—

திருச்செங்கோட்டில் சங்குகள் நிறைந்த ஓடைகளும் குவளை மலர்ந்த குளங்களும் சூழ்ந்திருக்கின்றன.

எம்பெருமான் உறையுந் திருத்தலங்கள் வளமையால் உயர்ந்து விளங்கும்.

“ சிறக்குந் தாமரை ஓடையில் மேடையில்
நிறைக்குஞ் சூல்வளை பால்மணி வீசிய திருச்செந்தூர் ”
—(அனிச்சங்கார்), திருப்புகழ்.

## கருத்துரை

திருச்செங்கோட்டு வேலவா! பிறவிதீர உபதேசித் தருள்வீர்.

## 153

ஆல காலப டப்பைம டப்பியர்
ஈர வாளற வெற்றும்வி ழிச்சியர்
யாவ ராயினு நத்திய ழைப்பவர் தெருவூடே
ஆடி யாடிந டப்பதொர் பிச்சியர்
பேசி யாசைகொ டுத்தும ருட்டிகள்
ஆசை வீசிய ணைக்குமு லைச்சியர் பலரூடே

மாலை யோதிவி ரித்துமு டிப்பவர்
சேலை தாழநெ கிழ்த்தரை சுற்றிகள்
வாசம் வீசும ணத்தில்மி னுக்கிகள் உறவாலே
மாயை யூடுவி ழுத்திய ழுத்திகள்
காம போகவி னைக்குளு னைப்பணி
வாழ்வி லாமல்ம லச்சன னத்தினி லுழல்வேனோ

மேலை வானொரு ரைத்தச ரற்கொரு
பால னாகியு தித்தொர்மு னிக்கொரு
வேள்வி காவல்ந டத்திய கற்குரு அடியாலே
மேவி யேமிதி லைச்சிலை செற்றுமின்
மாது தோள்தழு விப்பதி புக்கிட
வேறு தாயட விக்குள் விடுத்தபி னவனோடே

ஞால மாதொடு புக்கவ னத்தினில்
வாழும் வாலிப டக்கணை தொட்டவ
னோடி ராவணனைச்செகு வித்தவன் மருகோனே
ஞான தேசிக சற்குரு உத்தம
வேல வாநெரு வைப்பதி வித்தக
நாக மாமலை சொற்பெற நிற்பதொர் பெருமாளே.

### பதவுரை

மேலை வானோர் உரை - மேலுலகத்தில் உள்ள தேவர்கள் புகழும், தசரற்கு - தசரதனுக்கு, ஒரு பாலனாய் உதித்து-ஒப்பற்ற மகனாய்ப் பிறந்து, ஓர் முனிக்கு - சமானமில்லாத விசுவாமித்திர முனிவர் செய்த; ஒரு வேள்வி காவல் நடத்தி - சிறந்த யாகத்தைக் காவல் செய்து, அ கற்கு உரு அடி

யாலே மேவியே - அந்தக் கல்லுக்குப் பாதத்தாலே முன் வடிவைக் கொடுத்து, மிதிலை சிலை செற்று - மிதிலாபுரியில் இருந்த வில்லை ஒடித்து, மின்மாது தோள் தழுவி - ஒளிமிகுந்த சீதையின் தோளைத் தழுவி மணஞ் செய்து, பதி புக்கிட - அயோத்திமா நகரம் வந்து சேர, வேறு தாய் அடவிக்குள் விடுத்த - மாற்றாந் தாயான கைகேயி காட்டுக்குப் போகுபடிச் செய்ய, பின்னவனோடே - இலட்சுமணனுடனும், ஞாலமாதொடு புக்கு - பூதேவியாஞ் சீதையுடனும் சென்று, அ வனத்தினில் வாழும் வாலி பட கணை தொட்டவன் - அவ்வனத்தில் வாழ்ந்த வாலி இறக்கும்படி அம்பை ஏவினவரும், நாடி ராவணனை செகு வித்தவன் - தேடிச் சென்று இராவணனை அழிவித்தவருமான இரகுராமருடைய, மருகோனே - திருமருகரே! ஞானதேசிக - ஞான ஆசாரியரே! சற்குருவே - உண்மைக் குருவே! உத்தம வேலவா - உத்தமமான வேலவரே! நெருவை பதி வித்தக - நெருவூரில் வாழும் ஞானமூர்த்தியே! நாகமாமலை - திருச்செங்கோட்டில், சொல் பெற நிற்பது ஓர் - புகழ்பெற வீற்றிருக்கும் ஒப்பற்ற, பெருமாளே - பெருமையில் மிகுந்தவரே! ஆலகால பட பை மடப்பியர்-ஆலகால நஞ்சையுடைய பாம்பின் படம் போன்ற அல்குலையுடைய மடமாதர்கள், ஈரவாள் அற எற்றும் விழிச்சியர் - நெய்தடவிய ஈரமுடைய வாள்போல் மிகவும் தாக்கவல்ல கண்களையுடையவர்கள், யாவராயினும் நத்தி அழைப்பவர் - யாவராயிருந்தாலும் அவர்களை விரும்பி அழைப்பவர்கள், தெரு ஊடே ஆடி ஆடி நடப்பது ஒரு பிச்சியர் - நடுத்தெருவில் ஆடி ஆடி நடக்கின்ற பித்துப் பிடித்தவர்கள், பேசி ஆசை கொடுத்து மருட்டிகள் - பேசும் வண்மையால் ஆசையூட்டி மயக்குபவர்கள், ஆசை வீசி அணைக்கு முலைச்சியர் - ஆசை வலையை வீசி தழுவுகின்ற கொங்கையினர், பலர் ஊடே - பலருடைய மத்தியில், மாலை ஓதி விரித்து முடிப்பவர் - மாலை தரித்த கூந்தலை முடிப்பவர்கள், சேலை தாழ நெகிழ்த்து அரை சுற்றிகள் - புடவை கீழே தாழும்படி தளர்த்தி இடையில் சுற்றுபவர்கள், வாசம் வீசு மணத்தில் மினுக்கிகள் - வாசனை வீசும் நறுமணங் கொண்டு மினுக்குபவர்கள், உறவாலே - தமது சம்பந்தத்தினால், மாயை ஊடு விழுத்தி அழுத்திகள் - மாயையின் உள்ளே விழும்படி அழுத்துபவர்களாகிய பொது மாதர்களின், காமபோக விணைக்குள்-ஆசையநுபவச் செயல்களில் ஈடுபட்டதாலே, உனை பணி வாழ்வு இலாமல் - உம்மைப் பணிகின்ற நல்வாழ்வு இல்லாமல், மல சனனத்தினில் உழல்வேனோ - ஆணவ மலத்துடன் கூடிய பிறப்பினில் அலைவேனோ?

## பொழிப்புரை

**மேலுலகத்தில் வாழ்கின்ற தேவர்கள் புகழ்கின்ற தயரத மன்னவனுக்கு ஒப்பற்ற குமாரனாகப் பிறந்து, சமான மில்லாத விசுவாமித்திர முனிவர் செய்த யாகத்தைக் காத்து, அந்தக் கல்லுக்கு முன் உருவத்தைத் திருவடியால் கொடுத்து, மிதிலா புரியில் இருந்த வில்லையொடித்து, ஒளிமிக்க சீதாதேவியைத்**

திருமணஞ் செய்து, மறுபடியும் அயோத்திமா நகருக்குச் சென்று, மாற்றுந்தாயான கைகேயி காட்டுக்குப் போகும்படிச் செய்ய, இலட்சுமணனுடனும், பூதேவியாம் சீதையுடனும் சென்று, அந்தக் காட்டில் வாழ்ந்த வாலி இறக்கும்படி அம்பை யேவினவரும், தேடிச்சென்று இராவணனை அழித்தவருமான இரகுராமருடைய திருமருகரே! ஞானசிரியரே! சற்குருவே! உத்தம வேலாயுதரே! நெருரில் வாழும் ஞான மூர்த்தியே! திருச்செங்கோட்டில் புகழ்பெற வீற்றிருக்கும் பெருமிதமுடையவரே! ஆலகால நஞ்சையுடைய பாம்பின்படம் போன்ற அல்குலையுடைய மடமாதர்கள், நெய்யின் ஈரமுள்ள வாள் போல மிகவுந்தாக்க வல்ல கண்களையுடையவர்கள், யாவராயிருந்தாலும் விரும்பி யழைப்பவர்கள், நடுத்தெருவில் ஆடியாடி நடக்கின்ற பித்துப்பிடித்தவர்கள், தங்கள் பேச்சு வன்மையால் ஆசையூட்டி மயக்குபவர்கள், ஆசை வலையை வீசி அணைக்கின்ற கொங்கையர்கள், பலர் மத்தியிலும் மாலையணிந்த கூந்தலையவிழ்த்து முடிப்பவர்கள், புடவை கீழே தாழும்படி தளர்த்தி இடையில் சுற்றுபவர்கள், நறுமணத்துடன் மினுக்குபவர்கள், உறவினால் மாயைக்குள் அமுத்துபவர்களுமான பொது மாதர்களின் காமபோகச் செயல்களில் ஈடுபட்டதாலே! உம்மைப் பணியும் நல்வாழ்வு இல்லாமல் மும்மலங்களுக்கு உறைவிடமான பிறப்பினில் அலைவேனோ?

## விரிவுரை

இத்திருப்புகழில் முதல் நான்கு அடிகள் பொதுமாதரது செயல்களைக் கூறுகின்றன.

மேலை வானொருரைத் தசரற்கு :—

தசரதன் என்ற சொல் தசரன் என வந்தது. இந்திரனுடைய நகரைக் கவர்ந்த சம்பராசுரனைத் தயரதன் கொன்று பொன்னுலகை மீட்டு இந்திரனுக்கு அளித்தான். அதனால் தயரதனை தேவலோக வாசிகள் புகழ்கின்றார்கள்.

" குன்றளிக்குங் குலமணித்தோள் சம்பரனைக்
குலத்தோடு சென்று நீ கொண்டு
அன்றளித்த அரசன்றோ புரந்தரன்
இன்று ஆள்கின்றது அரச என்றான் "
—கம்பராமாயணம்.

முனிக்கொரு வேள்விக் காவல் நடத்தி :—

இராமசந்திரமூர்த்தி விசுவாமித்திர முனிவர் உலக நலங் கருதிச் செய்த வேள்வியைக் காவல் புரிந்து உதவி செய்தார்.

எண்ணுதற் காக்கரி திரண்டு மூன்று நாள்
விண்ணவர்க் காக்கிய முனிவன் வேள்வியை
மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்
கண்ணினைக் காக்கின்ற இமையில் காத்தனர்

—கம்பராமாயணம்.

அகற்குரு அடியாலே மேவியே :—

**அ கற்கு உரு.**

**இந்திரன் கௌதமர் வடிவில் வந்து அகலிகையைத் தழுவினன். அதனால் கல்லாகுமாறு கௌதமர் சபித்தார்.**

**இராமருடைய திருவடியின் துகள் பட்டவுடன் கௌதமருக்கு மனைவியாக ஆவதற்கு முன் இருந்த கன்னி அகலிகையாக அத்திருவடித்துகள் அருளியது.**

கோதமன்தன்பன்னிக்கு முன்னையுரு கொடுத்ததிவன்
போதுநின்ற தெனப் போலிந்த பொலன் கழற்காற் பொடிகண்டாய்
காதலென்றன் உயிர்மேலு மிக்கரியோன் பாலுண்டால்
ஈதிவன்றன் வரலாறும் புயவலியும் எனவுரைத்தான்.

—கம்பராமாயணம்.

**அகலிகையின் நிலை மூன்று.**

**கௌதமர் மணப்பதற்குமுன் கன்னியகலிகை; மணந்த பின் பன்னி யகலிகை. இந்திரன் தீண்டிய பின் தூய்மையிழந்த அகலிகை.**

**இராமருடைய திருவடியின் துகள், கல்லான அகலிகையை, அமுதத்துடன் பாலாழியில் பிறந்தபோது இருந்த கன்னி அகலிகையாகச் செய்துவிட்டது. அவளுடைய வடிவத்தையே பின்னுக்குத் தள்ளி பெரிய புரட்சியைச் செய்துவிட்டது.**

**இந்தக் குறிப்பு கோதமன்றன் பன்னிக்கு முன்னையுரு-பன்னியாக ஆவதற்கு முன்னிருந்த வடிவு என்று கூறும் கம்பர் கவிநயத்தால் உணர்க.**

மிதிலைச்சிலை செற்று :—

**நெடுங்காலம் யாவராலும் வளைக்க முடியாத உருத்திர வில்லை இராமர் ஒரு நொடியில் ஒடித்துவிட்டார்.**

தடுத்திமை யாம லிருந்தவர் தாளின்
மடுத்தது நாணுதி வைத்தது நோக்கார்
கடுப்பினில் யாரும் அறிந்திலர் கையால்
எடுத்தது கண்டனர் இன்றது கேட்டார்,

வேறுதாயடவிக்குள் விடுத்த :—

இராமர் மாற்றாந்தாயின் மொழியை மறை 'மொழியாக் கொண்டு, ஆழிசூழ் உலகம் அனைத்தும் தம்பிக்குத் தியாகஞ் செய்து விட்டு, இளையோனும்வைதேகியும் உடன் வரக் கொடிய கானகஞ் சென்றார்.

இது மற்றவர்கள் நினைக்க முடியாத அரிய தியாகம்.

நெருவைப்பதி வித்தக :—

நெருவூர்—இது கருவூருக்கு வடக்கே ஆறு கல் தொலைவில் காவேரிக்குத் தென்கரையில் விளங்குகின்ற அருமையான திருத்தலம். இங்கு சதாசிவப்பிரம்மேந்திரர் சமாதி விளங்குகின்றது.

நாகமாமலை :—

திருச்செங்கோடு நாகவடிவாகத் திகழ்கின்றது. அதனால் சர்ப்பகிரி யெனப்படும்.

### கருத்துரை

திருச்செங்கோட்டுத் தேசிகா! மாதர் மயலும் பிறவித் துயரும் அற அருள் செய்வீர்.

## 154

காலனிடத் தணுகாதே
காசினியிற் பிறவாதே
சீலஅகத் தியஞான
தேனமுதைத் தருவாயே
மாலயனுக் கரியானே
மாதவரைப் பிரியானே
நாலுமறைப் பொருளோனே
நாககிரிப் பெருமாளே.

### பதவுரை

மால் அயனுக்கு அரியானே - திருமாலுக்கும் திசைமுகனுக்கும் அறிதற் கரியவரே! மாதவரை பிரியானே - பெருந்தவம் புரியும் அடியார்களைப் பிரியாதிருப்பவரே! நாலுமறை பொருளோனே - நான்குவேதங்களின் உட்பொருளாய் விளங்குபவரே! நாககிரி பெருமாளே - திருச்செங்

கோட்டில் வாழ்பவரே! காலன் இடத்து அணுகாதே - இயமனிடத்தில் அடியேன் அடையாமலும், காசினியில் பிறவாதே - இப்பூவுலகில் மீண்டும் அடியேன் பிறவாமலும், சீல அகத்திய ஞான - இன்றியமையாத ஒழுக்கத்தால் உண்டாகும் மெய்யறிவால் விளைகின்ற, தேன் அமுதை தருவாயே - இனிய திருவருளமிர்தத்தைத் தந்தருள்வீர்.

## பொழிப்புரை

நாராயணருக்கும் நான்முகருக்கும் அறிதற்கு அரிய பரம்பொருளே! நற்றவமுடைய திருத்தொண்டர்களை விட்டுப்பிரியாதிருப்பவரே! நால்வேதங்களின் உட்பொருளாய் விளங்குபவரே! திருச்செங்கோட்டில் வீற்றிருப்பவரே! அடியேன் இயமனிடத்துச் சேராமலும், இனிப் பிறந்துழலாமலும், அவசியமான ஒழுக்கத்தால் உண்டாகும் மெய்யறிவில் ஊறும் இனிய திருவருளமுதத்தை யருள்வீர்.

## விரிவுரை

இவ்வருமைத் திருப்புகழ் வடிவிற் சிறியதாயும் பொருளமைப்பிற் பெரியதாயு மிருப்பதனால் அன்பர்கள் ஒவ்வொரு நாளும் இதனைப் பாராயணஞ் செய்வார்களாக.

காலனிடத் தணுகாதே......மாதவரைப்பிரியானே :—

முருகனடியார்கள் கூற்றுவனூர்க்குச் செல்லாராதலின் யமபயமில்லையாயிற்று. காலன் வசப்பட்டார் மீண்டும் பிறப்பாராதலின், "காசினியிற் பிறவாதே" என்றார்.

"மாலயனுக் கரியானே" என்றது கண்டு, அரியயனுக்கு எட்டாத ஆண்டவன் நமக்கு எட்டுவனோ என்று மலையா திருக்கும் பொருட்டு, "மாதவரைப் பிரியானே" என்றனர்.

## கருத்துரை

திருச்செங்கோட்டுத் தெய்வமணியே! இறவாமலும் பிறவாமலும் செய்யும் மெய்ஞ்ஞானத் திருவருளமுதைத் தந்தருள்வீர்.

## 155

தாமா தாமா லாபா லோகா
தாரா தாரத் தரணீசா
தானு சாரோ பாவா பாவோ
நாசா பாசத் தபராத

யாமா யாமா தேசா ரூடா
யாரா யாபத் தெனதாவி
யாமா காவாய் தீயே னீர்வா
யாதே யீமத் துகலாமோ
காமா காமா தீஞு நீஞு
காவாய் காளக் கிரியாய்கங்
காளா லீலா பாலா நீபா
காமா மோதக் கனமானின்
தேமார் தேமா காமீ பாகீ
தேசா தேசத் தவரோதுஞ்
சேயே வேளே பூவே கோவே
தேவே தேவப் பெருமாளே.

## பதவுரை

தாமா - மாலையையுடையவரே! தாம ஆலாபா - சுக சம்பாஷணை யுடையவரே! லோக ஆதாரா - உலகுக்கு ஆதாரமானவரே! தாரம் தரணி ஈசா - நீர் நிலம் என்றவைகட்குத் தலைவரே! தான ஆசாரோ - தானமும் ஆசாரமும் உடையவர்களால், பாவா - தியானிக்கப்படுபவரே! பாவோ நாசா - பாவத்தை நாசஞ் செய்பவரே! காமா - அன்பரே! காம ஆதீஞு - அன்பர்கள் விரும்புவதை வழங்கும் சுதந்திரம் உடையவரே! நீள் நாகா வாய் - நீண்ட பாம்புருவம் வாய்ந்துள்ள, காளக்கிரியாய் - நாக மலையில் இருப்பவரே! கங்காள லீலா பாலா - எலும்புக் கூட்டை விளையாட்டாகத் தரித்துள்ள சிவபெருமானுடைய குமாரரே! நீபா - கடப்ப மலர் மாலை யணிந்தவரே! காம ஆமோத கனமானில் - அன்பும் மகிழ்ச்சியும் பெருமை யும் உள்ள வள்ளி நாயகியின், தேம் ஆர் - தேன் கலந்த, தேமா - இனிய தினைமாவில், காமீ - விருப்பமுள்ளவரே! பாகீ - தகுதியுள்ளவரே! தேசா - ஒளியுள்ளவரே! தேசத்தவர் ஓதும் - உலகத்தவர்கள் புகழ்ந்து போற்றும், சேயே - செம்மையானவரே! வேளே - உபகாரியே! பூவே - அழகரே! கோவே - தலைவரே! தேவே - தேவரே! தேவ பெருமாளே - தேவர்கள் வணங்கும் பெருமை மிகுந்தவரே! பாசத்து அபராத - பாசங்களில் பற்று வைத்ததின் அபராதமாக, யாமா - தெற்கிலுள்ள, யாமாதேசார் ஊடு ஆய் - யமதேசத்தில் உள்ளவரிடையே, ஆராயா ஆபத்து எனது ஆவி ஆமா - ஆராய்ச்சியில்லாமல் ஆபத்து நிலையில் என்னுடைய உயிர் சேர் தல் ஆமா? காவாய் - காத்தருள்; தீயேன் - பொல்லேனுகிய அடியேன் - நீர் வாயாதே - நற்குணம் வாய்க்கப் பெருமல், ஈமத்து உகலாமோ - மயானத் தில் அழியலாமோ?

## பொழிப்புரை

மாலையணிந்தவரே! இனிய உரையாடலையுடையவரே! உலகத்துக்கு ஆதாரமானவரே! நீர் நிலம் இவைகட்குத் தலைவரே! கொடைக்குணமும் ஆசாரமும் உள்ளவர்கள் தியானிக்கும் பொருளே! பாவத்தை யழிப்பவரே! அன்பரே! அன்பர்கள் விருப்பத்தையளிக்கும் சுதந்திர முடையவரே! பெரிய பாம்பு வடிவாயுள்ள நாகமலையில் இருப்பவரே! எலும்புக் கூட்டை விளையாட்டாக அணிந்த சிவபெருமானுடைய புதல்வரே! கடப்ப மாலை யணிந்தவரே! மிகுந்த விருப்பமுள்ள பெருமை பொருந்திய வள்ளிநாயகி கொடுத்த தேன் கலந்த இனிய தினைமாவில் விருப்பமுள்ளவரே! தகுதியுள்ளவரே! ஒளியுள்ளவரே! உலகத்தவர் புகழும் சேயே! உபகாரியே! அழகரே! தலைவரே! தேவரே! தேவர் போற்றும் பெருமிதமுடையவரே! பாசங்களில் பற்று வைத்ததின் அபராதமாகத் தென் திசையில் உள்ள யமபுரத்திலே ஆராய்ச்சியில்லாமல் ஆபத்து நிலையில் என் உயிர் சேர்தல் ஆமோ? காத்தருளுவீர்; தீயேன் நற்குணம் வாய்க்காமல் மயானத்தில் சென்று அழியலாமோ?

## விரிவுரை

தாமா :—

தாமம்—மாலை.

தாமா லாபா :—

தாம ஆலாபா. சுகமான உரையாடலையுடையவன்.

தாரத்தரணீசா :—

தாரம்—தண்ணீர். தரணி—பூமி. இவைகட்குத் தலைவன்.

தானு சாரோ பாவா :—

தான ஆசா ரோ பாவா தானஞ்செய்து ஆசாரமாகவுள்ள அடியார்கள் தியானிக்கும் பொருள் முருகன்.

யாவோ நாகா :—

பாவங்களை நாசஞ் செய்பவன்.

பாசத்தபராத :—

ஆசாபாசமுள்ளவர்களைத் தண்டிக்கும் இடம் நரகலோகம்.

யாபா யாமாதே சாருடா :—

யாமம்—தென்திசை.

தென்திசையில் உள்ள யமபுரியோர்.

எனதாவி யாமா :—

என் ஆவி யமனுடைய நகரஞ் சேர்வது ஆமா? அது நல்ல தன்று. காவாய்—காத்தருள்.

தீயே னீர்வாயாதே :—

தீயேன் நீர் வாயாதே. நீர்—நீர்மைக் குணம். நற்குணம்.

" பெருக்கு நீ ரவளொடும் பெருந்தகை யிருந்ததே "

—தேவாரம்.

ஈமத்துகலாமோ :—

சுடலையில் சென்று அழியலாமோ?

காமா :—

காமம்—அன்பு. அன்பனே!

காமாதீன :—

காம ஆதீன. அன்பர்கள் விரும்பியவற்றை விரும்பியவாறு வழங்குவதில் சுதந்தரமுடையவர் முருகவேள்.

நீள் நாவாய் காளக்கிரியாய் :—

நீள் நாவாய் காளக்கிரி—நீண்ட பாம்புருவம் வாய்ந்த சர்ப்பகிரி.

கங்காளா லீலா பாலா :—

கங்காளம்—எலும்புக்கூடு.

சர்வசங்கார காலத்து மாலயனாதி வானவரை எரித்து அவரது கங்காளத்தை சிவமூர்த்தியணிந்து கொள்வார். அதனால் அவர் கங்காளர் எனப் பேர் பெற்றார்.

" கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை " —திருமந்திரம்

காமாமோதக் கனமானின் :—

காமம்—விருப்பம். ஆமோதம்—மகிழ்ச்சி. கனம்-பெருமை. மான்—வள்ளி.

தேமார் தேமா காமீ :—

தேம்—தேன். ஆர்—நிறைந்த. தே—இனிமை. மா—தினைமா. காமீ—விருப்பமுள்ளவர்.

தேன் கலந்த இனிய தினைமாவில் முருகர் விருப்பமுள்ளவர்.

## கருத்துரை

நாககிரி நாயகா! அவமேயழியாது ஆண்டருள்வீர்.

## 156

அத்து கிரினலத ரத்து அலனவள
கத்து வளர்செய்புள கிதபூத
ரத்தி ருகமலக ரத்தி தயமுருகி
யத்தி யிடனுறையு நெடுமாம
ரத்து மலர்கனிய லேத்து வருமிடைத
லத்து ரகசிகரி பகராதே
யத்தி மலவுடல்ந டத்தி யெரிகொணிரை
யத்தி னிடையடிமை விழலாமோ
தத்து கவனவரி ணத்து வுபநிடவி
தத்து முனியுதவு மொழியாறுத்
தத்தை நறவையமு தத்தை நிகர்குறவர்
தத்தை தழுவியப னிருதோளா
தத்து ததிதுரக தத்து மிகுதிதிசர்
தத்து மலேயவுணர் குலநாகந்
தத்த மிசைமரக தத்த மணியமயில்
தத்த விடுமமரர் பெருமாளே.

### பதவுரை

தத்து கவன அரிணத்து-வேக நடையுடைய மானினிடத்தில், உபநிட விதத்து முநி உதவு-உபநிடத விதங்களையுணர்ந்த சிவமுனிவர் தந்த, மொழியால் - சொல்லால், துத்தத்தை - பாலே, நறவை - தேனே, அமுதத்தை நிகர் - அமுதத்தையும் ஒத்த, குறவர் தத்தை தழுவிய - குறவர் குலத்தில் வளர்ந்த கிளிபோன்ற வள்ளியம்மை தழுவிய, பன் இருதோளா - பன்னிரண்டு தோள்களையுடையவரே! தத்து உததி-அலை வீசும் கடல் போல, துரக தத்து மிகுதிதிசர் - குதிரைப்படை மிகுந்த அசுரர்களும், தத்து மலேயவுணர் - தகவுகின்ற மலேபோன்ற அவுணர்களும் ஆகிய, குல நாகம் தத்த - சர்ப்பக் கூட்டம் நடுங்கி ஒடுங்க, மிசை - அவர்கள் மீது, மரகத தமனிய மயில்-மரகத நிறமும் பசும் பொன் நிறமும் படைத்த மயில் மீது ஆரோகணித்து, தத்த விடும்-தாவி விடுத்துக்கொண்டு வந்த, அமரர் பெருமாளே - தேவர்கள் போற்றும் பெருமையிற் சிறந்தவரே! அ துகிரின் நல் அதரத்து - அந்தப் பவளம் போன்ற நல்ல உதட்டிலும், அல் அன அள கத்து - இருள் போன்ற கூந்தலிலும், வளர் செய் புளகித பூதரத்து - புள

கித்து வளர்கின்ற மலைபோன்ற தனங்களிலும், இரு கமல கரத்து - இரண்டு தாமரை மலர் போன்ற கரங்களிலும், இதயம் உருகி - மனம் உருகி, அத்தி இடன் உறையும் - சமுத்திரத்தில் உறைந்த, நெடு மா மரத்து - சூரனாகிய நீண்ட மாமரத்தின், மலர் கனி அலைத்து வரும் இடை தலத்து - மலரையும் கனியையும் அலைத்து வந்து அமர்ந்தருளியதலமாகிய, உரகசிகரி பகராதே - நாககிரியைத் துதி செய்யாமல், அத்தி மல உடல் நடத்தி - எலும்பும் மலமும் கூடிய உடலைச் சுமந்து, எரிகொள் நிரையத் தினிடை-நெருப்பு மயமான நரகத்திலே, அடிமை விழலாமோ - அடியேன் விழலாமோ?

## பொழிப்புரை

வேகமான நடையையுடைய மானின்பால், உபநிடதங்களை யுணர்ந்த சிவமுனிவர் தந்தவரும், பால் தேன் அமுதம் இவைகளை ஒத்த மொழியையுடைய கிளி போன்றவருமாகிய வள்ளி நாயகியார் தழுவிய பன்னிருபுயத்தையுடையவரே! அலைவீசும் கடல் போல் மிகுந்த குதிரைப் படையையுடைய அசுரர்களும், தாவும் மலை போன்ற அவுணர்களும் ஆகிய சர்ப்பக் கூட்டம் நடுங்கி ஒடுங்க, மரகத நிறமும் பொன்னிறமும் பொருந்திய மயில் மீது ஆரோகணித்து வந்த, தேவர் போற்றும் பெருமிதம் உடையவரே! அந்த பவளம் போன்ற உதட்டிலும், இருள் போன்ற கூந்தலிலும், புளகித்து வளர்கின்ற மலை போன்ற தனங்களிலும், தாமரை போன்ற இரு கரங்களிலும் உள்ளம் உருகி, கடலில் முளைத்த சூரனாகிய மாமரத்தில், மலர் கனி இவைகளை அலைத்து அழித்து, வந்து அமர்ந்தருளிய நாககிரியைத் துதியாமல், எலும்புடன் கூடிய மல உடம்பைச் சுமந்து, எரிகின்ற நரகத்தில் அடியேன் விழலாமோ?

## விரிவுரை

இத் திருப்புகழில் அருணகிரியார் பதங்களை அமைத்திருக்கின்ற அழகும் சமர்த்தும் மிக மிகச் சிறந்தன. தத்த தனதனன தத்த தன தனன என்ற அற்புதமான சந்த நடையழகுடன் கூடியது இத் திருப்புகழ்.

பாட்டின் பிற்பகுதியைத் தமிழன்பர்கள் ஊன்றிப் படித்து இன்புறுக. தத்து என 5 முறையும், தத்தை என 3 முறையும், தத்த என 3 முறையும் எத்துணை அழகாக அந்த அடிகள் அமைந்திருக்கின்றன. ஆ! அற்புதமான பதங்கள்.

அத்துகிரின்லதரத்து :—

அ துகிரின் நல் அதரத்து. பெண்களின் அதரம் பவளம் போல் விளங்கும்.

அலனவளகத்து :—

அல் அன அளகத்து. அல்—இருள். அன—அன்ன. இருள் போன்ற கரிய கூந்தல்.

வளர் செய் புளகித பூதரத்து :—

பூதரம்—மலை. ஆகு பெயராக—தனத்தைக் குறிக்கின்றது.

இதயம் உருகி :—

மாதர்களின் அவயவ நலத்தினால் மனம் உருகி நல்வழி விடுத்து அல்வழி யடுத்து அழிவர் பலர்.

அத்தி யிடனுறையு நெடு மாமரத்து :—

அத்தி—கடல். சூரபன்மன் கடைசி நேரத்தில் கடலில் இரும்பு மா மரமாக முளைத்து உலகை நடுக்கினான்.

உரகசிகரி :—

உரகம்——பாம்பு. உரகசிகரி—நாககிரி. இம் மலையைப் பரவினோர் நரகிடைப் புகுதார்.

அத்தி மலவுடல் நடத்தி :—

அத்தி—எலும்பு. எலும்பும் மலமும் பொருந்திய இந்த வுடம்பைச் சுமந்து பாவம் புரிவர்.

எரிகொள் நிரையத்தினிடையடிமை விழலாமோ :—

அடியேன் எரி மயமான நரகிடை விழலாமோ! விழாத வண்ணம் ஆட்கொண்டருள்வீர்.

தத்து கவனவரிணத்து :—

தத்து கவன அரிணம். தத்து—வேகமான. கவனம்—நடை. அரிணம்—மான்.

உபநிட விதத்து முநியுதவு :—

வள்ளி மலையில் தவஞ் செய்த உபநிடதங்களை யுணர்ந்த சிவமுனிவர் பார்வையால் மானிடம் வள்ளி தோன்றுமாறு செய்தார்.

மொழியாறுத் தத்தை நறவை யமுதத்தை :—

மொழியால் துத்தத்தை நறவை அமுதத்தை பால், தேன், அமுதம் இவைகளை நிகர்க்கின்ற இனிய மொழியை யுடையவள்.

தத்து நதி துரகதத்து மிகுதி திசர் :—

*தத்து—தாவுகின்ற. உததி—கடல் போன்ற. துரகதம்—குதிரை. திதிசர்—திதி பெற்றவர்கள்; தைத்தியர்கள்.*

தத்து மலையவுணர் :—

*தத்து—தாவுகின்ற மலை போன்ற அவுணர்கள்.*

குல நாகந் தந்த :—

*குலம்—கூட்டம். சர்ப்பம் போன்று கூட்டமாக வந்த அந்த அசுரர்கள் நடுங்குமாறு முருகர் மயில் மீது சென்று அழித்தருளினர்.*

## கருத்துரை

நாககிரி நாதனே! நரகிடை விழாவண்ணம் நல்லருள் செய்வீர்.

## 157

அத்த வேட்கைப் பற்றி நோக்கத்
தத்தை மார்க்குத் தமராயன்
பற்ற கூட்டத் திற்ப ராக்குற்
றச்சு தோட்பற் றியவோடும்
சித்த மீட்டுப் பொய்த்த வாழ்க்கைச்
சிக்கை நீக்கித் திணிதாய
சித்ர வாக்குப் பெற்று வாழ்த்திச்
செச்சை சாத்தப் பெறுவேனோ
கொத்து நூற்றுப் பத்து நாட்டக்
கொற்ற வேத்துக் கரசாய
குக்கு டாத்தச் சர்ப்ப கோத்ரப்
பொற்ப வேற்கைக் குமரேசா
தத்வ நாற்பத் தெட்டு நாற்பத்
தெட்டு மேற்றுத் திடமேவும்
தர்க்க சாத்ரத் தக்க மார்க்கச்
சத்ய வாக்யப் பெருமாளே.

## பதவுரை

கொத்து நூற்றுபத்து நாட்டம் - கூட்டமாக ஆயிரங்கண்களையுடைய, கொற்ற வேத்துக்கு - வீரவேந்தனாகிய இந்திரனுக்கு, அரசு ஆய - அரசனாக விளங்கும், குக்குட அத்த - கோழிக் கொடியை ஏந்திய கரத்தினரே! சர்ப்ப கோத்திர - நாகமலையினரே! பொற்ப - அழகரே! வேல் கை குமர ஈசா - வேலை ஏந்தும் திருக்கரத்தையுடைய குமாரக் கடவுளே! தத்வம் - தத்துவங்களான, நாற்பத்து எட்டும் நாற்பத்து எட்டும் - தொண்ணூற்றாறினையும், ஏற்று திடம் மேவும் - ஏற்றுக்கொண்டு உறுதியுடன் கூறும், தர்க்க சாத்ர - தருக்க நூல்களில் சொல்லப்பட்ட, தக்க மார்க்க - தகுந்த நீதி வழிகளில், சத்ய வாக்ய - சத்தியமான மொழிகளைக் கூறும்; பெருமாளே - பெருமிதம் உடையவரே! அத்த வேட்கை பற்றி நோக்கு - பொருளில் ஆசை வைத்து அதனை நோக்குகின்ற, அ தத்தைமார்க்கு தமராய் - அந்த கிளி போன்ற விலை மாதர்கட்கு வேண்டியவனாய், அன்பு அற்ற கூட்டத்தில் - அன்பு இல்லாதவர் கூட்டத்தில், பராக்கு உற்று - எனது நோக்கத்தை வைத்து, அச்சு தோள் பற்றிய - உரு அமைந்த அவர்கள் தோளை அணைக்கும் பொருட்டு, ஓடும் சித்தம் மீட்டு - ஓடுகின்ற மனத்தை அவ்வழியினின்று திருப்பி, பொய்த்த வாழ்க்கை சிக்கை நீக்கி - பொய்யான உலக வாழ்க்கையின் சிக்கினை யகற்றி, திணிது ஆய-வன்மை வாய்ந்த,சித்ரவாக்கு பெற்று-அழகிய வாக்கை அடியேன் பெற்று, வாழ்த்தி - அவ்வாக்கினால் தேவரீரை வாழ்த்தி, செச்சை சாத்த பெறுவேனோ - அதன் பயனாக உமது வெட்சி மாலையைப் பரிசாக அணியப்பெறும் பாக்கியம் அடியேனுக்குக் கிடைக்குமோ?

## பொழிப்புரை

**கூட்டமாய ஆயிரங் கண்களை யுடைய வீர வேந்தனும் இந்திரனுக்கு அதிபரே! சேவல் கொடியை ஏந்திய கையரே! நாக மலையில் வாழும் அழகரே! வேலேந்திய கையை யுடைய குமாரக் கடவுளே! தொண்ணூற்றாறு தத்துவங்களையும் ஏற்றுக் கொண்டு, வன்மையான தருக்க நூல்களில் சொல்லப்பட்ட தகுந்த நீதி வழிகளில் உள்ள சத்திய மொழிகளைப் பேசும் பெருமிதம் உடையவரே! பொருளாசை கொண்ட கிளி போன்ற பொது மாதருக்கு உறவுடையவனாய், அன்பு இல்லாதவர் கூட்டத்தில் எனது நோக்கத்தை வைத்து, உரு அமைந்த அவர்களின் தோள்களைத் தழுவும் பொருட்டு, ஓடுகின்ற மனத்தை அவ்வழியினின்றும் திருப்பி, பொய்யான வாழ்க்கையென்கின்ற சிக்கை யகற்றி, வன்மை வாய்ந்த அழகிய வாக்கை அடியேன் பெற்று, அவ் வாக்கினால் தேவரீரை வாழ்த்தி, அதன் பயனாக உமது வெட்சி மாலையைப் பரிசாகப் பெறும் பேற்றினை அடியேன் பெறுவேனோ?**

## விரிவுரை

அத்த வேட்கைப் பற்றி நோக்கத் தத்தை மார்க்கு :—

பொன்னையே விரும்பி, அதனைப் பறிக்கும் நோக்கமே கொண்டவர்கள் விலைமகளிர். நோக்கு அத்தத்தைமார். தத்தை— கிளி. கிளி போல் கொஞ்சிப் பேசுவார்கள்.

மாதர் வசமாய் ஓடும் மனத்தை அதன் போக்கை மாற்றி நல்வழியில் திருப்ப வேண்டும்.

பொய்த்த வாழ்க்கைச் சிக்கை நீக்கி :—

பொய் என்ற சொல்லுக்கு இரண்டு பொருள்கள். இல்லாத ஒன்று பொய் எனப்படும். சில காலம் இருந்து பின் மறைந்து அழியக் கூடியதும் பொய் எனப்படும்.

உலக வாழ்வு நிலைபேறில்லாதது. அதனால் அது பொய் வாழ்வு. அதில் அகப்படும் சிக்கினை யகற்றுதல் வேண்டும்.

திணிதாய சித்ர வாக்குப் பெற்று :—

"வலிமையான அழகிய வாக்கைப் பெற வேண்டும்" என்று சுவாமிகள் முருகனை இங்கே வேண்டுகின்றார். முருகப் பெருமான் கொடுக்க அவர் பெற்றார். வேறு ஒருவருக்கும் இல்லாத அருமையான அழகிய இனிய வாக்கை யுடையவர் அருணகிரிநாதர்.

வாக்கிற் கருணகிரி வாதவூரார் கனிவில்
தாக்கில் திருஞான சம்பந்தர்—நோக்கிற்கு
நற்கீர தேவர் நயத்துக்குச் சுந்தரனார்
சொற்குறுதிக் கப்பரெனச் சொல்.

செச்சை சாத்தப் பெறுவேனே :—

வாக்கினால் இறைவனை வாழ்த்த, வாழ்த்தியதற்குப் பரிசாக இறைவன் தனது திருமார்பில் உள்ள வெட்சி மாலையை வழங்கி அருள்புரிகின்றான். அப் பேற்றினைப் பெற வேண்டும் என்கின்றார்.

கொத்து நூற்றுப் பத்து நாட்டக் கொற்ற வேத்து:—

ஆயிரங் கண்களை யுடையவன் இந்திரன். சகஸ்ராட்சன் என்ற பேருடையவன்.

"நூற்றுப் பத்தடுக்கிய நாட்டத்து நூறுபல்
வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்து
ஈரிரண்டேந்திய மருப்பின் எழில்நடைத்
தாழ்பெருந் தடக்கை உயர்த்த யானை
எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வன்" —திருமுருகாற்றுப்படை.

குக்குடாத்த :—

குக்குட அத்த.

"சேவலங் கொடியான பைங்கர" —(மூலமந்திர) திருப்புகழ்.

சர்ப்ப கோத்ர :—

கோத்திரம்—மலை. சர்ப்ப கோத்திரம்—நாககிரி—திருச் செங்கோடு.

தத்வ நாற்பத்தெட்டு நாற்பத்தெட்டு மேற்று :—

தொண்ணூற்று ஆறு தத்துவங்கள்:

### முதல் தத்துவம் 30

| | |
|---|---|
| பூதம் :- பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம். | 5 |
| பொறி :- மெய், வாய், கண், மூக்கு, செவி. | 5 |
| புலன் :- சத்தம், பரிசம், உருவம், இரசம், கந்தம். | 5 |
| கன்மேந்திரியம் :- வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம். | 5 |
| கன்ம விஷயம் :- வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆநந்தம். | 5 |
| கரணம் :- மனம், புத்தி, சித்தம், அகங்காரம். | 4 |
| அறிவு :- | 1 |
| | 30 |

### 2-ஆம் தத்துவம் 30

| | |
|---|---|
| நாடி :- இடை, பிங்கலை, சுழுமுனை, துவை, புருடன், காந்தாரி, அத்தி, அலம்புடை, சங்கினி, குரு. | 10 |
| வாயு :- பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன். | 10 |
| சயம் :- அமர்வா, பகிர்வா, சலவா, மலவா, சுக்கிலவா. | 5 |
| கோசம் : அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம். | 5 |
| | 30 |

### 3-ஆம் தத்துவம் 36

| | |
|---|---|
| ஆதாரம் :- மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை. | 6 |
| மண்டலம் :- அக்கினி, ஆதித்த, சந்திர. | 3 |
| மலம் :- ஆணவம், கன்மம், மாயை. | 3 |
| தோஷம் :- வாதம், பித்தம், சிலேத்துமம். | 3 |
| ஏடணை :- தனேடணை, தாரேடணை, புத்திரேடணை. | 3 |
| குணம் :- இராசசம், தாமதம், சாத்துவீகம். | 3 |
| இராகம் :- காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம். இடும்பை, அகங்காரம். | 8 |
| வினை :- நல்வினை, தீவினை. | 2 |
| அவஸ்தை :- சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம். | 5 |
| | 36 |

ஆகமொத்தம் 96

இவைகளின் விளக்கத்தை வேதாந்தத் தத்துவக் கட்டளையில் காணலாம்.

தர்க்க சாத்திரம் :—

தருக்க நூல் ஒரு சிறந்த அறிவுத் திறனுடையது. அது பொருள்களை நிச்சயிப்பது.

வடமொழியில் நியாய சாத்திரத்தைச் செய்தவர் கௌதமர்.

வேதம் 4; அங்கம் 6; உபாங்கம் 4; ஆகவித்தை 14.

உபாங்கம் : (1) மீமாம்ஸை, (2) நியாயம், (3) புராணம், (4) ஸ்மிருதி (தர்ம சாத்திரம்)

உலகத்துக்குக் கர்த்தா இறைவன் என்று வேதஞ் சொல்லுகின்றது. வேதத்தின் சொல்லை அர்த்தத்தால் மீமாம்ஸம் நிர்ணயிக்கின்றது. இதைப் பல யுக்திகளால் தீர்மானிப்பது நியாய சாஸ்திரம்.

தருக்க சங்கிரகம், நியாயப்பிரகாசம் முதலிய நூல்களைக் காண்க.

### கருத்துரை

நாககிரி நாயகா! வாக்கு வன்மையையும் வெட்சிமாலையையுந் தந்தருள்வீர்,

## 158

பத்தர்க ணப்ரிய நிர்த்தந டித்திடு
பக்ஷிந டத்திய குகபூர்வ
பச்சிம தக்ஷிண வுத்தர திக்குள
பத்தர்க ளற்புத மெனவோதுஞ்
சித்ரக வித்துவ சத்தமி குத்ததி
ருப்புக ழைச்சிறி தடியேனுஞ்
செப்பென வைத்துல கிற்பர வத்தெரி
சித்தவ னுக்ரக மறவேனே
கத்திய தத்தைக ளைத்துவி ழத்திரி
கற்கவ ணிட்டெறி தினைகாவல்
கற்றகு றத்திநி றத்தக ழுத்தடி
கட்டிய ணைத்தப னிருதோளா
சத்தியை யொக்கஇ டத்தினில் வைத்தத
கப்பனு மெச்சிட மறைநூலின்
தத்துவ தற்பர முற்றுமு ணர்த்திய
சர்ப்ப கிரிச்சுரர் பெருமாளே.

### பதவுரை

பத்தர் கண ப்ரிய - அடியார் திருக்கூட்டத்தின் மீது அன்புள்ளவரே! நிர்த்தம் நடித்திடு - நடனம் ஆடவல்ல, பட்சி நடத்திய குக - மயிலை வாகனமாகக் கொண்டு நடாத்துகின்ற குகமூர்த்தியே! கத்திய தத்தை களைத்து விழ - கத்துகின்ற கிளிகள் களைத்து விழும்படி, திரி கல் கவண் இட்டு எறி - சுழற்றும் கவணில் கல்லை வைத்து எறிகின்ற, தினை காவல் கற்ற - தினைப்புனத்தைக் காவல் செய்யக் கற்றுக் கொண்ட, குறத்தி - வள்ளி பிராட்டியாருடைய, நிறத்த கழுத்து அடி - நல்ல நிறமுடைய கழுத்தின் அடியில், கட்டி அணைத்த - கட்டித் தழுவிய, பன் இருதோளா - பன்னிரு தோள்களையுடையவரே! சத்தியை ஒக்க இடத்தினில் வைத்த - பராசக்தியைப் பொருந்தும்படி இடப் பாகத்தில் வைத்தருளிய, தகப்பனும் மெச்சிட - தந்தையாராகிய சிவபெருமானும் மெச்சும்படி, மறை நூலின் - வேத நூலின், தத்துவம் தற்பரம் முற்றும் உணர்த்திய-உண்மைப் பொருள் பரம்பொருள் ஆகிய எல்லாவற்றையும் உபதேசித்து விளக்கிய, சர்ப்ப கிரி- நாக கிரியில் வாழ்கின்ற, சுரர் பெருமாளே - தேவர்கள் போற்றும் பெருமை

யில் மிகுந்தவரே! பூர்வ - கிழக்கு, பச்சிம - மேற்கு, தட்சிண - தெற்கு, உத்தர - வடக்கு, திக்கு உள பத்தர்கள் - திசைகளில் உள்ள அன்பர்கள், அற்புதம் என ஓதும் - இது அற்புதம் அற்புதம் எனக் கொண்டாடுகின்ற, சித்ர கவித்துவ - அழகிய கவிபாடுந் திறத்தின், சத்தம் மிகுத்த - ஒலி மிகுந்துள்ள, திருப்புகழை - திருப்புகழை, சிறிது அடியேனும் - சிறிதளவு அடியேனும், செப்பு என வைத்து - சொல்லும்படியாக வைத்தும், உலகில் பரவ - அப்பாடல்கள் உலகில் பரவும்படியாக, தெரிசித்த - உம்மை தெரிசித்த, அநுக்ரகம் மறவேனே - அருள் புரிந்ததை அடியேன் மறக்கமாட்டேன்.

## பொழிப்புரை

அடியார் திருக் கூட்டத்தில் அன்புள்ளவரே! நடனம் ஆடவல்ல மயிலை வாகனமாகக் கொண்டவரே! குக மூர்த்தியே! ஒலி செய்கின்ற கிளிகள் சோர்ந்து விழும்படி, சுழற்றும் கவணில் கல்லை விட்டு எறிந்த தினைப்புனத்தின் காவலைக் கற்றுக் கொண்ட வள்ளிநாயகியின், நல்ல நிறமுள்ள கழுத்தின் அடியில் கட்டித் தழுவிய பன்னிரு தோள்களை யுடையவரே! பராசக்தியை இடப்பாகத்தில் பொருந்த வைத்த தந்தையாகிய சிவபெருமான் மெச்சும்படி, வேத நூலின் உண்மைப் பொருள்களையும், உயர்ந்த பொருள்களையும் உபதேசித்தவரே! நாககிரியில் வாழ்பவரே! தேவர்கள் போற்றும் பெருமிதமுடையவரே! கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு என்ற நான்கு திசைகளில் உள்ள அடியார்கள், இது அற்புதம் அற்புதம் என்று மெச்சும்படி, அழகிய கவி பாடுந் திறத்தின் ஒலி மிகுந்த திருப்புகழை அடியேன் சிறிது சொல்லும்படிச் செய்து, அப்பாடல்கள் உலகெலாம் பரவும்படியும் செய்த அருள் திறத்தை ஒரு போதும் மறவேன்.

## விரிவுரை

**பத்தர் கணப்ரிய :—**

முருகப் பெருமான் அடியார் திருக் கூட்டத்தின் மீது மிகுந்த அன்புள்ளவர்.

"அடியார்க்கு நல்ல பெருமாள்" —கந்தரலங்காரம் (33)

**நிர்த்த நடித்திடு பட்சி நடத்திய குக :—**

கலைகளில் சிறந்தது ஆடற்கலை. தெய்வங்களில் சிறந்தது நடராஜமூர்த்தி. இயல்பாக, கற்றுக் கொடுப்பார் யாரும் இன்றி, ஆடுவது மயில்.

பூர்வ பச்சிம தெட்சிண உத்தர திக்குள பத்தர்கள் அற்புதம் என ஓதும்:—

திருப்புகழைக் கேட்டு, நான்கு திசைகளில் உள்ள அடியார்கள், ஆ! ஆ! இது அரியது, அற்புதமானது என்று வியந்து புகழ்கின்றார்கள்.

சித்ர கவித்துவ சத்த மிகுத்த திருப்புகழ் :—

சித்ரம்—அழகு. கவியில், சொல்லழகு, பொருளழகு, நடையழகு, தொடையழகு முதலிய பல அழகுகள் அமைந்திருக்க வேண்டும். கவித்துவம்—கவி பாடுந் திறன்.

இதற்கு முன் 157–ஆவது பாடலில், "சித்ரவாக்குப் பெற்றுவாழ்த்தித் துதிக்கின்ற திறத்தைத் தந்தருள்" என்று வேண்டினார்.

இந்தப் பாடலில், "சித்ரகவித்துவ சத்த மிகுத்த திருப்புகழைப் பாடுந் திறத்தை முருகன் அருளினார். அந்த அநுக்கிரகத்தை மறக்கமாட்டேன்" என்று கூறுகின்றார்.

செப்பென வைத்து :—

நீ திருப்புகழைச் செப்பு என்று முருகன் அருள்புரிந்தார். "செய்ப்பதி வைத்து" எனவும் பாடம். செய்ப்பதி—வயலூரை வைத்துப் பாடு என்று முருகன் அருளியதை இது குறிக்கின்றது.

## கருத்துரை

நாககிரி மேவும் வள்ளி மணவாளா! திருப்புகழைப் பாடும் திறத்தினை அருளிய அநுக்கிரகத்தை ஒருபோதும் மறவேன்.

## 159

புற்புதமெ னுமை அற்பநிலை யாத
பொய்க்குடில்கு லாவு மனையாளும்
புத்திரரும் வீடு மித்திரரு மான
புத்தி சலியாத பெருவாழ்வு
நிற்பதொரு கோடி கற்பமென மாய
நிட்டையுடன் வாழு மடியேன்யான்
நித்தநின தாளில் வைத்ததொரு காதல்
நிற்கும்வகை யோத நினைவாயே

சற்பகிரி நாத முத்தமிழ்வி நோத
சக்ரகதை பாணி மருகோனே
தர்க்கசமண் மூகர் மிக்ககழு வேற
வைத்தவொரு காழி மறையோனே
கற்புவழு வாது வெற்படியின் மேவு
கற்றைமற வாணர் கொடிகோவே
கைத்தஅசு ரேசர் மொய்த்தகுல கால
கற்பதரு நாடர் பெருமாளே.

## பதவுரை

சற்பகிரி நாத - நாககிரிக்குத் தலைவரே! முத்தமிழ் விநோத - முத்தமிழில் பொழுது போக்குபவரே! சக்ர கதை பாணி மருகோனே - சக்கரத்தையும் கதையையும் ஏந்திய கரத்தினராகிய திருமாலின் திருமருகரே! தர்க்க சமண் மூகர் - வாது செய்து வாயிழந்த ஊமைகள் போல் நின்ற சமணர்களை, மிக்க கழு ஏறவைத்த - மிகுந்த கழுவில் ஏறுமாறு செய்த, ஒரு காழி மறையோனே - ஒப்பற்ற சீகாழி அந்தணரே! கற்பு வழுவாது - கற்பு நிலை தவறாமல், வெற்பு அடியில் மேவு - வள்ளி மலையின் அடிவாரத்தில் இருந்த, கற்றை மறவாணர் கொடிகோவே - கூட்டமான வேடர்களின் கொடி போன்ற வள்ளிபிராட்டியின் தலைவரே! கைத்த அசுர ஈசர் - வெறுப்புடைய அசுரத் தலைவர்களின், மொய்த்த குல கால - நெருங்கிய குலத்துக்கு முடிவைச் செய்தவரே! கற்ப தரு நாடர் - கற்பகத்தருவுடைய விண்ணுட்டுத் தேவர்கள் போற்றும், பெருமாளே - பெருமையின் மிகுந்தவரே! புற்புதம் என் நாம - நீர்க்குமிழி என்று பேர் படைத்து, அற்பம் நிலையாத - சிறிது நேரம்கூட நிலைத்திராத, பொய் குடில் குலாவு மனையாளும் - பொய்க் குடிசையான இந்தவுடம்புடன் குலவுகின்ற மனையாளும்; புத்திரரும் - புதல்வர்களும், வீடும் - வீடும், மித்திரரும் - நண்பர்களும் ஆன சூழலில், புத்தி சலியாத பெருவாழ்வு - புத்தி சோர்வு அடையாமல் இவ்வாழ்வு பெருவாழ்வு, நிற்பது ஒரு கோடி கற்பம் என - இது நிலைத்து நிற்பது ஒரு கற்ப காலம் என்று கருதும், மாய இடை உடன் வாழும் - மயக்கத்தியான நிலையில் வாழுகின்ற, அடியேன் யான் - அடியேனாகிய நான், நித்தம் நின தாளில் - தினந்தோறும் உமது திருவடியில், வைத்தது ஒரு காதல் - வைத்துள்ள ஒப்பற்ற அன்பானது, நிற்கும் வகை ஓத நினைவாயே - நிலைத்து நிற்கும் வழியை உபதேசிக்க தேவரீர் நினைத்தருள வேண்டும்.

## பொழிப்புரை

**நாக மலைக்கு நாதரே! இயல் இசை நாடகம் என்ற முத்தமிழில் பொழுது போக்குபவரே! சக்கரத்தையும் கதையையும் கைகளில் ஏந்திய திருமாலின் திருமருகரே! தர்க்கஞ்**

செய்து வாயிழந்து ஊமைகள் போல் தோல்வியுற்ற சமணர்களை மிகுந்த கழுவில் ஏற வைத்த ஒப்பற்ற சீகாழி யந்தணரே! கற்பு நெறி வழுவாமல், வள்ளிமலை யடிவாரத்தில் வாழ்ந்த கூட்டமான வேடர் குலக் கொடியாகிய வள்ளிநாயகியின் கணவரே! வெறுப்புற்ற அசுரத் தலைவர்களின் நெருங்கிய குலத்துக்கு அழிவு செய்தவரே! கற்பக மரம் பொருந்திய விண்ணவர்கள் போற்றும் பெருமித முடையவரே! நீர்க் குமிழியைப் போல், சிறிது நேரமும் நிலைத்திராத பொய்யான இந்த உடம்புடன் குலவுகின்ற மனைவி, மக்கள், வீடு, நண்பர்கள் ஆன சூழலில் அறிவு சோர்வடையாமல், இது பெருவாழ்வு, இது ஒரு கற்ப கோடி காலம் நிலைத்து நிற்பது என்று மாய மயக்கத் தியானத்தில் வாழுகின்ற அடியேன், நாள்தோறும் உமது திருவடியில் வைத்த ஒப்பற்ற அன்பு நிலைத்து நிற்கும் வகையை உபதேசித் தருள வேண்டும்.

## விரிவுரை

புற்புத மெனும அற்ப நிலையாத பொய்க்குடில் :—

புற்புதம்—நீர்க்குமிழ். நீர்க் குமிழியைப்போல் இந்த உடம்பு விரைவில் அழியுந் தன்மையது.

"நீர்க்குமிழிக்கு நிகரென்பர் யாக்கை" —கந்தரலங்காரம் (66)

பெருவாழ்வு நிற்ப தொரு கோடி கற்ப மெனா :—

அற்ப ஆயுளை மூடமதியால் கற்பகாலம் வாழ்வதாக எண்ணுகின்றார்கள்.

ஒரு கற்பமன்று. ஒரு கோடி கற்ப காலம் நாம் வாழ்வோம் என்று கருதுகின்ற பேதை மதியை என்னென்று இகழ்வது?

ஒரு கற்பம் எத்துணை காலம் என்பதைத் திருப்புகழ் விரிவுரை 3-ஆம் தொகுதி முத்துக்குச்சிட்டு என்ற பாடலின் விரிவுரையில் 229-ஆம் பக்கத்தில் காணலாம்.

இப்படியான கற்பங்கள் ஒரு கோடி வாழ்வதாக எண்ணுகின்றார்கள் மந்த மதி படைத்த மனிதர்கள்.

நித்த நினதாளில் வைத்த தொரு காதல் நிற்கும் வகையோத நினைவாயே :—

முருகப் பெருமான் திருவடியில் வைத்த அன்பு என்றும் நிலைத்திருக்க வேண்டும். இதைத்தான் வரமாக வேண்டுகின்றார் காரைக்காலம்மையார்.

"இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார்"

**முத்தமிழ் விநோத :—**

முருகப் பெருமான் தமிழில் அளவற்ற அன்புள்ளவர். தமிழிலேயே பொழுது போக்குகின்றவர்.

"முத்தமிழ் வித்வ விநோதா கீதா" —(மைக்குழ) திருப்புகழ்.

"அதிமதுர சித்ரகவி நிருபனு மகத்தியனும்
அடிதொழு தமிழ்த்ரய விநோதக் கலாதரனும்"
—திருவகுப்பு (12)

"மீனவனு மிக்கபுலவோருமுறை பொற்பலகை
மீதமர் தமிழ்த்ரய விநோதக் காரனும்" —திருவகுப்பு (4)

**தர்க்க சமண் மூகர் :—**

திருஞானசம்பந்தருடன் சமணர்கள் அனல் வாதம் புனல் வாதம் புரிந்து வாய்டங்கி ஊமைகள் போல் ஆனார்கள். விளக்கம் திருப்புகழ் விரிவுரை 5-ம் தொகுதி 129-ம் பக்கத்தில் பார்க்கவும்.

**கற்பு வழுவாது வெற்படியில் மேவு .... கொடி :—**

வள்ளியம்மையின் கற்புத்திறனை வியந்து கூறுகின்றார்.

## கருத்துரை

நாககிரி நாதா! உன் பாத மலரில நீங்காத அன்புடன் நிற்கும் வகை அருள் செய்வீர்.

## 160

பொற்சித்ரப் பச்சைப் பட்டுக்
கச்சிட்டுக் கட்டிப் பத்மப்
புட்பத்துக் கொப்பக் கற்பித் திளைஞோர்கள்
புட்பட்டுச் செப்பத் துப்பற்
கொத்தப்பொற் றித்தத் திட்பப்
பொற்பிற்பெற் றுக்ரச் சக்ரத் தனமானர்

கற்சித்தச் சுத்தப் பொய்ப்பித்
தத்திற்புக் கிட்டப் பட்டுக்
கைக்குத்திட் டிட்டுச் சுற்றித் திரியாமல்
கற்றுற்றுச் சித்திக் கைக்குச்
சித்திப்பப் பக்ஷத் திற்சொற்
கற்பித்தொப் பித்துக் கொற்றக் கழல்தாராய்

குற்சித்துக் கொட்டுக் கொட்டுத்
துக்கச்சத் துக்குக் குக்குக்
குக்குக்குக் குக்குக் குக்குக் கெனமாரு
குட்சிக்குப் பக்ஷிக் கைக்குக்
கக்ஷத்திற் பட்சத் தத்தக்
கொட்டிச்சுட் டிக்கொக் ரிக்குக் குடதாரி

சற்சித்துத் தொற்புத் திட்பட்
சத்தர்க்கொப் பித்தட் சத்துச்
சத்தத்தைச் சத்திக் கொச்சைப் பதிவாழ்வே
தக்ஷப்பற் றுக்கெர்ப் பத்திற்
செற்பற்றைச் செற்றிட் டுச்சச்
சற்பப்பொற் றைக்குட் சொக்கப் பெருமாளே.

**பதவுரை**

குற்சித்து - (பசிக்கு இரையில்லையே யென்று) அருவருப்புடன், கொட்டு கொட்டு - கொட்டு கொட்டு என்றும், துக்க அச்சத்து - பசியினால் துக்கமும் அச்சமுங் கொண்டு, குக் குக்குக் குக் குக்குக் குக்குக் குக்குக்கு என மாரு - குக் குக்குக் குக் குக்குக் குக்குக் குக்குக்கு என்று ஓயாமல், குட்சிக்கு பட்சிக்கைக்கு - வயிற்றின் இரைக்காக, கட்சத்தில் பட்சம் தத்த - விலாப்புறத்தில் சிறகுபடும்படி, கொட்டி சுட்டி - அடித்துக்கொண்டு குறிப்பாக, கொக்ரி - கொக்கரிக்கின்ற, குக்குடதாரி - சேவலைத் தரித்தவரே! சற்சித்து - சத்தும் சித்தும் ஆனவராய், தொல் புத்தி பட்ச அத்தர்க்கு - பழமை ஞானம் அன்பு என்ற இவைகளையுடையவராய தந்தைக்கு, அட்சத்து சத்தத்தை ஒப்பித்த - அட்சரத்துச் சத்தமாகிய தேவாரப் பாடல் களை சமர்ப்பித்த, சத்தி - ஆற்றல்மிக்க, கொச்சை பதி வாழ்வே-சீகாழியம் பதியில் வாழ்பவரே! தட்ச பற்று - தட்சணம் பற்றுவதும், கெர்பத்தில் செல் - கருவிலே செலுத்துவதுமான, பற்றை செற்றிட்டு - பற்றுக்களை ஒழித்து, உச்சம் - உயர்ந்துள்ள, சற்ப பொற்றைக்கு உள் - நாகமலையில் வாழ்கின்ற, சொக்க - அழகிய, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! பொன் சித்ர பச்சை பட்டு கச்சு இட்டு - அழகிய விசித்திரமான பச்சைப் பட்டால் ஆய இரவிக்கையை அணிவித்து, கட்டி பத்ம புட்பத்துக்கு ஒப்ப - கட்டித் தாமரைப் பூவுக்கு ஒப்பாகும் என்று, கற்பித்து இளைஞோர்கள் - கற்பனைகூறி இளைஞர்கள், புள்பட்டு செப்பத்து - பறவை வலையில் சிக்கியது போல் (வேசையர் வலையிற் சிக்கி) பல் கொத்த - பல்லால் கொத்தப் பெற்று, பொன் தித்த - பொன்னை அடைவதற்கு, திட்ப - தெளிவாகவும், பொற்பில் - அழகாகவும் பேசி, பெற்ற - பொன்னைப் பெறுகின்ற, உக்ர

சக்ர தனமானர் - கொடிய சக்கரம் போல் வட்ட வடிவமான தனங்களை யுடைய பொது மாதர்களின், கல் சித்த - கல்லைப் போல் கடினமான நெஞ்சமாகிய, சுத்த பொய் பித்தத்தில் புக்கு - சுத்தப் பொய்யான பைத்தி யத்துக்குள் புகுந்து, இட்ட பட்டு - அதில் அதிக விருப்பம் வைத்து, கை குத்து இட்டு இட்டு, தன்னைப்போல அவ்வேசையரிடம் வரும் காமுகர்களு டன் கைக்குத்துச் சண்டையும் போட்டு, சுற்றி திரியாமல் - அங்கு இங்குஞ் சுற்றி அலையாமல், கற்று உற்று - ஞான நூலைக் கற்று உம்மையடைந்து, சித்தி கைக்கு சித்திப்ப - சித்தியானது கைகூடுவதற்கு, பட்சத்தில் - அன் புடன், சொல் கற்பித்து - நல்ல சொற்களைக் கற்பித்தும், ஒப்பித்து - அவை களை உமது திருவடிக்கே ஒப்புவிக்குமாறும், கொற்ற கழல் தாராய் - உமது வீரக் கழல் அணிந்த திருவடியை அடியேனுக்குத் தந்தருள்வீர்.

## பொழிப்புரை

பசிக்கு இரையில்லையே என்று அருவருப்புடன் கொட்டுக் கொட்டு என்னும் பசியால், துக்கமும் அச்சமுங் கொண்டு, குக் குக் குக் குக்குக்குக் குக்குக்குக்குக்கு என்று ஓயாமல், வயிற்றின் இரைக்காக, விலாப்புறத்துப் பக்கங்களில் படும்படி இறகை யடித்துக் குறிப்புடன் கொக்கரிக்கின்ற சேவலைத் தரித்தவரே! சத்தாய் சித்தாய் பழயராய் ஞானியாய் அன்புடைய தந்தையா ராகிய சிவபெருமானுக்கு அட்சரத்து ஒலியாகிய தேவாரப் பாடல்களைச் சமர்ப்பித்த, ஆற்றலையுடைய சீகாழிச் செல்வமே! உடனே பற்றிக் கொள்வதும், கருவிலேயே பற்றுவதுமாகிய, பற்றுக்களை ஒழித்து, உயர்ந்த நாகமலையில் எழுந்தருளியுள்ள அழகிய பெருமிதமுடையவரே! அழகிய விசித்திரமான பச்சைப் பட்டாலாகிய இரவிக்கையை அணிவித்து, கட்டித் தாமரைப்பூவுக்கு ஒப்பாகும் என்று கற்பனை கூறி இளைஞர்கள், பறவை வலையில் சிக்கியது போல், அவ்வேசையரது வலையில் சிக்கி பல்லால் கொத்தப் பெற்று, பொன்னை அடைவதற்கு வேண்டி தெளிவாகவும் அழகாகவும் பேசிப் பெறுகின்ற, கொடிய சக்கரம்போல் வட்டவடிவான கொங்கைகளையுடைய மாதர்களின், கல்லைப் போன்ற கடினமான நெஞ்சமாகிய சுத்தப் பொய்யான பைத்தியத்துக்குள் புகுந்து, அதில் அதிக விருப் பத்தை வைத்து, தன்னைப்போல் அவ்வேசையரிடம் வரும், பிற காமுகர்களுடன் கைக் குத்துச் சண்டையிட்டு அங்கும் இங்கும் சுற்றித் திரிந்து அலையாமல், ஞான நூல்களை ஓதி உம்மையடைந்து, நல்ல சித்தி கைகூடுமாறு, அன்புடன் உம்மைத் துதிக்குஞ் சொற்கள் என் நெஞ்சில் தோன்றுமாறு

கற்பித்தும், அச் சொற்களை உமக்கே ஒப்பித்தும் உய்ய உமது வீரக்கழலணிந்த திருவடிகளைத் தந்தருளுவீர்.

## விரிவுரை

இத்திருப்புகழில் முதல் மூன்று அடிகளில் விலைமகளிர் மாய வலையில் வீழ்ந்த இளைஞர்களின் பரிதாப நிலையைக் கூறுகின்றார்.

கற்றுற்று :—

கற்று உற்று. ஞான நூல்களைக் கற்றும், கற்றதன் பயனாக அப்பரம பதியை உற்றும்.

சித்தி கைக்குச் சித்திப்ப :—

அஷ்டமாசித்திகளும் கைக்குள் சித்திக்க அருளுவான் முருகன.

சொற் கற்பித் தொப்பித்து :—

உயர்ந்த சொற்களைக் கற்பிக்க வேண்டும் என்று வேண்டுகின்றார்.

> "வரிய பதத்தினின் அருவி யிருப்பிடம்
> அமையு மெனக்கிடம் உனது பதச் சரண்"
>
> —(குருவியென) திருப்புகழ்.

குற்சித்து :—

குற்சிதம்—அருவருப்பு. சேவல் பசிக்கு இரையில்லையே என்று அருவருப்புடன் கொக்கரிக்கின்றது.

கொட்டுக் கொட்டு :—

கொட்டுக் கொட்டு என்று பசித்திருக்கின்றது.

துக்கச் சத்து :—

துக்க—அச்சம் துன்பமும் திகிலும் அடைகின்றது.

குக்குக்குக் குக்குக்கு :—

பசியின் காரணமாகக் கோழி குக்குக் கென்று ஒலிக்கின்றது.

> 'பசித்திரைக் கிசை கூவும் பெடைத்திரட்
> களித்த குக்குடக் கொடிக் கரத்த"
>
> —(கடற் செகத் தடக்கி) திருப்புகழ்.

சிறகையடித்து கொக்கறுகோ என்று கோழி கொக்கரிக்கும்,

சற்சித்து தொற்புத்திப் பட்சத்தர்க்கு :—

சத்து—உண்மை. சித்து—அறிவு. தொல்—பழமை. புத்தி—ஞானம். பட்சம்—அன்பு.

இவைகளையுடையவர் சிவபெருமான்.

அட்சத்துச் சத்த்தை :—

அட்சரத்து என்ற சொல் அட்சத்து என வந்தது.

இனிய எழுத்துக்களால் ஆய தேவாரப் பாடலை சம்பந்தர் சிவபிரானுக்கு ஒப்பித்ததை இங்கே குறிப்பிடுகின்றார்.

தட்சப் பற்று :—

தட்சணம் என்ற சொல், தட்சம் என வந்தது. பற்று தட்சணமே வந்து பற்றும் திறனுடையது.

கெர்ப்பத்தில் செல் :—

பற்று கருவிலேயே சென்று பற்றும். பற்று அற்றால் பிறப்பறும். (அருணகிரியாருக்கு) அப்பற்றை அகற்றிய ஆறுமுகப் பெருமான் நாககிரியில் எழுந்தருளியிருக்கின்றார்.

கருத்துரை

நாககிரி முருகா! உம்மைப் பாட உமது திருவடிகளைத் தந்தருள்வீர்.

161

கொடிய மறலியு மவனது கடகமு
மடிய வொருதின மிருபதம் வழிபடு
குதலை யடிவ னினதருள் கொடுபொரு மமர்காண

குறவர் மகள்புணர் புயகிரி சமுகமு
மறுமு கமும்வெகு நயனமும் ரவியுமிழ்
கொடியு மகிலமும் வெளிபட இருதிசை யிருநாலும்

படியு நெடியன எழுபுண ரியுமுது
திகிரி திகிரியும் வருகென வருதகு
பவுரி வருமொரு மரகத துரகத மிசையேறிப்

பழைய அடியவ ருடனிமை யவர்கண
மிருபு டையுமிகு தமிழ்கொடு மறைகொடு
பரவ வருமதி லருணையி லொருவிசை வரவேணும்

சடில தரவிட தரபணி தரதர
பரசு தரசசி தரசுசி தரவித
தமரு கமிருக தரவனி தரசிர தாபாரத்
தரணி தரதநு தரவெகு முககுல
தடினி தரசிவ சுதகுண தரபணி
சயில விதரண தருபுர சசிதரு மயில்வாழ்வே

நெடிய வுடலுரு இருளெழ நிலவெழ
எயிறு சுழல்விழி தழலெழ எழுகிரி
நெரிய அதிர்குரல் புகையெழ இடியெழ நெடுவானும்
நிலனும் வெருவர வருநிசி சரர்தள
நிகில சகலமு மடியவொர் படைதொடு
நிருப குருபர சுரபதி பரவிய பெருமாளே.

**பதவுரை**

சடில தர - சடாபாரத்தைத் தாங்குபவரும், விடதர - ஆலகால விடத்தைக் கண்டத்தில் தரித்தவரும், பணிதர - பாம்புகளை ஆபரணமாகத் தரித்தவரும், தர பரசுதர - மேன்மை தங்கிய மழுவைத் தாங்கியவரும், சசிதர - சந்திரனை முடியிற் றரித்தவரும், சுசிதர - தூய்மையை யுடையவரும், இத தமருக மிருகதர - இனிய நாதத்தை யுடைய உடுக்கையையும் மானையும் திருக்கரங்களில் தரித்தவரும், வனிதர - பார்வதி தேவியை இடப் பாகத்தில் தரித்தவரும், சிரதர - பிரம சிரங்களைத் தாங்கியவரும், பார தரணிதர - சுமையை யுடைய பூமியைத் தாங்குபவரும், தநுதர - மேரு கிரியை வில்லாகத் தரித்தவரும், வெகு முக குல தடினிதர-ஆயிரம் முகங்களை யுடைய சிறந்த கங்காதேவியைத் தரித்தவரும் ஆகிய, சிவ சுத - சிவபெருமானுடைய திருப்புதல்வரே!, குணதர - அருட்குணங்களை யுடையவரே!, பணிசயில - திருச்செங்கோட்டில் எழுந்தருளி யிருப்பவரே! விதரண - தயாள முடையவரே! தருபுர சசிதரு - கற்பக நாட்டிலுள்ள இந்திராணி பெற்றெடுத்த, மயில் வாழ்வே - மயில்போன்ற தெய்வயானை யம்மையாருக்கு வாழ்வாக விளங்குபவரே! நெடிய உடல் உரு இருள் எழ - (அசுரர்களுடைய) நீண்ட உடம்பின் கரிய வடிவத்திலிருந்து இருள் வீசவும், எயிறு நிலவு எழ - பற்களிலிருந்து ஒளி வீசவும், சுழல் விழி தழல் எழ - சுழல்கின்ற கண்களில் நெருப்புப் பொறி வீசவும், எழுகிரி நெரிய - ஏழு குல மலைகள் நெரிந்து பொடிபடவும், அதிர் குரல் புகை எழ - அதிர்கின்ற குரலிலிருந்து புகை எழவும், இடி எழ-இடியோசையைப் போன்ற ஒலியுண்டாகவும், நெடு வானும் - விசாலமான ஆகாயமும், நிலனும் - பூமண்டலமும், வெருவர - அச்சப்படவும், வரு நிசிசரர் தளம் - வருகின்ற இராக்கதர்களுடைய

சேனைகள், நிகில சகலமும் மடிய - சிறிதும் இல்லாமல் முழுவதும் அழிந்தொழிய, ஓர் படை தொடு-ஒப்பற்ற சர்வ சங்கார படையை ஏவிய, நிருபதலைவரே! குருபர - மேலான குருநாதரே! சுரபதி பரவிய - தேவர் கோமானாகிய இந்திரனால் துதிசெய்யப் பெற்ற, பெருமாளே - பெருமையின் மிக்கவரே! கொடிய மறலியும் - கொடுமை மிக்க கூற்றுவனும், அவனது கடகமும் - அக்கூற்றுவனுடைய சேனையும், மடிய - மாண்டொழியுமாறு, ஒரு தினம் - ஒரு நாளில், இருபதம் வழிபடும் - தேவரீருடைய திருவடிகளிரண்டையும் வழிபடுகின்ற, குதலை அடியவன் - சிறுகுழந்தையாகிய அடியேன், நினது அருள்கொடு - தேவரீருடைய திருவருளைத் துணையாகக் கொண்டு, பொரும் அமர் காண - போர் செய்கின்ற யுத்தத்தைப் பார்க்கும்பொருட்டு, குறவர் மகள் புணர் - வள்ளிநாயகியார் தழுவுகின்ற, புயகிரி சமுகமும் - மலைபோன்ற தோள்களின் கூட்டமும், அறுமுகமும் - ஆறு திருமுகங்களும், வெகு நயனமும் - பல கண்களும், ரவி உமிழ் கொடியும் - சூரியனை உமிழ்கின்ற கோழிக் கொடியுடனும், அகிலமும் வெளி பட - பிறய்ாவும் வெளிப்படவும், இருதிசை இருநாலும் - மேல் கீழ் ஆகிய இரண்டு திசைகளுடனும் எட்டுத் திசைகளும், படியும் - பூமியும், நெடியன எழு புணரியும் - நீண்ட ஏழு கடல்களும், முது திகிரி திகிரியும் - பழமையான வளைந்துள்ள சக்கரவாளகிரியும், வருக எனவருதகு - வா என்று அழைக்க உடன்வந்து அசைவதுபோல் அசையவும், பவுரி வரும் - கூத்தாடுகின்ற, ஒரு மரகத துரகத மிசை - ஒப்பற்ற பச்சை மயில்வாகனத்தின்மீது, ஏறி - ஆரோகணித்து, பழைய அடிய்வருடன் - பழமையான அடியார்களுடனும், இமையவர் கணம் - தேவர்களுடைய கூட்டம், இருபுடையும் - இருபக்கங்களிலும், மிகு தமிழ்கொடு மறைகொடு - பெருமை மிகுந்த தமிழ்ப்பாடலையும், வேதகீதங்களையும் கொண்டு, பரவ - துதித்துக்கொண்டு வரவும், வரும் அதில் - முன்னொருமுறை வந்தருளியதுபோல், அருணையில் ஒரு விசை - திருவண்ணாமலையில் இன்னொருமுறை, வரவேணும் - வந்தருள வேண்டும்.

## பொழிப்புரை

சடாபாரத்தைத் தாங்கியவரும், ஆலகால விடத்தைக் கண்டத்தில் தரித்தவரும், நாகாபரணரும், சிறந்த மழுவை ஏந்தியவரும், பிறைச் சந்திரனைத் தரித்தவரும், தூய்மையுடையவரும், இனிய நாதத்தையுடைய உடுக்கையையும் மானையும் ஏந்திய திருக்கரத்தினரும், இமய வல்லியை இடப்பாகத்தில் உடையவரும், பிரம சிரங்களை மாலையாகத் தரித்தவரும், பாரமான பூமியைத் தமது திருவருளால் தாங்குபவரும், மேரு கிரியை வில்லாகவுடையவரும், ஆயிரமுகங்களையுடைய கங்கா நதியைத் திருமுடியில் தரித்தவரும் ஆகிய சிவபெருமானுடைய திருக்குமாரரே! அருட்குணங்களை யுடையவரே! சாப்பசயில

மாகிய திருஞ்செங்கோட்டில் எழுந்தருளி யிருப்பவரே! தயா சீலரே! கற்பகத்தருவுடன் கூடிய பொன்னகரத் தரசியாகிய இந்திராணியின் திருமகளாராகிய தெய்வயானை யம்மையாருக்கு வாழ்வாக விளங்குபவரே! நீண்ட வுடலிலிருந்து இருள்வீசவும், பற்களிலிருந்து ஒளிவீச்வும், சுழல்கின்ற கண்களிலிருந்து நெருப்புப்பொறி வீசவும், குலமலைகள் ஏழும் நெரிந்து தூள் படவும், அதிர்கின்ற குரலிலிருந்து புகையெழவும், இடியைப் போன்ற ஓசை எழவும், அகன்ற வானுலகமும் மண்ணுலகமும் அச்சப்படவும், அசுரர்களுடைய சேனைகள் யாவும் மாய்ந் தொழியுமாறு ஒப்பற்ற சர்வசங்காரப் படையை ஏவியருளிய தனிப்பெருந் தலைவரே! மேலான குருநாதரே! இந்திரன் புகழும் பெருமிதமுடையவரே! தேவரீருடைய சரணாரவிந்தங் களிரண்டையும் வழிபடுகின்ற அடியேன் உமது திருவருளைத் துணையாகக்கொண்டு, கொடிய கூற்றுவனும், அவனுடைய சேனைகளும் மடியுமாறு போர் செய்கின்ற நாள் ஒன்று உண் டல்லவா? அன்று அப்போரைக் கண்டு மகிழும் பொருட்டு, வள்ளியம்மையாருடனும், பன்னிரு புயாசலங்களுடனும், ஆறு திருமுகங்களுடனும், பதினெட்டு திருக்கண்களும், சூரியனை வெளிப் படுத்துகின்ற கோழிக் கொடியும். மற்றை எல்லா அங்கப் பிரத்தியங்கங்களும் வெளிப்படவும், பத்துத் திக்குகளும் பூமியும் நீண்ட கடல்கள் ஏழும் பழைய சக்கரவாள கிரியும் உடன் வந்து அசைய ஆடுகின்ற ஒப்பற்ற பச்சை மயில் வாகனத்தின் மீது ஏறி, பழைய திருத்தொண்டர்களும் தேவர்களும் இருபக் கங்களில் மிகுந்த இனிமையுடைய தமிழ்ப்பாடல்களையும் வேதப் பாடல்களையும், பாடித் துதித்துவரவும், முன்னொருவிசை அடி யேன் முன்வந்த்து போல், திருவண்ணாமலையில் இன்னொரு விசை வந்தருளல் வேண்டும்.

## விரிவுரை

இப்பாடலின் பிற்பகுதியில் தர என்பது 13 முறையும் எழ என்பது 6 முறையும் வந்திருப்பது கவனிக்கத் தக்கது.

கொடிய மறலியும்................. அமர்காண :—

உலகில் ஒருவர்க்கொருவர் மாறுபட்டுப் போர்புரிகின்ற இடத்தில் உடனே பெருங் கூட்டங் கூடிவிடுவது இயற்கை. சண்டையைப் பார்ப்பதில் யாருக்கும் விருப்பந்தானே? ஆதலால், கூற்றுவனுக்குந் தனக்கும் நிகழப் போகும் ஒரு பெரும் போரைக் காண்பதற்கு அருணகிரியார் முருக்கடவுளை

யழைக்குந் திறம் எத்துணை அழகும் வியப்பும் தருகின்றது. இதனை ஊன்றிச் சிந்திக்குந் தோறும் சிறுமுறுவலும் தோன்றுகின்றது. முருகன் சிறுகுழந்தை யல்லவா? குழந்தைகளுக்குச் சண்டையைப் பார்ப்பதில் மிகுந்த விருப்பமுண்டல்லவா? ஆனபடியால் இப்பாடல் 7வது அடியில் "சிவசுத" என்றனர்.

கூற்றுவனுடன் தான் செய்யும் போரும் முருகனுடைய திருவருளையே துணையாகக் கொண்டு செய்வதாகவும் தற்போதமும் முனைப்பும் கொண்டு செய்யவில்லை யென்றும் குறிப்பிடுதற் பொருட்டு, "நினதருள் கொடு" என்றனர். இனி இப்போரில் வெற்றியும் தோல்வியும் எவர்பால் நிகழுமோ? என்று ஐயுற வேண்டாம்; நிச்சயமாக வெற்றி தனக்கே என்ற துணிவு கொள்ளும் பொருட்டு, "மடிய" என்றனர். கூற்றுவனுக்குப் படைத்துணை யதிகமாயிற்றே? அதனால் எப்படி வெல்லமுடியும்? என்னும் ஐயத்தை விலக்கும் பொருட்டு, "அவனது கடகமும் மடிய" என்றனர். "அப்படி யாவரையும் அடக்கும் எமனை வெல்லும் ஆற்றலுடையேன் நான்" செருக்கு ஒரு சிறிதுமில்லை என்று விளக்கும்பொருட்டு "இருபதம் வழிபடும் குதலையடியவன்" என்றனர். எமனை ஏன் கொல்கின்றாய்? என்ற வினாவுக்கு விடையாக "கொடிய மறலி" என்று விடைபகர்கின்றனர். இயமனை வெல்லுதற்கு நீ மிகப்பெரியவனோ? என்னில் "இல்லை, சிறுவன்தான்" என்பதாக "குதலை" என்றனர். "இக்குழந்தைப் பருவத்திலேயே இயமனைக் கொல்வதாயின் இன்னும் யௌவனப்பருவம் வரின் எத்துணை ஆற்றல் மிகும்" என்னும் குறிப்பும் வெளிப்படுகின்றது. இவற்றையெல்லாம் சிந்திப்பார்க்குச் சித்தம் தித்திக்குமல்லவா?

குறவர் மகள் புணர் புயகிரி :—

வள்ளியம்மையார் இச்சாசக்தியாதலின் "குறவர் மகள் தழுவுகின்றதோள்"? என்றனர்.

வெகுநயனம் :—

"அஷ்டாதச விலோசனம்" என்ற கந்தபுராணத் திருவாக்கின்படி முருகக் கடவுளுக்குப் பதினெட்டுக் கண்கள்.

ரவியுமிழ் கொடி :—

சேவல் கூவிய பிறகே கதிரவனுதிப்பனுதலினால் சூரியனையுமிழ்கின்ற சேவல் என்றனர்.

"ரவியுமிழ் துவசமும்" —(நெடியவட) திருப்புகழ்.

இருதிசை இருநாலும் :—

எட்டு திக்குடன் மேல் கீழ் ஆக பத்துத்திசை.

பழைய அடியவர்.........பரவ :—

இறைவனாகிய முருகவேள் அருளுருக் கொண்டு அருணகிரியார்க்குத் தோன்றி காட்சியளித்தபோது, ஒரு புறத்தே பழந் தொண்டர் செந்தமிழ்த் தீஞ்சுவைப் பாடல்களையும், மற்றொருபுறம் வேதப் பாடல்களையும் பாடித் துதித்து வந்தனர் என்னுங் குறிப்பை யன்பர்கள் உற்று நோக்குக. முன்னே தமிழையும் பின்னே வடமொழியையும் வைத்துப் பேசி யிருப்பதை உய்த்துணர்க. இறைவனுக்கு முன்னே வருவது தமிழ். பின்னே வருவது வடமொழி.

திருமால் கோயிலில் இன்றும் இங்ஙனம் நிகழ்வது கண்கூடு.

“ பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற
பச்சைப் பசுங் கொண்டலே” —குமரகுருபரர்.

வருமதில் அருணையில் ஒருவிசை வரவேணும் :—

வரும் அதில் - வந்ததுபோல. முன்னே சொல்லிய வண்ணமாக முன் தனக்குக் காட்சி தந்ததுபோல், கூற்றுவனுடன் பொருது அவனை மடியச் செய்யும் வீரப்போரைக் காண்பதற்கு இன்னொருவிசை வரவேணும் என்று சுவாமிகள் வேண்டுகின்றனர்.

வனிதர :—

வனிதைதர என்பது கடைக்குறையாக வனிதர என வந்தது. வ(ன்)னி தர - நெருப்பைக் கையில் தாங்கியவரே என்றும் பொருள் கொள்ளலாம்.

தரணிதர தநுதர :—

தரணிதர - பூமியைத் தாங்குபவர். தநு தர - மேருகிரியை வில்லாகத் தரித்தவர்.

தரணிதர - மலை; (மேரு) மலையாகிய வில்லைத் தரித்தவரே என்றும் பொருள் கொள்ளலாம்.

சசிதரு மயில் :—

தெய்வயானையம்மையாரை, இந்திரனுக்கும் இந்திராணிக்கும் புதல்வி என்பது உபசாரம். அமுதவல்லி யம்மை தானே குழந்தையாகி இந்திரனிடம் செல்ல, அவன் சூரனுக்கஞ்சி

மேருகிரியில் ஒளிந்திருந்தானாதலின், ஐராவதத்திடம் தர, அது மனைவதியில் வளர்த்தலின் தெய்வயானை எனப் பெயர் போந்தது.

## கருத்துரை

சிவகுமாரரே! செங்கோடரே! தெய்வயானை கணவரே! அசுரகுலகாலரே! அடியேன் அந்தகனுடன் பொரும் போரைக் காண தேவரீர் முன் வந்ததுபோல் மற்றொரு முறை வரவேணும்.

## கொல்லிமலை

### 162

கட்ட மன்னு மள்ளல் கொட்டி பண்ணு மைவர்
கட்கு மன்னு மில்ல மிதுபேணி
கற்ற விஞ்ஞை சொல்லி யுற்ற வெண்மை யுள்ளு
கக்க எண்ணி முல்லை நகைமாதர்

இட்ட மெங்ங னல்ல கொட்டி யங்ங னல்கி
யிட்டு பொன்னை யில்லை யெனஏகி
எத்து பொய்ம்மை யுள்ள லுற்று மின்மை யுள்ளி
யெற்று மிங்ங னேவ தியல்போதான்

முட்ட வுண்மை சொல்லு செட்டி திண்மை கொள்ள
முட்ட நன்மை விள்ள வருவோனே
முத்து வண்ண வல்லி சித்ர வண்ண வல்லி
முத்தி விண்ண வல்லி மணவாளா

பட்ட மன்ன வல்லி மட்ட மன்ன வல்லி
பட்ட துன்னு கொல்லி மலைநாடா
பச்சை வன்னி யல்லி செச்சை சென்னி யுள்ள
பச்சை மஞ்ஞை வல்ல பெருமாளே.

## பதவுரை

முட்ட உண்மை சொல்லு செட்டி - முழு உண்மையைச் சொன்ன செட்டியாக, திண்மை கொள்ள - சங்கப் புலவர்கள் உறுதிப் பொருளை

அறிந்து கொள்ள, முட்ட நன்மை விள்ள - முழுவதும் நன்மையே பெருக, வருவோனே - வந்தவரே! முத்துவண்ண வல்லி - முத்துபோன்ற நிற முடைய வல்லியும். சித்ர வண்ண வல்லி - அழகிய நிறம் படைத்த வல்லியும், முத்தி விண்ண வல்லி - முத்திதரவல்ல விண்ணுலகவல்லியும் ஆகிய தேவயானையம்மையின், மணவாளா - கணவரே! பட்டம் - வழியில், மன்னு அ வல்லி - நிலைபெற்ற அநத வல்லி, மட்டம் மன்னு அவல்லி - மதுவைப்போல் மயக்கந்தரும் கொல்லிப்பாவை, பட்ட - இருக்கும், துன்னு கொல்லி மலைநாடா - நெருங்கிய கொல்லிமலை நாட்டு அரசே! பச்சை வன்னி - பசுமையான வன்னிப்பத்திரமும், அல்லி - அல்லி மலரும், செச்சை - வேட்சி மலரும் அணிந்துள்ள, சென்னி உள்ள - தலையையுடையவரே! பச்சை மஞ்ஞை வல்ல-மச்சை மயிலை நடாத்தவல்ல, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! கட்டம் மன்னும் அள்ளல் - கஷ்டங்கள் பொருந்தியுள்ள சேறு போன்றதும், கொட்டி பண்ணும் - கொடு கொட்டி ஆடல் போலக் கூத்தாட்டி வைக்கும், ஐவர்கட்கும், மன்னும் இல்லம் - ஐம் புலன்கட்கும் இருப்பிடமான வீடு போன்றதுமாகிய, இது பேணி - இந்த உடலை விரும்பி, கற்ற விஞ்ஞை சொல்லி - அடியேன் கற்ற வித்தைகளைச் சொல்லி, உற்ற எண்மை - உற்ற எளிமையை, உள் உகக்க எண்ணி - உள்ளம் மகிழ நினைத்து, முல்லை நகை மாதர் - முல்லையரும்பு போன்ற பற்களையுடைய பெண்களின், இட்டம் எங்ஙன் - விருப்பம் எப்படியோ அப்படி, நல்ல கொட்டி அங்ஙன் நல்கி இட்டு - நல்ல பொருள்களையெல்லாம் ஒன்றுகக் கொட்டி அவர்களுக்குக் கொடுத்து, பொன்னை இல்லை என - பின்னும் கொடுப்பதற்குப் பொன் இல்லையென்று சொல்ல, ஏகி எத்து - வெளிவந்து ஏமாற்றும் பொருட்டு, பொய்மை உள்ளல் உற்றும் - பொய்வழியை யோசித்தும். இன்மை உள்ளி எற்றும் - பொன் இல்லாமையை நினைந்து இரக்கமுற்றும், இங்ஙன் நைவது இயல்போதான் - இவ்வாறு மனம் நைந்து வருந்துதல் தக்கதாமோ? (தகாது).

## பொழிப்புரை

**செட்டிக் குமரனாகி சங்கப் புலவர் உறுதிப் பொருளை அறிந்துகொள்ளும் பொருட்டு முழு உண்மையைச் சொல்லி, முழுவதும் நன்மையே பெருக வந்தருளியவரே! முத்து நிற வல்லியும், அழகிய வண்ணம் படைத்த வல்லியும், முத்திதர வல்ல விண்ணுலக மடந்தையுமாகிய தேவ சேனையின் கணவரே! வழியில் நிலை பெற்று மதுவைப் போல் மயக்கந்தர்வல்ல கொல்லிப் பாவையிருக்கும் நெருங்கிய கொல்லிமலை நாட்டிற் குத் தலைவரே! பசுமையான வன்னியிலையும், அல்லிமலரும், வெட்சி மலரும் சூடிய சிரத்தினையுடையவரே! மரகத மயிலை நடத்தவல்ல பெருமிதம் உடையவரே! துன்பங்கள் பொருந்தியுள்ள சேறு போன்றதும், கொடு கொட்டி ஆடல்போல் கூத்**

தாட்டி வைக்கும் ஐம்புலன்களுக்கும் இருப்பிடமான வீடு போன்றதுமாகிய, இந்த உடலை விரும்பி, அடியேன் கற்ற வித்தைகளைச் சொல்லி, எளிதாக எண்ணங்கள் நிறைவேறும் என்று எண்ணி உள்ளம் மகிழ்ந்து, முல்லையரும்பு போன்ற பற்களையுடைய பொது மாதர்களின் விருப்பம் எப்படியோ அப்படியெல்லாம், நல்ல பொருள்களைக் கொட்டிக் கொடுத்து, பொன் இல்லையென்று சொல்ல, ஏமாற்றும் பொருட்டு பொய் வழியைச் சிந்தித்தும், வறுமையை நினைத்து வருந்தியும் இவ்வாறு மனம் நைந்து வருந்துதல் தக்கதாமோ? தகாது.

## விரிவுரை

கட்ட மன்னுமள்ளல் :—

கட்டம் மன்னும் அள்ளல். கஷ்டம் என்ற சொல் கட்டம் என வந்தது. அள்ளல்-சேறு. உதிரச் சேற்றுடன் கூடிய உடம்பு. துன்பம் நிறைந்த உடம்பு.

" அள்ளற்பை " —(கள்ளக்)திருப்புகழ்.

கொட்டி பண்ணுமைவர்கட்கு மன்னுமில்லம் :—

கொடுகொட்டி என்பது ஒருவகைக் கூத்து. இந்த உடம்பாகிய வீட்டில், ஐம்புலன்களாகிய வேடர்கள் இருந்து அவர்கள் விருப்பப்படி இதனைக் கூத்தாட வைக்கின்றார்கள்.

'குப்பாச வாழ்க்கையில் கூத்தாடுமைவரிற் கொட்படைந்த
இப்பாச நெஞ்சனை ஈடேற்றுவாய்" —கந்தரலங்காரம் (14)

இதுபேணி :—

இன்று இருந்து நாளையழியும் அசுத்தமான இந்த உடம்பையே பேணி மாந்தர் அவமேயுழன்று அழிகின்றார்கள். இறைவனுடைய அடிபேணி உய்தல் வேண்டும்.

ஆன்மா சிவத்துடன் ஒன்றி பிறவித்துயரை ஒழிப்பதற்குச் சாதனைகள் என்ன என்ன என்பதனை குருஞான சம்பந்தர் கூறுகின்றார்.

(1) தனது பெருமையை எண்ணாமை.
(2) நான் என்ற தற்போதம் மாய்தல்.
(3) ஒருவரிடத்தில் ஒரு பொருளை யாசிக்காமை.
(4) ஊன உடம்பைப் பழித்தல்.

இந்த நான்கு சாதனைகளைச் செய்தால் சிவாத்துவிதம் பெற்றுப் பிறப்பை யொழிக்கலாம்.

தன்பெருமை யெண்ணுமை தற்போத மேயிறத்தல்
மின்பெருமை யாசகத்தை வேண்டாமை—தன்பால்
உடலைப் பழித்தல் ஓங்குசிவத் தொன்றல்
நடலைப் பிறப்பொழியும் நாள். —சிவபோகசாரம்.

ஆதலால் அருணகிரிநாத சுவாமிகள் பல பாடல்களில் இந்த உடம்பைப் பழித்து ஓதுகின்றார்.

கற்ற விஞ்ஞை சொல்லி :—

விஞ்ஞை-விஞ்சை; வித்தை. தான் கற்ற வித்தைகளை ஆங்காங்கு சென்று சொல்லித் திரிவார்கள் பலர், கற்ற வித்தையால் கதி கிட்டாது.

எத்தனைதான் கற்றாலும் எத்தனைதான் கேட்டாலும்
எத்தனைசா தித்தாலும் இன்புரு—சித்தமே
மெய்யாகத் தோன்றி விடுமுலக வாழ்வனைத்தும்
பொய்யாகத் தோன்றாத போது. —சிவபோகசாரம்

எண்மை யுள்ளுகக்க எண்ணி :—

எண்மை-எளிமை. தான் எண்ணிய எண்ணங்கள் சுலபமாக நிறைவேறும் என்று எண்ணி உள்ளம் மகிழ்வர்.

நகைமாதர் இட்டமெங்ஙனல்ல கொட்டி யங்ஙனங்கியிட்டு :—

சிரித்துச் சிரித்துப் பேசும் பொது மாதர்கள் விருப்பம் எப்படி எப்படியோ யெல்லாம் பொன்னையும் பொருளையுங் கொட்டிக் கொடுத்து ஆடவர் வறியராவார்.

எத்து பொய்மையுள்ள லுற்று மின்மை யுள்ளி எற்றும் :—

எத்துதல்-ஏமாற்றுதல். பிறரை ஏமாற்றி பொய் வழியை ஆலோசித்தும், பொன் பொருள் இல்லாமையை நினைத்து வருந்தியும் சிந்தை வெந்து நொந்து நைவர். எற்றுதல்-வருந்துதல்.

"எற்றிய காதலினல் இசைத்தான்" —தஞ்சைவாணன்கோவை (224)

இங்ஙனைவ தியல்போதான் :—

இவ்வாறு பொருட் பெண்டிருக்கு அள்ளிக் கொடுத்து, வறுமையில் வாடி, பொருள் தேடி, பொய்யைக் கூடி வருந்துவது தகுமோ? தகாது.

முட்ட வுண்மை சொல்லு செட்டி திண்மை கொள்ள முட்ட நன்மை விள்ள வருவோனே :—

இந்த அடியில் முருக சாரூபம் பெற்ற அபர சுப்ரமண்யரில் ஒருவர் மதுரையில் செட்டி மகனாகத் தோன்றி, உருத்திர

சன்மர் என்ற பேருடன், சங்கப் புலவர்கள் இறையனார் அகப் பொருளுக்குச் செய்த உரையின் தாரதம்மியத்தைக் கூறியருள்புரிந்த வரலாற்றைக் கூறுகின்றார்.

இதன் விரிவை எமது பழநித் திருப்புகழ் விரிவுரை 81-ம் பக்கத்தில் படித்துணர்க.

முத்துவண்ண வல்லி சித்ரவண்ணவல்லி :—

தெய்வயானையம்மை முத்து போன்ற ஒளியும் அழகிய நிறமும் உடையவர்.

முத்தி விண்ணவல்லி :—

முத்திதரவல்லவர் அந்த அம்மை.

"செழுமுத்து மார்பின் அமுதத் தெய்வானை
திருமுத்திமாதின் மணவாளா" —(கழைமுத்து) திருப்புகழ்

பட்டமன்ன வல்லி :—

பட்டம்-வழி. மன்னு அ வள்ளி. வழியில் அமைந்த அந்த வல்லி.

கொல்லி மலையில் தேவரும் முனிவரும் வாழ்ந்து தவம் புரிந்தார்கள். அவர்களை அரக்கரும் அவுணரும் வந்து அடிக்கடித் துன்புறுத்தினார்கள்.

தேவ தச்சன் இமையவர்க்கும் இருடியர்க்கும் நன்மை செய்யக் கருதினான். ஒரு அழகிய பெண் பதுமையைச் செய்து வழியில் வைத்தான். கண்டவர்கள் மனத்தை ஈர்க்கும் கவினுடையது அது. உண்மையில் பெண் போல் காட்சிதரும் அங்கு வரும் அரக்கரின் வாடை பட்டவுடன் அது நகைக்கும். அப்படி நகைக்கும் ஒரு பொறியை அதனுள் தேவதச்சன் அமைத்தான். அதன் அழகில் மயங்கிய அரக்கர் அருகில் சென்றவுடன் மாய்ந்து ஒழிவார்கள். இப்பாவை "கொல்லிப் பாவை" எனப்படும்.

...................... ... "திரிபுரத்தைச்
செற்றவனும், கொல்லிச் செழும்பாவையும் நகைக்கக்
கற்றதெல்லாம் இந்தநகை கண்டேயோ" —நற்றிணை (85)

இது காற்றுக்கும் மழைக்கும் இடிக்கும் பூகம்பம் முதலிய இடையூறுகட்கும் அழியாமல், என்றும் தன் இயல்பு கெடாமல் அமைந்தது.

"கொல்லித்தெய்வம்............................
கால் பொருதிடிப்பினும், கதழுறைகடுகினும்,
உருமுடனன் றெறியினும், ஊறுபல தோன்றினும்
பெருநிலங் கிளரினும், திருநலவுருவின்,
மாயா இயற்கைப் பாவை. —நற்றிணை (201)

அதனுல் மன்னு-நிலைபெற்ற வல்லி என்று அருளினுர்.

மட்ட மன்ன வல்லி :—

மட்டம்-கள்.

"மட்டம் பெய்த மணிக்கலம்" —குறுந்தொகை (193)

கள்போன்ற மயக்கத்தைத் தருவது கொல்லிப்பாவை.

பச்சை வன்னி அல்லி செச்சை சென்னி :—

முருகவேள் சிரத்தின் மீது வன்னிப் பத்திரமும், அல்லி மலரும், வெட்சி மலரும் சூடிக்கொண்டிருப்பர்.

கொல்லிமலை சேலம் ஜில்லா நாமக்கல்லுக்கு அருகில் உள்ளது.

கருத்துரை

கொல்லி மலைக்குத் தலைவராய குமாரக் கடவுளே! மாதராசையார் பொருளை நாடி வருந்துவது தகாது.

163

தொல்லைமுதல் தானென்று மெல்லியிரு பேதங்கள்
சொல்லுகுண மூவந்த மெனவாகி
துய்யசதுர் வேதங்கள் வெய்யபுல னேரைந்து
தொய்யுபொரு ளாறங்க மெனமேவும்

பல்லபல நாதங்கள் அல்கபசு பாசங்கள்
பல்குதமிழ் தானென்றி யிசையாகிப்
பல்லுயிரு மாயந்த மில்லசொரு பானந்த
பௌவமுற வேநின்ற தருள்வாயே

கல்லுருக வேயின்கண் அல்லல்படு கோவம்பு
கல்வருக வேநின்று குழலூதுங்

கையன்மிசை யேறும்பன் நொய்யசடை யோனெந்தை
கைதொழ மெய்ஞ் ஞானஞ்சொல் கதிர்வேலா
கொல்லைமிசை வாழ்கின்ற வள்ளிபுன மேசென்று
கொள்ளைகொளு மாரன்கை யலராலே
கொய்துதழை யேகொண்டு செல்லுமழ வாகந்த
கொல்லிமலை மேனின்ற பெருமாளே.

## பதவுரை

கல்உருக - கல் உருகும்படியும், அல்லல் படு - துன்பப்படுகின்ற, கோ - பசுக்கள், அம் புகல் வருகவே நின்று - அழகிய புகுமிடத்திற்கு வந்து சேரும்படியும் நின்று, வேயின்கண் குழல் ஊதும் - மூங்கிலால் அமைந்த புல்லாங்குழல் வாசித்த, கையன் மிசை ஏறு - கண்ணபிரானாகிய மால் விடையின்மீது ஏறுகின்ற, உம்பன் - பெரியோனும், நொய்ய சடையோன் - புன் சடை யோனும், எந்தை - எமதுபிதாவுமாகிய சிவபெருமான், கை தொழ - கைகுவித்துத் தொழ, மெய் ஞானம் சொல் - உண்மை ஞானத்தை உபதேசித்த, கதிர் வேலா - ஒளிமிகுந்த வேலாயுதரே! கொல்லை மிசை வாழ்கின்ற - தினைக் கொல்லையில் வாழ்ந்திருந்த, வள்ளி புனமே சென்று - வள்ளி நாயகியின் புனத்தில் சென்று, கொள்ளை கொளும் - உயிரைக் கொள்ளை கொள்ளுகின்ற, மாரன் கை அலராலே - மன்மதனுடைய கை மலர்க்கணையின் செய்கையால், தழையே கொய்து கொண்டு செல்லும் - தழைகளைக் கொய்து கொண்டு சென்ற, மழவா - கட்டழகுடையவனே! கந்த - கந்தக்கடவுளே! கொல்லிமலைமேல் நின்ற - கொல்லிமலை மீது எழுந்தருளியுள்ள, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! தொல்லை முதல் தான் ஒன்று - பழம் பொருள் முதற் பொருள் எனத்தான் ஒன்றே விளங்குவதாய், மெல்லி இரு பேதங்கள் - சத்தி சிவம் என்னும் இரு வேறு தன்மையதாய், சொல்லு குணமே அந்தம் என ஆகி - சொல்லப்படுகின்ற முக்குணங்களின் முடிவின் வடிவாய் விளங்கும் மும்மூர்த்திகளாய், துய்ய சதுர்வேதங்கள் - பரிசுத்தமான நான்கு வேதங்களாய், வெய்ய புலன் ஓர் ஐந்து - கொடிய புலன்களாகிய சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஒரு ஐந்தையும், தொய்யு பொருள் - சோர்வடையச் செய்யும் பொருளைக் கொண்ட, ஆறு அங்கம் எனமேவும் - ஆறு வேதாங்கங்களாய், பலபல நாதங்கள் - பலப்பல ஒலிகளில் தங்குவதாய், அல்க பசு பாசங்கள் - உயிர் தளைகள் இவைகளின் தன்மைகுறையும் பொருட்டு அவைகளில் தங்குவதாய், பல்கு தமிழ் தான் ஒன்றி - பெருகுகின்ற தமிழில் பொருந்தி, இசை ஆகி - இன்னிசையாய், பல் உயிரும் ஆய் - பல உயிர்களுமாய், அந்தம் இல்ல - முடிவில்லாததாயுள்ள, சொருப ஆனந்த பௌவம் உறவே நின்றது - ஆனந்த உருவக்

கடலை அடையும்படிச் செய்யவல்ல பொருள் எதுவோ அந்தப் பொருளை, அருள்வாயே - அருளுவீராக.

## பொழிப்புரை

கல்லுருகுமாறும், துன்பப்படும் பசுக்கள் அழகிய புகுமிடத்திற்கு வந்து சேருமாறும் நின்று புல்லாங்குழல் ஊதிய திருமாலாகிய இடபத்தின் மீது ஏறுகின்ற பெரியோனும், புன்சடையோனும், எமது பரமபிதாவுமாகிய சிவபெருமான் கைகூப்பித் தொழ, உண்மைப் பொருளை உபதேசித்த ஒளிமிகுந்த வேலாயுதரே! தினைப்புனத்தில் வள்ளி பிராட்டியின் வனத்திற் சென்று, உயிரைக் கொள்ளை கொள்ளுகின்ற மன்மதனுடைய கைமலர்க் கணையின் செய்கையால், தழை கொய்து கொண்டு சென்ற கட்டழகுடையவரே! கந்தவேளே! கொல்லி மலைமீது நின்ற பெருமிதமுடையவரே! பழம்பொருள் முதற்பொருள் எனத் தான் ஒன்றே விளங்குவதாய், சக்தி சிவம் என்ற இரு வேறு தன்மையதாய், சொல்லப்படும் தாமதம் இராசஸம் சாத்துவிகம் என்ற முக்குண முடிவின் வடிவாய் மும்மூர்த்திகளாய், பரிசுத்தமான நான்கு வேதங்களாய், கொடிய புலன்களாய், சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்தையும் சோர்வடையச் செய்யும் ஆறங்கங்களாய், பலப்பல ஒலிகளில் தங்குவதாய், உயிர் தலைகளின் குற்றம் நீங்க அவற்றுள் தங்குவதாய், பெருகும் தமிழிற் பொருந்திய இன்னிசையாய், பல உயிர்களுமாய், முடிவில்லாததாய் உள்ள ஆனந்த உருவக் கடலை அடையும்படிச் செய்ய வல்ல பொருள் எதுவோ அந்தப் பொருளை அருளுவீராக.

## விரிவுரை

தொல்லை முதல் தானென்று :—

இத் திருப்புகழ் எண்ணலங்காரமாக ஒன்று முதல் ஆறு வரை வருகின்ற அழகு கவித் திறத்தைக் காட்டுகின்றது.

இதேபோல் திருமந்திரத்திலும் வருவது காண்க.

ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந்தான் ஐந்து
வென்றனன் ஆறு விரிந்தனன்; ஏழும்பர்ச்
சென்றனன் தானிருந்தான் உணர்ந்தெட்டே.

இறைவன் ஒருவனே முதல்வன்.

மெல்லியிருபேதங்கள் :—

சக்தியும் சிவமுமாக விளங்கி இறைவன் உயிர்கட்கு அருள் புரிகின்றான்.

தட்ப வெப்பததால் உலகம் நடைபெறுகின்றது. தட்பத்தின் சூக்குமம் சக்தி; வெப்பத்தின் சூக்குமம் சிவம்.

சொல்லு குண மூவந்த மெனவாகி :—

சத்துவம், இராஜஸம், தாமதம் என்ற முக்குணங்களின் முடிவின் சொரூபமாய் அரன் அயன் அரி என்ற மும்மூர்த்திகளும் தொழிற்படுகின்றார்கள்.

அம் மூர்த்திகளை அதிஷ்டித்து இறைவன் அருள்புரிகின்றான்.

"அயனெனவாகி அரியெனவாகி
அரனெனவாகி அவர்மேலாய்"

—(அகரமு) திருப்புகழ்.

துய்ய சதுர் வேதங்கள் :—

வேதம் நான்கு. ருக் யஜுர் சாமம் அதர்வணம்.

வெய்யபுல னோரைந்து :—

புலன்கள், சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம். இவைகளை வென்றவர் உலகை வென்றவராவார்.

உரன் என்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரன் என்னும் வைப்பிற்கோர் வித்து.
சுவைஒளி ஊறுஓசை நாற்றம் என்று ஐந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு. —திருக்குறள்.

இந்த ஐந்து புலன்களையும் அடக்குவார் பலர். அடக்குகின்றவரையில் அவை அடங்கும். பின்னர் முன்னையினும் வேகமாக மேலெழும். ஐந்தையும் அவித்துவிட வேண்டும். அவித்த நெல் முளைக்காது. அவித்த புலன்கள் தொழிற்பட மாட்டா.

ஐந்தவித்தான் ஆற்றல் அகல் விசும்புளார் கோமான்
இந்திரனே சாலுங்கரி —திருக்குறள்.
"இந்தியங்களை யவித்திருத்தல் மேயினன்" —கம்பராமாயணம்.

தொய்யு பொருளாறங்க மெனமேவும் :—

வேதபுருஷனுக்கு ஆறு அங்கங்கள். சிட்சை, வியாகரணம், சந்தஸ், நிருத்தம், ஜ்யோதிஷம், கல்பம். இவை முறையே நாசி, வாய், கால், காது, கண், கை.

(1) சிட்சை (நாசி).

எழுத்துக்களின் உச்சாரணம் மாத்திரை உற்பத்தி முதலிய வைகளை வரையறுப்பது. "இந்திரன் சத்ரு" என்ற சொல்லின் உச்சாரண மாறுபட்டால் மாண்டான் துவஷ்டா.

(2) வ்யாகரணம் (வாய்).

நடேசப் பெருமானுடைய டமருகத்தில் எழுந்த 14 ஒலி களையே பாணினி 14 சூத்திரங்களாக எழுதினர். இதுவே வியாகரணத்துக்கு மூலம். மகேச்வர சூத்ரம் எனப் பெறும். பாணினியின் சூத்திரத்துக்கு விரிவுரை செய்தவர் பதஞ்சலி.

சிவபெருமானுடைய மூச்சுக் காற்று வேதம்.-கைக்காற்று— வியாகரணம்.

கால் காற்று—பாஷ்யம் (விரிவுரை).

திருவடியில் தரித்துள்ள ஆதிசேடன் பதஞ்சலியாக வந்து பாஷ்யம் செய்தார்.

(3) சந்தஸ் (காரு).

யாப்பு போன்றது சந்தஸ். இன்ன இன்ன பத்தியத்திற்கு இத்தனை எழுத்து; இத்தனை பாதம்; இத்தனை மாத்திரை என்று வரையறுப்பது. பத்யம்-கவி. கத்யம்-வசனம். வேதமந் திரங்கள் சந்தஸ். மற்றவை சுலோகம். இவையில்லாமல் நிற்க முடியாது. ஆதலால் சந்தஸ் கால் போன்றது.

(4) நிருக்தம் (காது).

நிருக்தம்-நிகண்டு. ஏன்? இந்தப் பதம் இங்கு வந்தது? என்பதை விளக்குவது.

ஹ்ருதயம் -ஹ்ருதி-அயம் ஹ்ருதயத்தில் இவன் இருக்கின் ருன் என்பது பொருள். பரமாத்வா உறைகின்ருன் என்பது போன்ற காரணங்களைக் கூறுவது நிருக்தம்.

(5) ஜ்யோதிஷம் (கண்).

கண் தொலைவிலுள்ளதைக் காட்டுவதுபோல் மேல் விளை வதைத் தெரிவிப்பது ஜ்யோதிஷம்.

(6) கல்பம் (கை).

காரியங்களைச் செய்வதற்குக் கரம் என்று பேர். சத்கர் மாக்களை வரையறுப்பது கல்பம். இன்ன இன்ன வருணத்

தார்; இன்ன இன்ன ஆச்சிரமத்தார் இன்ன இன்ன கர்மாவைச் செய்ய வேண்டும். இன்ன கர்மாவுக்கு இன்ன மந்திரம்; இன்ன திரவியம்; ரித்விக்குக்களுக்கு இலக்கணம். பாத்திரங்களின் அமைப்பு; இவைகளை விளக்குவது கல்பம்.

"வேதமோடாறங்கமாயினை" என்று தேவாரமும், "கருதிய ஆறங்கவேள்வியந்தணர்" என்று திருப்புகழும் கூறுகின்றது.

பல்லபல நாதங்கள் :—

அநேக வித ஒலிகள். யாவும் இறைவன் மயமே யாகும்.

" ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே " —அப்பர்.

அல்கபசுபாசங்கள் :—

பசு பாசங்களின் குற்றமும் குறையும் பொருட்டு அவைகளில் இறைவன் நீக்கமின்றி நிற்கின்றான்.

சொருபானந்த பௌவமுறவே நின்றதருள்வாயே :—

ஆனந்த சொரூபமான சுகக்கடலில் முழுக அருள்செய் என்று அடிகளார் வேண்டுகின்றார்.

கல்லுருக வேயின்கண்.........குழலூதி :—

கண்ணபிரான் புல்லாங்குழல் ஊதிய போது அங்கிருந்த கல்லுகள் உருகினவாம்.

இசைக்குக் கல்லும் இரும்பும் உருகும்.

ஒரு சமயம் இராவணன் அகத்தியர் வாழும் பொதியமலை சென்று அவருடைய தவத்துக்கு இடையூறு விளைவித்தான். வீணையில் வல்லோம் என்ற தருக்குடைய இராவணனை அழைத்து, முன்னிலையில் இருத்தி யாழ்மீட்டி வாசித்தார். அப்போது யாழின் இன்னிசையால் பொதியமலை யுருகியது. உடனே வாசிப்பை நிறுத்தி விட்டார். அதனுள் இராவணன் சிக்கிக்கொண்டு துன்புற்றான். இராவணன் அகத்தியரைத் தொழுது வேண்ட மீண்டும் யாழ்வாசித்து அவனை விடுவித்தார்.

" இனியபைந்தமிழின் பொதியமாமலைபோல்
இசைக் குருகாது " —சோணசைலமாலை (26)

இதனால் இசைக்குக் கல்லுருகும் எனத் தெளிவாகின்றது.

அல்லல்படு கோவம்பு கல்வருகவே :—

கோ அம் புகல் பசுக்கள் அழகிய புகுமிடத்துக்கு வர வேய்ங் குழல் இசைத்தார்.

கையன்மிசை ஏறும்பன் :—

கையன்—கண்ணன். ஏறு உம்பன். உம்பன்—உயர்ந்தவன். திரிபுரம் எரிக்க முயன்ற போது, தேவர்கள் விநாயகரை வணங்காமல் தொடங்கியதால் தேர் அச்சு முறிந்தது. அப்போது திருமால் இடபமாகி இறைவனைத் தாங்கினுர்.

கடகரியும் பரிமாவுந் தேருமுகந் தேருதே
இடபமுகந் தேறியவாறு எனக்கறிய இயம்பேடி
தடமதில்கள் அவை மூன்றுந் தழலெரித்த அந்நாளில்
இடபமதாய்த் தாங்கினுன் திருமால்காண் சாழலோ.
—திருவாசகம்.

கொய்து தழையே கொண்டு செல்லுமழவர் :—

அகப்பொருளில் "தழை கொண்டு சேறல்" என்பது ஒரு துறை. குறிஞ்சி நிலப்பெண்கள் தழையைத் தைத்து உடுப்பார்கள். அம்மாதரை விரும்பிச் செல்லுந்தலைவன் கையுறையாகச் சந்தனம் முதலிய தழைகளை எடுத்துக்கொண்டு செல்வான்.

" ..............................மலயத்து
ஆரத்தழையண்ணல் தந்தால் இவையவள் அல்குற்கண்டால்
ஆர் அத்தழை கொடுவந்தார் எனவரும் ஐயுறவே "
—(91) திருக்கோவையார்.

" மரகத மணிப்பணியின் அணிதழையுடுத்துலவு
வனசரர் கொடிச்சிதனை யாசிக்கும் யாசகனும் "
—திருவகுப்பு. (12)

" தழையுடுத்த குறத்தி பதத்துணை
வருடி வட்ட முகத்திலதக்குறி தடவி " —(பழமை) திருப்புகழ்.

## கருத்துரை

கொல்லிமலைக் குமரா! ஆனந்தக் கடலில் மூழ்க அருள் செய்வாய்.

## இராஜ கெம்பீர வளநாட்டு மலை

இராஜ கெம்பீர வளநாடு என்பது திருச்சிராப்பள்ளிக்கு மேற்கே வயலூரைச் சூழ்ந்த பகுதிக்குப் பேர். "ராஜ கெம்பீர நாடாளு நாயக வயலூரா" என்ற திருப்புகழ் வாக்கால் அறிக.

இத்தகு வித்தக நாட்டில் உள்ள மலை. இராஜ கெம்பீர வளநாட்டு மலை. இது கற்குடி என்ற உய்யக் கொண்டான் மலையாக இருக்கும் என ஆன்றோர் கூறுவர்.

## 164

மாகசஞ் சாரமுகில் தோற்ற குழல்கொடு
போகஇந்த் ராதிசிலை தோற்ற நுதல்கொடு
மானவண்டேறுகணைதோற்றவிழிகொடு கண்டுபோல
மாலர்கொண் டாடுகனி தோற்ற இதழ்கொடு
சோலைசென் றூதுகுயில் தோற்ற இசைகொடு
வார்பொரும் பாரமலை தோற்ற முலைகொடு
மன்றுளாடி

சீகரம் பேணுதுடி தோற்ற இடைகொடு
போகபண் டாரபணி தோற்ற அரைகொடு
தேனுகுஞ் சீர்கதலி தோற்ற தொடைகொடு வந்துகாசு
தேடுகின் றாரொடுமெய் தூர்த்த னெனவுற
வாடுகின் றேனைமல நீக்கி யொளிதரு
சீவனென் றனபர மார்த்த தெரிசனை வந்துதாராய்

வேகமுண் டாகியுமை சாற்று மளவினில்
மாமகங் கூடுமது தீர்க்க வடிவுடை
வீரனென் பானொருப ராக்ர மனெனவர அன்றுசோமன்
மேனியுந் தேயகதிர் தோற்ற எயிறுக
ஆனுகுந் தீகையற சேட்ட விதிதலை
வீழநன் பாரதியு மூக்கு நழுவிட வந்தமாயன்
ஏகநின் றுகியமர் தோற்று வதறிட
வேகவுங் காரமொடு ஆர்க்க அலகைக
ளேறிவென் றுடுகள நீக்கி முனிவரர் வந்துசேயென்
றீசநண் பானபுரு ஷார்த்த தெரிசனை
தாவெனுங் கேள்விநெறி கீர்த்தி மருவிய
ராஜகம் பீரவள நாட்டு மலைவளர் தம்பிரானே.

பதவுரை

வேகம் உண்டாகி - கோபம் தோன்றி, உமை சாற்றும் அளவில் - உமாதேவியார் சொன்னவுடன், மா மகம் கூடும் அது தீர்க்க - தக்கனுடைய பெரிய யாகம் மிகுதியாக நடப்பதை அழிக்கும் பொருட்டு, வடிவு

உடை வீரன் என்பான் - அழகுடைய வீரபத்ரன் என்ற, ஒரு பராக்ரன் என வர - ஒப்பற்ற பேராற்றலுடையவர் தோன்றிவர, அன்று - அந்நாளில், சோமன் - சந்திரன், மேனியும் தேய - உடம்புந் தேயவும், கதிர் தோற்ற எயிறு உக - சூரியனுக்கு உள்ள பற்கள் உதிரவும், ஆன் உகும் தீ கை அற - பசுவின் உறுப்புக்கள் சிந்தும் அக்கினியின் கையறவும், சேட்ட விதி தலை வீழ - முதன்மையான தக்கனுடைய தலை அற்று விழவும், நன் பாரதியும் மூக்கு நழுவிட - நல்ல சரச்சுவதியின் மூக்கு அறுபட்டு நழுவி விழவும், வந்த மாயன் ஏக - அங்கு வந்த திருமால் ஓட்டம் பிடிக்கவும், நின்று ஆக அமர் தோற்று வதறிட - அந்த யாகசாலையில் நின்று துணைபுரிந்த மற்றவர்கள் தோல்வியுற்றுப் பதறவும், வேக உங்காரமொடு ஆர்க்க - கோபத்தால் ஊங்காரஞ் செய்து ஆரவாரஞ் செய்ய, அலகைகள் ஏறி வென்று ஆடுகளம் நீக்கி - பேய்க் கூட்டங்கள் கூடி வென்று ஆடிய அந்தச் சாலையை விட்டு யாவரையும் நீங்கும்படியும் புரிந்த சிவபெருமானும், முனிவரர் - முனிபுங்கவர்களும், வந்து சேய் என்று - திருமுன்வந்து சேயே! என்றும், ஈச - தலைவனே என்றும் போற்றி, அன்பு ஆன புருஷார்த்த தரிசனை தா எனும் - அன்பின் வழியான அறம் பொருள் இன்பம் வீடு என்ற உறுதிப் பொருள்கள் நான்கின் விளக்கக் காட்சியைத் தந்தருளுக என்று வேண்டிய, கேள்வி நெறி கீர்த்தி மருவிய - கேள்வி நெறியின் புகழ் அமைந்த, ராஜ கெம்பீர வள நாட்டு மலைவளர் - ராஜகம்பீர வளநாட்டு மலையின்மீது எழுந்தருளியுள்ள, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! மாக சஞ்சார முகில் - ஆகாயத்தில் உலாவுகின்ற மேகத்தை, தோற்ற குழல் கொடு - தோல்வியடையச் செய்த கூந்தல் கொண்டும், போக இந்த்ர ஆதி சிலை - போகங்களை நுகர்கின்ற இந்திர வில்லை, தோற்ற நுதல் கொடு - தோல்வியடையச் செய்த நெற்றி கொண்டும், மான வண்டு ஏறு - பெருமையுடைய வண்டுகள் சேர்கின்ற, கணை தோற்ற விழி கொடு - (மன்மதனுடைய) மலர்க்கணைகளைத் தோல்வியடையச் செய்த கண்கள் கொண்டும், கண்டு போல் - கற்கண்டுபோல் இனிக்கின்றதென்று, மாலர் கொண்டாடு - காம மயக்கங் கொண்டவர்கள் கொண்டாடுகின்ற, கனி - கொவ்வைக்கனியை, தோற்ற இதழ் கொடு - தோல்வியடையச் செய்த இதழ் கொண்டும், சோலை சென்று ஊது குயில் - சோலையிற் சென்று ஒலிக்கின்ற குயிலை, தோற்ற இசை கொடு - தோல்வியடையச் செய்த இசையைக் கொண்டும், வார் பொரும் - கச்சுடன் போர் புரிகின்ற, பாரமலை தோற்ற - பெரிய மலையைத் தோல்வியடையச் செய்த, முலை கொடு - தனங்கள் கொண்டும், மன்று உள் ஆடி - தில்லைக் கனக சபையில் நடனம் புரிகின்ற சிவபெருமானுடைய, சீ கரம் பேணுதுடி - திருக்கரத்தில் விரும்பி வைத்துள்ள உடுக்கையை, தோற்ற இடை கொடு - தோல்வியடையச் செய்த இடை கொண்டும், போக பண்டார - காம போகத்துக்குக் கருவூலமாகிய, பணி தோற்ற அரை கொடு - பாம்பைத் தோல்வியுறச் செய்த அல்குல் கொண்டும், தேன் உகும் சீர்கதலி - தேன் சொட்டும் சிறப்புடைய வாழையை, தோற்ற தொடை கொடு - தோல்வியடையச் செய்த தொடை கொண்டும், வந்து

காசு தேடுகின்றுரொடு - வெளியேவந்து காசு தேடி நிற்கும் வேசையருடன், மெய் தூர்த்தன் என - உடல் கொண்ட பொல்லாதவன் என்று, உறவு ஆடுகின்றேனை - உறவு செய்கின்ற அடியேனுடைய, மலம் நீக்கி - ஆணவ மலத்தையகற்றி, ஒளிதரு சீவன் ஒன்று ஆன - ஒளி வீசுகின்ற உயிருடன் ஒன்றுபட்டதான, பரமார்த்த தரிசனை - பரம்பொருள் விளக்கக் காட்சியை, வந்து தாராய் - அடியேன்முன் வந்து தந்தருளுவீராக.

## பொழிப்புரை

உமாதேவியார், கோபம் தோன்றிக் கூறியவுடன், தக்கனுடைய பெரிய மகம் மிகுதியாக நடப்பதை அழிக்கும் பொருட்டு, அழகிய வீரபத்திரர் ஒப்பற்ற ஆற்றலுடன் தோன்றிவர, அந்நாள் சந்திரன் தேயவும், சூரியனுடைய பல் உதிரவும், பசுவின் உறுப்புக்கள் சிந்தும் அக்கினியின் கையறவும், தலைவனான தக்கனுடைய தலை நழுவி விழவும் சரஸ்வதியின் மூக்கு நழுவி விழவும் அங்கு வந்த திருமால் அஞ்சிஓடவும், அந்த யாக சாலையில் நின்று, மற்றவர்கள் பதறவும், கோப ஊங்காரஞ் செய்தும், பேய்க் கூட்டங்கள் கூடி வென்று ஆடிய அந்த சாலையை விட்டுவிலக்கிய சிவமூர்த்தியும்! முனிவர்களும் வந்து "சேயே! தலைவனே!" என்று போற்றி, அன்பின் வழி புருஷார்த்தங்கள் நான்கும் விளங்கக் காட்சியைத் தந்தருளுக என்று வேண்டிய கேள்வி நெறியின் புகழ் அமைந்த ராஜகெம்பீர வளநாட்டு மலையில் விளங்கும் பெருமிதமுடையவரே! ஆகாயத்தில் உலாவுகின்ற மேகத்தைத் தோல்வியடையச் செய்த கூந்தல் கொண்டும், போகங்களை நுகர்கின்ற இந்திரனுடைய வானவில்லைத் தோல்வியடையச் செய்த நெற்றி கொண்டும், பெருமையுடைய வண்டுகள் மொய்க்கின்ற மன்மதனுடைய மலர்க்கணைகளைத் தோல்வியடையச் செய்த கண்கள் கொண்டும், கற்கண்டு போல் இனிக்கின்றதென்று, காமமயக்கம் கொண்டவர்கள் கொண்டாடுகின்ற கொவ்வைக் கனியைத் தோல்வியடையச் செய்த வாயிதழ் கொண்டும், சோலையில் கூவும் குயிலைத் தோல்வியடையச் செய்த இன்னிசை கொண்டும், கச்சைக் கிழிப்பதும் பெரிய மலையைத் தோல்வியடையச் செய்வதுமாகிய தனங்கள் கொண்டும், அம்பலத்தில் ஆடுகின்ற அரனுருடைய திருக்கரத்தில் விரும்பிவைத்துள்ள உடுக்கையைத் தோல்வியடையச் செய்த இடை கொண்டும், காம போகத்தின் கருவூலமான பாம்பின் படத்தைத் தோல்வியடையச் செய்த அல்குல் கொண்டும், தேன் சொட்டும் சிறந்த வாழை மரத்

னைத் தோல்வியடையச் செய்த தொடை கொண்டும், வெளியே வந்து காசு தேடுகின்ற பொது மகளிருடன் இணங்குகின்ற அடியேனுடைய மலமாசினை நீக்கி ஒளியுடைய சீவன் சிவனாகும் பரமார்த்த தரிசனையைத் தேவரீர் வந்து அருள் புரிவீராக.

## விரிவுரை

இத்திருப்புகழில் முதல் மூன்றடிகளில் மாதர்களின் கேசாதி பாத வர்ணனை வருகின்றது.

மன்றுளாடி சிகரம் பேணுதுடிதோற்ற இடை :—

ஏனைய புலவர்கள் மாதர்களின் இடைக்குத் துடியை உவமை கூறுவர்.

அருணகிரிநாதர் தெய்வப் புலவர் ஆதலின் சிவ பெருமானுடைய திருக்கரத்திலுள்ள துடிக்கு நிகரான இடை என்கின்றார். மாணிக்கவாசகர் திருக்கோவையாரிலும் உவமை சிவ சம்பந்தமாகவே வரும்.

ஈசற் குயான் வைத்த அன்பின் அகன்று, அவன் வாங்கிய என்
பாசத்தின் காரென்று, அவன்தில்லையின் ஒளிபோன்று, அவன் தோள்
பூசத்திரு நீறென வெளுத்து, ஆங்கவன் பூங்கழல்யாம்
பேசத்திருவார்த் தையிற்பெருநீளம் பெருங்கண்களே.

—திருக்கோவையார (109)

சிவனென்றன பரமார்த்த தரிசனை :—

களிம்பு நீங்கியவுடன் செம்பு பொன்னுவது போல் மல நீக்கம் பெற்றவுடன் சீவன் சிவமாம் பெற்றியைப் பெறுகின்றது.

"சித்தமல மறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட அத்தன்"

—திருவாசகம்

"சீவன் சிவசொருபம் என தேறி" —(தேனுந்து) திருப்புகழ்

வேகமுண்டாகியுமை :—

பிற்பகுதியில் தக்கயாக சங்காரத்தைக் கூறுகின்றார். வேகம்—கோபம்.

"ஓவா வேகமோ டுருத்து" —கலித்தொகை (முல்லை 3)

சிவநிந்தை செய்த தக்கனுடைய யாகத்தை அழிக்குமாறு இறைவி இறைவனிடம் விண்ணப்பஞ் செய்தார். சிவமூர்த்தியின் கோபக்கனலில் வீரபத்திரரும், அம்பிகையின் சினத்தீயில் பத்ரகாளியும் தோன்றினார்கள். வீரபத்திரர் சந்திரனைத் தேய்த்

தும், பகலவன் பல்லை உடைத்தும், அக்கினியின் கரத்தைத் திரித்தும், நாமகளின் நாசியைக் கொய்தும், தக்கன் தலையைத் தடிந்தும் பல தண்டனைகளைச் செய்தருளினர்.

"சுருதியான் தலையும் நாமகள் மூக்கும் சுடரவன் கரமுமுன்னியங்கு
பருதியான் பல்லும் இறுத்தவர்க்கருளும் பரமனூர்"
"தக்கனதுபெரு வேள்விச் சந்திரன் இந்திரன் எச்சன் அருக்கன் அங்கி
மிக்கவிதா தாவினொடும்விதிவழியே தண்டித்த விமலர்"

—திருஞானசம்பந்தர்

"தக்கனையு மெச்சனையுந் தலையறுத்துத் தேவர்கணந்
தொக்கனவந் தவர்தம்மைத் தொலைத்ததுதான் என்னேடி"

—திருவாசகம்

"மன்னான தக்கனை முன்னாள் முடித்தலை
வன்வாளியிற் கொளுந் தங்கரூபன்" —(என்றல்) திருப்புகழ்

புருஷார்த்த தெரிசனை தாவெனுங்கேள்வி நெறி கீர்த்திமருவிய :—

அறம் பொருள் இன்பம் வீடு என்ற இந்த நான்கும் ஆன் மாக்கள் மேற் கொள்ளும் உறுதிப் பொருள்கள். இதன் நுட்ப திட்பங்களை ஆராய்வதும், பெறுவதும், பெற்றதனால் பெரும் புகழும் மருவிய நாடு ராஜகெம்பீர வளநாடு.

## கருத்துரை

இராஜகெம்பீர வளநாட்டு மலை மேவு முருகா! சீவன் சிவனாகும் திருவினைத் தருவாய்.

## ஞானமலை

## 165

சூதுகொலை கார ராசைபண மாதர்
தூவையர்கள் சோகை முகநீலர்
சூலைவலி வாத மோடனைவர் பாவர்
தூமையர்கள் கோளர் தெருவூடே
சாதனைகள் பேசி வாருமென நாழி
தாழிவிலை கூறி தெனவோதி
சாயவெகு மாய தூளியுற வாக
தாடியிடு வோர்க ளுறவாமோ

வேதமுனி வோர்கள் பாலகர்கள் மாதர்
வேதியர்கள் பூச லெனஏகி
வீறசுரர் பாறி வீழஅலை யேழு
வேலையள றாக விடும்வேலா

நாதரிட மேவு மாதுசிவ காமி
நாரியபி ராமி யருள்பாலா
நாரண சுவாமி யீனுமக ளோடு
ஞானமலை மேவு பெருமாளே.

## பதவுரை

வேத முனிவோர்கள் - வேதத்தில் வல்ல முனிவர்கள், பாலகர்கள் - குழந்தைகள், மாதர் - பெண்கள், வேதியர் - அந்தணர்கள் ஆகிய இவர்களை, பூசல் என ஏகி - போர் நடக்கப் போகின்றதென்று அப்புறப்படுத்தி விட்டு, வீறு அசுரர் - மிகுதியாக வந்த அசுரர்கள், பாறி விழ - அழிந்து விழவும், அலை ஏழு வேலை அளறு ஆக - கடல் சேருகுமாறும், விடும் வேலா - செலுத்திய வேலாயுதரே! இடம் மேவும் - சிவபெருமானுடைய இடப்பாகத்தில் உள்ள, மாது சிவகாமி - அழகிய சிவகாமி, நாரி - பெண்மணி, அபிராமி - பேரழகுடையவள் ஆகிய உமாதேவியார், அருள் பாலா - பெற்ற பாலகரே! நாரண சுவாமி ஈனும் - நாராயண மூர்த்தி பெற்ற, மகளோடு - புதல்வியுடன், ஞானமலை மேவு - ஞானமலையில் எழுந்தருளியுள்ள, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! சூது கொலைகாரர் - வஞ்சனையும் கொலையுஞ் செய்பவர்கள். பண ஆசை மாதர் - பணத்தாசை கொண்ட பெண்கள், தூன்வயர்கள் - புலால் உண்பவர்கள், சோகை முக - சோகை நோயால் உதிரங் குறைந்து வெளுத்த முகத்தையுடையவர்கள், நீலர் - விஷமிகள், சூலை - சூலை நோய், வலி - வலிப்பு, வாதமோடு அலைவர் - வாதம் முதலிய நோய்களுடன் தொடர்பு கொள்பவர்கள், பாவர் - பாவிகள்- தூமையர்கள் - சூதகத்தில் பரிசுத்தம் இல்லாதவர்கள், கோளர் - கோள் சொல்லுபவர்கள், தெரு ஊடே - நடுத் தெருவில் நின்று, சாதனைகள் பேசி- காரியத்தைச் சாதிக்கும் பேச்சுக்களைப் பேசி, வரும் என - வாருங்கள் என்று அழைத்துக் கொண்டு போய், நாழி தாழி விலைகூறு இது என ஓதி - ஒரு நாழிகைக்கு (இந்த) உடலான பாண்டத்திற்கு விலை இவ்வளவு என்று சொல்லி, சாய - வந்தவர்கள் தம் பக்கத்தில் சாயும்படி, வெகு மாய தூளி உற - மிகுதியாக மாயப் பொடியை அவர்கள் மீது தூவி, ஆக தாடி இடுவோர்கள் - சரீரத்தைத் தட்டிக் கொடுப்பவர்களாகிய வேசையரது, உறவு ஆமோ - நட்பு ஆகுமோ (ஆகாது).

## பொழிப்புரை

வேதத்தில் வல்ல முநிவர்கள், குழந்தைகள், பெண்கள், வேதியர்கள் இவர்களைப் போர் நடக்கப் போகின்றதென்று அப்புறப்படுத்தி, மிகுதியாக வந்த அசுரர்கள் அழிந்து விழவும், கடல் சேருகவும் வேலாயுதத்தை விடுத்தவரே! சிவபெருமானுடைய இடப்பாகத்தில் எழுந்தருளிய அழகிய சிவகாமி, பெண்மணி, பேரழகுடையவள் ஆகிய பார்வதியம்மை பெற்ற குமாரரே! நாராயணமூர்த்தி பெற்ற புதல்வியுடன் ஞான மலை மீது வீற்றிருக்கின்ற பெருமிதமுடையவரே! வஞ்சனையும் சூதும் புரிபவர்கள், பணத்தாசையுடையவர்கள், மாமிசபட்சணிகள், சோகை நோயால் வெளுத்த முகத்தையுடைய விஷமிகள், சூலை, வலிப்பு, வாதம் முதலிய நோய்களுடன் கலப்பவர்கள், பாவிகள், சூதகத்தால் தூய்மை யில்லாதவர்கள், கோள் சொல்லுபவர்கள், நடுத்தெருவில் நின்று காரியஞ் சாதிக்கக் கூடிய வார்த்தைகளைப் பேசி வாருங்கள் என்று ஆடவனை அழைத்துச் சென்று, ஒரு நாழிகைக்கு இந்த உடம்பாகிய பாண்டத்திற்கு இவ்வளவு விலையென்று கூறி, தம் பக்கம் சாயும்படி, மிகுந்த மாயப் பொடியைத் தூவுபவர்கள், சரீரத்தைத் தட்டிக் கொடுப்பவர்கள் ஆகிய பொதுமாதருடைய உறவு ஆகுமோ? (ஆகாது.)

## விரிவுரை

சூது கொலைகாரர்:—

தம்மைப் பகைப்பவரை வஞ்சனையாகக் கொல்லுபவர்கள். பால் தருவது போல் பாசாங்கு செய்து அதில் நஞ்சு கலந்து கொல்லுவர்.

ஆசை பண மாதர்:—

எத்தனைதான் தந்தாலும் திருப்தியடையாது, மேலும் மேலும் கவரும் பணத்தாசை படைத்தவர்கள்.

தூவையர்கள்:—

தூ—மாமிசம். சதா புலால் உண்பவர்கள்.

"தூப்போலும் சுவையுடைய கனிபலவுந் தரவல்லேன்"
—கம்பராமாயணம்.

நீலர்:—

நீலம்—விஷம். விஷகுணம் படைத்தவர்கள். விஷம் உண்டாரை மட்டுங் கொல்லும். இவர்கள் கண்டாரையுங் கொல்லும் கொடிய நஞ்சு போன்றவர்கள்.

சூலை வலி வாத மோடணைவர்:—

சூலை, வலிப்பு, வாதம் முதலிய நோயாளிகளுடனும் சேர்வார்கள். அதனால் அந்த நோய்களையும் பெற்று அவைகளுடன் சேர்ந்திருப்பார்கள்.

தூமையர்கள்:—

தூய்மை யில்லாதவர்கள். சூதகத்தில் வேருயிருக்கும் தன்மை முதலியன இல்லாதவர்கள்.

கோளர்:—

பிறரைப் பற்றிச் சதா கோள் வார்த்தைகள் கூறுபவர்கள்

வாருமென நாழி தாழி விலை கூறிதெனவோதி:—

நாழிகை என்ற சொல் நாழி என வந்தது,

தாழி—பாண்டம். இந்த உடம்பாகிய பாண்டம் ஒரு நாழிகைக்கு இவ்வளவு விலையென்று கூறி பொருளைப் பறிப்பார்கள்.

சாய வெகுமாய தூளியுற:—

தம்பால் வந்த ஆடவர்கள் தம் மீது சாயும்படி சொக்குப் பொடி தூவி வசப்படுத்துவார்கள்.

ஆக தாடி யிடுவோர்கள்:—

சரீரத்தைத் தட்டிக் கொடுப்போர். இது ஒரு சாகசம். மெல்ல முதுகைத் தட்டுவது போன்ற வித்தை.

வேத முநிவோர்கள் பாலகர் மாதர் வேதியர்கள் பூச லென ஏகி:—

ஏகி—ஏகுவித்து. போர் தொடங்குமுன் அந்தணர்கள், மாதர்கள், பாலகர்கள், நோயாளிகள் ஆகிய இவர்களைப் பாதுகாவலான இடத்துக்குப் போகுமாறு பறையறைவார்கள். இது பழங்காலத்து அறம்.

"தாபதர் நோயோர் பெண்டிரும் நும்மரண்
ஏகுதிர். பெட்டென்று.........பறை சாற்றி —காஞ்சிப்புராணம்

"ஆவும் ஆனியற் பார்ப்பன மக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கடன் இறுக்கும்
பொன்போல் புதல்வர்ப் பெருஅ தீரும்
எம் அம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மின்" —புறநானூறு (9).

## கருத்துரை

ஞானமலை முருகா! மாதர் உறவு ஆகாது.

## 166

மனையவள் நகைக்க வூரி னனைவரு நகைக்க லோக
மகளிரு நகைக்க தாதை தமரோடும்
மனமது சலிப்ப நாய னுளமது சலிப்ப யாரும்
வசைமொழி பிதற்றி நாளு மடியேனை

அனைவரு மிழிப்ப நாடு மனவிருண் மிகுத்து நாடி
னகமதை யெடுத்த சேம மிதுவோவென்
றடியனு நினைத்து நாளு முடலுயிர் விடுத்தபோது
மணுகிமு னளித்த பாத மருள்வாயே

தனதன தனத்த தான எனமுர சொலிப்ப வீணை
தமருக மறைக்கு ழாமு மலைமோதத்
தடிநிக ரயிற்க டாவி யசுரர்க ளிறக்கு மாறு
சமரிடை விடுத்த சோதி முருகோனே

எனைமன முருக்கி யோக அநுபுதி யளித்த பாத
எழுதரிய பச்சை மேனி யுமைபாலா
இமையவர் துதிப்ப ஞான மலையுறை குறத்தி பாக
இலகிய சசிப்பெண் மேவு பெருமாளே.

### பதவுரை

தனதன தனத்த தான என - தனதன தனத்த தான என்ற ஒலியுடன், முரசு ஒலிப்ப - முரசு என்ற வாத்தியம் ஒலிக்கவும், வீணை - வீணை, தமருகம் - உடுக்கை, மறை குழாமும் - வேதங்களின் கூட்டம் ஆகிய இவைகளும், அலைமோத - அலை மோதுவது போல் ஒலி செய்யவும், தடி நிகர் அயில் கடாவி - மின்னல் போல் ஒளிவிடும் வேலாயுதத்தைச் செலுத்தி, அசுரர்கள் இறக்குமாறு - அசுரர்கள் மாளும்படி, சமரிடை விடுத்த-போர்க்களத்தில் விடுத்தருளிய, சோதி முருகோனே - ஒளி மயமான முருகக் கடவுளே! எனை மனம் உருக்கி - அடியேனுடைய மனத்தை உருக்கி, யோக அநுபூதி அளித்த பாத - யோக அநுபூதியை வழங்கிய திருவடியை யுடையவரே! எழுத அரிய பச்சை மேனி - எழுதுவதற்கு அரிய பச்சை மேனியை யுடைய, உமை பாலா - உமாதேவியின் திருக்குமாரரே! இமையவர் துதிப்ப - தேவர்கள் துதி செய்ய, ஞானமலை உறை - ஞானமலையில் வீற்றிருக்கும், குறத்தி பாக - வள்ளியம்மையைப் பக்கத்தில் உடையவரே! இலகிய சசி பெண் மேவு-விளங்குகின்ற இந்திராணியின் மகளாகிய தேவயானை

விரும்புகின்ற, பெருமாளே - பெருமையில் மிகுந்தவரே! மனையவள் நகைக்க - மனைவி நகைக்கவும், ஊரின் அனைவரும் நகைக்க - ஊரில் உள்ள யாவரும் நகை செய்யவும், லோக மகளிரும் நகைக்க - உலக மாதர்கள் சிரிக்கவும், தாதை தமரோடும் - தந்தையும் சுற்றத்தாரும், மனம் அது சலிப்ப - உள்ளம் வெறுப்படையவும், நாயன் உளம் அது சலிப்ப - அடியேனும் உள்ளம் வெறுப்படையவும், யாரும் வசைமொழி பிதற்றி-யாவரும் பழிமொழி கூறி, நாளும் அடியேனை அனைவரும் இழிப்ப - நாள் தோறும் அடியேனை எல்லோரும் இகழவும், நாடும் மன இருள் மிகுத்து - எண்ணமிடும் மனத்தில் இருள் மிகுந்து, நாடின் அகம் அதை எடுத்த சேமம் இதுவோ என்று - ஆராய்ந்து பார்த்தால் நான் இந்த உடம்பை எடுத்த இன்பம் இதுதானோ என்று, அடியனும் நினைத்து - அடியேனும் நினைத்து, நாளும் - நாள்தோறும் இதனை நினைத்து, உடல் உயிர் விடுத்த போதும் - உடலினின்றும் உயிரைவிடத் துணிந்த சமயத்தில், அணுகி முன் அளித்த பாதம் அருள்வாயே - அடியேனிடம் வந்து முன் அருளிய திருவடியைத் தந்து அருளுவீராக.

## பொழிப்புரை

தனதன தனத்த தான என்று முரசு வாத்தியம் ஒலிக்கவும், வீணை, உடுக்கை, வேதங்களின் கூட்டம் ஆகிய இவைகள் கடலின் அலைபோல் ஒலிக்கவும், போரில் அசுரர்கள் இறக்குமாறும், மின்னல் போல் ஒளி செய்யும் வேலாயுதத்தை விடுத்தருளிய சோதி முருகரே! அடியேனுடைய மனத்தை உருக்கி யோக அநுபூதியைத் தந்த திருவடிகளையுடையவரே! எழுதுதற்கு அரிய பச்சை மேனியையுடைய உமையம்மையின் பாலகரே! தேவர்கள் துதிக்க வள்ளியம்மையுடன் ஞானமலையில் வாழ்பவரே! இந்திராணியின் புதல்வியாகிய தேவயானை விரும்புகின்ற பெருமிதம் உடையவரே! மனைவி நகைக்கவும், ஊரவர் யாவரும் நகைக்கவும், சுற்றத்தாருடன் தந்தை மனம் சலிக்கவும், அடியேனுடைய உள்ளம் வெறுக்கவும், நாள்தோறும் அடியேனை இகழ்ந்து எல்லோரும் வசை மொழி கூறி இகழவும், எண்ணுகின்ற மனத்தில் இருள் மிகுதியாகவும், இவற்றை எண்ணி அடியேன் இந்த உடம்பையெடுத்ததன் பயன் இதுவோ என்று எண்ணி, உடலிலிருந்து உயிரை விடத்துணிந்த போது, அடியேன் முன் தோன்றி முன்னே அருளிய திருவடியைத் தந்தருளுவீராக.

## விரிவுரை

இத்திருப்புகழ் அருணகிரியாருடைய வரலாற்றின் தொடர்புடையது.

முதற்பகுதியில் தன்னை உலகம் பழித்ததனால் அவர் உயிர் விடத்துணிந்தபோது, முருகவேள் அவர் முன் தோன்றி திருவடியருளிய அருள் திறத்தைக் கூறுகின்றார். ஏழாவது அடியிலும் தனக்கு அருளிய அநுபூதியை யுரைக்கின்றார்.

மனையவள் நகைக்க:—

அருணகிரிநாதர் இளமையில் பொது மகளிரது உறவு பூண்டு ஒழுகியதனால் மனைவி அவரைக் கண்டு நகைக்கலானாள். இதனால் அருணகிரிநாதருக்கு மனைவியிருந்ததாகத் தெரிகின்றது.

ஊரினனைவரும் நகைக்க லோக மகளிரு நகைக்க:—

திருவண்ணாமலையில் வாழ்ந்த மாந்தர்களும், உலகிலுள்ள மாதர்களும் எள்ளி நகையாடினார்கள்.

அகமதை எடுத்த சேமம் இதுவோவென்றடியனும் நினைத்து நாளும் உடலுயிர் விடுத்த போது:—

எல்லோரும் பழித்து இழித்து உரைத்த படியால், அருணகிரிநாதருடைய மனம் நொந்தது. அதனால் அவர் "நாம் பிறந்த பயன் இதுவோ?" என்று கருதி உள்ளம் உடைந்து திருவருணைக் கோபுரத்தின் உச்சியிலேறி வீழ்ந்தனர். அப்போது முருகப் பெருமான் அவரைத் திருக்கரத்தால் தாங்கி உய்வித்து, உபதேசித்து அருள்புரிந்தார்.

எனை மன முருக்கி யோக அநுபுதி யளித்த பாத:—

அருணகிரிநாதருக்கு ஆறுமுகப் பெருமானே குருநாதராகத் தோன்றி அநுபூதி யளித்தருளினார். அநுபூதி—இரண்டற்ற நிலை.

"கந்தரநுபூதி பெற்றுக் கந்தரநுபூதி சொன்ன எந்தை"

—தாயுமானார்.

எழுதரிய பச்சை மேனி உமை:—

ஞானமே வடிவாய அம்பிகையைக் கருவி கரணங்களைக் கொண்டு வர்ணங்கள் குழைத்து எழுதிக் காட்ட இயலாது.

## கருத்துரை

ஞானமலையுறை ஞானபண்டிதா! முன் அளித்த பாதமலரை மீண்டும் தந்தருள்வீர்.

## சென்னிமலை

### 167

பகலிரவினிற் றடுமாறு
பதிகுருவெனத் தெளிபோத
ரகசிய முரைத் தநுபூதி
ரதநிலை தனைத் தருவாயே
இகபர மதற் கிறையோனே
இயலிசையின்முத் தமிழோனே
சகசிர கிரிப் பதிவேளே
சரவண பவப் பெருமாளே.

### பதவுரை

இகபரம் அதற்கு இறையோனே - இகம் பரம் என்ற இரு நலன்கட்கும் அதிபரே! இயல் இசையின் முத்தமிழோனே - இயல் இசை நாடகம் என்ற மூன்று தமிழுக்கும் உரியவரே! சக சிர கிரிபதி வேளே - இந்த வுலகில் உள்ள சென்னிமலையில் வாழும் செவ்வேட் பரமரே! சரவண பவ - சரவணபவத் தெய்வமே! பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! பகல் இரவினில் தடுமாறு - நினைவு, மறப்பு என்ற சகல கேவலத்தில் தடுமாற்றத்தையடையாமல், பதி குரு என தெளி போத - முருகனே குரு என்று தெரிகின்ற ஞானத்தின், ரகசியம் உரைத்து - பரம இரகசியத்தை அடியேனுக்கு உபதேசித்து, அநுபூதி ரத நிலைதனை தருவாயே - ஒன்றுபடும் இனிய பேரின்ப நிலையை அருள்புரிவீராக.

### பொழிப்புரை

இகத்துக்கும் பரத்துக்கும் தலைவரே! இயல் இசை நாடகம் என்ற முத்தமிழுக்கும் உரியவரே! பூதலத்தில் புகழ் பெற்ற சென்னி மலையில் வாழும் செவ்வேளே! சரவணபவப் பரம் பொருளே! பெருமிதம் உடையவரே! நினைப்பு மறப்பு என்ற வகையில் தடுமாறுமல், முருகனே குருவென்று தெளிகின்ற ஞான ரகசியத்தை உபதேசித்து அநுபூதிப் பேரின்ப நிலையைத் தந்தருளுவீராக.

### விரிவுரை

பகலிரவு:—

பகல்—நினைவு (சகலம்.) இரவு—மறப்பு (கேவலம்.)

"அந்திபகல் அற்ற நினைவருள்வாயே" —(ஐங்கரனை) திருப்புகழ்.

ப்திகுரு வெனத் தெளி போத ரகசியம்:—

முருகனே குரு என்று தெளிகின்ற ஞானம்.

"முருகன் தனிவேல் முனிநங் குருவென்
றருள் கொண்டறியார் அறியுந்தரமோ" —அநுபூதி.

அநுபூதி ரதம்:—

இரதம்—இனிமை. அநுபூதி—ஒன்றுபடுதல். முருகனுடன் ஒன்றுபட்டு அதனால் வருகின்ற பேரின்ப நிலை.

இகபர மதற் கிறையோனே:—

இகத்துக்கும் பரத்துக்கும் முருகனே தலைவன். அடியார்க்கு அவற்றை எளிதில் வழங்க வல்லவனும் அப்பரமனே.

"இகபர சௌபாக்ய மருள்வாயே" —(வசன) திருப்புகழ்.

இயலிசையின் முத்தமிழோனே:—

இனம் பற்றி நாடகத்தமிழும் வருவிக்கப்பட்டு முத்தமிழாயின. இயல் இசை நாடகம். இம்மூன்று தமிழுக்கும் உரியவர் முருகவேளே.

சிரகிரி:—

சிரகிரி—சென்னிமலை. இது முருகனுக்குரிய அருமையான திருத்தலம். ஒரு கற்பத்தில் ஆதிசேடனுக்கும் வாயு தேவனுக்கும் வலிமை விஷயமாக விவாதம் நடந்தது. அப்பொழுது ஆதிசேடன் தனது ஆயிரம் பண மகுடங்களால் மேருமலையை மூடினன். வாயுதேவன் பேராற்றலுடன் வீசி, மேருமலையின் சிகரங்களில் மூன்றைப் பறித்து எறிந்தான். அவைகளில் ஒன்று திருச்செங்கோடு. மற்றொன்று கொடுமுடி. இன்னும் ஒன்று சென்னிமலை. இது பூந்துறை நாட்டில் விளங்குவது. ஈரோடுக்கு அப்பால் உள்ள ஈங்கூர் என்ற புகைவண்டி நிலையத்துக்கு அருகில் உள்ள அரிய திருத்தலம். ஈரோடிலிருந்து பஸ் வசதி உண்டு. மலைமீது கார் போகப் பாதையுளது. சுவாமி மிக்க வரதர். சித்தர்கள் பலர் தவஞ் செய்த இடம்.

## கருத்துரை

சென்னிமலைமேவும் செம்மலே! அநுபூதி ஞான இன்பத்தைத் தந்தருள்வீர்.

## ஊதிமலை

### 168

ஆதிமக மாயியம்பை தேவிசிவ ஞர்மகிழ்ந்த
ஆவுடைய மாதுதந்த குமரேசா
ஆதரவ தாய்வருந்தி யாதியரு ணேசரென்று
ஆளுமுனை யேவணங்க அருள்வாயே

பூதமது வானவைந்து பேதமிட வேயலைந்து
பூரணசி வாகமங்க ளறியாதே
பூணுமுலை மாதர்தங்கள் ஆசைவகை யேநினைந்து
போகமுற வேவிரும்பு மடியேனை

நீதயவ தாயிரங்கி நேசவரு ளேபுரிந்து
நீதிநெறி யேவிளங்க வுபதேச
நேர்மைசிவ ஞர்திகழ்ந்த காதிலுரை வேதமந்த்ர
நீலமயி லேறிவந்த வடிவேலா

ஓதுமறை யாகமஞ்சொல் யோகமது வேபுரிந்து
ஊழியுணர் வார்கள்தங்கள் வினைதீர
ஊனுமுயி ராய்வளர்ந்து ஓசையுடன் வாழ்வுதந்த
ஊதிமலை மீதுகந்த பெருமாளே.

#### பதவுரை

ஆதிமகமாயி - முதன்மைபெற்ற பெரிய மாயியாக விளங்குபவரும், அம்பை - அம்பிகையும், தேவி - ஒளிபெற்றவரும், சிவஞர் மகிழ்ந்த ஆவுடைய மாது - சிவபெருமான் மகிழ்கின்ற ஆவுடையாள் என்னும் சிறப்பையுடையவளுமாகிய உமாதேவியார், தந்த - பெற்றருளிய, குமர ஈசா - திருக்குமாரராகிய தலைவரே! பூதம் அது ஆன ஐந்து பேதம் இடவே - பூதம் எனற மண் நீர் தீ காற்று வான் என்ற ஐந்துவகையும் பேதமுற்று உடம்பாகி வர, அலைந்து - இவ் வுடம்பு கொண்டு அவமே யலைந்து, பூரண சிவ ஆகம்ங்கள் அறியாது - நிறைவுடைய சிவாகமங்களை அறிந்து கொள்ளாமல், பூணும் முலை மாதர் தங்கள் ஆசை வகையே நினைந்து - ஆபரணங்களை யணியுந் தனங்களையுடைய பெண்களுடைய ஆசையையே நினைந்து, போகம் உறவே விரும்பும் அடியேனை - அவர்களுடன் போகத்தை நுகர்தற்கே விரும்புகின்ற அடியேனை, நீ தயவதாய் இரங்கி - தேவரீர் மிக்க கருணையுடன் இரக்கங்கொண்டு, நேச அருளே புரிந்து - நேசத்துடன் திரு

வருள் செய்து, நீதி நெறியே விளங்க - சைவ நீதியும் சன்மார்க்க வழியும் நன்கு விளங்குமாறு, உபதேச நேர்மை - உபதேசம் செய்த தன்மையானது, சிவனார் திகழ்ந்த காதில் உரை வேதமந்த்ரம்-சிவபெருமானுடைய திகழ்கின்ற திருச்செவியில் உரைத்த வேதமுதலாகிய மந்த்ரமேயாம், நீலமயில் ஏறிவந்த - (அங்ஙனம் அடியேனுக்கு உபதேசிக்கும் பொருட்டு) நீலமயில் மேல் ஆரோகணித்து வந்தருளிய, வடிவேலா - கூர்மைபொருந்திய வேலாயுதத்தை யுடையவரே! ஓதும் மறை ஆகமம் சொல் - ஓதப்பெறுகின்ற வேதம் ஆகமம் என்ற பெருநூல்களால் பேசப்பெறுகின்ற, யோகம் அதுவே புரிந்து - சிவயோகத்தையே செய்து, ஊழி உணர்வார்கள் தங்கள் - ஊழிகாலத்தையும் உணர்கின்ற அழிவற்ற ஆன்றோர்களுடைய, வினைதீர - வினைகள் தீருமாறு, ஊனும் உயிராய் வளர்ந்து - அவர்களுடைய ஊனாகியும் உயிராகியும் கலந்து வளர்ந்து, ஓசையுடன் வாழ்வுதந்த - பிரமநாதத்துடன் சிவஞானநுபவப் பெருவாழ்வைத் தந்தருள்கின்ற, ஊதிமலை மீது உகந்த - ஊதிமலைமேல் உள்ளம் உவந்து வாழுகின்ற, பெருமாளே - பெருமையின் மிக்கவரே! ஆதரவது ஆய் வருந்தி - அன்புடன் பதியாகிய தேவரீரை யடையவேண்டுமென்று வருந்தி, ஆதி அருணேசர் என்று - முழுமுதலாகிய செம்பொருட்டலைவர் என்று துதித்து, ஆளும் உனையே வணங்க - ஆட்கொள்கின்ற தேவரீரை வணங்கி யுய்ய, அருள்வாயே - திருவருள் புரிவீர்.

## பொழிப்புரை

முதன்மை பெற்ற பெரிய மாயையாக விளங்குபவரும், அம்பிகையும், ஒளியை யுடையவரும், சிவபெருமான் மகிழ்ந்த ஆவுடையாள் என்ற பீடஸ்தானமாக இலகுபவருமாகிய உமாதேவியாருடைய திருக்குமாரரே! ஐந்து பூதங்களின் மாறுபாட்டால் உண்டாகிய உடம்புடன் அலைந்து, அறிவு நிறைந்த சிவாகமங்களை அறிந்து கொள்ளாமல், ஆபரணங்களைப் பூண்டுள்ள தனபாரங்களையுடைய பெண்களுடைய ஆசையையே நாளும் நினைந்து அவர்களுடன் போகமுற விரும்புகின்ற அடியேனை ஆட்கொள்வதற்காக திருவுள்ளமிரங்கி அன்புடன் அருள் புரிந்து சைவநீதியும் சன்மார்க்கமும் விளங்குமாறு உபதேசித்த தன்மையானது, சிவபெருமானுடைய திருச்செவியில் உபதேசித்தருளிய மறைமுதன் மொழியாகிய மௌன மொழியேயாம்; அங்ஙனம் அடிமையேனுக்கு அருள்புரிய நீல நிறமுடைய மயில்வாகனத்தில் ஏறிவந்தருளிய கூர்மை பொருந்திய வேலாயுதக் கடவுளே! ஓதப் பெறுகின்ற வேதங்களும் ஆகமங்களும் கூறுகின்ற சிவயோகத்தைச் செய்து உகாந்த காலத்தையும் உணர்கின்ற தன்மையுடைய பெரியோர்களது வினை தீருமாறு அவர்களுடைய ஊனும் உயிருமாகி வளர்ந்து பிரமநாதத்

துடன் பேரின்ப வாழ்வு தந்தருளி ஊதிமலை என்னும் திருமலை மீது எழுந்தருளிய பெருமிதமுடையவரே! அடியேன் மிக்க அன்புடன் தேவரீரை யடைய வேண்டுமென்று வருந்தி "முழுமுதலாகிய செம்பொருட்டலைவரே" என்று துதித்து ஆளுடைய உம்மையே வணங்கியுய்யத் திருவருள்புரிவீர்.

## விரிவுரை

ஆதிமகமாயி:—

உலகத்தோற்றத்திற்கும், உயிர்கள் உய்தற்கும் அம்பிகையே முதன்மை பெற்றவராதலாலும், மாயையின் முதல்வியாதலாலும் "ஆதிமகமாயி" என்றனர்.

உனையே வணங்க அருள்வாயே:—

முருகவேளையன்றி மறந்தும் புறந்தொழாத உறுதியை சுவாமிகள் வற்புறுத்துகின்றார்கள்.

"உன்னை யொழிய ஒருவரையு நம்புகிலேன்
பின்னை யொருவரையான் பின்செல்லேன்" —நக்கீரர்.

"கற்று மனமெனக் கதறியும் பதறியும்
மற்றோர் தெய்வங் கனவிலு நினையாது" —மணிவாசகர்.

"தேவரே முதலுலகங்கள் யாவையுஞ் சிருட்டியாதிய செய்யும்
மூவரே எதிர்வருகினு மதித்திடேன்" —இராமலிங்க அடிகள்.

பூதமது வானவைந்து பேதமிட வேயலைந்து:—

தேவலோகத்துள்ள உடம்பு பூதசாரதநு; நரக லோகத்துள்ள உடம்பு பூததநு; மண்ணுலகத் துள்ள உடம்பு பூத பரிணாமதநு. மண் புனல் தீ காற்று வெளி என்ற ஐம்பூதங்களின் மாறுபாட்டால் உண்டாகிய உடம்பு.

"ஐந்துவித மாகின்ற பூதபேதத்தினா
லாகின்ற யாக்கை" —தாயுமானார்.

பூரண சிவாகமங்கள்:—

எல்லாப் பொருள்களும் நிறைந்து ஞானவிளக்காய் விளங்குவது சிவாகமங்கள். ஆகமம் என்ற சொல்லுக்கு "வந்தது" என்பது பொருள். இறைவன் திருவாக்கினின்றும் வந்தது. காமிகம் முதலாக வாதுளாந்தமாக உள்ள சிறப்பு நூல்கள் யாவும் ஞானபாதமாம்.

உபதேசநேர்மை.........வேதமந்த்ரம்:—

**குமாரபரமேஸ்வரர் சிவபெருமானுடைய திருச் செவியில் உபதேசித்தருளிய உபதேசப் பொருளையே அருணகிரியாருக்கும் உபதேசித்தருளினர்.**

"நாதா குமரா நமவென் றரனர்
ஓதாயென ஓதிய தெப்பொருள் தான்?" —அநுபூதி (36)

"விசும்பின் புரத்ரய மெரித்த பெருமானும்
நிருப குருபர குமர என்றென்று பக்திகொடு
பரவ அருளிய மவுன மந்த்ரந்தனைப்பழைய
நினதுவழி யடிமையும் விளங்கும் படிக்கினிது
ணர்த்தி யருள்வாயே"
—(அகரமுத) திருப்புகழ்.

நீலமயில்:—

**மயிலின் கழுத்து நீலநிறமுடையது.**

"நீலக்ரீவ ரத்னக்கலாப மயிலே" —மயில் விருத்தம்.

ஓதுமறை.........ஊழியுணர்வார்:—

**சிவயோகம் புரியும் சிவஞானிகள் நிருவிகற்ப சமாதியில் ஊழி ஒரு கணமாக அசைவற்றிருப்பர்.**

ஊனும்முயிராய் வளர்ந்து:—

**இறைவன் எங்கணும் அத்துவிதமாகக் கலந்திருக்கின்றனன்.**

கருத்துரை

பார்வதி தேவியின் பாலரே! அடியேனுக்கு உபதேசித்த அருட்சுடரே! ஊதிமலே மேவிய இறையவரே! தேவரீரையே வணங்க அருள்புரிவீர்.

## 169

கோதி முடித்துக் கனத்த கொண்டையர்
சூது விதத்துக் கிதத்து மங்கையர்
கூடிய அற்பச் சுகத்தை நெஞ்சினில் நினையாதே
கோழை மனத்தைக் கெடுத்து வன்புல
ஞான குணத்தைக் கொடுத்து நின்செயல்
கூறு மிடத்துக் கிதத்து நின்றருள் புரிவாயே

நாத நிலைக்குட் கருத்து கந்தருள்
போதக மற்றெச் சகத்தை யுந்தரு
நான்மு கனுக்குக் கிளத்து தந்தையின் மருகோனே
நாடு மகத்தெற் கிடுக்கண் வந்தது
தீரிடு தற்குப் பதத்தை யுந்தரு
நாயகர் புத்ரக் குருக்க ளென்றருள் வடிவேலா

தோதிமி தித்தித் திமித்த டிங்குகு
டகுகு டிக்குட் டிகுக்கு டிண்டிமி
தோதிமி தித்தித் தனத்த தந்தவெ னிசையோடே
சூழ நடித்துச் சடத்தில் நின்றுயி
ரான துறத்தற் கிரக்க முஞ்சுப
சோபன முய்க்கக் கருத்தும் வந்தருள் புரிவோனே

ஓதவெழுத்துக் கடக்க முஞ்சிவ
காரண பத்தர்க் கிரக்க முந்தகு
ஓமெ னெழுத்துக் குயிர்ப்பு மென்சுட ரொளியோனே
ஓதி யிணர்த்திக் குகைக்கி டுங்கன
காபர ணத்திற் பொருட் பயன்றரு
ஊதி கிரிக்குட் கருத்து கந்தருள் பெருமாளே.

## பதவுரை

நாத நிலைக்கு. உள் - சிவ தத்துவத்தில், கருத்து உகந்து அருள் - கருத்து வரும்படி மகிழ்ந்து அருள்புரியும், போதக - ஞான குருவே! மற்று எ சகத்தையும் தரும் - சிவலோகந் தவிர மற்ற எல்லா வுலகங்களையும் படைக்கும், நான்முகனுக்கு - பிரமதேவருக்கு, கிளத்து - நல்லறங்களைக் கூறும், தந்தையின் - நாராயணருடைய, மருகோனே - திருமருகரே, நாடும் அகத்து எற்கு - தேவரீரையே நாடுகின்ற உள்ளமுடைய அடியே னுக்கு, இடுக்கண் வந்தது - துன்பம் நேர்ந்தது, தீரிடுதற்கு - அத்துன்பம் தீரும் பொருட்டு, பதத்தையும் தரும் - திருவடியைத் தந்தவரே! நாயகர் புத்ர குருக்கள் என்று அருள் - சிவபிரான் பிள்ளைக் குருவே என்று அன் புடன் அழைத்தருளிய, வடிவேலா - கூரிய வேலவரே! தோதிமி தித்தித் திமித்த டிங்குகு டகுகு டிக்குட் டிகுக்கு டிண்டிடி தோதிமி தித்தித் தனத்த தந்த என் இசையோடே - தோதிமி தித்தித்.........தனத்த தந்த என்று ஒலிக்கும் இசையுடன், சூழ நடித்து - அடியவர்கள் சூழ நடனம் புரிந்து,

சடத்தில் நின்று உயிர் ஆன துறத்தற்கு - அடியேன் உடலினின்றும் உயிரைவிட முயன்றபோது, இரக்கமும் - அடியேன்மீது இரக்கமும், சுப சோபனம் உய்க்க கருத்தும் - அடியேனை சுப மங்கள வாழ்த்து நிலையில் சேர்ப்பிக்கத் திருவுள்ளமும் கூடி, வந்து அருள் புரிவோனே - என்முன் தோன்றி அருள்புரிந்தவரே! ஓத எழுத்துக்கு அடக்கமும் - ஓதப்படும் மந்திரங்கட்கு உட்பொருள் என்றும், சிவ காரண பத்தர்க்கு இரக்கமும் - சிவ சம்பந்தமான பத்தர்களிடத்தில் இரக்கமுள்ளவனென்றும், தகு ஓம் என் எழுத்துக்கு உயிர்ப்பும் என் - தகுந்த ஓங்கார எழுத்துக்கு உயிர் நாடி என்றும் சொல்ல நின்ற, சுடர் ஒளியோனே - பேரொளிப் பொருளே! ஓதியிணர்த்தி - ஒதிய மரம் பூத்து, குகைக்கு இடும் - குகையில் உதிர்க்கின்ற, கனக ஆபரணத்தின் - பொன்னாபரணம் போன்ற, பொருள் பயன் தரு - அரிய முத்திப் பயனைத் தருகின்ற, ஊதி கிரிக்கு உள் - ஊதிகிரி என்ற மலை மீது, கருத்து உகந்து அருள் - உள்ளம் மகிழ்ந்து வாழ்கின்ற, பெருமாளே- பெருமையிற் சிறந்தவரே! கோதி முடித்து கனத்த கொண்டையர் - சிக்கு எடுத்து முடித்த பெரிய கூந்தலையுடையவர்கள், சூது விதத்துக்கு இதத்து மங்கையர் - வஞ்சனை வழிகளுக்கு நன்கு வழி செய்யும் பொது மகளிரை, கூடிய அற்ப சுகத்தை நெஞ்சினில் நினையாதே - கூடுவதால் வரும் அற்ப இன்பத்தை மனத்தில் நினையாமல், கோழை மனத்தை கெடுத்து - திடமில்லாத மனத்தை யொழித்து, வன்புல ஞான குணத்தை கொடுத்து-கூரிய மதியையும் ஞானத்தையும் கொண்ட குணத்தைத் தரப் பெற்று, நின் செயல் கூறும் இடத்துக்கு - உமது திருவிளையாடல்களைப் பேசும் இடங்களில், இதத்து நின்று - இன்பம் ஊற அடியேன் நிற்கும்படி, அருள்புரிவாயே - திருவருள்புரிவீராக.

## பொழிப்புரை

சிவதத்துவத்தில் கருத்துவரும்படி மகிழ்ந்து அருள் புரியும் ஞானகுருவே! சிவலோகந்தவிர மற்ற எல்லாவுலகங்களையும் படைக்கும் பிரமனுக்கு அறவுரைகள் கூறும் தந்தையாகிய நாராயணமூர்த்தியின் திருமருகரே! தேவரீரை நாடுகின்ற உள்ளமுடைய அடியேனுக்கு வந்த துன்பந் தீரும்படி திருவடியைத் தந்தவரே! சிவபெருமான் ''புத்திர குருவே!'' என்று அழைத்தருளிய கூரிய வேலாயுதரே! தோதிமி தித்தித் திமித்த டிங்குகு டகுகு டிக்குட் டிகுக்கு டிண்டிமி தோதிமி தித்தித் தனத்த தந்த என்ற ஒலிகள் அமைந்த இசையுடன், அடியார்கள் சூழ நடனஞ்செய்து, உடம்பினின்றும் உயிரை விட அடியேன் துணிந்தபோது என்மீது இரக்கமும், எனக்கு மங்கள நலன்கள் வாய்க்குமாறு திருவுள்ளமும் பற்றி, என்முன் வந்து அருள்புரிந்தவரே! ஓதப்படும் மந்திரங்களுக்கு உட்பொருள் என்றும், சிவ சம்பந்தமான பத்தர்களிடத்தில் கருணையுள்ள

வர் என்றும், சிறந்த பிரணவ மந்திரத்துக்கு உயிர்நாடி யென்றும் சொல்லத்தக்க ஒளிமயமானவரே! ஒதியமரம் பூத்துக் குகையில் மலர்களை யுதிர்க்கின்றதும், பொன்னுபரணம் போன்ற அரிய முத்தி நலனைத் தர வல்லதுமான ஊதிமலையில் உள்ளம் உவந்து உறைகின்ற பெருமிதமுடையவரே! கோதி முடித்த பெரிய கூந்தலையுடையவர்கள்; வஞ்சனை வழிகளுக்கு வழிவகுக் கின்ற பொது மகளிரைக் கூடுவதால் வரும் அற்ப இன்பத்தை மனதில் நினையாமல், திடமில்லாத மனத்தை ஒழித்து, உறுதி யான அறிவையும் ஞான குணத்தையுங் கொடுத்து, உமது திரு விளையாடல்களைப் பேசும் இடங்களில் இன்பம் ஊற அடியேன் நிற்கும்படி திருவருள் புரிவீராக.

## விரிவுரை

அற்பச் சுகத்தை நெஞ்சினில் நினையாதே:—

உலக இன்பம் அனைத்தும் அற்பமே யாகும்.

"தினைத்துணையுள்ளதோர் பூவினில் தேன் உண்ணுதே"

என்கின்றார் மாணிக்கவாசகர்.

உயர்ந்த அல்வா ஆனாலும் நுனிநாக்கிலிருந்து அடி நாக்குக்குப்போம் அளவுதான் சுவை.

சில விநாடிகளில் மறையும் இன்பத்தைப் பெரிதாக எண்ணி மாந்தர்கள் மடிகின்றார்கள்.

கோழை மனத்தைக் கெடுத்து:—

கோழை—திடமின்மை. கோழையுள்ளம்—உறுதியில்லாத மனம்.

இந்தவுலகத்தில் கோழை மனம் படைத்தவர்கள்தான் மிகுதியாக எங்கும் இருக்கின்றார்கள். அதனால் இராமலிங்க அடிகள் "கோழையுலகு" என்று குறிக்கின்றார்கள்.

வன்புல ஞான குணத்தைக் கொடுத்து:—

புலம்—அறிவு. வன்புலம்—திடஞானம். ஞானமயமான குணம்.

நின்செயல் கூறுமிடத்துக் கிதத்து நின்றருள் புரிவாயே:—

முருகப்பெருமானுடைய புகழையெடுத்துக் கூறுகின்ற இடத்தில் அன்புடன் இருந்து கேட்டு மகிழ வேண்டும். இத்

தகைய நலனைத் தருமாறு சுவாமிகள் முருகனிடம் முறையிடுகின்றார்.

நாத நிலைக்குட் கருத்து கந்தருள் போதக:—

நாதம்—சிவதத்துவம். அந்த சிவ தத்துவத்துக்குள் கருத்து செல்லும் வண்ணம் உபதேசிக்கும் ஞானதேசிகன் முருகன். நாதம் 36-வது தத்துவம்.

நாடு மகத்தெற் கிடுக்கண் வந்தது தீரிடுதற்குப் பதத்தை யுந்தரும்:—

முருகனையே நாடுகின்ற உள்ளத்தையுடைய அருணகிரி நாதருக்கு வந்த துன்பத்தை யொழிக்கும் பொருட்டு முருகன் தன் பதாம்புயத்தைத் தந்தருளினர். இது அவருடைய சரித்திரக் குறிப்பு.

சடத்தினின்றுயிரா னதுறத்தற் கிரக்க முஞ்சுப சோபன முய்க்கக் கருத்தும் வந்தருள் புரிவோனே:—

அருணகிரியார், தமக்குற்ற பிணியின் மிகுதியால் உயிர் துறக்க முயன்றபோது, கந்தவேள் கருணையுடன் காட்சிதந்து ஆட்கொண்ட வரலாற்றை இந்த அடி குறிக்கின்றது.

ஓத எழுத்துக் கடக்கமும்:—

ஓதப்படுகின்ற எழுத்துக்களாகிய மந்திரங்களின் உட்பொருள் முருகவேள்.

ஓமெனெழுத்துக் குயிர்ப்பு மென்:—

ஓங்கார எழுத்தின் உயிர் நாடியாக விளங்குபவர் குமாரக் கடவுள்.

ஓதியிணர்த்திக் குகைக்கிடும்:—

ஓதி என்பது ஓதியென வந்தது. ஓதிய மரங்கள் நல்ல மலர்களைக் குகையில் இட்டு நிரப்பும் வளப்பமுள்ள மலை ஊதி மலை.

இம்மலை கோவை மாவட்டத்தில் தாராபுரத்திலிருந்து காங்கேயம் போகும் வழியில் 10 கல் தொலைவில் உள்ளது.

## கருத்துரை

ஊதிமலை முருகா! ஞானகுணத்தைத்தந்து உனை வணங்க அருள் செய்வீர்.

## குருடிமலை

## 170

கருடன் மிசைவரு கரிய புயலென
    கமல மணியென வுலகோரைக்
கதறி யவர்பெயர் செருகி மனமது
    கருதி முதுமொழி கனோடிடித்

திருடி யொருபடி நெருடி யறிவிலர்
    செவியில் நுழைவன கவிபாடித்
திரியு மவர்சில புலவர் மொழிவது
    சிறிது முணர்வகை யறியேனே

வருடை யினமது முருடு படுமகில்
    மரமு மருதமு மடிசாய
மதுர மெனுநதி பெருகி யிருகரை
    வழிய வகைவகை குதிபாயுங்

குருடி மலையுறை முருக குலவட
    குவடு தவிடெழ மயிலேறுங்
குமர குருபர திமிர தினகர
    குறைவி லிமையவர் பெருமாளே.

### பதவுரை

வருடை இனம் அதும் - மலையாட்டின் கூட்டமும், முரடுபடும் அகில் மரமும் - கரடுமுரடான அகில் மரமும், மருதமும் - மருத மரமும், அடிசாய - வேருடன் சாயும்படி, மதுரம் எனும் நதி பெருகி - மதுரம் என்னும் ஆறு வெள்ளம் பெருகி, இரு கரை வழிய - இரு கரைகளிலும் வழிய, வருகை வகை குதிபாயும் - பல வகையாகக் குதித்துப் பாய்கின்ற, குருடி மலை உறை - குருடிமலையில் வீற்றிருக்கின்ற, முருக - முருகப் பெருமானே! குல வட குவடு தவிடு எழ - சிறந்த வடமலையாகிய கிரவுஞ்சகிரி தவிடு பொடி யாகுமாறு, மயில் ஏறும் - மயிலில் ஏறிய, குமர - குமாரக் கடவுளே! குரு பர - குருபர! திமிர தினகர - அறியாமையாகிய இருளுக்கு ஞான சூரி யனே! குறைவில் இமையவர் - குறைவில்லாத தேவர்கள் போற்றும், பெரு மாளே - பெருமையிற் சிறந்தவரே! கருடன் மிசை வரு கரிய புயல் என - கருடன் மேல் வருகின்ற நீலமேக வண்ணராம் திருமால் நீ என்றும், கமல மணி என - பதுமநிதி யென்றும் சிந்தாமணி யென்றும், உலகோரை -

உலகத்தவரை, கதறி - சத்தமிட்டுப் பாடி, அவர் பெயர் செருகி - அவர்களின் பேரை அப்பாடலில் நுழைத்து, மனம் அது கருதி - மனத்தில் அவர்கள் தரும் பொருளை நாடி, முதுமொழிகளை நாடித் திருடி - முன்னோர்கள் பாடியுள்ள பழைய மொழிகளைத் தேடி அவற்றைத் திருடி, ஒருபடி நெருடி - ஒருபடியளவு திரித்துப்பாடி, அறிவு இலர் செவியில் நுழைவன - அறிவில்லாதவருடைய காதில் நுழையும்படி, கவிபாடி திரியும் அவர் - கவிகளைப் பாடித்திரிகின்றவர்களாகிய, சிலபுலவர் மொழிவது - சிலபுலவர்கள் கூறுவன, சிறிதும் உணர்வகை அறியேனே - சற்றேனும் அடியேன் அறிகிலேன்.

## பொழிப்புரை

மலையாட்டுக் கூட்டமும், கரடுமுரடான அகில் மரமும், மருத மரமும் வேருடன் சாயும்படி மதுரம் என்ற ஆறு வெள்ளம் பெருகி இரு கரைகளிலும் வழிய பலவகையாகக் குதித்துப்பாய்கின்ற குருடிமலையில் உறைகின்ற முருகக் கடவுளே! சிறந்த வடக்கில் நின்ற கிரவுஞ்சமலை தவிடு பொடியாகும்படி மயிலில் ஏறிவந்த குமாரக் கடவுளே! குருபரரே! அஞ்ஞான இருளை யகற்றும் ஞானபானுவே! குறைவில்லாத அமரர்கள் போற்றும் பெருமிதமுடையவரே! கருடன் மீது வருகின்ற கரிய மேக வண்ணராம் திருமால் நீ என்றும், பதுமநிதி யென்றும், சிந்தாமணி யென்றும் புகழ்ந்து உலகத்தவரைச் சத்தமிட்டுப்பாடி, அப்பாடலில் அவர் பெயர்களை நுழைத்து, மனத்தில் பொருளை நாடி, முன்னுள்ள பழைய நூல்களில் உள்ள சொற்களைத் திருடி, ஒருபடியளவு திரித்து அமைத்து, அறிவில்லாதவர்களின் காதில் நுழையும்படி கவிகளைப் பாடித்திரிகின்ற சில புலவர்கள் கூறும் நெறியை அடியேன் அறியேன். (அதில் செல்ல மாட்டேன்.)

## விரிவுரை

கருடன்மிசைவரு கரிய புயலெனः—

கருடன் காசிபருக்கும் விநதைக்கும் பிறந்தவன். பறவையரசன். திருமாலுக்கு வாகனமும் கொடியுமாக இருப்பவன்.

கருடன்மீது வந்து அடியார்க்கு அருள்புரியும் நீலமேக வண்ணர் திருமால். இத்தகைய திருமால்தான் நீ என்று புலவர் மனிதரைப் புகழ்ந்து பாடுவார்கள்.

கமல மணி யெனः—

கமலம்—பதுமநிதி. தாமரை வடிவில் இருக்கும் ஒரு நிதி. இது வேண்டுவார்க்கு வேண்டிய அளவு நிதி சொரியும்.

உலகோரை கதறி:—

உலகிலுள்ள தனவந்தர்களிடம் போய் அவர்களைப் புகழ்ந்து சத்தம் போட்டுப் பாடுவர்.

அவர் பெயர் செருகி:—

பழைய பாடல்களில் இவர் பேரைச் செருகிப் பாடுவர்.

முதுமொழிகளை நாடித் திருடி யொருபடி நெருடி:—

பழைய நூல்களில் முன்னோர்கள் பாடிய பாடல்களில் உள்ள இனிய அரிய சொற்களைத் திருடி, நிரம்பத் தாங்கள் பாடும் பாடல்களில் நுழைத்தும் பாடுவர்.

சிலபுலவர் மொழிவது சிறிது முணர் வகை யறியேனே:—

இத்தகைய சில புலவர்களின் செயலை ஒரு போதும் அடியேன் மேற்கொள்ள மாட்டேன் என்று சுவாமிகள் முருகனிடம் மொழிகின்றார்.

மதுர மென நதி:—

மதுரம் என்ற ஆற்றில் வெள்ளம் பெருகி இரு கரைகளிலும் மோதி, மலையாடுகள், அகில் மரங்கள், மருத மரங்கள் முதலியன வேருடன் சாயும்படிக் குதித்துக் கொண்டுவரும் வளம் பொருந்தியது.

குருடிமலை:—

இது கோவைக்கு அடுத்த துடியலூர் புகைவண்டி நிலையத்துக்கு அருகில் உள்ளது.

## கருத்துரை

குருடி மலை வாழுங் குமர! திருடிநெருடி கவிபாடும் புலவர்களின் நெறியில் என் மனம் செல்லாது.

## தென்சேரிகிரி

## 171

எங்கேனு மொருவர்வர அங்கேக ணினிதுகொடு
இங்கேவ ருனதுமயல் தரியாரென்
றிந்தாவெ னினியஇதழ் தந்தேனை யுறமருவ
என்றுரைசை குழையவிழி யிணையாடித்
தங்காம லவருடைய வுண்டான பொருளுயிர்கள்
சந்தேக மறவெபறி கொளுமாதர்

சங்கீத கலவிநல மென்றேது முததிவிட
தண்பாரு முனதருளை யருள்வாயே

சங்கோடு திகிரியது கொண்டேயு நிரைபிறகு
சந்தாரும் வெதிருகுழ லதுவூதி
தன்காதல் தனையுகள என்றேழு மடவியர்கள்
தங்கூறை கொடுமரமி லதுவேறுஞ்

சிங்கார அரிமருக பங்கேரு கனுமருள
சென்றேயும் அமரருடை சிறைமீளா
செண்டாடி அசுரர்களை ஒன்ருக அடியர்தொழு
தென்சேரி கிரியில்வரு பெருமாளே

## பதவுரை

சங்கோடு திகிரி அது - சங்கத்துடன் சக்கரத்தை, கொண்டு - கரங்களில் தாங்கிக் கொண்டு, ஏயும் நிரை பிறகு - சேர்ந்துவாழும் பசுக்கூட்டத்தின் பின்னே, சந்து ஆரும் வெதிரு குழல் அது ஊதி - ஏழிசைகளை யுண்டாக்கும் தொளைகளோடு கூடிய மூங்கிற் குழலை இசையுடன் ஊதியும், தன் காதல் தனை உகள என்று - தன்னிடத்துக் கொண்ட காதலை மேலும் வளர்க்க என்று, எழு மடவியர்கள்தம் - மன எழுச்சியையுடைய கோப கன்னிகைகளுடைய, கூறை கொடு - சீலைகளைக் கவர்ந்து கொண்டு, மரம் இல் - மரத்தில், ஏறும் - ஏறியும் திருவிளையாடல் செய்த, சிங்கார - மிக்க அழகுடைய, அரி மருக - திருமாலுடைய திருமருகரே! பங்கேருகனும் மருள - பிரமதேவரும் திகைக்கும்படி, சென்று - போர்த்தலத்திற்போய், ஏயும் அமரர் உடை - பொருந்தியுள்ள தேவர்களுடைய, சிறை மீள-சிறை மீட்கும் பொருட்டு, அசுரர்களை செண்டு ஆடி - அசுரர்களைச் செண்டு போல் எறிந்து அழித்து, ஒன்ருக அடியர்தொழு - ஒருமைப்பாட்டுடன் அடியார்கள் தொழுகின்ற, தென்சேரிகிரியில் வரு - தென்சேரிமலை யென்னும் திருத்தலத்தில் வந்து அமர்ந்த, பெருமாளே - பெருமையின் மிக்கவரே! எங்கேனும் - எவ்விடத்திலாயினும், ஒருவர் வர - ஒரு மனிதன் வந்தால், அங்கே - அவ்விடத்திலே, கண் இனிது கொடு - குளிர்ச்சியாகப் பார்த்துக் கண்வலையை வீசி, இங்கு ஏவர் உனது மயல் தரியார் என்று - "இவ்விடத்தில் உங்களைக் கண்டால் யார்தான் மோகமுற்று மயங்கமாட்டார்கள்? யாரும்மயங்கி விடுவார்கள்" என்று பேசி, என் இனிய இதழ் இந்தா - "என்னுடைய இனிமையான அதரபானம் இந்தா பெற்றுக் கொள்ளுங்கள், தந்தேனை யுறமருவ - இதழ் தந்த என்னைப் பொருந்தத் தழுவுங்கள்", என்று ஆசை குழைய - என்று சொல்லி ஆசையால் உள்ளமும் உடம்பும் குழை

யும்படி, விழி இணை ஆடி - இரண்டு கண்களையும் சுழற்றி, அவருடைய - தம்மை வந்தடைந்த ஆடவர்களுடைய, உண்டான பொருள் உயிர்கள் - அவர்களுக்கு உள்ள பொருள் அத்தனையும் உயிரையும், தங்காமல் - அவர்களிடத்தில் தங்குதலின்றி, சந்தேகம் அறவே பறிகொளும் - ஐயஞ்சிறிதுமின்றி சூறையாடுகின்ற, மானார் - விலைமாதர்களுடைய, சங்கீத கலவி நலம் என்று ஓது - இசையோடு கூடிய கலவி இன்பம் என்று சொல்லப்படுகின்ற, உததிவிட - காமசமுத்திரத்தை விட்டுக் கரையேறுமாறு, தண்பாரும் - குளிர்ச்சிமிக்க, உனது அருளை- தேவரீருடைய திருவருளை, அருள்வாயே - கொடுத்தருள்வீர்.

## பொழிப்புரை

சங்குசக்கரத்தைத் திருக்கரத்தில் தாங்கியும், கலந்து வாழும் நற்குணமுடைய பசுக்கூட்டத்திற் பின் சென்று அவைகளை மகிழ்விக்கும் பொருட்டு, (ஏழிசைகளை வெளிப்படுத்துகின்ற) தொளைகளையுடைய வேய்ங்குழலை இனிது இசைத்தும், தன்னிடத்துக் கொண்ட காதலை மேலும் வளர்க்கும் பொருட்டு, (நீராடுகின்ற) கோபகன்னிகைகளின் சீலைகளை எடுத்துக் கொண்டு மரத்தில் ஏறிக்கொண்டும் திருவிளையாடல் புரிந்த, அழகிய நாராயண மூர்த்தியின் திருமருகரே! பிரமதேவரும் திகைக்குமாறு போர்க்களத்திற் சென்று, பொருந்தியுள்ள தேவர்களுடைய சிறை மீளும்படி, அசுரர்களை வதைத்து, ஒருமையுடைய அடியார்கள் தொழ, தேன்சேரிகிரியில் வந்தமர்ந்த பெருமிதமுடையவரே! எவ்விடத்திலேனும் ஒரு மனிதன் வந்தால் அவ்விடத்தில் அவனைக் கண்வலை வீசிப்பிடித்து, "இங்கே உம்மைக் கண்டால் யார்தான் மோகத்தால் மயங்கமாட்டார்கள்? உமது அழகு யாரையும் மயங்கச் செய்யும்" என்று சொல்லி, "எனது இனிமையான இதழ்க்கனி இந்தா பெற்றுக்கொள்ளுங்கள்; இதனைத் தந்த என்னைக் கட்டியணைக்க வாருங்கள்" என்று விரகவார்த்தைகளைக்கூறி ஆசையை மூட்டி அவ்வாசையால் உடலையும் உள்ளத்தையும் உருக்கி, இருகண்களையும், கீழும் மேலும் புரட்டி, அவர்கள் வலைப்பட்ட ஆடவர்களுக்கு உடைய பொருள்களையும், அவர்கள் உயிரையும் சிறிதும் சந்தேகமின்றிப் பறித்துக்கொள்ளும் விலைமகளிருடைய, சங்கீதப் பாடலோடு கூடிய கலவி இன்பமாகிய பெருங்கடலை விட்டுக் கரையேறி உய்ய, தேவரீருடைய தட்பமிக்க திருவருளைத் தந்து ஆட்கொண்டருள்வீர்.

## விரிவுரை

எங்கேனு மொருவர் வர:—

விலைமகளிர், வீதியோ, சந்தியோ, மற்று எவ்விடமாயினும் எதிர்ப்பட்ட ஆடவரை விழிவலை விசி மயக்குவர்.

இங்கேவ ருனதுமயல்.........மருவ:—

தம் வசப்பட்ட ஆடவர்கள் மீண்டு செல்லாவண்ணம், "நீங்கள் மிகவும் தாராள சிந்தையுடையவர்; கர்ணனும் தங்களைக் கண்டால் நாணித்தலைகவிழ்ப்பான். தங்கள் அழகைக் கண்டு மன்மதனும் வெந்து நீருனன். ஆடவர்கள் தங்களைக் கண்டால் அவாவுகின்றா ரென்றால் பெண்ணுகப் பிறந்தவர் யார்தான் தங்கள் கட்டழகைக் கண்டால் மயங்கமாட்டார்கள்? என் உள்ளத்தைக் கொள்ளைகொண்ட உத்தம! விரைந்து என்னைத் தழுவும்; விரகதாபத்தால் வெதும்புகின்ற என்னை நீர் தழுவவில்லை யென்றால் என் உயிர் நீங்கிவிடும்" என்று பசப்பு மொழிகளைக் கூறி அவர் மனத்தைக் கவர்ந்து மீளா நரகுக்கு ஆளாக்குவர்.

அவருடைய உண்டான பொருளுயிர்கள்.........பறிகொளுமாளுர்:—

விலைமகளிர் தம் வலைப்பட்டோருடைய பூமி வீடு மாடு பொன் ஆடை ஆபரணம் முதலிய யாவற்றையும் பறித்துக் கொள்வதோடு அமையாது, அவருடைய உயிர்க்கும் உலை வைத்து விடுவர்.

"உயிரீர்வார் மேல்வீழ்ந்து தோயுந்தூர்த்தன்"

"மனமுடனே பறிப்பவர்கள்"

—(குமரகுரு பரமுருககுகனே) திருப்புகழ்.

விளக்கொளியும் வேசையர் நட்பும் இரண்டும்
துளக்கற நாடின் வேறல்ல - விளக்கொளியும்
நெய்யற்ற கண்ணே யறுமே அவரன்பும்
கையற்ற கண்ணே யறும்.

—நாலடியார்.

கலவிநலம் என்றேதுமுதவி :—

மாதர் மயக்கம் ஒரு பெருங்கடல். கடலைக் கடப்பது எத் துணையரியதோ அதேபோலும் மாதராசையைத் தவிர்ப்பதும். கலையறிவாலும் முயற்சியாலும் பிற சாதனங்களாலும் அதை யறவே நீக்க முடியாது. நீக்கினும் பிறகு ஒரு சமயம் அது சிறிது தலை நீட்டும். எந்தை கந்தவேள் திருவருட் பலம் ஒன்றாலேயே பிறவிகடோறும் தொடர்ந்து வரும் பெண்ணாசை

முற்றிலும் நீங்கி யுய்யலாம். அதுதான் அருணகிரிநாதர் காட்டிய செந்நெறி.

கடலில் நீர்ப்பாம்பு, சங்கு, பவளம், நீர்ச்சுழி, மலைகள் முதலியன இருக்கும். காமக் கடலிலும், அல்குற்படமும், கழுத்தாகிய சங்கும், உந்தியாகிய நீர்ச்சுழியும், தனமாகிய மலையும் இருந்து இடர் செய்யும் என்பதை கந்தரலங்காரம் 29-ஆவது பாடலில் உபதேசிப்பதைப் பலமுறை படித்து உண்மையுணர்ந்து உய்யு நெறி பெற்று உலகம இன்புறுக.

சந்தாரும் வெதிருகுழல்:—

மூங்கிலால் செய்யப்படும் இசைக்கருவி; புல்லாங்குழல் என்பர். தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக் கருவி, மிடற்றுக்கருவி என்னும் ஐங்கருவிகளுள், புல்லாங் குழல் துளைக் கருவியாம்.

புல்லாங்குழல், கருங்காலி, சந்தனம், செங்காலி, வெண்கலம் முதலியவைகளாற் செய்யப்படுமாயினும் உத்தமம் மூங்கிலே. இதன் விளக்கத்தைத் திருப்புகழ் விரிவுரை 2-ம் தொகுதி களப மொழுகிய என்ற பாடலின் விரிவுரையில் பார்க்கவும்.

தங்கூறைகொடு மரமில்:—

ஆயர்பாடியில் கோபகன்னிகைகள் கண்ணனைக் கணவனுகப் பெறும் பேற்றை விரும்பி மார்கழி மாதம் 30 நாட்களும் யமுனையில் நீராடி கௌரிநோன்பு நோற்க, முடிவு நாளையில், விரத பலனைத் தரும் பொருட்டும், ஆடையின்றி நீராடுவது தவறு என்பதை யுணர்த்தும் பொருட்டும் கண்ணபிரான் அவர்கள் ஆடைகளைக் கவர்ந்து மரத்தின்மீது ஏறி அவர்கள் வணங்க அளித்த வரலாற்றைத் தெரிவிக்கும். விரிவை, திருப்புகழ் விரிவுரை 3-ம் தொகுதி. 65-ம் பக்கத்தில் காணவும்.

மரமில் என்பதில் அத்துச்சாரியை கெட்டிருக்கின்றது. எழு என்பது சந்தத்தையொட்டி ஏழு என நீட்டல் விகாரம் பெற்றது.

தென்சேரிகிரி:—

இத்திருத்தலம், கோயமுத்தூர் ஜில்லா, பல்லடத்திற்குத் தெற்கே 12 மைல் தூரத்தில் உள்ளது.

கருத்துரை

திருமால் மருக! தென்சேரிகிரி நாதா! மாதர் மயக்கமாகிய கடலினின்றுங்கரையேறி உய்ய அருள்புரிவீர்.

## 172

கொண்டாடிக் கொஞ்சு மொழிகொடு
கண்டாரைச் சிந்து விழிகொடு
கொந்தாரச் சென்ற குழல்கொடு வடமேருக்
குன்றேடொப் பென்ற முலைகொடு
நின்றேலக் கஞ்செய் நிலைகொடு
கொம்பாயெய்ப் புண்ட விடைகொடு பலரோடும்

பண்டாடச் சிங்கி யிடுமவர்
விண்டாலிக் கின்ற மயிலன
பண்பாலிட் டஞ்செல் மருளது விடுமாறு
பண்டேசொற் றந்த பழமறை
கொண்டேதர்க் கங்களறவுமை
பங்காளர்க் கன்று பகர்பொருள் அருள்வாயே

வண்டாடத் தென்றல் தடமிசை
தண்டாதப் புண்ட ரிகமலர்
மங்காமற் சென்று மதுவைசெய் வயலூரா
வன்காளக் கொண்டல் வடிவொரு
சங்க்ராமக் கஞ்சன் விழவுதை
மன்றுடிக் கன்பு தருதிரு மருகோனே

திண்டாடச் சிந்து நிசிரர்
தொண்டாடக் கண்ட வமர்பொரு
செஞ்சேவற் செங்கை யுடையஷண் முகதேவே
சிங்காரச் செம்பொன் மதிளத
லங்காரச் சந்த்ர கலைதவழ்
தென்சேரிக் குன்றி லினிதுறை பெருமாளே.

### பதவுரை

வண்டு ஆட - வண்டுகள் மகிழ்ந்து விளையாட, தென்றல் தடம் மிசை தண்டாத - தென்றல் - காற்று வீசும் குளத்தை நீங்காதுள்ள, புண்டரிக மலர் மங்காமல் சென்று - தாமரை மலர்கள் வாட்ட மடையாமல் அவை

களிடம் போய், மதுவை செய்-தேனைப் பருகும், வயலூரா-வயலூர் ஆண்டவனே! வன் காள கொண்டல் வடிவு - வலிமைமிக்க கரிய மேகத்தின் வடிவுடையவனாய், ஒரு சங்க்ராம கஞ்சன் விழ உதை - ஒப்பற்ற போர்புரியும் கம்சன் இறந்து விழும்படி உதைத்து, மன்ருடிக்கு - வாதாடிய கண்ண பிரானுக்கு, அன்பு தரு - அன்பை விளைவிக்கும், திருமருகோனே - அழகிய மருகரே! சிந்து நிசி சரர் திண்டாட - சிதறுண்ட அசுரர்கள் திண்டாடும் படியாகவும், தொண்டாட - அடிமை பூணும்படியாகவும், கண்ட அமர் பொரு - கண்டித்துப் போர் புரிந்த, செம் சேவல் செம்கை உடைய - சிவந்த சேவலைச் செங்கையில் கொண்ட, சண்முக தேவே - ஆறுமுகக் கடவுளே! சிங்கார செம்பொன் மதில் அது - அழகிய செம்பொன் மதிலின், அலங்காரம் - அலங்காரம் உடையதாய், சந்த்ர கலை தவழ் - சந்திரனுடைய கலை தவழுகின்றதாய் விளங்கும், தென்சேரி குன்றில் இனிது உறை - தென் சேரி மலையில் இன்பத்துடன் வீற்றிருக்கும், பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! கொண்டாடி - சிறப்பித்துப் பேசி, கொஞ்சு மொழி கொடு - கொஞ்சிப் பேசுகின்ற சொற்களைக் கொண்டும், கண்டாரை சிந்து விழி கொடு - தம்மைக்கண்டவர்களின் உள்ளத்தை வெட்டி யழிக்குங் கண்களைக் கொண்டும், கொந்து ஆர சென்ற குழல் கொடு - பூங்கொத்துக்கள் நிரம்பப் புகுத்தியுள்ள கூந்தல் கொண்டும், வடமேரு குன்றோடு ஒப்பு என்ற முலை கொடு - வடமேருமலைக்கு நிகரான கொங்கைகளைக் கொண்டும், நின்று ஓலக்கம் செய்நிலை கொடு - நின்று சபாமண்டபத்தில் கொலு விருப்பது போன்ற நிலை கொண்டும், கொம்பாய் எய்ப்பு உண்ட இடைகொடு - கோல்போல் இளைத்த இடைகொண்டும், பலரோடும் - பலருடனும், பண்டு ஆட சிங்கி இடும் அவர் - பழமைபோல் பேசி வசப்படுத்துகின்ற பொது மாதர்களின். விண்டு ஆலிக்கின்ற - வாய் விட்டுக் கூவுகின்ற, மயில் அன பண்பால் - மயில் போன்ற நடிப்பினால், இட்டம் செல் மருள் அது விடுமாறு - என் விருப்பம் அவர்பால் செல்லு கின்ற மயக்கமானது நீங்கும்படி, பண்டே சொல்நந்த பழமறை கொண்டே - பழமையான சொற்கள் அமைந்த வேத மொழியைக் கொண்டு, தர்க்கங்கள் அற - தருக்க வாதங்கட்கு இடமில்லாதபடித் தெளிவாக, உமை பங்காளர்க்கு அன்று பகர்-உமா சமேதராகிய சிவமூர்த்திக்கு அந்நாள் உபதேசித்த, பொருள் அருள்வாயே-பொருளை அடியேனுக்கு உபதேசித்து அருளுவீராக.

## பொழிப்புரை

வண்டுகள் களித்து விளையாடத் தென்றல் காற்று வீசும் குளத்தை நீங்காது அங்குள்ள தாமரை மலர்கள் வாடா வண்ணம் அவைகளிடம் போய்த் தேனைப் பருகும் வயலூர் ஆண்டவனே! வலிய கரிய மேகத்தின் வடிவுடையவரும், போரில் எண்ணமுள்ள கம்சன் இறந்து விழத்தாக்கி உதைத்து

வாதாடியவரும் ஆகிய கண்ணபிரானுடைய திருமருகரே! அசுரர்கள் சிதறுண்டு திண்டாடவும், சிலர் அடிமைகளாகவும் போர் புரிந்த ஆறுமுகக் கடவுளே! சிவந்த சேவலைச் செங்கரத்தில் ஏந்தியவரே! அழகிய மதிலின் அலங்காரம் கொண்டதாய், சந்திரனுடைய கலை தவழுகின்றதாய் விளங்கும் தென்சேரி மலையில் மகிழ்ந்து வாழும் பெருமிதமுடையவரே! சிறப்பித்துப் பேசிக் கொஞ்சுகின்ற மொழிகளைக் கொண்டும், தம்மைக் கண்டவர்களின் உள்ளத்தை வெட்டியழிப்பது போன்ற விழிகளைக் கொண்டும், பூங்கொத்துக்களை முடித்த கூந்தலைக் கொண்டும், வட மேருமலைக்கு ஒப்பான தனங்களைக் கொண்டும், சபா மண்டபத்தில் கொலு வீற்றிருப்பது போன்ற நிலை கொண்டும், பலருடனும் பழைய நட்புபோல் பழகி வசப்படுத்தும் பொது மாதர்களின் வாய்விட்டுக் கூவுகின்ற மயில் போன்ற நடிப்பால், அடியேனுடைய விருப்பம் அவர்பால் செல்லும் மயக்கமானது நீங்குமாறு, பழமையான சொற்கள் அமைந்த பழைய வேத மொழியைக் கொண்டு, தருக்க வாதங்களுக்கு இடமில்லாதபடி தெளிவாக, உமா நாதருக்கு உபதேசித்தருளிய பொருளை எனக்கு அருள்புரிவீராக.

## விரிவுரை

இத் திருப்புகழில் முதற்பகுதி விலைமாதர்களின் இயல்புகளைக் கூறுகின்றது.

**உமைபங்காளற் கன்று பகர் பொருள் அருள்வாயே:—**

உமையொரு கூறுடைய சிவபிரானுக்கு உபதேசித்த ஓம் என்னும் ஒரு மொழிப் பொருளை அடியேனுக்கு உபதேசித்தருள்வீர் என்று அருணகிரிநாதர் இந்த அடியில் விண்ணப்பம் புரிகின்றார்.

அதுபடியே ஆண்டவன் அவருக்கு உபதேசித் தருளினார்.

"எட்டிரண்டு மறியாத என்செவியில்
எட்டிரண்டு மிதுவா மிலிங்கமென
எட்டிரண்டும் வெளியா மொழிந்தகுரு முருகோனே"
—(கட்டிமுண்டக) திருப்புகழ்.

**புண்டரிகமலர் மங்காமற் சென்று மதுவை செய்:—**

வண்டுகள் சென்று தாமரை மலர்கள் வாடாமல் அத்துணை மெல்லச் சென்று, அவைகளில் உள்ள தேனைப் பருகுகின்றன. அதுபோல யாசகர்கள் கொடுக்கின்றவர் அகமும் புறமும் கோணா வண்ணம் சென்று யாசிக்க வேண்டும்.

கஞ்சன் விழவுதை:—

கஞ்சன் - கம்சன். இவன் கண்ணபிரானுக்கு நேர் தாய் மாமன் அன்று. புனர்வசு என்பானுடைய மகன் ஆகுகன். ஆகுகனுடைய மக்கள் இருவர். தேவகன், உக்ரசேனன். தேவகனுடைய மகள் தேவகி. உக்ரசேனனுடைய மகன் கம்சன். கம்சனுக்குப் பெரிய தகப்பன் மகள் தேவகி.

தேவகியின் உடன் பிறந்த சகோதரிகள் அறுவர்: திருத்தேவா, சாந்திதேவா, உபதேவா, ஸ்ரீ தேவா, தேவரக்ஷிதா, சகதேவா. தேவகியின் மக்கள்: கிரதிவந்தனன், சுஷேணன், பத்திரசேனன், ருசு, சமந்தன், பூத்திராக்கன், சங்கர்ஷன், கிருஷ்ணன், சுபத்திரை.

கம்சன் கண்ணனைப் பலமுறை கொல்ல முயன்றான். கிருஷ்ணர் அவனுடைய மதயானையாகிய குவலயா பீடம் என்ற யானையைக் கொன்று அதன் கொம்பை ஒடித்து, கம்சனை வதைத்து அருளினார்.

தென்சேரிகிரி:—

திருப்பூரிலிருந்து பொள்ளாச்சிக்குப் போகும் பஸ் மூலம் 22 கல் சென்று சுல்தான் பேட்டையில் இறங்கி உடுமலைப் பேட்டைக்குப் போகும் பஸ்ஸில் ஏறி நான்கு கல் சென்றால் இத் தலத்தையடையலாம். அழகிய மலை.

## கருத்துரை

தென்சேரிமலைமேவும் தேவா! மாதர் மயல் தீர, சிவபெருமானுக்கு உபதேசித்ததை, அடியேனுக்கும் உபதேசித்து அருள்வீர்.

## கொங்கணகிரி

## 173

ஐங்கரனை யொத்தமன மைம்புல மகற்றிவள
ரந்திபக லற்றநினை வருள்வாயே
அம்புவி தனக்குள்வளர் செந்தமிழ் வழுத்தியுனை
அன்பொடு துதிக்கமன மருள்வாயே
தங்கிய தவத்துணர்வு தந்தடிமை முத்திபெற
சந்திர வெளிக்குவழி யருள்வாயே

தண்டிகை கனப்பவுசு எண்டிசை மதிக்கவளர்
சம்ப்ரம விதத்துடனெ யருள்வாயே

மங்கையர் சுகத்தைவெகு இங்கித மெனுற்றமன
முன்றனை நினைத்தமைய அருள்வாயே
மண்டலிக ரப்பகலும் வந்தசுப ரக்ஷைபுரி
வந்தணைய புத்தியினை யருள்வாயே

கொங்கிலுயிர் பெற்றுவளர் தென்கரையி லப்பரருள்
கொண்டுஉட லுற்றபொரு ளருள்வாயே
குஞ்சர முகற்கிளைய கந்தனென வெற்றிபெறு
கொங்கண கிரிக்குள்வளர் பெருமாளே.

## பதவுரை

குஞ்சர முகற்கு-யானைமுகமுடைய விநாயகப் பெருமானுக்கு, இளைய- இளையவராகிய, கந்தன் என வெற்றிபெறு - கந்தப் பெருமான் என்று அசு ரர்களை யெல்லாம் வெற்றி பெறுகின்ற, கொங்கணகிரிக்கு உள் வளர் - கொங்கணகிரி என்னுந் திருமலையில் எழுந்தருளி வளர்கின்ற, பெருமாளே - பெருமையின் மிக்கவரே! ஐங்கரனை ஒத்த மனம் - ஐந்து திருக்கரங்களை யுடைய விநாயகப் பெருமானைப்போல் எல்லாக் காரியங்களுக்கும் முற்படு கின்ற மனமானது, ஐம்புலம் அகற்றி - மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற ஐந்து புலன்களின் வழியே செல்லுந் தொழிலை நீக்கி, வளர் - வினை களை வளர்க்கின்ற, அந்தி பகல் அற்ற நினைவு அருள்வாயே - மறப்பு நினைவு என்ற கேவல சகலங்கள் கழன்று நினைவற்ற நினைவைத் தந்தருள் வீர், அம்புவி தனக்கு உள் வளர் - அழகிய பூமண்டலத்தில் என்றும் நின்று வளர்கின்ற. செம் தமிழ் வழுத்தி - செம்மைப் பண்புடைய தமிழ் மொழியால் பரவுதல்புரிந்து, உனை அன்பொடு துதிக்க மனம் அருள்வாயே - தேவரீரை அன்போடு துதிப்பதற்கு நன் மனத்தை யருள்புரிவீர்; தங்கிய தவத்து உணர்வு தந்து - நிலை பெற்ற தவத்தினாலெய்தும் மெய்யுணர்வைக் கொடுத் தருளி, அடிமை முத்திபெற-அடிமையேன் சிவகதியைப் பெறுமாறு, சந்திர வெளிக்கு - சந்திரவொளி வீசுகின்ற மேலைவெளிக்கு, வழி அருள்வாயே - வழியை அருள்புரிவீர், தண்டிகை - பல்லக்கு, கனபவுசு - பெருமை தங்கிய உயர்வு முதலியவைகளுடன், எண்திசை மதிக்க வளர் - எட்டுத் திசை களிலுள்ளோரும் மதிக்குமாறு வளர்ச்சி யடைகின்ற, சம்ப்ரம விதத்து உடனே அருள்வாயே - மிகுந்த மகிழ்ச்சியுடன் வாழ்கின்ற பெருவாழ்வை அருள்புரிவீர், மங்கையர் சுகத்தை - பெண்களது இன்பத்தை, வெகு இங் கிதம் என உற்றமனம் - மிகுந்த இனிமையென்று எண்ணி அதில் சேர்ந் துள்ள மனமானது, உன்தனை நினைத்து அமைய அருள்வாயே - தேவரீரை சதா தியானித்து அமைதியடைய அருள்புரிவீர்; மண்டலிகர் - அரசர்கள்

ரா பகலும் - இரவு பகலும், வந்து சுபரக்ஷைபுரி - நன்னெறி சேர்ந்து உயிர்களை நன்மையாகக் காத்து அரசுபுரிந்து, வந்து அணைய புத்தியினை அருள்வாயே - சிவநெறியிலே வந்து சேர நல்லறிவைத் தந்தருள்வீர், கொங்கில் - கொங்குநாட்டில், தென்கரையில் - அவிநாசி என்ற திருத்தலத்தின் அணித்தாயுள்ள ஏரியில் தென்கரையில், அப்பர் அருள்கொண்டு - சிவ பெருமானுடைய திருவருளைக் கொண்டு, உயிர் பெற்று வளர் உடல் உற்ற பொருள் - இழந்த உயிரைப்பெற்று முதலைவாயினின்றும் உடம்பு வெளிப் பட்ட திருவருட் செல்வத்தை, அருள்வாயே - அருள்வீராக.

## பொழிப்புரை

யானைமுகமுடைய விநாயகப்பெருமானுக்கு இளையவராக விளங்கி, மூன்று உலகங்களையுந் தனது வலிமையால் வற்றச் செய்து வெற்றிகொள்ளும, கொங்கணகிரி எனுந் திருமலைமேல் எழுந்தருளி வளர்கின்ற பெருமிதமுடையவரே! விநாயகரைப் போல் எல்லாக் காரியங்களிலும் முற்படுகின்ற மனத்தை ஐம்புலன்களின் வழியே செல்லவொட்டாது தடுத்து நினைப்பு மறப்பு நீங்கிய சகச நிலையில் நிற்க அருள்புரிவீர்; பூமண்டலத்தில் வளர்கின்றதாகிய செந்தமிழ்ப் பாடலால் தேவரீரை அன்புடன் துதிசெய்து உய்யுமாறு நன்மனத்தையருள்புரிவீர்; நிலை பெற்ற தவத்தால் வருகின்ற மெய்யுணர்வைத் தந்து அடியேன் சிவகதி பெறுமாறு சந்திர மண்டலமாகிய குளிர்ந்த மேலைப் பெருவெளிக்கு வழியை அருள்புரிவீர்; பல்லக்கு மிக்க உயர்வு முதலியவைகளுடன், எட்டுத் திசைகளிலுள்ள யாவரும் மதிக்குமாறு வளர்ச்சியடைகின்ற மிகுந்த மகிழ்ச்சியை அருள்புரிவீர்; பெண்கள் சுகத்தை மிக்க இனிமையாகக் கருதி யதிற் சென்ற என் மனம் தேவரீரைத் தியானித்து அமைதியடைய அருள்புரிவீர்; அரசர்கள் இரவும் பகலும் உயிர்களை இனிது புரந்து சிவநெறி சார்ந்து உய்ய நல்லறிவைத் தந்தருள்வீர்; கொங்குநாட்டில் அவிநாசியில் ஏரிக்குத் தென்கரையில், சுந்தரமூர்த்தியினால், சிவபெருமான் திருவருள் துணை கொண்டு, முதலைவாய்ப்பட்ட மகன் உயிர் பெற்று உடம்புடன் வெளிப்பட்ட திருவருட் செல்வத்தை அருள்புரிவீராக.

## விரிவுரை

ஐங்கரனை யொத்தமனம்:—

விநாயகர் ஐந்து திருக்கரங்களால் ஐம்பெருந் தொழில்களை யாற்றுவதுபோல், மனம் ஐம்புலன்களால் உலக விவகாரத்தை நடத்துகின்றது என்பது ஒருவர் உரை.

அன்றியும், ஐங்கரன் என்பதற்கு யானை என்று பொருள் கொண்டு, யானை இடையறாது அசைந்து கொண்டே இருப்பது போல் மனம் அசைந்துகொண்டிருக்கின்றது என்பது வேறு ஒருவர் உரை.

அன்றியும், ஐங்கரன் என்பதற்கு யானை என்று பொருள் கொள்வது பொருந்தாது. வேறு எந்த இடத்திலும் அப்படி நூல் வழக்கில் காணப்படவில்லை. மனதை யானையாக சங்கரர் சிவானந்தலஹரியில் உருவகம் பண்ணியிருக்கின்றார். எனினும் ஐங்கரன் என்பதற்கு ஐந்து கரங்களை யுடையவன் என்பதே பொருள்.

இனி, ஐங்கரமுடைய கணேசமூர்த்தி எல்லாக் காரியங்கட்கும் முற்பட்டு நிற்பவர். அவரின்றி ஒரு கருமமும் நிகழாது. அதுபோல் மனமும் எல்லாக் கருமங்கட்கும் முற்பட்டு நிற்பது. மனமின்றி ஒரு கருமமும் நிகழாது. "தேவரனையர் கயவர்" என்று இழிவு சிறப்பாகக் கூறியதுபோல் இம் மூடமனமும் முன்னிற்கின்றது என்று மிக நயமும் அதிசயமும் உண்டாக சுவாமிகள் உரைக்குந்திறனை உன்னுந்தொறும் உவகை ஊற்றெடுக்கின்றது?

அந்திபகலற்ற நினைவு:—

அந்தி - மறப்பு, பகல் - நினைவு. இவற்றை வட நூலார் கேவல சகலம் என்பர். இரவு பகலற்று நிற்கு நிலைதான் சிறந்த நிலை. அதனை அருணகிரியார் பல இடங்களில் இனிது பேசுகின்றார். அந்நிலையையடைய ஒவ்வொருவரும் பெரிதும் முயற்சிக்க வேண்டும். அது நினைவும் மறதியும் இல்லாத நடு நிலை.

"அந்திபக லென்றிரண்டையு மொழித்து"
—(அந்தகன்வரும்) திருப்புகழ்.

"இராப்பகலற்ற இடத்தே இருக்கை எளிதல்லவே" (108)

"அல்லும் பகலு மில்லாச்
சூதானதற்ற வெளிக்கே ஒளித்துச் சும்மா இருக்கப்
போதாய் இனி மனமே தெரியாதொரு பூதர்க்குமே"
—அலங்காரம் (17)

"கருதா மறவா நெறிகாண எனக்
கிருதாள் வனசந் தரவென் றிசைவாய்" —அநுபூதி (21)

இரவுபக லற்றவிடத் தேகாந்த யோகம்
வரவுந் திருக்கருணை வையாய் பராபரமே.
கங்குல்பக லற்றதிருக் காட்சியர்கள் கண்டவழி
எங்கும் ஒருவழியே எந்தாய் பராபரமே. —தாயுமானுர்.

அம்புவி தனக்குள்வளர் செந்தமிழ்:—

**செந்தமிழ் செம்மைப் பண்புடையது. ஏனைய மொழிகளைப் போல் தேய்ந்தும் இறந்தும் உருமாறியும் சிதைந்தும் போகாமல் என்றும் நின்று வளர்கின்ற மொழி தமிழ்.**

"என்றுமுள தென்றமிழ் இயம்பி இசைகொண்டான்" —கம்பர்.

அன்பொடு துதிக்கமனம் அருள்வாயே:—

**செந்தமிழ்ப் பாடல்களால் செம்மேனி எம்மானை என்புருகிக் 'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி', துதிக்க வேண்டும்.**

என்பே விறகா இறைச்சி யறுத்திட்டு
பொன்போன் கனலிற் பொரிய வறுப்பினும்
அன்போடுருகி யகங்குழைவார்க் கன்றி
என்போன் மணியினை யெய்த வொண்ணுதே —திருமந்திரம் (272)

சந்திர வெளிக்கு வழி:—

**ஆறுதாரமுங் கடந்து, பிரமரந்திரமுந் தாண்டி சந்திர மண்டலமாகிய அமுத மண்டலத்துடன் கூடிய மேலைவெளி.**

"நாமமதி மீதி லூறுங்கலா இன்ப அமுதூறல்
நாடி யதன்மீது போய்நின்ற ஆனந்த
மேலைவெளியேறி நீயின்றி நானின்றி
நாடியினும் வேறு தானின்றி வாழ்கின்ற தொருநாளே"
—(மூளும்வினை) திருப்புகழ்.

தண்டிகை... ...அருள்வாயே:—

**பல்லக்கு பெருமை முதலியன விரும்பும் ஆன்மாக்களும், அவற்றை இறைவனிடங் கேட்டு உய்யும் பொருட்டு விருப்பு வெறுப்பற்ற சுவாமிகள் இங்ஙன் கூறியருளினுர்கள்.**

மண்டலிகர்.........அருள்வாயே:—

**மன்னர்கள் மன்னுயிரை இனிது அறநெறி வழுவாது புரந்துய்யுமாறு வேண்டுகின்றுர்.**

"வேந்தனும் ஓங்குக"
"மன்னன் கோன்முறை யரசுசெய்க"

நெல்லு முயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம் —புறநானூறு

ஆதலால் அரசன் எவ்வழியோ அவ்வழி குடிகள் நிற்பர். எனவே அரசன் நன்னெறி நிற்கில் குடிகளும் திருந்தி நல் வழிப்படுவர். மன்னன் உலகிற்குத்தான். அரசன் என்று எண்ணுது காவலன் என்று எண்ணுதல் வேண்டும்.

கொங்கிலுயிர் பெற்று.........அருள்வாயே

அவிநாசியில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் மகனை இழந்து வருந்துந் தாய்தந்தையரைக் கண்டு உள்ளம் இரங்கி, நீர் வற்றிய ஏரியினிடம்போய்,

"உரைப்பா ருரையுகந் துள்கவல்லார் தங்க ளுச்சியாய்
அரைக்கா டரவா ஆதியு மந்தமு மாயினாய்
புரைக்காடு சோலைப் புக்கொளியூ ரவிநாசியே
கரைக்கான் முதலையைப் பிள்ளைதரச் சொல்லு காலனையே"

என்று பாடியருளலும், வருணன் நீரையும் பிரமன் முதலையையும், முதலை வயிற்றில் பிள்ளை உடம்பையும், இயமன் பாலன் உடம்பில் உயிரையும் விட்டனர்கள். முதலை வாயினின் றும் பாலன் வெளிப்பட்டனன். அத்திருவருட் செல்வத்தைத் தருமாறு வேண்டுகின்றனர்.

கருத்துரை

இபமாமுகன்றனக்கு இளையவரே ! கொங்கணகிரியில் வாழும் குமாரக் கடவுளே ! மனம் அடங்கவும், தமிழால் துதிக் கவும், மேலைவெளிக்கு வழியும், இன்பநிலையும், தியான நிலை யும், அரசர் நன்னெறி நிற்கவும், திருவருட் செல்வமும் தந் தருள்வீர்.

தீர்த்தமலை

174

பாட்டி லுருகிலை கேட்டு முருகிலை
கூற்று வருவழி பார்த்து முருகிலை
பாட்டை யனுதின மேற்று மறிகிலை — தினமானம்
பாப்ப ணியனருள் வீட்டை விழைகிலை
நாக்கி னுனிகொடு ஏத்த அறிகிலை
பாழ்த்த பிறவியி லேற்ற மனதுநல் — வழிபோக

மாட்ட மெனுகிறை கூட்டை விடுகிலை
யேட்டின் விதிவழி யோட்ட மறிகிலை
பார்த்துமினியொரு வார்த்தைஅறைகுவ னிதுகேளாய்
வாக்கு முனதுள நோக்கு மருளுவ
னேத்த புகழடி யார்க்கு மெளியனை
வாழ்த்த இருவினை நீக்கு முருகனை மருவாயோ

ஆட்டி வடவரை வாட்டி யரவொடு
பூட்டி திரிபுர மூட்டி மறலியி
ஞட்ட மறசர ணீட்டி மதனுடல் திருநீறாய்
ஆக்கி மகமதை வீட்டி யொருவனை
யாட்டின் முகமதை நாட்டி மறைமக
ளார்க்கும் வடுவுற வாட்டு முமையவ னருள்பாலா

சீட்டை யெழுதிவை யாற்றி லெதிருற
ஓட்டி யழல்பசை காட்டி சமணரை
சீற்ற மொடுகழு வேற்றஅருளிய குருநாதா
தீர்த்த எனதக மேட்டை யுடனினை
ஏத்த அருளுட னேக்கி அருளுதி
தீர்த்த மலைநகர் காத்த சசிமகள் பெருமாளே.

## பதவுரை

ஆட்டி - அகில வுலகங்களையும் ஆட்டிவைப்பவராகிய, சிவபெருமான், வடவரை வாட்டி - மேருமலையை வருத்தி வில்லாக வளைத்து, அரவொடு பூட்டி - வாசுகி என்னும் பாம்பை நாணாகக் கட்டி, திரிபுரம் மூட்டி - திரிபுரத்தில் தீயை மூட்டி வேக வைத்து, மறலியின் நாட்டம் அற - கூற்றுவனுடைய கருத்து அழியும்படி, சரண் நீட்டி - திருவடியை நீட்டி உதைத்துத் தள்ளி, மதன் உடல் திருநீறு ஆய் ஆக்கி - மன்மதனுடைய உடம்பைச் சாம்பலாகும்படிச் செய்து, மகம் அதை வீட்டி - தக்கனுடைய யாகத்தை அழித்து, ஒருவனை - அந்த யாகத்தின் தலைவனான தக்கனுக்கு, ஆட்டின் முகம் அதை நாட்டி - ஆட்டின் முகத்தைப் பொருந்த வைத்து, மறைமகளார்க்கும் வடுவு உற வாட்டும் - சரஸ்வதி தேவிக்கு காயம் உண்டாகும்படி வாட்டிய, உமை அவன் அருள்பாலா - உமாநாதராகிய சிவபெருமான் அருளிய திருக் குமாரரே! சீட்டை எழுதி - வாழ்க அந்தணர் என்ற திருப்பாசுரத்தை எழுதிய சீட்டை, வையாற்றில் எதிர் உற ஓட்டி - வையை யாற்

றில் எதிரேறுமாறு ஓட்டியும், அழல் பசை காட்டி - நெருப்பில் இட்ட ஏடு பச்சையாக இருக்கும்படி காட்டியும், சமணரை - சமணர்களை, சீற்றமொடு கழு ஏற்ற அருளிய - சினத்துடன் கழுவில் ஏற்றுமாறு அருள்புரிந்த, குரு நாதா - குருநாதரே! தீர்த்த - தூயவரே! எனது அகம் ஏட்டை உடன் - என்னுடைய மனம் விருப்புடன், நினை ஏத்த-உம்மையே புகழும்படி, அருளுடன் நோக்கி அருளுதி-தேவரீர் திருவருளுடன் சிறியேனைப் பார்த்து அருள் புரிவீராக. தீர்த்தமலை நகர் காத்த-தீர்த்தமலை நகரைக் காத்தவரே. சசி மகள்-தேவசேனைக்கு, உகந்த, பெருமாளே-பெருமையிற் சிறந்தவரே! மனதே-ஏமனுமே! நீ மேற் கூறிய, பாட்டில் உருக இலை - முருகனுடைய பாட்டைக் கேட்டு உருகவில்லையே! கேட்டும் உருக இலை - அப்பாடலைக் கேட்டும் உருகவில்லையே; கூற்று வருவழி பார்த்தும் உருக இலை - இயமன் வரும வழியைக் கண்டும் நீ இறைவனை நினைத்து உருகவில்லையே; பாட்டை - துன்பத்தை, அநுதினம் ஏற்றும் அறிகிலை - தினந்தோறும் அநுபவித்தும் உண்மையை உணர்கின்றாயில்லை; தினமானம் - நாள் தோறும், பாப்பு அணியன் அருள் - பாம்பை அணியாக அணிந்த சிவபெருமான் நல்கும், வீட்டை விழைகிலை - முத்தி வீட்டை நீ விரும்புகின்றாயில்லை; நாக்கின் நுனி கொடு - நாவின் நுனியைக் கொண்டு, ஏத்த அறிகிலை - அப்பெருமானைப் புகழுதற்கு விரும்பினாயில்லை; பாழ்த்த பிறவியில் ஏற்ற மனது - பாழும் இந்தப் பிறப்புக் களிலேயே ஈடுபடுகின்ற மனமே! நல் வழிபோக மாட்டம் எனுகிறை - நல்ல வழியிலே போகமாட்டேன் என்கின்றாய், கூட்டை விடுகிலை - சீறைக்கூடமாகிய இந்த உடற் கூட்டை விடுகின்றாயில்லை; ஏட்டின் விதி வழி - ஏட்டில் எழுதியுள்ள தலைவிதியின்படி, ஓட்டம் அறிகிலை - வாழ்க்கையின் ஓட்டம் என்பதையும் அறிகின்றாயில்லை; பார்த்தும் - இப்படி யெல்லாம் நீ இருக்கின்றாய் என்பதைப் பார்த்தும், நான் சும்மா விருக்காமல், இனி ஒரு வார்த்தை அறைகுவன் - இனி ஒரு நல்லுரை கூறுகின்றேன். இது கேளாய் - இதை நீ கேட்பாயாக; புகழ் ஏத்த வாக்கும் - அவன் புகழை ஏத்துவதற்கு நல்ல வாக்கையும், உனது உளநோக்கும் அருளுவன் - உனது உள்ளத்தில் நல்ல கருத்தையும் அருள்புரிவான், (ஆதலால்) அடியார்க்கும் எளியனை - தன் அடியவர்க்கு எளியவனை, வாழ்த்த இருவினை நீக்கு முருகனை - வாழ்த்துவோருடைய இருவினைகளை விலக்கும் முருகப் பெருமானை, மருவாயோ - நீ சேரமாட்டாயோ?

## பொழிப்புரை

**எல்லா வுலகங்களையும் ஆட்டி வைப்பவராகிய சிவபெருமான் வடமேருகிரியை வருத்தி வில்லாக வளைத்து, வாசுகி என்னும் பாம்பை நாணாகப் பூட்டி, முப்புரத்திலே தீயை மூட்டி, இயமன் விழுந்து உருள திருவடியை நீட்டி, மன்மதனுடைய உடம்பு சாம்பராகுமாறு செய்து, தக்கனது யாகத்தை யழித்து, அத் தக்கனுக்கு ஆட்டுத் தலையைக் கொடுத்து, சரஸ்வதிக்கு அங்கப்**

பழுது உண்டாக்கிய உமாபதியாகிய சிவபெருமானுடைய திருக்குமாரரே! 'வாழ்க அந்தணர் என்ற திருப்பாசுரம் எழுதிய சீட்டை வையையாற்றில் எதிரேறுமாறு செய்தும், நெருப்பில் இட்ட ஏடு பச்சென்றிருக்குமாறு செய்தும், சமணர்களைச் சினந்து கழுவிலேறுமாறும் செய்தருளிய குருநாதரே! தூயவரே! என் மனம் விருப்புடன் உம்மை ஏத்தும்படி நீர் திருவருள் பார்வையால் பார்த்தருளுக. தீர்த்தமலை நகரில் காவல் புரிந்து தெய்வயானைக்கு உகந்திருக்கும் பெருமிதம் உடையவரே! ஏமனமே! மேலே கண்ட பாட்டில் நீ உருகுகின்றாயில்லை; அப்பாடலைக்கேட்டும் உருகுகின்றாயில்லை; இயமன் வரும் வழியைப் பார்த்தும் உருகுகின்றாயில்லை; துன்பத்தையனுபவித்தும் உண்மையை அறிகின்றாயில்லை; நாள்தோறும் பாம்பை அணிந்துள்ள சிவபெருமான் அருளும் முத்தியின்பத்தை விரும்புகின்றாயில்லை; நாவின் நுனியைக் கொண்டு இறைவனைத் துதிசெய்ய அறிகின்றாயில்லை; பாழும் பிறப்புக்களிலேயே ஈடுபடுகின்ற மனமே! நல்ல வழியில் போக மாட்டேன் என்கின்றாய்; இந்த உடம்பாகிய கூட்டை விடுகின்றாயில்லை; ஏட்டில் எழுதியுள்ள விதி வழி வாழ்க்கையின் ஓட்டம் என்பதை யறிகின்றாயில்லை; உனது போக்கை நான் பார்த்து, இனி ஒரு நல்மொழி கூறுகின்றேன். இதைக்கேள்; முருகனைப் புகழ்ந்து ஏத்த நல்லவாக்கும் உயர்ந்த உள்ளமும் அருளுவான்; அடியார்க்கு எளியனும் வாழ்த்தும் அடியவருடைய இருவினைகளை நீக்குபவனுமாகிய முருகனை நீ சேர்ந்து உய்ய மாட்டாயோ?

## விரிவுரை

இத்திருப்புகழ் மனதை முன்னிலையாக்கிப் பாடியது. "அந்தோ மனமே" என்ற திரிச்சிராப்பள்ளித் திருப்புகழும் இது போன்றது.

**பாட்டிலுருகிலை:—**

முருகப் பெருமானுடைய அருட்புகழ் நிறைந்த பாடல்களைப் பாடி மனம் உருக வேண்டும்.

**கேட்டுமுருகிலை:—**

பாடி உருகும் ஆற்றல் இல்லையாயினும், பிறர் பாடக்கேட்டாவது உள்ளம் உருக வேண்டும். இன்னிசைப்பாடல் கல்லையும் இரும்பையும் உருக்கும்.

கூற்று வருவழி பார்த்து முருகிலே:—

உடல்வேறு உயிர்வேருகக் கூறுபடுத்துகின்றவன் கூற்றுவன்; இந்த இயமன் வருகின்ற வழியைப் பார்த்தாவது மனம் உருக வேண்டாமோ?

பாட்டை யநுதினம் ஏற்றுமறிகிலே:—

பாடு—துன்பம். தினந்தினம் ஆன்மா நுகர்கின்ற துன்பங்களைப் பார்த்தாவது மனம் உருக வேண்டும்.

பாம்பணிய னருள் வீட்டை விழைகிலே:—

பாம்பு என்ற சொல் பாப்பு என வந்தது. தாருக வனத்து முனிவர்கள் அபிசார வேள்வி செய்து சிவபெருமானைக் கொல்லும் பொருட்டுக் கொடிய பாம்புகளையேவினர்கள். அவைகளை அரனர் ஆபரணமாக அணிந்து கொண்டருளினர்.

வீம்புடைய வன்முனிவர் வேள்வி செய்து விட்ட கொடும்
பாம்பனைத்துந் தோள்மேல் பரித்தனையே —திருஅருட்பா.

கொல்ல வந்த பாம்புக்கும் அருள்புரிந்த எம்பிரான், வழிபட்டார்க்கு எத்துணை அருள்புரிவார். இத்தகு கருணைக் கடலாகிய சிவபெருமான் அருள்புரிகின்ற முத்தி வீட்டை மனமே! நீ விரும்பவில்லையே?

நாக்கினுனிகொடு ஏத்த அறிகிலே :—

இறைவன் மனிதனுக்கு மெல்லிய நாவினைக் கொடுத்தார். நாக்கை நரம்பில்லாமலும் படைத்தருளினர். நரம்புள்ள பகுதிகள் சுளுக்கும். கை கால் கழுத்து இவைகள் சுளுக்குகின்றன. நாவில் நரம்பு இருந்தால் அடிக்கடி சுளுக்கிக் கொள்ளும். பேச்சுத்தடைபடும். அற்புதமான கருவி நாக்கு. அந்த நாவால் இறைவனைப் பாடிப்பரவுதல் வேண்டும்.

"நாக்கைக் கொண்டரன் நாமம் நவில்கிலார்" —அப்பர்.

"நாமேல் நடவீர் நடவீர் இனியே" —கந்தரநுபூதி (17)

பாழ்த்த பிறவியிலேற்ற மனது :—

மனது—மனமே! பாழும் பிறவிச் சுழலிலேயே நீ உழல்கின்றனையே? பிறவிக்கு ஏதுவான ஆசையை விடவில்லையே?

நல்வழி போக மாட்ட மெனுகிறை :—

நல்ல வழியிலே மனம் போக மாட்டேன் என்கிறது. நீர் பள்ளத்தை நாடிச்செல்வது போல் மனம் பாவச் செயல்களையே நாடுகின்றது.

கூட்டை விடுகிலை :—

கூடு—இந்த உடம்பு.

"கூடு கொண்டுழல்வேனை" —(மூலமங்) திருப்புகழ்.

இந்த உடம்பு ஒரு சிறைச்சாலை. அறம் பாவம் என்னும் அருங்கயிற்ருல் கட்டப்பட்டு ஆன்மா இதில் உறைகின்றது.

"விதிகாணுமுடம்பை விடா வினையேன்" —கந்தரநுபூதி. (35)

ஏட்டின் விதிவழி ஓட்டமறிகிலை :—

பிரம்மா எழுதி வைத்த ஏட்டின் விதிப்படிதான் ஓட்டம் நடைபெறும். எல்லாம் அவ்விதியின்படி நடைபெறும். அதை யறியாத மனம் அவலப்படுகின்றது.

பார்த்துமினியொரு வார்த்தை அறைகுவனிது கேளாய் :—

மனமே! நீ இவ்வாறு எந்த வகையிலும் நலம் நாடாது அவலமாவதைக் கண்டு, நாம் இனி சும்மா விருப்பது நன்றன்று என்று கருதி ஒரு சொல் கூறுகிறேன். கேட்டு உய்வாயாக.

வாக்கு முனதுள நோக்கு மருளுவன் ஏத்த புகழ் :—

புகழ் ஏத்த வாக்கும் உனதுள நோக்கும் அருளுவன் என்று மாற்றிப் பொருள் கொள்க. அப் பெருமானுடைய புகழை ஏத்தும் இனிய நல்வாக்கு சித்தியை அருளுவான்.

உள்ளத்தை நோக்கும் அக நோக்கையும் அருளுவான். ஆதலால் மனமே! அடியார்க்கு எளியனுன முருகனை மருவு. அவன் இருவினை நீக்கி எளிதில் அருள்புரிவான்.

ஆட்டி :—

இறைவன் அகில உலகங்களையும் சாட்டையில்லா பம்பரம் போல் ஆட்டிவைக்கின்ருன்.

"சாட்டையில் பம்பர சாலம் போலிறை
ஆட்டுவான் உலகெலாம் அறிந்து நெஞ்சமே" —தாயுமானர்.

பல பந்துகளை ஆட்டுகின்றவன் ஆடுவதுபோல் தானும் உலகெலாம் ஆட்டிவைக்கும் இறைவன் தானும் ஆடுகின்ருன்.

வடவரை வாட்டி :—

திரிபுரம் எரிக்க முயன்றபோது, தேவர்கள் வடமேரு மலையை வில்லாக்கி இறைவனிடம் தந்தார்கள்.

அரவொடு பூட்டி :—

அந்த மேருவில்லில் வாசுகி என்ற நாகராசனை நாணகச் சேர்த்தார்கள்.

"மாநாக நாண்வலுப் புறத்துவக்கியொர்
மாமேருபூதரத் தநுப்பிடித் தொரு
மாலாய வாளியைத் தொடுத்து"—(ஆனதஞான) திருப்புகழ்

திரிபுரமூட்டி :—

வில்லுந்தேரும் சாரதியும் அமைத்துத் தந்தபின் தேவர்கள் தமது உதவியாலேயே சிவபெருமான் திரிபுரத்தை அழிக்கப் போகின்றார் என்று எண்ணினார்கள்.

அந்த எண்ணத்தை அறிந்த அரனார், "நமக்கு வில்லுந் தேரும் வேண்டுமோ?" என்று திருவுளம் பற்றிச் சிறிது புன்னகை பூத்தார். அச்சிரிப்பிலிருந்து எழுந்த ஒரு நெருப்புப் பொரி முப்புரங்களைச் சுட்டுச் சாம்பலாக்கியது.

மறலியினாட்ட மற சரணீட்டி :—

மார்க்கண்டேயருடைய வாழ்நாள் முடிவுபெற்றது. அன்று அவருடைய உயிரைப் பற்றவந்த இயமனை இறைவர் தமது இடப்பாதக் கொழுந்தால் உதைத்து அருளினார்.

நீற்றினை நிறையப்பூசி நித்தலும் நியமஞ் செய்தே
ஆற்றுநீர் பூரித் தாட்டும் அந்தணர் உயிரைக் காய்வான்
சாற்றுநாள் அற்றதென்று தருமராஜர்க்காய் வந்த
கூற்றினைக் குமைப்பர் போலும் குறுக்கை வீரட்டனாரே.

—அப்பர்.

மதனுடல் திருநீறாயாக்கி :—

திரிபுரத்தைச் சிரித்து எரித்தார். மன்மதனைப் பார்த்து எரித்தார்.

மகமதை வீட்டி :—

தக்கன் சிவநிந்தையுடன் செய்த வேள்வியைச் சிவ பெருமான் வீரபத்திரரை யேவி அழித்தருளினார்.

ஒருவனை ஆட்டின் முகமதை நாட்டி :—

சிவபெருமானா? அவர் கடவுளா? என்று தலையையாட்டிய தக்கனுக்கு எப்போதும் தலையையாட்டிக் கொண்டேயிருக்கின்ற ஆட்டு முகத்தைக் கொடுத்தார்.

ஆட்டின் தலையை விதிக்குத் தலையாகக்
கூட்டிய வாபாடி யுந்தீபற. —திருவாசகம்

மறைமகளார்க்கும் வடுவுற :—

சரஸ்வதியின் மூக்கைக் கொய்து வடுப்படுத்தினர்.

ஈட்டை யெழுதி வையாற்றி லெதிருற :—

திருஞானசம்பந்தர் சமணர்களுடன் மதுரையில் புனல் வாதஞ் செய்தபோது "வாழ்க அந்தணர்" என்ற திருப்பாசுரத்தை எழுதிய ஏட்டை வையையாற்றில் விட்டருளினர். அவர் விடுத்த ஏடு நீரில் எதிர் ஏறிச் சென்றது. சமணர்கள் ஏடு கடலை நோக்கி ஓடியது.

அழல் பசைகாட்டி :—

அனல் வாதஞ் செய்தபோது, "போகமார்த்த" என்ற திருநள்ளாற்றுத் திருப்பதிக ஏட்டை நெருப்பில் இட்டபோது அந்த ஏடு வேகாமல் பச்சென்றிருந்தது.

தீர்த்த :—

தீர்த்தன்-பரிசுத்தமானவன்.

"ஆர்த்த பிறவித் துயர்கெடநாம் ஆர்த்தாடும்
தீர்த்தன்" —திருவெம்பாவை

எனதக மேட்டையுடனினை ஏத்த அருளுட னேக்கியருளுதி :—

அகம் ஏட்டை: ஏட்டை—விருப்பம்; அகம்-உள்ளம்; உள்ளத்தில் விருப்பமுடன் இறைவனுடைய புகழை ஏத்த வேண்டும். அப்பெருமான் அருட்கண்ணால் நோக்கியருளுவான்.

தீர்த்தமலை :—

மொரப்பூர் புகைவண்டி நிலையத்துக்கு 8 கல் தொலைவில் உள்ள ஹரூருக்கு வடகிழக்கே 9½ கல் தொலைவில் உள்ள தலம். மலையடிவாரத்திலும் மலைமீதும் ஆலயங்கள் இருக்கின்றன. சைவ எல்லப்பநாவலர் பாடிய தலபுராணம் உண்டு.

கருத்துரை

ஏ மனமே ! நீ முருகனை மருவுவாய்.

கனகமலை

175

அரிவையர்கள் தொடரு மின்பத்
துலகுநெறி மிகம ருண்டிட்
டசடனென மனது நொந்திட் டயராமல்

அநுதினமு முவகை மிஞ்சிச்
சுகநெறியை விழைவு கொண்டிட்
டவநெறியின் விழைவு மொன்றைத் தவிர்வேனோ

பரிதிமதி நிறைய நின்றஃ
தெனவொளிரு முனது துங்கப்
படிவமுக மவைகள் கண்டுற் றகமேவும்

படர்கள்முழு வதும கன்றுட்
பரிவினொடு துதிபு கன்றெற்
பதயுகள மிசைவ ணங்கற் கருள்வாயே

செருவிலகு மசுரர் மங்கக்
குலகிரிகள் நடுந டுங்கச்
சிலுசிலென வளைகு லுங்கத் திடமான

செயமுதவு மலர்பொ ருங்கைத்
தலமிலகு மயில்கொ ளுஞ்சத்
தியைவடுதல் புரியு முன்பிற் குழகோனே

கருணைபொழி கிருபை முந்தப்
பரிவினொடு கவுரி கொஞ்சக்
கலகலென வருக டம்பத் திருமார்பா

கரிமுகவர் தனைய னென்றுற்
றிடுமிளைய குமர பண்பிற்
கனககிரி யிலகு கந்தப் பெருமாளே.

## பதவுரை

செரு விலகு அசுரர் மங் போரில் பின்னிட்ட அசுரர்கள் மாளவும், குலகிரிகள் நடு நடுங்க - சிறந்த மலைகள் யாவும் நடு நடுங்கவும் சிலுசிலு என அலை குலுங்க - சிலுசிலு என கடல் கலங்கவும், திடம் ஆன - உறுதியுள்ளதும், செயம் உதவும் - வெற்றியைத் தருவதும், மலர் பொரும் கை தலம் இலகும் - மலர்போன்ற திருக்கரத்தில் விளங்குவதும், அயில் கொளும் - கூர்மை கொண்டதுமான, சத்தியை விடுதல் புரியும் - வேலாயுதத்தை விடுத்தருளிய, முன்பில் குழகோனே - பெருமை வாய்ந்த இளையவரே! கருணை பொழி கிருபை முந்த - கருணை பொழியும் அருளே முந்துவதால், பரிவினொடு அன்புடன், கவுரி கொஞ்ச - பார்வதியம்மை

கொஞ்சி நிற்க, கலகல என வரு - கலகல என்று தண்டையொலிக்க வருகின்ற, கடம்ப திருமார்பா - கடப்ப மலரையணிந்த திருமார்பை யுடையவரே! கரிமுகவர் தமையன் என்று உற்றிடும் - யானைமுகக் கடவுளை அண்ணனாக வாய்க்கப் பெற்று விளங்கும், இளைய குமர-இளைய குமாரக் கடவுளே! பண்பின் கனககிரி இலகு-அழகுடன் கனககிரியில் விளங்கிவாழும், கந்த-கந்தப் பெருமானே! பெருமாளே-பெருமையிற் சிறந்தவரே! அரிவையர்கள் தொடரும் இன்பத்து-மாதர்களைத் தொடர்ந்து செல்லும் சிற்றின்பத்து, உலகு நெறி மிக மருண்டிட்டு - உலக நெறியில் மிகவும் மருட்சி கொண்டு, அசடன் என மனது நொந்திட்டு-அசடன் எனப் பிறர்கூற மனம் வேதனைப் பட்டு, அயராமல் - சோர்வு அடையாமல், அனுதினமும் உவகை மிஞ்சி - நாள்தோறும் களிப்பு மிகுந்து, சுக நெறியை விழைவு கொண்டிட்டு - சுக வழியிலேயே விருப்பங்கொண்டு நடந்து, அவ நெறியின் விழையும் ஒன்றை-வீண் மார்க்கத்தில் செல்ல விரும்பும் ஒரு புத்தியை, தவிர்வேனோ - நீக்க மாட்டேனோ? பரிதிமதி நிறைய நின்ற - சூரியன் சந்திரன் இரண்டும் பூரண ஒளியுடன் நின்ற, அஃது என - அத்தன்மையை ஒப்ப, ஒளிரும் உனது துங்க - விளங்குகின்ற உமது பரிசுத்தமான, படிவ முகம் அவைகள் கண்டு உற்று - வடிவுள்ள திருமுகங்களைத் தரிசித்து அக்காட்சியில் பொருந்தி, அகம் மேவும் படர்கள் முழுவதும் அகன்று - என் மனதில் உள்ள துயர்கள் முழுமையும் நீங்கப் பெற்று, உன் பரிவினொடு துதி புகன்று - உள்ளன்புடன் உம்மைத் துதி செய்து, எல் பதயுகள மிசை வணங்கறகு அருள்வாயே - ஒளி பொருந்திய இரு திருவடிகளின் மீது வணங்குதற்கு அருள்புரிவீராக.

## பொழிப்புரை

போரில் விலகிப் பின்வாங்கிய அசுரர்கள் மாயவும், சிறந்த மலைகள் நடுநடுங்கவும், சிலுசிலு என்று அலைகடல் கலங்கவும், உறுதியுள்ளதும், வெற்றியைத் தருவதும், மலர் போன்ற திருக்கரத்தில் விளங்குவதும், கூர்மையுடையதுமாகிய சத்தி வேலை விடுத்தருளிய பெருமை வாய்ந்த இளம்பூரணரே! கருணை பொழியும் அருளே முந்துவதால் அன்புடன் பார்வதி தேவி கொஞ்சி நிற்க, கலகல என்று தண்டை ஒலிக்க வருகின்ற கடம்பு அணிகின்ற திருமார்பினரே! யானைமுகக் கடவுளைத் தமையனாராகப் பெற்ற இளைய குமாரரே! அழகுடன் கனககிரியில் விளங்க வீற்றிருக்கும் கந்தவேளே! பெருமிதமுடையவரே! மாதர்களைத் தொடர்ந்து செல்லும் சிற்றின்பத்து, உலக நெறியில் மிகவும் மருட்சி கொண்டு, அசடன் எனப் பிறர் கூற என்மனம் வேதனைப்பட்டுச் சோர்வு அடையாமல், தினந்தோறும் களிப்பு மிகுந்து, சுகவழியிலேயே விருப்பங்கொண்டு நடந்து, பாவவழியிற் செல்ல விரும்பும் ஒரு புத்

தியை நீக்க மாட்டேனே? சூரிய சந்திர ஒளிகள் நிறைந்தது போல் விளங்கும், தூய உமது திருமுகங்களைத் தரிசித்து, அக் காட்சியில் ஒன்றுபட்டு, என் மனதில் உள்ள துயர் அனைத்தும் நீங்கப் பெற்ற உள்ளன்புடன் தேவரீரைத் துதித்து, ஒளி பொருந்திய உமது இரு திருவடிகளின் மீது வணங்குமாறு அருள்புரிவீராக.

## விரிவுரை

அரிவையர்கள் தொடருமின்பத்துலகு:—

இந்த உலகம் பெண்களால் வரும் சிறிய இன்பத்தையே நாடியுழல்கின்றது.

சுகநெறியை விழைவு கொண்டிட்டு:—

அற்ப சுகத்தைப் பெறுகின்ற வழியையே விரும்பி அலை கின்றார்கள் மாந்தர்கள்.

அவநெறியின் விழையும் ஒன்றை:—

பயன் இல்லாத வழியை விழைவது பேதைமை.

பரிதிமதி நிறைய நின்ற.·.தெனை:—

சூரியனும் சந்திரனும் ஒன்றாக ஒளி செய்வதுபோல் முருகப் பெருமானுடைய திருமுகம் விளங்குகின்றது. திருமுடி சூரியனுக்கும், திருமுகம் சந்திரனுக்கும் உவமையாயின.

நின்றஃ—இங்கு ஆயுத எழுத்து (ஃ) வல்லோசை சந்தத் தில் நிற்கின்றது.

அகமேவு படர்கள் முழுவது மகன்று:—

முருகவேளின் திருமுகங்களைத் தரிசித்த மாத்திரத்தில் மனத்துயர் யாவும் பறந்தோடிவிடும்.

கனக கிரி:—

போளூருக்கு 9 கல் தொலைவில் உள்ள தேவிகாபுரத்தின் அருகில் உள்ள மலை கனககிரி.

## கருத்துரை

கனககிரிக் கந்தவேளே! உமது பதமலரைப் பணிய அருள்புரிவீர்.

## புகழிமலை

## 176

மருவுமலர் வாச முறுகுழலி னாலும்
வரிவிழியி னாலு மதியாலும்
மலையினிக ரான இளமுலைக ளாலு
மயல்கள்தரு மாதர் வகையாலும்

கருதுபொரு ளாலு மனைவிமக வான
கடலலையில் மூழ்கி அலைவேனோ
கமலபத வாழ்வு தரமயிலின் மீது
கருணையுட னேமுன் வரவேணும்

அருமறைக ளோது பிரமன்முதல் மாலும்
அமரர்முனி ராஜர் தொழுவோனே
அகிலதல மோது நதிமருவு சோலை
அழகுபெறு போக வளநாடா

பொருதவரு சூரர் கிரியுருவ வாரி
புனல்சுவற வேலை யெறிவோனே
புகலரிய தான தமிழ்முனிவ ரோது
புகழிமலை மேவு பெருமாளே.

### பதவுரை

அருமறைகள் ஓதும் - அரிய வேதங்களை ஓதுகின்ற, பிரமன் முதல் மாலும் - பிரமன் முதலாகத் திருமாலும், அமரர் - தேவர்களும், முனிராஜர்- முனிவேந்தர்களும், தொழுவோனே - தொழப்படுந்தலைவரே! அகில தலம் ஓதும் - எல்லாத் தலங்களில் உள்ளாரும் புகழ்கின்ற, நதி மருவு சோலை - நதி சேர்ந்து சோலைகளால், அழகு பெறு போக - அழகு பெற்ற செல்வம் மிகுந்த, வள நாடா - வளங்கள் கூடிய நாட்டினரே! பொருத வருசூரர் - போர் செய்ய வந்த சூரர்களும், கிரி உருவூ - கிரவுஞ்சமலையும் உருவவும், வாரி புனல் சுவற - கடலில் நீர் வற்றவும், வேலை எறிவோனே - வேலை விட்டருளியவரே! புகல அரியது ஆன - சொல்லுதற்கு அரிதான, தமிழ் முனிவர் ஓது - அகத்திய முனிவர் புகழ்கின்ற; புகழிமலைமேவு - புகழி மலையில் வீற்றிருக்கும், பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! மருவு மலர் வாசம் உறு - பொருந்திய மலரின் நறுமணம் வாய்ந்த, குழலினாலும் - கூந்தலாலும், வரி

விழியினுலும் - வரிகள் படர்ந்த கண்களினுலும், மதியாலும் - சந்திரனைப் போன்ற முகத்தாலும், மலையின் நிகர் ஆன - மலைக்கு ஒப்பான, இள முலை களாலும் - இளந் தனங்களாலும், மயல்கள் தரும் - மயக்கங்களைத் தரு கின்ற, மாதர் வகையாலும் - பெண்களின் இனத்தாலும், கருது பொருளா லும் - நமக்கே உரியது என்று எண்ணப்படுகின்ற பொருளாலும், மனைவி மகவு ஆன - மனைவி மக்கள் என்ற, கடல் அலையில் மூழ்கி - கடல் அலை யில் அடியேன் மூழ்கி, அலைவேனே - அலையலாமோ? கமல பத வாழ்வுதர - தாமரை மலர் போன்ற உமது திருவடியையடையும் வாழ்வைத் தந்தருள, மயிலின் மீது-மயில் வாகனத்தின் மீது, கருணை உடனே முன் வரவேணும்- கருணையோடு அடியேன் முன் வந்தருள வேண்டும்.

## பொழிப்புரை

அரிய வேதங்களை ஓதுகின்ற பிரமதேவன், திருமால், தேவர்கள், முனிவரர்கள் ஆகிய இவர்கள் வணங்கும் பெரு மானே! எல்லாத் தலங்களும் புகழ்கின்ற நதி சூழ்ந்து சோலை களால் அழகு பெற்ற செல்வங் கொழிக்கும் வளநாட்டின் தலைவரே! போர் செய்ய வந்த சூரர்களும், கிரவுஞ்சமலையும், ஊடுருவவும், கடலில் நீர் வற்றவும் வேலைச் செலுத்தியவரே! சொல்லுதற்கு அரிதான தமிழ் முனிவராகிய அகத்தியர் புகழ் கின்ற புகழிமலையில் எழுந்தருளியுள்ள பெருமிதமுடையவரே! பொருந்திய மலரின் நறுமணம் வாய்ந்த கூந்தலாலும், வரிகள் கொண்ட கண்களினுலும், சந்திரனையொத்த முகத்தாலும், மலைக்கு ஒப்பான இளந்தனங்களாலும், மயக்கங்களைத் தருகின்ற பெண்களின் இனத்தாலும், தனக்கேயுரியது என்று எண்ணுகின்ற பொருள், மனைவி, மக்கள் என்கின்ற கடல் அலையில் முழுகி, அடியேன் அலையலாமோ? தாமரையன்ன உமது திருவடியைச் சேரும் வாழ்வை அடியேனுக்குத் தந்த ருளும் பொருட்டு, மயிலின் மீது கருணையுடன், அடியேன்முன் வந்தருள வேண்டும்.

## விரிவுரை

மாதர் வகையாலும்:—

மனிதர்களை மயக்கி அறிவையழிக்கும் பொருள்கள் பல. அவற்றுள் ஒன்று பொது மாதர் உறவு.

கருது பொருளாலும்:—

நமக்கே உரியது என்று அழுத்தமாக எண்ணிக் கொண்டி ருக்கின்ற பொருளாசை அபினிபோல் மயக்கத்தைத்தரும்.

மனைவி மகவான கடலலையில் மூழ்கி:—

மனைவி மக்கள் என்ற ஆசைக்கடலில் முழுகி மாந்தர் அலைகின்றார்கள்.

புகழிமலை:—

புகழிமலை கருருக்கு அடுத்த புகலூர் புகைவண்டி நிலையத்துக்கு 2 கல் தொலைவில் உள்ள திருத்தலம்.

## கருத்துரை

புகழிமலை முருகா! உன் பாதமலர் தந்து வாழ்வுதர மயிலின் மீது வந்தருள்வீர்.

## பூம்பறை

## 177

மாந்தளிர்கள் போல வேய்ந்தவுடல் மாதர்
வாந்தவிய மாக முறைபேசி
வாஞ்சைபெரு மோக சாந்திதர நாடி
வாழ்ந்தமனை தேடி உறவாடி

ஏந்துமுலை மீது சாந்துபல பூசி
ஏங்குமிடை வாட விளையாடி
ஈங்கிசைகள் மேவ லாஞ்சனையி லாமல்
ஏய்ந்தவிலை மாதர் உறவாமோ

பாந்தண்முடி மீது தாந்ததிமி தோதி
தாஞ்செகண சேசெ எனவோசை
பாங்குபெறு தாள மேங்கநட மாடு
பாண்டவர்ச காயன் மருகோனே

பூந்தளிர்கள் வீறு வேங்கைகள்ப லாசு
பூங்கதலி கோடி திகழ்சோலை
பூந்தடமு லாவு கோம்பைகள்கு லாவு
பூம்பறையில் மேவு பெருமாளே.

## பதவுரை

பாந்தள் முடிமீது - பாம்பின் முடியின் மீது, தாந்ததிமி தோதி தாஞ் செகண சேசெ என ஓசை - தாந்த திமி தோதி தாஞ் செகண சேசெ என்ற

ஓசையை, பாங்கு பெறு தாளம் ஏங்க - அழகாகத் தருகின்ற தாளம் ஒலிக்க, நடம் ஆடும் - நடனஞ் செய்கின்றவரும், பாண்டவர் சகாயன் - பாண்டவர்களின் சகாயனுமாகிய கண்ணபிரானுடைய, மருகோனே - மருகரே! பூம் தளிர்கள் வீறு - அழகிய தளிர்கள் விளங்குகின்ற, வேங்கைகள் - வேங்கை மரங்களும், பலாசு - புனமுருக்கு மரங்களும், பூம் கதலி கோடி திகழ் சோலை - அழகிய வாழை மரங்களும் கோடிக்கணக்காக விளங்கும் சோலையும், பூம் தடம் - அழகிய குளங்களும், உலாவு கோம்பைகள் குலாவும் - உலாவித் திரிகின்ற கோம்பை நாய்களும் திகழும், பூம் பறையின் மேவு - பூம்பறையில் வீற்றிருக்கும், பெருமாளே-பெருமையிற் சிறந்தவரே! மாம் தளிர்கள் போல - மாந்தளிர் போல அழகிய நிறமுள்ள, வேய்ந்த உடல் மாதர் - தோலால் மூடப்பட்ட பொது மாதர்கள், வாந்தவியமாக முறை பேசி - பாந்தவ்யமாக பந்துக்கள் முறையில் அத்தான்! மாமா! என்று அழைத்து, வாஞ்சை பெருமோக சாந்திதர நாடி - விருப்பத்துடன் பெரிய மோக சாந்தியை தரவேண்டி, வாழ்ந்த மனை தேடி - அப் பொது மாதர்கள் வாழ்ந்த வீடுகளைத் தேடிச் சென்று, உறவு ஆடி - அவர்களுடன் உறவு செய்து, ஏந்துமுலை மீது - உயர்ந்திருக்குந் தனங்களின் மீது, சாந்து பல பூசி - சந்தனம் முதலிய நறுமணங்கள் பல பூசி. ஏங்கும் இடை வாட - இளைத்துள்ள இடை வருந்துமாறு, விளையாடி - அவர்களுடன் விளையாடி, ஈங்கிசைகள் மேவ - இம்சைகள் உண்டாக, லாஞ்சனை இலாமல் - லஜ்ஜையில்லாமல், ஏய்ந்த விலை மாதர் - பொருந்திய பொதுமாதர்களின், உறவு ஆமோ - உறவு ஆகுமோ (ஆகாது).

## பொழிப்புரை

பாம்பின் முடியின் மீது தாந்த திமி தோதி தாஞ்செகண சேசெ என்னும் ஒலியை அழகாகத்தருகின்ற தாளம் ஒலிக்க நடனஞ் செய்தவரும், பாண்டவர் துணைவருமாகிய கண்ண பிரானுடைய திருமருகரே! அழகிய தளிர்கள் விளங்கும் வேங்கை மரங்களும், புனமுருக்கு மரங்களும், அழகிய வாழை மரங்களும் கோடிக் கணக்காகத்திகழும் சோலைகளும், அழகிய குளங்களும், உலவித்திரியும் கோம்பை நாய்களும் திகழும் பூம்பறையில் எழுந்தருளியுள்ள, பெருமிதம் உடையவரே! மாந்தளிர்கள் போன்ற அழகிய தோலால் மூடப்பட்ட உடம்புடைய பொதுமாதர்கள், பந்துக்கள் முறையில் அத்தான்! மாமா! என்று அழைத்து, விருப்பம்பெருக மோக சாந்தியைத் தர அவர்களை நாடி, அவர்களின் வீடுகளைத் தேடிச் சென்று உறவாடி, உயர்ந்த தனங்களின் மீது சந்தனம் முதலிய நறு மணங்கள் பூசி, இளைத்த இடை வருந்த. அவர்களுடன் விளையாடி, இம்சையும் வெட்கமும் இல்லாமல் பொருந்திய அவ்விலை மாதர்களின் உறவு ஆகுமோ? [ஆகாது]

## விரிவுரை

மாந்தளிர்கள் போல வேய்ந்தவுடல் மாதர்:—

பெண்களின் உடல் மாந்தளிர் போல் பளபளப்பாகவும், சிவப்பாகவும், அழகாகவும், மென்மையாகவும் இருக்கும்.

வாந்தவியமாக முறைபேசி:—

பாந்தவ்யம் என்ற சொல் வாந்தவியம் ' என வந்தது. பாந்தவ்யம் - உறவு முறை பந்துக்கள் போல் "அத்தான்! வாருங்கள்!" "மாமா! வாருங்கள்" என்றுகூறி அவர்கள் அழைத்து உபசரிப்பார்கள்.

"அத்தானெனக் காசைக் கூட்டித் தயங்க
வைத்தா யெனப்பேசி மூக்கைச் சொறிந்து
அக்காலொருக்கால மேக்கற்றிருந்தி ரிலையாசை"
—(அச்சா) திருப்புகழ்.

ஈங்கிசை மேவ:—

ஈங்கிசை—இம்சை.

"ஈங்கிசை யுற்றவ லக்குண மட்டைகள்"
—(கூந்தல்) திருப்புகழ்.

லாஞ்சனையிலாமல்:—

லாஞ்சனை-லஜ்ஜை-வெட்கம். செய்யத்தகாத காரியத்தில் ஈடுபடுவதில் மனிதனுக்கு நாணம் இருக்கவேண்டும்.

நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில். —திருக்குறள்.

பாந்தண் முடிமீது.........நடமாடு:—

கண்ணபிரான் காளிங்கன் என்ற அரவத்தையடக்கி, அதனால் மக்களுககுக் கொடுமையுண்டாகாதவண்ணம் ஒடுக்கி அதன் மகுடத்தின் மீது பாதமலர் வைத்து நடனம் ஆடியருளினார்.

மனம் என்ற பாம்பு ஐம்புலன்களின் வழியே நஞ்சைக் கக்குகின்றது. எனவே ஐம்புலன்களாகிய படங்களை விரித்து ஆடுகின்ற மனப்பாம்பை நாமும் அடக்கி ஒடுக்கி ஆளவேணும் என்பது இதன் உட்குறிப்பு.

கோம்பைகள் குலாவு.—

காவல் நாய்களாக உலாவுகின்ற ஜாதி நாய்கள் கோம்பை நாய்கள்.

பூம்பறை—

கொடைக்கானலுக்கு மேற்கே 8 கல் தொலேவில் உள்ள தலம்.

## கருத்துரை

பூம்பறை மேவு முருகா! பொதுமகளிர் உறவு ஆகாது.

## கழுகுமலே

## 178

குதலே மொழியினர் நிதிக்கொள் வாரணி
முலேயை விலேசெய்வார் தமக்கு மாமயல்
கொடிது கொடிததால் வருத்த மாயுறு துயராலே
மதலே மறுகிவா லிபத்தி லேவெகு
பதகர் கொடியவா ளிடத்தி லேமிக
வறுமை புகல்வதே யெனக்கு மோஇனி முடியாதே
முதல வரிவிலோ டெதிர்த்த சூருடல்
மடிய அயிலேயே விடுத்த வாகரு
முகிலே யனேயதா நிறத்த மால்திரு மருகோனே
கதலி கமுகுசூழ் வயற்கு ளேயளி
யிசையை முரலமா வறத்தில் மீறிய
கழுகு மலேமகா நகர்க்குள் மேவிய பெருமாளே.

## பதவுரை

முதல - முதல்வரே! வரிவிலோடு எதிர்த்த - கட்டப்பட்ட வில்லோடு எதிர்த்த, சூர் உடல் மடிய - சூரபன்மனுடைய உடல் அழியுமாறு, அயிலே விடுத்தவா - வேலாயுதத்தை விடுத்தவரே! கருமுகிலே அனேயது ஆம் நிறத்த - கருமேகத்தை ஒத்த நிறத்தையுடைய, மால் திருமருகோனே - திருமாலின் திருமருகரே! கதலி - வாழையும், கமுகு சூழ் வயல் - பாக்கு மரங்களும் சூழ்ந்துள்ள வயல்களில், அளி இசையை முரல - வண்டுகள் இசையை ஒலிக்க, மாஅறத்தின் மீறிய - சிறந்த அறச் செயல்கள் மேம்பட்டு விளங்கும், கழுகுமலே மகா நகர்க்கு உள்மேவிய - கழுகுமலேயின் சிறந்த நகரத்தில் வீற்றிருக்கும், பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! குதலே மொழியினர் - மழலேச் சொல் போல் பேசுபவர், நிதி கொள்வார் - பணத்தைப் பறிப்பவர்கள், அணி முலேயை விலே செய்வார் - அழகிய தனத்தைத் தனத்துக்கு விற்பவர்கள் ஆகிய, தமக்கு மாமயல் - பொது மாதர்

மீது உள்ள பெரிய மயக்கம்,கொடிது கொடிது அதால்-பொல்லாதது பொல் லாதது, அம் மயக்கத்தால், வருத்தமாய் உறு துயராலே - மன வருத்த மடைந்து வந்த துன்பத்தினால், மதலை மறுகி-மகனாகிய அடியேன் கலக்கம் உற்று, வாலிபத்திலே-இளமையிலே,வெகு பதர்கள் கொடியவாள்இடத்திலே மிகப் பாவிகளாம் கொடியவர்களிடத்திலே சென்று, மிக வறுமை புகல்வதே - மிகவும் என் தரித்திர நிலையைக் கூறி நிற்பதோ? எனக்குமோ இனி முடியாதே - அடியேனுக்கு இந்த நிலைமை ஒரு முடிவுக்கு வராதோ?

## பொழிப்புரை

முதல்வரே! கட்டப்பட்ட வில்லோடு எதிர்த்த சூரபன்ம னுடைய உடல் அழியுமாறு வேலை விட்டவரே! கருமேகத்தை யொத்த நிறம் படைத்த திருமாலின் திருமருகரே! வாழை கமுகுகள் சூழ்ந்துள்ள வயலின் வண்டுகள் ஒலி செய்ய அறச் செயல்கள் மிகுந்துள்ள கழுகுமலைத் திருநகரில் எழுந்தருளி யுள்ள பெருமித முடையவரே! மழலைச்சொல்போல் பேசுபவர்: பணத்தைப் பறிப்பவர்கள்; அழகிய தனத்தைத் தனத்துக்கு விற்பவர்கள் ஆகிய பொது மகளிரின் மீதுள்ள பெரிய மயக்கம் கொடிது, கொடிது; அம்மயக்கத்தால் வருத்தமுற்று, மகனாகிய அடியேன் .கலக்கமடைந்து, இளமையிலே மிகப்பாவிகளாம் கொடியவர்களிடம் போய், என் வறுமை நிலையைக்கூறி நிற்ப தோ? எனக்கு இந்த இழிவு நிலை ஒரு முடிவுக்கு வராதோ?

## விரிவுரை

கொடியவாளிடத்திலேமிக வறுமைபுகல்வதே எனக்குமே இனி முடியாதே:—

தீயவர்களிடத்தில் சென்று என் வறுமையைக் கூறும் சிறுமை எனக்கு நீங்காதோ?-நீங்குமாறு அருள்புரியும் என்று முருகரிடம் முறையிடுகின்றார்.

அறத்தில் மீறிய கழுகுமலை:—

சிறந்த தலங்களில் அறங்கள் விளங்கும்.

"மிகுகொடை வடிவினர் பயில் வலிவலம்" —சம்பந்தர் தேவாரம்.

"தருமமிகு சென்னை" —இராமலிங்கர்.

கழுகுமலை கோயில்பட்டிக்கு மேற்கே 12 கல் தொலைவில் உள்ள அருமையான திருத்தலம்.

## கருத்துரை

கழுகுமலைக் கந்தவேளே! வறுமையாஞ் சிறுமை தீர அருள் செய்வீர்.

## 179

முலையை மறைத்துத் திறப்ப ராடையை
நெகிழ வுடுத்துப் படுப்பர் வாயிதழ்
முறைமுறை முத்திக் கொடுப்பர் பூமல ரணைமீதே

அலைகுலை யக்கொட் டணைப்ப ராடவர்
மனவலி யைத்தட் டழிப்பர் மால்பெரி
தவர்பொரு ளைக்கைப் பறிப்பர் வேசைக ளுறவாமோ

தலைமுடி பத்துத் தெறித்து ராவண
னுடல்தொளை பட்டுத் துடிக்க வேயொரு
தனுவை வளைத்துத் தொடுத்த வாளியன் மருகோனே

கலைமதி யப்புத் தரித்த வேணிய
ருதவிய வெற்றித் திருக்கை வேலவ
கழுகு மலைக்குட் சிறக்க மேவிய பெருமாளே.

### பதவுரை

தலைமுடி பத்து தெறித்து - பத்துத் தலைமுடிகளும் தெறிப்புண்டு, ராவணன் உடல் தொளைபட்டு, துடிக்கவே - துடித்திடவே, ஒரு தநுவை வளைத்து - ஒப்பற்றவில்லை வளைத்து, தொடுத்த வாளியன் - அம்பை செலுத்திய ஸ்ரீராமருடைய, மருகோனே - திருமருகரே! கலை மதி - ஒரு கலையுடைய சந்திரனையும், அப்பு - கங்கையையும், தரித்த வேணியர் - தரித்துக் கொண்ட சடை முடியராம் சிவபெருமான், உதவிய - பெற்றருளிய, வெற்றி திருக்கை வேலவ - வெற்றி வேலைத் திருக்கரத்தில் தாங்கியவரே! கழுகுமலைக்கு உள் சிறக்க மேவிய - கழுகுமலையிற் சிறப்புடனே வீற்றிருக்கும், பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! முலையை மறைத்து திறப்பர்- தனத்தை மூடித்திறப்பார்கள்; ஆடையை நெகிழ உடுத்து படுப்பர் - ஆடையைத் தளர்ச்சியாக உடுத்திப் படுப்பார்கள், வாய் இதழ் முத்தி - வாயிதழ் ஊறலையும் முத்தத்தையும், முறை முறை கொடுப்பர் - மாறி மாறித் தருவார்கள், பூமலர் அணைமீதே - மலர்ப் படுக்கையின் மேல், அலை குலைய கொட்டு அணைப்பர் - நிலைகுலையக் கொண்டு அணைப்பார்கள், ஆடவர் மன வலியை தட்டு அழிப்பர் - ஆண்களின் மன உறுதியைக் கலங்க வைப்பார்கள், மால் பெரிது - மோகமயக்கத்தை மிகவுஞ் செய்து, அவர் பொருளை கைபறிப்பர் - அவர்களுடைய பொருளைக் கவர்ந்து கொள்வார்களாகிய, வேசைகள் உறவு ஆமோ - வேசையர்களின் உறவு ஆகுமோ? (ஆகாது)

## பொழிப்புரை

பத்துத் தலைகளும் தெறித்து விழ, இராவணனுடைய உடல் தொளைபட்டுத் துடிக்க, ஒரு வில்லை வளைத்துக் கணை விடுத்த ஸ்ரீராமரது திருமருகரே! பிறைமதியையும் கங்கையையும் தரித்த சடைமுடியுடைய சிவபெருமான் பெற்ற வெற்றி வேலாயுதக் கடவுளே! கழுகுமலையில் சிறப்புடன் வீற்றிருக்கும் பெருமிதமுடையவரே! தனத்தை மூடித்திறப்பார்கள்; உடையைத்தளர்த்தி உடுத்துப் படுப்பார்கள்; அதரபானமும் முத்தமும் மாறி மாறித் தருவார்கள்; அழகிய மலர்ப்படுக்கையில் நிலை குலையக் கொண்டு தழுவுவார்கள்; ஆண்களின் மன உறுதியைக் கலங்க வைப்பார்கள்; இவ்வாறு மோக மயலைப் பெரிதாகத் தந்து பொருளைப் பறிக்கும் பொது மாதர்களின் உறவு ஆகுமோ? (ஆகாது).

## விரிவுரை

அலைகுலையக் கொட்டணைப்பர்:—

அலைகுலைய-நிலைகுலைய.

"கயிலைதன்னை.........தாக்கினன் தன்னையன்று
அலைகுலையாக் குவித்தார் அவளிவணல்லூராரே" —அப்பர்.

கொண்டு என்ற சொல் சந்தத்தை நோக்கிக் கொட்டு என வந்தது.

தலைமுடி பத்துத் தெறித்து:—

இராவணனுடைய பத்துத்தலைகளையும் ஸ்ரீராமர் ஒரு கணையால் அறுத்துத் :தள்ளினர். பெண்ணாசையால் அவன் குல முழுதும் அழியத் தானும் அழிந்தான்.

கலைமதி:—

சந்திரன் கடைசி மனைவியிடம் அதிகம் அன்புடன் இருந்து ஏனைய மனைவியர்களைப் புறக்கணித்தான். அதனால் 'நாளுக்கு ஒரு கலையாகத் தேய்ந்து அழிக' எனத் தக்கன் சாபமிட்டான்.

ஒவ்வொரு கலையாகத் தேயப் பெற்ற சந்திரன் எங்கு சென்றும் உய்வு பெற்றனில்லை. கயிலை சென்று உமாபதியைச் சரண் அடைந்தான். அந்த ஒரு கலையைச் சிரத்தில் சூடி, 'இந்த ஒரு கலை யழியாது' என்று கூறி அரனார் அருள்புரிந்தார். விளக்கம் திருப்புகழ் விரிவுரை முதல் தொகுதி 9-ம் பக்கத்தில் காணலாம்.

### கருத்துரை

கழுகுமலைக் கந்தவேளே! கணிகையர் உறவு ஆகாது அதுதீர அருள் செய்வீர்.

## 180

கோங்க முகையு மெலிய வீங்கு புளக களப
மேந்து குவடு குழையும் படிகாதல்
கூர்ந்து குழையை அமளி தோய்ந்து குலவு மினிய
தேங்கு கலவி யமுதுண் டியல்மாதர்

வாங்கு பகழி விழியை மோந்து பகலு மிரவும்
வாய்ந்த துயிலை மிகவுந் தணியாத
வாஞ்சை யுடைய அடிமை நீண்ட பிறவி யலையை
நீந்தி அமல அடிவந் தடைவேனோ

ஓங்க லனைய பெரிய சோங்கு தகர மகர
மோங்கு ததியின் முழுகும் பொருசூரும்
ஓய்ந்து பிரமன் வெருவ வாய்ந்த குருகு மலையில்
ஊர்ந்து மயில துலவுந் தனிவேலா

வேங்கை யடவி மறவர் ஏங்க வனிதை யுருக
வேங்கை வடிவு மருவுங் குமரேசா
வேண்டு மடியர் புலவர் வேண்ட அரிய பொருளை
வேண்டு மளவி லுதவும் பெருமாளே.

### பதவுரை

ஓங்கல் அனைய பெரிய - மலை போன்ற பெரிய, சோங்கு-கப்பல்களும், தகர் - ஆண் சுரு மீன்களும், அ மகரம் - அந்த மகர மீன்களும், ஓங்கு - நிறைந்துள்ள, உததியின் முழுகும் - கடலில் ஒளிந்து, பொருசூரும் - போர் புரிந்த சூரபன்மனும், ஓய்ந்து - தளர்ச்சியடைய, பிரமன் வெருவ - பிரம தேவன் அஞ்ச, வாய்ந்த குருகு மலையில்- நலங்கள் அமைந்த கழுகுமலையில், மயில் அது ஊர்ந்து உலவும் - மயிலில் ஏறி உலாவுகின்ற, தனிவேலா - ஒப்பற்ற வேலாயுதரே! வேங்கை அடவி மறவர் ஏங்க - புலிகள் வாழுகின்ற காட்டு வேடர்கள் திகைக்கவும், வனிதை உருக - வள்ளியம்மையின் திரு வுள்ளம் உருகவும், வேங்கை வடிவு மருவும் - வேங்கை மரமாகி நின்ற,

குமர ஈசா - குமாரக் கடவுளே! வேண்டும் அடியர் புலவர் - வேண்டி நிற்கும் அடியார்களும் புலவர்களும், வேண்ட - தேவரீரிடம் வந்து வேண்டுதல் செய்ய, அரிய பொருளை - அருமையான பொருள்களை, வேண்டும் அளவில் உதவும் - அவர்கட்கு வேண்டும் அளவில் வழங்குகின்ற, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! கோங்க முகையு மெலிய - கோங்க மரத்தின் மொட்டும் மெலியும்படியாக, வீங்கு புளக - பருத்து புளகாங்கிதமுற்று, களபம் ஏந்து - சந்தனக் கலவை தரித்த, குவடு குழையும்படி - மலையன்ன தனங்கள் குழையுமாறு, காதல் கூர்ந்து - காதல் மிகுந்து, குழைய அமளி தோய்ந்து - தளிரு மலரும் பரப்பிய அழகிய படுக்கையில் தோய்ந்து, குலவும் இனிய தேங்கு - குலாவுகின்ற இனியதும் நிறைந்ததுமான, கலவி அமுது உண்டு - புணர்ச்சி இன்ப அமுதத்தை யுண்டு, இயல் மாதர் வாங்கு - அழகிய மாதர்கள் செலுத்தும், பகழி விழியை மோந்து - பாணமாகிய கண்களை மோந்து, பகலும் இரவும் வாய்ந்த துயிலை மிகவும் - பகலும் இரவும் ஏற்படுந் தூக்கம் அதிகரிக்கவும், தணியாத வாஞ்சை உடைய அடிமை - குறையாத விருப்பம் பூண்ட அடிமையாகிய சிறியேன், நீண்ட பிறவி அலையை நீந்தி - பெரிய இந்தப் பிறவிக் கடலை நீந்தி, அமல அடி வந்து அடைவேனோ - குற்றமற்ற உமது திருவடியைச் சேரப் பெறுவேனோ?

## பொழிப்புரை

மலைபோன்ற பெரிய கப்பல்களும், ஆண் சுறு மீன்களும், மகர மீன்களும் நிறைந்துள்ள கடலில் ஒளிந்த சூரபன்மன் ஓய்ந்து அடங்க, பிரமதேவன் அஞ்ச, நலங்கள் வாய்ந்த கழுகு மலையில் மயிலில் ஊர்ந்து உலாவும் ஒப்பற்ற வேலாயுதரே! புலிகள் வாழும் காட்டில் உறையும் வேடர்கள் திகைக்கவும், வள்ளி பிராட்டி அன்பினுல் உருகவும், வேங்கை மரமாகி நின்ற குமாரக் கடவுளே! வேண்டுகின்ற அடியரும் புலவரும் வேண்டியவுடனே அவர்கட்கு வேண்டிய பொருள்களை வேண்டிய அளவில் வழங்கும் பெருமித முடையவரே! கோங்க மரத்தின் மொட்டும் மெலியுமாறு, பருத்து புளகாங்கிதத்தையும் சந்தனக் கலவையும் பூண்ட, மலையன்ன தனங்கள் குழையும்படி காதல் மிகுந்து, தளிரும் மலரும் பரப்பிய அழகிய படுக்கையில் தோய்ந்து குலவுகின்ற, இனிமையானதும் நிறைந்ததுமான புணர்ச்சி இன்ப அமுதத்தை யுண்டு, அழகிய மாதர்கள் செலுத்தும் பாணமாகிய கண்களை மோந்து, பகலும் இரவும் ஏற்படும் தூக்கம் அதிகரிக்கவும், குறையாத விருப்பம் பூண்ட அடியேன், பெரிய இந்தப் பிறவிக் கடலை நீந்திக் குற்றமில்லாத உமது திருவடியைச் சேரப் பெறுவேனோ?

## விரிவுரை

கோங்க முகையும்:—

பெண்களின் தனங்கட்குக் கோங்கின் அரும்பு உவமை ஆகும்.

"கோங்கரும்பன்ன முலையாய்" —நாலடியார் (400)

பிறவியலையை நீந்தி அமலஅடி வந்தடைவேனோ:—

ஆன்மாக்கள் பிறவிப் பெருங்கடலில் அழுந்திப் பன்னெடுங்காலமாகப் பரதவிக்கின்றன. இக்கடலைத் தாண்டவைக்கும் புணை இறைவனுடைய திருவடித்துணை.

"ஏழுபிறவிக்கடலை ஏறவிடு நற்கருணை ஓடக்காரனும்" —திருவகுப்பு (4)

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேராதார். —திருக்குறள்.

ஓங்கலனைய பெரிய சோங்கு:—

சோங்கு-கப்பல். ஓங்கல்-மலை. மலைபோன்ற கப்பல்.

"மலையின் மிக்குயர்ந்த மரக்கலம்" —சம்பந்தர்.

வேங்கை யடவி:—

வேங்கைப் புலிகள் நிறைந்த காடு. அன்றி வேங்கை மரங்கள் நிறைந்த காடு எனினும் அமையும்.

வேண்டுமடியர் புலவர் வேண்ட அரிய பொருளை வேண்டுமளவி லுதவும்:—

வேண்டுகின்ற அடியார்களும் புலவர்களும் வேண்ட அவர்கட்கு அரிய பொருள்களை வேண்டும் அளவில், வேண்டியவுடனே, வேண்டும் அளவுக்கு, வேண்டியவர்கள் திருப்தியடையுமாறு நிரம்ப வழங்கி எம்பிரான் இன்னருள் புரிகின்றான்.

## கருத்துரை

கழுகாசலபதியே! பிறவிக் கடலை நீந்திக் கரை சேர அருள்செய்யும்.

## பொதியமலை

## 181

மைக்க ணிக்கன் வாளி போல
வுட்க ளத்தை மாறி நாடி
மட்டு முற்ற கோதை போத முடிசூடி

மத்த கத்தி னீடு கோடு
வைத்த தொத்தின் மார்பி னூடு
வட்ட மிட்ட வாருலாவு முலைமீதே

இக்கு வைக்கு மாடை வீழ
வெட்கி யக்க மான பேரை
யெத்தி முத்த மாடும் வாயி னிசைபேசி
எட்டு துட்ட மாதர் பாய
லிச்சை யுற்றெ னுக மாவி
யெய்த்து நித்த மான வீன முறலாமோ

துர்க்கை பக்க சூல காளி
செக்கை புக்க தாள வோசை
தொக்க திக்க தோத தீத வெனவோதச்
சுற்றி வெற்றி யோடு தாள்கள்
சுத்த நிர்த்த மாடு மாதி
சொற்கு நிற்கு மாறுதார மொழிவோனே

திக்கு மிக்க வானி னூடு
புக்க விக்க மூடு சூரர்
திக்க முட்டி யாடு தீர வடிவேலா
செச்சை பிச்சி மாலை மார்ப
விச்சை கொச்சை மாதி னோடு
செப்பு வெற்பில் சேய தான பெருமாளே.

## பதவுரை

துர்க்கை - துர்க்கையும், பக்க சூல காளி - பகுப்புற்று முக்கிளையாகப் பிரிந்த சூலத்தை ஏந்தியவளுமாகிய காளியின், செக்கை புக்க - சிவந்த கையில் உள்ள, தாள ஓசை - தாளத்தின் ஓசையானது, தொக்க திக்க தோத தீத என ஓத - தொக்க திக்க தோத தீத என்று ஒலிக்க, சுற்றி வெற்றியோடு - சுழன்று ஜெயத்துடனே, தாள்கள் - திருவடி, சுத்த நிர்த்தம் ஆடும் ஆதி - சொக்கம் நடத்தை ஆடுகின்ற முதல்வராம் சிவபெருமானுடைய, சொற்கு - உபதேசிப்பாய் என்ற சொல்லுக்கு, நிற்குமாறு தாரம் மொழிவோனே - இணங்கும் மறு மொழியை உரைத்தவரே! திக்கு - திசைகளிலும், மிக்க வானினூடுபுக்க - பெரிய வானினிடத்துஞ் சென்ற, விக்கம்

மூடு சூரர் - கர்வத்தால் மூடப்பட்ட சூரர்கள், திக்க முட்டி ஆடுதீர - சிதற அவர்களைத் தாக்கிப் போர்புரிந்த தைரியம் உள்ளவரே! வடிவேலா - கூரிய வேலாயுதரே! செச்சை - வெட்சி மலர், பிச்சி மாலை - பிச்சிப் பூ மாலை யணிந்த, மார்ப - திருமார்பினரே! விச்சை - அறிவுள்ளவரும், கொச்சை மாதிேனாடு - கொச்சை மொழி பேசுபவருமாகிய வள்ளிபிராட்டியினுடன், செப்பு வெற்பில் - பொதிய மலையில், சேயது ஆன - குழந்தை முருகனாக விளங்கும், பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! மை கண் - மை பூசிய கண், இக்கன் வாளி போல - கரும்பு வில்லையுடைய மன்மதனுடைய பாணங்கள் போல் வேலை செய்ய, உள் களத்தை மாறி நாடி - உள்ளே யிருக்கின்ற கள்ளக் குணத்தை வேறாக மூடிவைத்து விருப்பம் காட்டி, மட்டு முற்ற கோதை போத முடி சூடி - வாசனையுள்ள மாலையை நன்றாகத் தலைமுடியில் அணிந்து, மத்தகத்தில் - யானையின் மத்தகத்தில், நீடு கோடு - நீண்டிருக்கும் கொம்புகளை, வைத்தது ஒத்து - வைத்ததை ஒத்து, இன்மார்பினூடு - இனிய மார்பிலே, வட்டம் இட்ட வார் உலாவு - வட்டவடிவாய் கச்சு அணிந்த, முலைமீதே - தனங்களின் மீது, இக்கு வைக்கும் ஆடை வீழ - தடையாயுள்ள ஆடை விழ, வெடகி - வெட்கப்பட்டு, இயக்கம் ஆனபேரை எத்தி - குறிப்பின் வழி நடக்கும் ஆள்களை வஞ்சித்து, முத்தம் ஆடுவாயின் - முத்தமிடுகின்ற வாயால், இசை பேசி - இசைதலைப் பேசி, எட்டு - ஆடவர் பால் அணுகுகின்ற, துட்ட மாதர் - துஷ்ட மாதர்களின், பாயல் இச்சை உற்று - படுக்கையில் ஆசைப்பட்டு, என் ஆகம் ஆவி எய்த்து - அடியேனுடைய உடலும் உயிரும் இளைத்துப் போய், நித்தம் - தினந்தோறும், மான ஈனம் உறலாமோ - மானபங்கம் அடையலாமோ?

## பொழிப்புரை

துர்க்கையும் முக்கிளையாகவுள்ள சூலத்தையேந்தியவளுமாகிய காளியின் செங்கையில் ஏந்திய தாளத்தின் ஒலி, தொக்கதிக்க தோததீத என்று ஒலிக்க, சுழன்று வெற்றியுடன் தாள்கள் சுத்த நடனம் புரிகின்ற முதல்வராகிய சிவபெருமானுடைய சொல்லுக்கு இணங்கி உபதேசித்தவரே! திசைகளிலும், பெரிய வானிலும் சென்ற கருவம் படைத்த சூரர்கள் பல வழியாகச் சிதற, அவர்களைத் தாக்கிப் போர்புரிந்த தீரரே! கூரிய வேலவரே! வெட்சி-பிச்சி என்ற பூமாலைகளை அணிந்த திருமார்பினரே! அறிவுள்ளவரும் கொச்சைமொழி பேசுபவருமாகிய வள்ளியம்மையாருடன் பொதிய மலையில் குழந்தை முருகனாக விளங்கும் பெருமித முடையவரே! மை பூசிய கண், மன்மதனுடைய கணைபோல் வேலை செய்ய, உள்ளேயிருக்கின்ற கள்ளக் குணங்கள் தோன்றாத வண்ணம் மூடிவைத்து, விருப்பம்காட்டி, வாசனை பொருந்திய மலர் மாலையைச் செவ்வையாகத் தலைமுடியில் சூடி, யானையின் மத்தகத்தில் நீண்டிருக்கும் கொம்பு

கள் வைத்தன ஒத்து, இனிய மார்பிலே வட்ட வடிவாய் கச்சு அணிந்து அமைந்துள்ள தனங்களின்மீது, தடையாயுள்ள ஆடைவிழ, வெட்கப்பட்டு, இணங்கி நடக்கும் ஆடவரை வஞ்சித்து, முத்தமிடுகின்ற வாயால் இசைதலைப்பேசி, அணுகுகின்ற துஷ்ட மாதர்களின் படுக்கையில் ஆசை வைத்து, என் உடலும் உயிரும் களைத்துப்போய் தினந்தோறும் மானபங்கத்தை அடியேன் அடையலாமோ?

## விரிவுரை

மைக்கணிக்கன் வாளி போல:—

மை கண் இக்கன் வாளி. இக்கு—கரும்பு. கரும்பு வில்லையுடைய மன்மதன் இக்கன். விலை மாதர்களின் மைபூசிய கண்கள் மன்மதனுடைய மலர்க்கணைகளைப்போல் கொடுமை செய்ய வல்லவை.

உள்களத்தை மாறி நாடி:—

கள்ளத்தை என்ற சொல் களத்தையென வந்தது. மனத்துக்குள் உள்ள திருட்டுத்தனத்தை வெளிக்குக் காட்டாமல் மறைத்து வைத்து, விரும்புவதுபோல் நடிப்பர்.

மட்டுமுற்ற கோதை போத முடிசூடி:—

மட்டு—தேன், வாசனை. கோதை—பூமாலை. போத—செவ்வையாக.

இக்கு வைக்கு மாடை:—

இக்கு—தடை. தடையாயுள்ள ஆடை.

இசை பேசி:—

இசைதலைப் பேசி உறவாடுவர்.

பக்க சூல:—

பக்கம்—பகுப்புற்ற—மூன்று பிரிவாகவுள்ள சூலம்.

செக்கை:—

செங்கை என்ற சொல் சந்தத்தை நோக்கி செக்கை என வந்தது.

சுத்த நிர்த்தம்:—

இது சொக்கம் எனும் கூத்து. நூற்றெட்டுக் கரணம் உடையது.

மாறுதாரம்:—

மாறுதாரம்—மறுவுத்தரம்.

விக்கமுடு:—

**விக்கம்—வீக்கம்—கர்வம்.**

"கடல் இலங்கைக் கோமான் தன்னை
வீக்கம் தவிர்த்த விரலார்" —அப்பர்

திக்கமுட்டி:—

**திக்க—பல வழியாகச் சிதறுமாறு.**

செப்பு வெற்பு:—

**செப்பு வெற்பு—பொதியமலை.**

"செம்புடற் பொதிந்த தெய்வப் பொதியமும்"
"தென்கால் விடுக்கும் செம்பிற் பொருப்பு" —கல்லாடம்.

### கருத்துரை

பொதியமலை மேவு வடிவேலா! மாதராசையால் மானக் குறைவு அடையாமல் காத்தருள்வீர்.

## 182

வெடித்த வார்குழல் விரித்து வேல்விழி
விழித்து மேகலை பதித்து வார்தொடு
மிகுத்த மாமுலை யசைத்து நூலின்ம ருங்கினுடை
மினுக்கி யோலைகள் பிலுக்கியேவளை
துலக்கி யேவிள நகைத்து கீழ்விழி
மிரட்டி யாரையு மழைத்து மால்கொடு தந்தவாய்நீர்

குடித்து நாயென முடக்கு மேல்பிணி
யடுத்து பாதிகள் படுத்த தாய்தமர்
குலத்தர் யாவரு நகைக்க வேயுடல் மங்குவேனைக்
குறித்து நீயரு கழைத்து மாதவர்
கணத்தின் மேவென அளித்து வேல்மயில்
கொடுத்து வேதமு மொருத்த னுமென
சிந்தைகூராய்

உடுட்டு டுடுடு டுடுட்டொ டோவென
திகுத்த தீதிகு திகுர்த்த தாவென
உடுக்கை பேரிகை தவிற்கு ழாமுமி ரங்குபோரில்

உலுத்த நீசர்கள் பதைப்ப மாகரி
துடிப்ப நீள்கட லெரித்து சூர்மலை
யுடைத்து நீதிகள் பரப்பி யேயவ ரும்பராரை
அடைத்த மாசிறை விடுத்து வானுல
களிக்கு மாயிர திருக்க ணுனர
சளித்து நாளுமெ னுளத்தி லேமகி ழுங்குமாரா
அளித்த தாதையு மிகுத்த மாமனும்
அனைத்து ளோர்களு மதிக்க வேமகிழ்
அகத்ய மாமுனி பொருப்பின் மேவிய தம்பிரானே.

## பதவுரை

உடுட்டு டுடுடு டுடுட்டொ டோ என - உடுட்டு டுடுடு டுடுட்டொடோ எனவும், திகுத்த தீதிகு திகுர்த்த தா என - திகுத்த தீதிகு திகுர்த்த தா எனவும், உடுக்கை பேரிகை தவில் குழாமும் - உடுக்கை பேரிகை தவில் இவைகளின் கூட்டம், இரங்கு போரில் - ஒலிக்கின்ற போர்க்களத்தில், உலுத்த நீசர்கள் பதைப்ப - உலோபிகளாகிய அசுரர்கள் பதை பதைக்கவும், மாகரி துடிப்ப - பெரிய யானைகள் துடிக்கவும், நீள் கடல் எரித்து - நீண்ட கடலை எரித்து, சூர் மலை உடைத்து - சூரனையும் கிரௌஞ்சமலையையும் பிளந்து, நீதிகள் பரப்பி - நீதி நெறிகளை எங்கும் பரவச் செய்து, அவர் உம்பராரை - அந்த அசுரர்கள் தேவர்களை, அடைத்த மா சிறை விடுத்து - அடைத்து வைத்த பெரிய சிறையினின்றும் விடுவித்து, அ வான் உலகு அளிக்கும் - அந்த விண்ணுலகைக் காக்கும், ஆயிரம் திரு கண்ணன் அரசு அளித்து - ஆயிரங்கண்ணனாகிய இந்திரனுக்கு தேவலோக ஆட்சியைத் தந்தருளி, நாளும் என் உளத்திலே மகிழும் குமாரா - நாள்தோறும் அடியேனுடைய உள்ளத்தில் இருந்து மகிழும் குமாரக் கடவுளே! அளித்த தாதையும் - ஈன்ற தந்தையாகிய சிவமூர்த்தியும், மிகுத்த மாமனும் - அன்பு மிகுந்த மாமனாகிய திருமாலும், அனைத்து உளோர்களும் மதிக்கவே மகிழ் - மற்ற எல்லோரும் மதிக்கும்படி மகிழ்ச்சியுடன், அகத்ய மாமுனி பொருப்பில் மேவிய - அகத்திய மகாமுனிவருடைய மலையாகிய பொதியமலையில் வீற்றிருக்கும், தம்பிரானே - தனிப்பெருந்தலைவரே! வெடித்த வார் குழல் விரித்து - நறுமணங் கமழ்கின்ற நீண்ட கூந்தலை விரித்தும், வேல் விழி விழித்து - வேல் போன்ற கண்களை அப்படியும் இப்படியுமாக விழித்தும், மேகலை பதித்து - இடையணியை யணிந்தும், வார் தொடு மிகுத்த மாமுலை அசைத்து - இரவிக்கை யணிந்த மிகப் பெரிய தனங்களை அசைத்தும், நூலின் மருங்கின் ஆடை மினுக்கி - நூல்போன்ற மெல்லிய இடையில் ஆடையை மினுக்கியும், ஓலைகள் பிலுக்கி - காதில் உள்ள தங்க வோலையை விளக்கியும், வளை

துலக்கியே - வளையலை ஒளி பெறச் செய்தும், இள நகைத்து - இளநகை செய்தும், கீழ்விழி மிரட்டி - கீழ்க்கண்ணால் மிரட்டியும், யாரையும் அழைத்து - யாரையும் வாரும் என அழைத்து, மால் கொடு தந்த வாய் நீர் நாய் என குடித்து - ஆசை கொண்டு கொடுத்த வாயிதழ் ஊறலை நாய் போல் குடித்து, முடக்கும் ஏல் பிணி அடுத்து - முடக்கந்தைத் தரும் நோய் கள் பல சேர்ந்து, உபாதிகள் படுத்த - வேதனைகள் உண்டாக்க, தாய் தமர் குலத்தார் யாவரும் நகைக்க - தாயார் சுற்றத்தார் குலத்தினர் முதலிய அனைவரும் அடியேனைக் கண்டு சிரிக்க, உடல் மங்குவேனை - உடல் வாடு கின்ற சிறியேனை, குறித்து - தேவரீர் கவனித்து, நீ அருகு அழைத்து - நீர் உமது அருகில் அழைத்து, மாதவர் கணத்தில் மேவு என - சிறந்த தவமுனி வர்களின் கூட்டத்தில் சேர்வாயாக என்று, அளித்து - எனக்கும் அருள் புரிந்து, வேல் மயில் கொடுத்து - வேல் மயில் இவைகளின் அடையாளங் களை என் தோளில் பொறித்து, வேதமும் ஒருத்தனும் என - வேதமும் இவன் ஒரு ஒப்பற்றவன் என்று உரைக்கும்படி, சிந்தை கூராய் - திருவுள்ளத்தில் கருணை கூர்ந்து அருளுவீராக.

## பொழிப்புரை

உடுட்டு டுடுடு டுடுட்டெர் டோ எனவும், திகுத்த தீதிகு திகுர்த்த தா எனவும் உடுக்கை பேரிகை தவில் முதலிய வாத்தியக் கூட்டங்கள் ஒலிக்கும் போர்க்களத்திலே, உலோபிகளான அசுரர் பதைபதைக்கவும், பெரிய யானைகள் துடிதுடிக்கவும், நீண்ட கடலை எரித்து, சூரனையும் கிரௌஞ்சத்தையும் பிளந்து, எங்கும் நீதி நெறிகளைப் பரவச்செய்து, அந்த அசுரர்கள் தேவர்களை அடைத்து வைத்த பெரிய சிறையினின்றும் விடுவித்து, விண்ணுலக ஆட்சியை இந்திரனுக்கு வழங்கி நாள்தோறும் அடியேன் உள்ளத்திலே மகிழ்ந்து இருக்கும் குமாரக் கடவுளே! பெற்ற தந்தையாம் சிவமூர்த்தியும், அன்பு மிகுந்த மாமனும் நாராயண மூர்த்தியும், ஏனையோர்களும் மதித்துப் போற்ற, மகிழ்ச்சியுடன் அகத்திய முனிவருடைய பொதிய மலையில் வாழுகின்ற தனிப்பெருந் தலைவரே! நறு மணங் கமழும் நீண்ட கூந்தலை விரித்தும், வேல் போன்ற கண்களை இப்படியும் அப்படியுமாக விழித்தும், இடையணியை யணிந்தும், கச்சணிந்த மிகப்பெரிய தனங்களை அசைத்தும், நூல் போன்ற மெல்லிய இடையில் ஆடையை அழகு படுத்தியும், காதோலையை விளக்கியும், வளையல்களை ஒளிபெறச் செய்தும், இள நகை செய்தும், கீழ்க்கண்ணால் மிரட்டியும், யாரையும் வாரும் என அழைத்து, அப் பொது மாதர் கொடுத்த வாயிதழ் ஊறலை நாய் போல் குடித்து, முடக்குவாதம் முதலிய நோய்

களின் வேதனைகளும் உண்டாக, தாயும் சுற்றத்தாரும், குலத்தவரும் சிரிக்க உடல் வாடுகின்ற என்னை, கவனித்து, உமது அருகில் அழைத்து, மாதவர்களின் கூட்டத்தில் சேர்வாயாக என்று எனக்கு அருள்புரிந்து, வேல் மயில் அடையாளங்களை என்மீது பொறித்து, வேதமும் என்னை இவன் ஒப்பற்றவன் என்று கூறும்படி உமது திருவுள்ளத்தில் கருணை கூர்ந்து அருளுவீராக.

## விரிவுரை

வெடித்த வார் குழல் விரித்து:—

வெடித்த—நறுமணங் கமழ்கின்ற. பொதுமாதர் நடு வீதியில் நின்று கூந்தலை விரித்துக் கோதி அதன் வாசனை வீச, மோகவலை வீசுவார்கள்.

"அங்கை மென்குழ லாய்வார் போலே
சந்தி நின்றய லோடே போவார்
அன்பு கொண்டிட நீரோ போரீர்" —திருப்புகழ்.

மாதவர் கணத்தின் மேவெனா:—

அடியார் குழாத்தில் சேர்க என அருள்புரிய வேண்டுகின்றார். அடியாருறவு நம்மைப் பரகதியில் சேர்க்கும். பசு மந்தையில் சேர்ந்த கண்ணில்லாத பசு ஊர் சேரும். அது போல் ஞானவிழி யில்லாத மனிதனும் அடியவர் உடன் கூடில் முத்தியுலகு புகுவான்.

வேல் மயில் கொடுத்து:—

அருணகிரியார் இத்திருப்புகழில் தமது உடம்பின்மீது வேலின் அடையாளத்தையும் மயிலின் அடையாளத்தையும் பொறித்தருளுமாறு முருகவேளை வேண்டுகின்றார்.

அப்பர் பெருமான் திருத் தூங்கானை மாடத்தில் இடபக் குறி, சூலக்குறி பெற்றார்.

பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம் போற்றி செய்யும்
என்னாவி காப்பதற் கிச்சையுண்டேல் இருங் கூற்றகல
மின்னாரு மூவிலைச்சூல மென்மேற்பொறி மேவு கொண்டல்
துன்னார் கடந்தையுள் தூங்கானை மாடச் சுடர்க்கொழுந்தே —அப்பர்.

இதேபோல் அருணகிரியார் எட்டிக்குடித் திருப்புகழிலும் வேண்டுகின்றார்.

"தற்பொறி வைத்தருள் பாராய் தாராய்"
—(மைக்குழல்) திருப்புகழ்.

இந்த விண்ணப்பத்தின்படி முருகப் பெருமான் திருத்துருத்தி என்னும் தலத்தில் வேல்மயிற் பொறி பதித்து அருள் புரிந்தனர்.

"அடைக்கலப்பொரு ளாமென நாயெனை
அழைத்து முத்திய தாமநு பூதியெ
னருட்டிருப்புக ழோதுக வேல்மயி லருள்வோனே"
—(மலைக்கனத்) திருப்புகழ்

வேதமும் ஒருத்தனு மென சிந்தை கூர்வாய்:—

"வேதம் இவன் ஒப்பற்ற ஒருவன் என்று அடியேனைக் கூறுமாறு முருகா! நீ திருவுள்ளத்தில் கருணை கூர்ந்தருள்' என்று வேண்டுகின்றார்.

"உனைப்புகழும் எனைப்புவியில்
ஒருத்தனும் வகைதிரு அருளாலே" —(கருப்புவில்) திருப்புகழ்.

"இருள்நிற முந்நீர் வளைஇய உலகத்து
ஒருநீ ஆகித் தோன்ற விழுமிய
பெறலரும் பரிசில் நல்கும்" —திருமுருகாற்றுப்படை

## கருத்துரை

பொதிய மலையில் மேவும் குமாரக் கடவுளே! வேல் மயில் பொறித்து அடியேனை ஆட்கொண்டருள்வீர்.

## வள்ளியூர்

## 183

அல்லில் நேருமி னதுதானும்
அல்ல தாகிய உடல்மாயை
கல்லி னேரஅ வழிதோறுங்
கையு நானுமு லையலாமோ
சொல்லி நேர்படு முதுசூரர்
தொய்ய வூர்கெட விடும்வேலா
வல்லி மாரிரு புறமாக
வள்ளி யூருறை பெருமாளே.

## பதவுரை

சொல்லி நேர்படு-தமது வீரத்திறனைச் சொல்லிக் கொண்டு எதிர்த்த, முதுசூரர் - பழைய சூரர்கள், தொய்ய - அயர்ச்சி யடையவும், ஊர்கெட -

அவர்களின் ஊர் பாழ்படவும், விடும் வேலா - விடுத்த வேலாயுதரே! வல்லிமார் இருபுறம் ஆக - கொடியனைய இருதேவிகளும் இருபுறத்தில் விளங்க, வள்ளியூர் உறை - வள்ளியூரில் வாழும், பெருமாளே! பெருமையிற் சிறந்தவரே! அல்லில் நேரும் - இரவில் காணப்படும், மின் அது தானும் - மின்னல் அது தானும், அல்லது ஆகிய உடல் மாயை - அன்று என்று கூறத்தக்க உடல் ஒரு மாயை; கல்லின் நேர அ வழி தோறும் - கல் நிறைந்த அந்த வாழ்க்கை வழியிலே, கையும் நானும் உலையலாமோ - என் ஒழுக்க நிலையும் அடியேனும் நிலைகுலையலாமோ!

## பொழிப்புரை

தங்கள் வீரத்திறத்தைச் சொல்லிக் கொண்டு எதிர்த்து வந்த பழைய சூரர்கள் சோர்வு அடையவும், அவர்களின் ஊர் பாழ்படவும், செலுத்திய வேலாயுதரே! வனவல்லி கஜவல்லி என்ற இரு தேவிமார்களும் இரு பக்கத்தில் விளங்க, வள்ளியூரில் வாழும் பெருமிதமுடையவரே! இரவில் தோன்றும் மின்னலைக் காட்டிலும் நிலையில்லாததான இந்த உடம்பு ஒருமாயை; கல் நிறைந்த வழிக்கு ஒப்பான இந்த வாழ்க்கை வழியிலே, என் ஒழுக்க நிலையும் அடியேனும் நிலைகுலைந்து அழியலாமோ?

## விரிவுரை.

அல்லினேருமினது தானும் அல்லதாகிய உடல்:—

இரவிலே தோன்றுகின்ற மின்னலாவது சிலவிநாடிகள் நிற்கும். அத்துணை நேரங் கூட இந்த உடம்பு நிற்காது. யாக்கை ஒரு கணத்தில் தோன்றி மறைவது.

கல்லினேர அ வழி தோறும்:—

கல்லும் முள்ளும் நிறைந்த வழிபோல் மாயையின் வழி கடினமானது. ஆதலால் அவ்வழி சென்று அலைதல் கூடாது.

கையும் நானும் உலையலாமோ?

கை—ஒழுக்கம்.

சொல்லி நேர்படு முதுசூரர்:—

சூரபன்மனும் அவனுடைய சேனை வீரர்களும் தத்தம் பராக்கிரமங்களை வீர வசனத்தால் முழக்கிக் கொண்டு போருக்கு வந்தனர்.

வல்லிமாரிரு புறம்:—

வனவல்லி—வள்ளி. கஜவல்லி—தெய்வயானை. வள்ளி வலப்பக்கம், தெய்வயானை இடப்பக்கம்.

"ஆராத காதல் வேடர்மடமகள்
ஜீமூதமூர் வலாரி மடமகள்
ஆதார பூதமாக வலமிடம் உறை வாழ்வும்"
—(சீரான) திருப்புகழ்.

**வள்ளியூர்:—**

வள்ளியூர் திருநெல்வேலிக்குத் தெற்கே நாகர் கோயில் போகும் வழியில் 28-வது மைலில் உள்ள திருத்தலம். பஸ் வசதி உண்டு. மலையடிவாரத்தில் கோயில் உள்ளது.

## கருத்துரை

வள்ளியூர் வடிவேலா! மாயை வழியிற் சென்று அலையாமல் ஆண்டருள்வீர்.

## கதிர்காமம்

## 184

திருமக ளுலாவு மிருபுய முராரி
திருமருக நாமப் பெருமாள்காண்
ஜெகதலமும் வானு மிகுதிபெறு பாடல்
தெரிதரு குமாரப் பெருமாள்காண்
மருவுமடி யார்கள் மனதில் விளையாடு
மரகத மயூரப் பெருமாள்காண்
மணிதரளம் வீசி யணியருவி சூழ
மருவுகதிர் காமப் பெருமாள்காண்
அருவரைகள் நீறு படஅசுரர் மாள
அமர் பொருத வீரப் பெருமாள்காண்
அரவுபிறை வாரி விரவுசடை வேணி
அமலர்குரு நாதப் பெருமாள்காண்
இருவினையி லாத தருவினை விடாத
இமையவர்கு லேசப் பெருமாள்காண்
இலகுசிலை வேடர் கொடியினதி பார
இருதனவி நோதப் பெருமாளே.

## பதவுரை

இலகு சிலை வேடர் கொடியின் - விளங்குகின்ற வில்லைத் தாங்கியுள்ள வேடர் குடியிற் றேன்றிய கொடிபோன்ற மென்மையுடையாராகிய வள்ளி

யம்மையாரின், அதிபார இருதன விநோத - மிகவும் பருத்துள்ள இரண்டு தனங்களிலும் பொழுது போக்கும், பெருமாளே - பெருமையிற் சிறந்தவ ராகிய முருகக் கடவுளே, திருமகள் உலாவும் - இலக்குமிதேவி வாழ்கின்ற, இருபுய - இரண்டு புயமலைகளை யுடையவரும், முர அரி - முரன் என்ற அசுரனை அழித்தவரும் ஆகிய திருமாலினது, திரு மருக நாமப் பெருமாள் காண் - சிறந்த மருகர் என்ற திருப்பேரையுடைய பெருமானென்று அறி வாயாக; செகதலமும் - மண்ணுலகமும், வானும் - விண்ணுலகமும், மிகுதி பெறு பாடல் - மிகுதியான அருட்பாடல்களால் ஆராய்ந்து, தெரிதரு குமார பெருமாள் காண் - அறிந்து கொள்ளத்தக்க குமாரக் கடவுள் என்று அறிவாயாக; மருவும் அடியார்கள் - திருவருள் நெறியில் கலந்துள்ள அடிய வர்களின், மனதில் விளையாடும் - உள்ளக் கமலத்தில் திருவிளையாடல் புரி கின்ற, மரகத மயூர பெருமாள்காண் - மரகத நிறம் போன்ற பச்சை மயில் வாகனக் கடவுள் என்று அறிவாயாக; மணி தரளம் வீசி அணி - இரத்தின மணிகளையும் முத்துக்களையுங் கொழித்து எறிந்து திருவடியில் அணிகின்ற, அருவி சூழ மருவு - மாணிக்க நதியென்னும் அருவி சூழப் பொருந்தியுள்ள, கதிர்காம பெருமாள்காண் - கதிர்காமம் என்னுந் திருத்தலத்தில் எழுந் தருளியுள்ள பெருமான் என்று அறிவாயாக; அருவரைகள் - சிறந்த மலை கள், நீறுபட - துகள்பட்டு ஒழியவும், அசுரர் மாள - சூராதி யவுணர்கள் மாண்டு அழியவும், அமர்பொருத - போர் புரிந்த, வீர பெருமாள்காண் - வீரமூர்த்தி யென்று அறிவாயாக; அரவு - பாம்பும், பிறை - பிறைச் சந்திர னும், வாரி - கங்கையும், விரவு சடை வேணி - கலந்து வாழ்கின்ற சடை முடியை யுடையவரும், அமலர் - அநாதி மலமுத்தரும் ஆகிய சிவபெரு மானுக்கு, குருநாத பெருமாள்காண் - குருமூர்த்தியாக இருந்து உபதே சித்த பெருமான் என்று அறிவாயாக; இருவினை இலாத - நல்வினை தீவினை என்ற இரண்டு வினைகளிலும் நடுநிலை பெற்றவர்களும், தருவினை விடாத - கொடுக்கின்ற தொழிலை விடாதவர்களுமாகிய, இமையவர் - தேவர்களு டைய, குல ஈச பெருமாள்காண் - கூட்டத்திற்குத் தலைவர் என்று அறி வாயாக.

## பொழிப்புரை

விளங்குகின்ற வில்லைத் தரித்த வேட்டுவர் குடியில் அவ தரித்த கொடிபோன்ற மெல்லியலையுடைய வள்ளியம்மை யாருடைய மிகவும் பருத்துள்ள இரு தனங்களிலும் பொழுது போக்குபவராகிய பெருமிதமுடைய முருகக் கடவுளே, இலக்குமி தேவி வாழ்கின்ற இரண்டு புயாசலங்களை யுடையவரும் முரன் என்ற தானவனை வதைத்தவருமாகிய நாராயண மூர்த்தியின் திருமருகர் என்ற திருநாமத்தை யுடைய பெருமான் என்றும், மண்ணுலகமும் விண்ணுலகமும் துதிசெய்கின்ற மிகுதியான அருட்பாடல்களால் ஆராய்ந்து அறிதற்குரிய குமார பரமேசு

வரர் என்றும், திருவருள் நெறியில் கலந்துள்ள மெய்யடியார் தம் உள்ளக் கோயிலில் ஒழியாது திருவிளையாடல் புரியும் பச்சைமயில் வாகனக் கடவுள் என்றும், இரத்தின மணிகளையும் முத்து மணிகளையும் அலைகள் என்ற கரத்தால் கொழித்து பெருமான் திருவடியில் வீசி யணிகின்ற. மாணிக்க நதி சூழ்ந்துள்ள கதிர்காமம் என்ற திவ்ய க்ஷேத்திரத்தில் எழுந்தருளியுள்ள பெருமான் என்றும், சிறந்த மலைகள் துகள்பட்டொழியவும் சூராதி யவுணர்கள் மாய்ந்தொழியவும் போர் புரிந்த வீரப்பெருமான் என்றும், பாம்பு பிறைமதி நதி ஆகியவற்றை முடியில் தரித்துள்ள அமலராகிய சிவபெருமானுக்குப் பிரணவோபதேசம் புரிந்த பரமகுருநாதர் என்றும், இருவினை யொப்பு கைவரப் பெற்று, கொடைத்தொழிலை விடாத தேவர்கள் குழுஉக்குத் தலைவர் என்றும் அறிந்து மனமே நீ உய்வாயாக.

## விரிவுரை

திருமகளுலாவு......திருமருக:—

இலக்குமியைத் திருப்புயத்தில் திருமால் தரித்தனர் என்பதன் கருத்து, காக்குங் கடவுளாதலின், காத்தற்றொழிலுக்கு இடையூறு செய்வோரை அழிப்பராதலால், திருமாலின் புயத்தில் வீரலட்சுமி உலவுகின்றனள். முராரி - முர அரி; முரன் என்ற அசுரனைக் கொன்றதனால் முராரி என்ப. திருமாலாதி தேவரும் மதிக்கும் "மானமூர்த்தி" யாக விளங்குகின்றார்.

ஜெகதலமும்......தெரிதருகுமார:—

விண்ணுலகில் உள்ளவரும், மண்ணுலகில் உள்ளவரும் முருகவேளை உள்ளம் உருகிப் பாடி மகிழ்வர். அப்பாடல்களின் இனிமையையும் தாரதம்யங்களையும் ஆறுமுகக் கடவுள் அறிகின்றனர். அவர் பெருந்தமிழ்ப் புலவர் அன்றோ?

"கல்வி கரைகண்ட புலவோனே" —(அல்லசல) திருப்புகழ்.

"திரிபுரம் பொடியாக்கிய சங்கரர்
குமர கந்த பராக்ரம செந்தமிழ்
தெளிவுகொண் டடியார்க்கு விளம்பிய பெருமாளே"
—(முனையழிந்தது) திருப்புகழ்.

எங்குந் தங்குக முருகன் புகழ். புகழ்ப்பாடல் பொலிக; அதுவே கலியின் மிகப்பெரிய பாவங்களைக் கெடுக்கவல்லது. அதனால் "கானமூர்த்தி" யாக விளங்குகின்றார்.

மருவு மடியார்கள் மனதில் விளையாடும்:—

திருவருள் நெறியை மருவுபவர் என்று கூட்டுக. முருகன் சின்னஞ் சிறுபிள்ளை; பிள்ளைகட்கு விளையாடுவதில் அளவு கடந்த ஆர்வம் உண்டு. அங்ஙனம் ஆடுவதற்கு ஓர் அழகிய — குளிர்ந்த இடம் வேண்டும். குழந்தை குமரப்பனுக்கு விளையாடுகின்ற இடம் எது? அடியார் உள்ளமாகிய பூங்காவனமே.

"மாசிலடியார்கள் வாழ்கின்ற ஊர்சென்று
தேடிவிளையாடியே அங்ஙனே நின்று
வாழு மயில் வீரனே செந்தில் வாழ்கின்ற பெருமாளே"
—(மூளும்வினை) திருப்புகழ்.

அடியார்கள் உள்ளத்தில் "த்யானமூர்த்தி" யாக விளங்குகின்றார்.

மணிதரளம்......கதிர்காம பெருமாள்:—

கதிர்காமம் மிகச்சிறந்த திருத்தலம்; முருகன் தலங்களுள் மகிமை நிரம்பியது. அது ஈழநாட்டில் விளங்குவது. பிரமரந்திரஸ்தலம். இன்றும் பற்பல அற்புதங்கள் நிகழ இகபர சித்தி தருவது. எம்பெருமான் சூராதி யவுணர்களைக் கொல்லும் பொருட்டுத் தங்கியிருந்த பாடி வீடு. யுத்தகோலமாக நின்ற நிலை. அதனால்தான் கதிர்காமத்தில் சுவாமி தரிசனங் கிடையாது. திரையை வணங்குகின்றனர். உருவ வழிபாடு இல்லை. சிதம்பர ரகசியம்போல் பாவனையாகத்தான் வழிபாடு. அதனால் "வானமூர்த்தி" யாக விளங்குகின்றனர்.

அருவரைகள்...... அமர்பொருதவீர:—

இலக்கத் தொன்பான் வீரர்களையும் தாரகற்குத் துணை செய்வான் மயக்கிய கிரௌஞ்ச வரையையும், நக்கீரர் கற்கிமுகி என்ற பூதத்தால் அடைபட்ட வரையையும் பெருமான் திருவேலால் துகள்படச் செய்தனர்.

தேவர்கட்குப் பல யுகங்களாக இடுக்கண் புரிந்து வந்த சூராதி யவுணர்களையும் அழித்தனர். ஆதலினால் அடியார்க்குச் சத்துருபயம் வாராது. அதனால் "வீரமூர்த்தி" யாக விளங்குகின்றனர்.

அரவுபிறை வாரி..... அமலர் குருநாத:—

"தவமே பயனைத்தரும்; பயனைத் தருவதற்கு பதி வேண்டுவதில்லை" என்ற கொள்கையை யுடைய தாருக வனத்து இருடிகள், சிவபெருமானை எதிர்த்து அபிசார வேள்வி செய்து,

கொடும்பாம்புகளை உண்டாக்கி இறைவனைக் கொல்ல ஏவினர். கருணைக் கடலாகிய கண்ணுதற் கடவுள் அவ் விடப் பாம்புகளிடத்தும் இன்னருள் புரிந்து அவற்றைக் கொல்லாது ஆபரணமாகத் தரித்துக் கொண்டனர்.

"வீம்புடைய வன்முனிவர் வேள்விசெய்து விட்டகொடும்
பாம்பனைத்துந் தோளிற் பரித்தனையே" —இராமலிங்க அடிகள்.

சந்திரன் தக்கன் சாபத்தால் கலைகள் தேயப்பெற்று அஞ்சி எங்கும் புகலிடங் காணாது அரனிடம் அபயம் புக, அவனை அஞ்சேலென்று சிரமேற் சூடி யருள்புரிந்தனர். உலகங்களை எல்லாம் அழிப்பேனென்று வந்த கங்கையைச் சடையிலடக்கி உயிர்கட்குத் தண்ணருள் புரிந்தனர். இங்ஙனம் அரவு, பிறை, கங்கை இவற்றை முடித்துக்கொண்ட முழுமுதலாம் சிவபெருமான் சித்தங்குளிர மெய்ஞ்ஞானப் பொருளை முருகவேள் உபதேசித்தனர். அதனால் "ஞானமூர்த்தி" யாக விளங்குகின்றனர்.

இருவினை யிலாத .....இமையவர்குலேச:—

இருவினை: நல்வினை, தீவினை. இரண்டுங் கெட்டாலன்றி இன்பந் தோன்றாது. நல்வினை புரியினும் உயர்ந்த பிறவியெடுத்து பயனை யநுபவித்தே தீரவேண்டும். அது பொன் விலங்கு போன்றது. தீவினை இருப்பு விலங்கு போன்றது. தீவினையைச் செய்யாது விடுத்தும் நல்வினையை சிவார்ப்பணமாக பலாபேக்ஷையின்றி செய்தும் இருவினை யொப்பு என்ற நிலையை யடைதல் வேண்டும்.

தருவினைவிடாத என்பதற்கு கற்பக விருட்சத்தை விட்டு நீங்காதவர்கள் எனினும் பொருந்தும். தேவர்கள் பயங்கெடுத்து அவர்கட்கு வாழ்க்கையைத் தந்தாராதலின் "தியாகமூர்த்தி" யாக விளங்குகின்றனர்.

இருதனவிநோத:—

பரஞானம், அபரஞானம் என்ற இரு ஞானங்களையும் வள்ளியம்மையாருக்கு விளக்குவதே பொழுது போக்காகக் கொண்டு, உயிர்கள் இன்புறும் பொருட்டு இன்ப சக்தியுடன் மருவுகின்றனர்; ஆதலின், "போகமூர்த்தி" யாக விளங்குகின்றனர்.

முருகப் பெருமானுடைய எட்டு பண்புகளை இப்பாடல் விளக்குகின்றது. வெறுந் துதியாகவும் அமைந்துளது. தொடக்

கத்தில் இலக்குமியையும் இறுதியில் வள்ளிபிராட்டியாரையும் கூறுவதுடன் இடையில், பாடல், ஆடல், அருவி, வீரம், உபதேசம், கற்பம் ஆகிய பல மங்கல மொழிகள் வருவதால் இப்பாடல் மிகவும் மேன்மை தங்கியது. பாராயணத்திற்குரியது, மங்கல காலங்களில் பாடற் கேற்றது.

### கருத்துரை

வள்ளியம்மையாருடைய கணவராகிய வடிவேற் பெருமானை, திருமால் மருகராகவும், அறிவினாலறியத் தக்கவராகவும், அடியார் உளத்தில் உறைபவராகவும் கதிர்காமக் கடவுளாகவும், அவுண குலகாலராகவும், சிவகுருநாதராகவும், தேவதேவராகவும் அறிந்து உய்க.

## 185

அலகின் மாறு மாருத கலதி பூதவேதாளி
அடைவில் ஞாளி கோமாளி அறமீயா
அழிவு கோளி நாணுது புழுகு பூசி வாழ்மாதர்
அருளி லாத தோடோய மருளாகிப்
பலக லாக ராமேரு மலைக ராச லாவீசு
பருவ மேக மேதாரு வெனயாதும்
பரிவு றுத மாபாதர் வரிசை பாடி யோயாத
பரிசில் தேடி மாயாத படிபாராய்
இலகு வேலை நீள்வாடை யெரிகொள் வேலை மாசூரி
லெறியும் வேலை மாருத திறல்வீரா
இமய மாது பாகீர திநதி பால காசார
விறைவி கான மால்வேடர் சுதைபாகா
கலக வாரி போல்மோதி வடவை யாறு சூழ்சீத
கதிர காம மூதூரி லிளையோனே
கனக நாடு வீடாய கடவுள் யானை வாழ்வான
கருணை மேரு வேதேவர் பெருமாளே.

### பதவுரை

நீள் வாடை எரிகொள் வேலை - நீண்ட வடவைத் தீயையுடைய கடல் மீதும், மாசூரில் - பெரிய சூரபன்மன் மீதும், இலகு வேலை எறியும் வேலை

மாருத - விளங்குகின்ற வேலாயுதத்தைச் செலுத்திய தொழிலை விடாத, திறல் வீரா - ஆற்றல் வாய்ந்த வீரரே! இமய மாது - இமயமலை யீன்ற பார்வதி தேவிக்கும், பாகீரதி நதி - கங்கா நதிக்கும், பாலகா - திருக்குமாரரே! சாரல் இறைவி - மலைச்சாரலில் இருந்த தலைவியும், கான மால் வேடர் சுதை பாகா - காட்டில் வாழும் பெருமை பொருந்திய வேடர் குலப்பாவையுமாகிய வள்ளியம்மையின் கணவரே! கலக வாரி போல் மோதி-பேரொலிகொண்ட கடல் போல் அலைமோதிவரும், வடவை ஆறு சூழ் சீத - மாணிக்க கங்கை சூழ்ந்து குளிர்ச்சியுடைய, கதிர காம முது ஊரில் - கதிர்காமம் என்ற பழைய திருத்தலத்தில், இளையோனே - இளம்பூரணரே! கனக நாடு வீடு ஆய - பொன்னுலகத்தைத் தனக்கு வீடாகக் கொண்ட, கடவுள் யானை வாழ்வு ஆன - தேவயானையம்மைக்கு வாழ்வாக விளங்கும், கருணை மேருவே - கருணையில் மேருபோன்றவரே! தேவர் பெருமாளே - தேவர் போற்றும் பெருமையில் மிகுந்தவரே! அலகின்மாறு - விளக்குமாறு, மாருத கலதி - மாறுதல் இல்லாத மூதேவி, பூத - பூதம், வேதாளி - பேய், அடைவு இல் ஞாளி - முறையில்லாத நாய், கோமாளி - கோணங்கி, அறம் ஈயா அழிவு கோளி - தருமஞ் செய்யாமல் அழிவைக் கொள்ளுபவன், நாணுது - வெட்கம் இல்லாமல், புழுகு பூசி வாழ் - புனுகு வாசனையைப் பூசி வாழ்கின்ற, மாதர்-பொது மாதரின், அருள் இலாத தோள் தோய - அருள் இல்லாத தோள்களைச் சேர வேண்டி, மருள் ஆகி - காம மயக்கங் கொண்டு, பல கலா ஆகரா - பல கலைகளுக்கும் உறைவிடமானவரே! மேருமலை - கருணையில் மேருமலை போன்றவரே! கரா அசலா - மலை போன்ற புயத்தையுடையவரே! வீசு பருவ மேகமே - மழை வீசும் பருவ காலத்து மேகமே! தாரு - கற்பகமரமே! என - என்று கூறினும், யாதும் பரிவு உருத - ஒரு சிறிதும் அன்பு கொள்ளாத, மாபாதர் வரிசை பாடி - மகா பாதகர்களைப் புகழ்ந்து பாடி, ஓயாத பரிசில் தேடி - ஓய்வில்லாமல் பரிசுப் பொருள்களைத் தேடி, மாயாதபடி பாராய் - அடியேன் இறந்து போகா வண்ணம் திருக்கண்ணோக்கி யருளுவீராக.

## பொழிப்புரை

**பெரிய வடவைத்தீயை யுடைய கடல் மீதும், மாமரமாய் நின்ற சூரபன்மன்மீதும், விளங்குகின்ற வேலாயுதத்தைவிடுத்த தொழிலை விடாத வலிய வீரமூர்த்தியே! பருவதராஜ குமாரிக்கும், கங்கா நதிக்கும் குமாரரே! சாரல் மிகுந்த மலையில் இருந்த தலைவியும், கானக வேடர்களின் குமாரியுமான வள்ளி நாயகியைப் பக்கத்தில் கொண்டவரே! பேரொலியுடைய சமுத்திரம் போல் அலை மோதி வருகின்ற, மாணிக்ககங்கை சூழ்ந்துள்ள, கதிர்காமமாகிய பழைய திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள இளம்பூரணரே! பொன்னுலகத்தில் வாழும் தேவயானையம்மைக்கு வாழ்வான கருணை மேருவே! தேவர்கள் போற்றும்**

பெருமிதமுடையவரே! விளக்குமாறு, மாறுதல் இல்லாத மூதேவி, பூதம், பேய், முறையில்லாத நாய், கோணங்கி, தருமஞ் செய்யாமல் அழிவைக் கொள்ளுபவன், வெட்கமில்லாமல் புனுகு வாசனையைப் பூசி வாழ்கின்ற பொது மாதர்களின் அன்பில்லாத தோள்களைச் சேரவேண்டி காம மயக்கங் கொண்டு, அதற்காகப் பொருள் தேடவேண்டி, பலகலைகளுக்கும் இருப்பிடமானவனே! கருணையில் மேருமலை போன்றவனே! புய மலையையுடைவனே! பருவ மழை பொழியும் மேகம் போன்றவனே! என்று கூறினாலும் ஒரு சிறிதும் இரக்கங்கொள்ளாத மகாபாதகர்களைப் புகழ்ந்துபாடி ஓய்வில்லாமல் பரிசுப் பொருள்களைத்தேடி அலைபவன் ஆகிய அடியேன் இறந்து போகா வண்ணம் திருக்கண்ணோக்கி யருளுவீராக.

## விரிவுரை

அலகின்மாறு:—

விளக்குமாறு போல் கீழானவன். விளக்குமாறு ஒரு மூலையில் ஒதுங்கிக் கிடக்கின்ற பொருள். அதுபோல் ஆன்றோர்களால் ஒதுக்கப் பெற்றவன்.

மாறுத கலதி:—

கலதி—மூதேவி. எப்போதும் ஒன்றுபோல் மாறுதல் இல்லாமல் இருக்கின்ற மூதேவி. (தூங்குமூஞ்சி.)

பூதவேதாளி:—

பூதம் போன்றவன். பேய் போன்றவன். உடம்பினால் பருத்தது பூதம். நிலைபேறு இன்றி அலைவது பேய்.

அடைவில் ஞாளி:—

ஞாளி—நாய். நல்லோர் பொல்லோர் தெரியாமல் குரைக்கும் நாய் போன்றவன்.

"சீறிஞாளிபோல் ஏறிவீழ்வதாய்" —(அறுகுநுனி) திருப்புகழ்

அறமீயா அழிவுகோளி:—

கோளி—கொள்ளுபவன். தருமஞ் செய்யாது அழிவுத் தன்மையைக் கொள்ளுபவன்.

மருளாகி:—

மருள்—மயக்கம். பொது மாதர்களைத் தழுவ வேண்டும் என்ற மயக்கம்பூண்டு, தனவந்தரிடம் போய் அவர்களைப் புகழ்ந்துபாடிப் பலர் அழிகின்றார்கள்.

பல கலாகரா:—

ஒரு கலையுந் தெரியாத முழுமூடனைப் பார்த்துப் பல கலைகட்கும் உறைவிடமானவனே என்று பாடுவார்கள்.

மேரு:—

கருணையே யில்லாத உலோபியை "நீ கருணையில் மேரு போன்றவன்" என்று புகழ்ந்து பாடுவார்கள்.

கராசலா:—

மெலிந்த தோள்களையுடையவனைப் பார்த்து "மலை போன்ற புயத்தையுடையவனே!" என்று பாடுவார்கள்.

கல்லாத ஒருவனையான் கற்ற யென்றேன்
காடெறியும் அவனைநா டாள்வாய் என்றேன்
பொல்லாத வொருவனைநான் நல்லாய் என்றேன்
போர்முகத்தை அறியானைப் புலியே றென்றேன்
மல்லாரும் புயம்என்றேன் சூம்பல்தோளை
வழங்காத கையனையான் வள்ளால் என்றேன்
இல்லாது சொன்னேனுக் கில்லை யென்றான்
யானும் என்றன் குற்றத்தால் ஏகின்றேனே.
—இராமச்சந்திர கவிராயர்.

யாதும் பரிவுறாத மாபாதர்:—

தமிழ்ப் புலவர்கள் எத்தனை எத்தனை விதமாக விசித்திரம் விசித்திரமாகக் கவிபாடினாலும், ஒரு சிறிதும் இரக்கம் காட்டாமல், போ என்று சீறி விழுந்து, கடிக்கின்ற மாதிரிபேசி அடிக்க வருவார்கள். அதனால் உலோபியரை மாபாதர் என்றார்.

பரிசில் தேடி மாயாதபடி பாராய்:—

"முருகா! வாழ்நாள் முழுவதும், பொருளாளரைத் தேடிச் சென்று, அவர்களிடம் பரிசுப் பொருள்களை நாடி உழன்று மாண்டு போகாத வண்ணம் தேவரீர் அருட் கண்பார்வையால் பார்த்தருள வேண்டும்" என்று முறையிடுகின்றார்.

வாடை எரி:—

கடல்நீரை மிகுதியாகாத வண்ணம் ஒழுங்குபடுத்துவது வடவைக்கனல்.

வேலைமாறாத திறல் வீரா :—

முருகவேள் அருகில் எப்போதும் வேல் விலகாமல் விளங்கும்.

"வேலை மறவாத கரதலா விசாகா"
—(இரதமான வாயூறல்) திருப்புகழ்.

கலகவாரி போல்மோதி வடவையாறு சூழ்சீத கதிரகாமம்:

வடவையாறு—மாணிக்க கங்கை.

ஒரு அலை மற்றொரு அலையுடன் கலகம் புரிவது போல் மாறுபட்டு ஆரவாரத்துடன் மோதி வருகின்ற, கடல் புரண்டு வருவதுபோல் பெருக்கெடுத்து வருகின்ற நதி மாணிக்க கங்கை. இதன் கரையில் வானளாவிய குளிர்தருக்களுடன் கூடி விளங்குவது கதிர்காமம்.

கருத்துரை

கதிர்காமக்கடவுளே! மனிதரைப் பாடியலையாவண்ணம் கண்பார்த்தருள்வீர்.

**186**

உடுக்கத் துகில்வேணு நீள்பசி
யவிக்கக் கனபானம் வேணுநல்
ஒளிக்குப் புனலாடை வேணுமெய் யுறுநோயை
ஒழிக்கப் பரிகாரம் வேணுமுள்
இருக்கச் சிறுநாரி வேணுமொர்
படுக்கத் தனிவீடு வேணுமிவ் வகையாவுங்

கிடைத்துக் க்ருஹவாசி யாகிய
மயக்கக் கடலாடி நீடிய
கிளைக்குப் பரிபால னுயுயி ரவமேபோம்
க்ருபைச்சித் தமுஞான போதமு
மழைத்துத் தரவேணு மூழ்பவ
கிரிக்குட் சுழல்வேனை யாளுவ தொருநாளே

குடக்குச் சிலதூதர் தேடுக
வடக்குச் சிலதூதர் நாடுக
குணக்குச் சிலதூதர் தேடுக வெனமேவிக்
குறிப்பிற் குறிகாணு மாருதி
யினித்தெற் கொருதூது போவது
குறிப்பிற் குறிபோன போதிலும் வரலாமோ

அடிக்குத் திரகார ராகிய
வரக்கர்க் கிளையாத தீரனு
மலைக்கப் புறமேவி மாதுறு வனமேசென்
றருட்பொற் றிருவாழி மோதிர
மளித்துற் றவர்மேல் மனோகர
மளித்துக் கதிர்காம மேவிய பெருமாளே.

## பதவுரை

குடக்கு சில தூதர் தேடுக - மேற்கே சில தூதர்கள் தேட வேண்டும் என்றும், வடக்கு சில தூதர் தேடுக - வடக்கே சில தூதர்கள் தேட வேண்டும் என்றும், குணக்கு சில தூதர்தேடுக என - கிழக்கே சில தூதர் தேட வேண்டும் என்றும், மேவி - அனுப்பி வைத்து, குறிப்பில் குறி காணு மாருதி இனி - குறிப்பினால் குறிப்பை யுணரவல்ல அநுமன் இனி, தெற்கு ஒரு தூது போவது - தென் திசைக்கு ஒப்பற்ற தூதனாகப் போகவேண்டியது; குறிப்பில் குறி போன போதிலும் வரலாமோ-சொல்லி யனுப்பும் குறிப்பின் விவரப் படி குறித்த பொருள் காணமுடியாத போதிலும் வீணே திரும்பி வரலாமோ? வருதல் நன்றன்று என்று சொல்லியனுப்ப, அடிகுத்திரகாரர் ஆகிய - அடி யுடன் வஞ்சகர்களாகிய, அரக்கர்க்கு இளையாத தீரனும் - அரக்கர்களிடம் இளைக்காத தீரனாய், அலைக்கு அப்புறம் மேவி - கடலைக் கடந்து அப்புறம் இலங்கைக்குச் சென்று, மாது உறு வனமே சென்று - சீதாதேவியிருந்த அசோக வனத்தை யடைந்து, அருள் பொன் திரு ஆழி மோதிரம் - ஸ்ரீராமபிரான் தந்தருளிய பொன்னாலாகிய அழகிய மோதிரத்தைச் சீதை யிடம், அளித்து உற்றவர் மேல் - கொடுத்துவிட்டுத் திரும்பிவந்த அந்த அநுமாருக்கு, மனோகரம் அளித்து - அன்புடன் அருள்புரிந்து, கதிர்காமம் மேவிய - கதிர்காமத்தில் வீற்றிருக்கும், பெருமாளே - பெருமையிற் சிறந்த வரே! உடுக்க துகில் வேணும் - உடுப்பதற்கு உடைகள் வேண்டும்; நீள்பசி அவிக்க - பெரிய பசியைத் தணிக்க, கன பானம் வேணும் - உயர்ந்த சுவைநீர் வேண்டும்; நல் ஒளிக்கு - தேகம் நல்ல ஒளிதரும் பொருட்டு, புனல் - நீரும், ஆடை வேணும் - ஆடையும் வேண்டும்; மெய் உறுநோயை ஒழிக்க - உடம்பில் வந்த நோய்களை யகற்றும் பொருட்டு, பரிகாரம் வேண்டும் - மருந்துகள் வேண்டும், உள் இருக்க சிறு நாரி வேணும் - வீட்டுக்குள் இருக்க இளமையான மனைவி வேண்டும்; படுக்க ஓர் தனி வீடு வேணும் - படுப்பதற்கு ஒரு தனி வீடும் வேண்டும், இவ்வகை யாவும் கிடைத்து - இந்த வகையான நலன்கள் யாவும் அடியேனுக்குக் கிடைக்கப் பெற்று, க்ருஹ வாசியாகிய - குடும்பத்தனாகி, மயக்க கடல் ஆடி - அந்த வாழ்வு என்ற மயக்கக் கடலில் முழுகி, நீடிய கிளைக்கு பரிபாலன் ஆய் - பெருத்த சுற்றத்தார்களைக் காப்பாற்றுபவனாயிருந்து, உயிர் அவமே போம்- முடிவில் உயிர் வீணாகக் கழிந்து போகும்; ஆதலால் தேவரீர், க்ருபை சித்த

மும் - உமது கருணை உள்ளத்தையும், ஞான போதமும் - சிவஞான போதத்தையும், அழைத்து தரவேணும் - அடியேனை அழைத்துத் தந்தருள வேண்டும்; ஊழ்பவ கிரிக்கு உள் - ஊழ்வினையால் வரும் பிறப்பு என்ற மலைச் சூழலில், சுழல்வேனை ஆளுவது ஒருநாளே - சுழல்கின்ற அடியேனை ஆட் கொள்ளும் நாள் ஒன்று உளதாகுமோ?

## பொழிப்புரை

மேற்கே சில தூதர்கள் தேடவேண்டும் என்றும், வடக்கே சில தூதர்கள் தேட வேண்டும் என்றும், கிழக்கே சில தூதர் கள் தேட வேண்டும் என்றும், அனுப்பி வைத்து, குறிப்பில் குறிப்பறிகின்ற ஆஞ்சனேயரை இனி தெற்கே ஒரு தூதனைப் போக வேண்டியது; சொல்லியனுப்பும் குறிப்பு விவரத்தின்படி குறித்த பொருள் கிடைத்தல் தவறிப் போன போதிலும் திரும்பி வீணேவரலாமோ? வருதல் நன்றல்ல (என்று சுக்ரீவன் சொல்லியனுப்ப) அடியோடு வஞ்சகர்களாகிய அரக்கர்களிடம் தோற்று இளைக்காத தீரனாய்க் கடலைக்கடந்து அப்புறம் இலங்கைக்குப் போய், சீதையிருந்த அசோகவனம் புகுந்து, ஸ்ரீராமர் தந்த அழகிய பொன் மோதிரத்தைக் கொடுத்துத் திரும்பிய அநுமனுக்கு அன்புடன் அருள்புரிந்து கதிர்காமத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமிதமுடையவரே! உடுப்பதற்கு உடை வேண்டும்; பெரிய பசியைத் தணிப்பதற்குக் கெட்டியான பானகம் முதலிய சுவை நீர் வேண்டும்; உடலின் நல்ல ஒளிக்கு நீரும் ஆடையும் வேண்டும். உடலுக்கு உற்ற நோய்களை ஒழிப்பதற்கு மருந்துகள் வேண்டும்; வீட்டுக்குள் இருப்பதற்கு இளம்மனைவி வேண்டும்; படுப்பதற்கு ஒரு தனி வீடு வேண்டும். இவ்வாறான நலன்கள் யாவும் கிடைத்துக் குடும்பத்தனாகி, அந்த வாழ்வு என்ற மயக் கக்கடலில் முழுகி, பெரிய சுற்றத்தாரைக் காப்பவனாயிருந்து, முடிவில் உயிர் வீணே அழிந்து போம்; ஆதலால் உமது கருணை உள்ளத்தையும், சிவஞான போதத்தையும் அடியேனை அழைத்துத் தந்தருள வேண்டும்; ஊழ்வினையாகிய மலைச்சூழலில் சுழலுகின்ற என்னை ஆண்டு அருளும் நாள் ஒன்று கிடைக்குமோ?

## விரிவுரை

இந்தத் திருப்புகழில் இல்லறத்தில் வாழ்பவனுக்கு என்ன என்ன தேவையோ அவை யாவும் குறிக்கப்படுகின்றன.

உடுக்கத்துகில் வேணும்:—

மனித வாழ்க்கைக்கு முதல் தேவை உடை. உண்டியின்றி இருக்கலாம். உடையின்றி ஒரு கணமும் இருக்க முடியாது. "சிறப்புடைப் பொருளை முந்துறக் கிளத்தல்" என்ற சூத்திரப் படி உடையை முதலில் மொழிகின்றார்.

நீள்பசி அவிக்கக் கனபானம் வேணும்:—

பானம்—பருகும் நீர். கனபானம்—பானகம், பால், மோர் முதலிய குடிநீர் வகை. இது சிறிது கெட்டியாக வேணும் என்று கேட்கின்றார்.

நீள்பசியை—பெரிய பசியை அவிப்பதற்குச் சிறந்த சுவை நீர் வகைகள் வேண்டும்.

நல்லொளிக்குப் புனலாடை வேணும்:—

உடம்பு நல்ல ஒளியாக விளங்கும் பொருட்டு குளிக்கநீரும், நல்ல ஆடையும் வேண்டும்.

ஏற்கனவே துகில் என்று வந்துவிட்டபடியால் "புனலாட வேண்டும்" என்றிருக்க வேண்டும் என்று தோன்றுகின்றது.

மெய்யுறு நோயை ஒழிக்கப் பரிகாரம் வேணும்:—

உடம்புக்குற்ற நோய்களை விலக்க மருந்துகள் வேண்டும். மருத்துவம் வாழ்க்கைக்கு இன்றியமையாதது. இது நான்கு உபவேதங்களுள் ஒன்று. ஆயுள் வேதம் எனப்படும்.

உள் இருக்கச் சிறு நாரி வேணும்:—

வீட்டுக்குள் இருக்கும் பொருட்டு இளமையான மனைவி வேண்டும் என்கின்றார். சிறிது வயது முதிர்ந்த மனைவியினால் இன்பம் விளையாது என்ற குறிப்பையும் காண்க.

படுக்கத் தனி வீடு வேணும்:—

இளம் மனைவியிருந்தால் மட்டும் போதாது; அவளுந் தானும் வாழச் சிறு வீடு வேண்டும் என்கின்றார். துணி, உணவு, நீர், மருந்து, மனைவி, வீடு என்ற ஆறு பொருள்கள் வேண்டும் என்கின்றார்.

இவ்வகையாவும் கிடைத்து க்ருஹ வாசியாகிய மயக்கக் கடலாடி:—

மேலே கூறிய அனைத்துங் கிடைத்து இல்லற வாசியான பின், அவ்வாழ்வில் மயங்கி, மயக்கமாகிய கடலில் முழுகித் துன்புறுகின்றேன்.

நீடிய கிளைக்குப் பரிபாலனுயிர் அவமே போம்:—

மாமன், மைத்துனன், சகலன், மருகன் என்று பலவாருகப் பெருகிக்கிளைத்த சுற்றத்தார்களுக்குத் தான் காப்பவனுக இருந்து, வாழ்ந்து, பிறகு அவமே செத்து மடிகின்ருர்கள் பலர்.

க்ருபைச் சித்தமும் ஞான போதமும்:—

முருகனுடைய கருணையுள்ளமும் சிவஞான போதமும் வேண்டும் என்கிருர்.

அழைத்துத்தர வேணும்:—

முருகா! நீ என்னை அழைத்துக் கருணையுடன் மேலே கூறிய இரண்டையுந்தந்தருள வேண்டும்.

குடக்குச் சில தூதர் தேடுக:—

இராமாயணத்தில் நாடவிட்ட படலத்தை இந்த அடி குறிக்கின்றது.

சுக்ரீவன், சீதையைத்தேடும் பொருட்டு, மேற்கே சுஷேணனையும், வடக்கே சதவரியையும், கிழக்கே வினதனையும், தெற்கே, அநுமான், ஜாம்பவான், நீலன், அங்கதன் முதலியோரையும் ஒரு மாதத்துக்குள் திரும்பவேணும் என்று தவணை வைத்து அனுப்பினன்.

குறிப்பிற் குறி காணு மாருதி:—

> "குறிப்பிற் குறிப்புணர்வாரை உறுப்பினுள்
> யாது கொடுத்துங் கொளல்"

என்ற திருவள்ளுவர் வாக்குக்கு இலக்கானவர் அநுமார். இவரிடம் சீதாதேவியின் அடையாளங்களைக்கூறி, கணையாழியையும் ஸ்ரீராமர் கொடுத்து அனுப்பினர்.

அநுமார் தென்கடல் வரை தேடி, சம்பாதி கூறிய வார்த்தையால், கடல்கடந்து, இலங்கை சென்று, அசோகவனத்தில் தேவியைக்கண்டு, ஸ்ரீராமர் கூறிய அடையாளங்களைக் கூறி, கணையாழியைத் தந்தார்.

பின்னர் அசோக வனத்தை யழித்து, இராவணனைக்கண்டு அறவுரை கூறி, இலங்கையை எரியூட்டித் திரும்பும்போது, இலங்கையின் தென்திசையிலுள்ள கதிர்காமம் போய், மாணிக்க கங்கையில் முழுகி கதிர்காம வேலவரை வழிபட்டு

அவருடைய அருள் பெற்ருர். இதனை அருணகிரிநாதர் இங்கே குறிப்பிடுகின்ருர்.

"அருட்பொற்றிரு வாழி மோதிரம்
அளித்துற்றவர் மேல் மனோகரம்
அளித்துக் கதிர்காம மேவிய பெருமாளே"

## கருத்துரை

கதிர்காமக்கடவுளே! உனது கருணையுள்ளத்தையும் சிவஞான போதத்தையும் எனக்குத்தந்தருள்வீர்.

## 187

எதிரி லாதபத்தி தனைமேவி
இனிய தாணினைப்பை இருபோதும்
இதய வாரிதிக்குள் உறவாகி
எனதுளே சிறக்க அருள்வாயே
கதிர காமவெற்பி லுறைவோனே
கனக மேருவொத்த புயவீரா
மதுரவாணியுற்ற கழலோனே
வழுதி கூனிமிர்தத பெருமாளே.

## பதவுரை

கதிரகாம வெற்பில் உறைவோனே - கதிர்காமம் என்ற திருமலையில் எழுந்தருளி வாழ்பவரே! கனகமேரு ஒத்த - பொன்மேருகிரியை ஒத்த, புய வீரா - தோள்களையுடைய வீரமூர்த்தியே! மதுரவாணி உற்ற - இனிய மொழியையுடைய கலைமகள் வந்து போற்றும், கழலோனே - திருவடியை யுடையவரே! வழுதி கூன் நிமிர்த்த பெருமாளே - பாண்டியனுடைய கூனை திருஞானசம்பந்தரை யதிஷ்டித்து நிமிர்த்தி யருளிய பெருமையின் மிக்க வரே! எதிர் இலாத பத்திதனை மேவி - சமான மில்லாத அன்பையுடைய வனுகி, இனிய தாள் நினைப்பை - இனிமையைத் தரும் தேவரீருடைய திரு வடித் தியானத்தை, இருபோதும் - இரவும் பகலும், இதய வாரிதிக்குள் உறவு ஆகி - இருதயமாகிய கடலின் கண்ணே பதிய வைத்து, எனது உளே சிறக்க - அடியேனுடைய உள்ளத்திலே சிறப்பு அடைய, அருள் வாயே - திருவருள்புரிவீர்.

## பொழிப்புரை

கதிர்காம மலையில் வாழ்பவரே! பொன் மேருகிரி போன்ற தோள்களையுடைய வீரமூர்த்தியே! இன் சொற்களையுடைய கலை

மகள் வணங்கும் திருவடியினரே! திருஞான சம்பந்தரை அதிஷ்டித்து பாண்டியனுடைய கூனை நிமிர்த்த பெருமிதமுடையவரே! சமானமில்லாத அன்பை அடியேன் உடையவனுகி, தேவரீருடைய திருவடித்தியானத்தை இரவும் பகலும் ஒழியாது உள்ளமாகிய கடலில் கொண்டு உறவு செய்து எனக்குள் அது சிறக்குமாறு திருவருள் செய்வீர்.

## விரிவுரை

எதிரிலாத பத்தி:—

இறைவனை பக்தி நெறியாலேயே காணமுடியும். பக்தி என்பதும் அன்பு என்பதும் ஒன்றே. பக்தி நெறியை யன்றி வேறு நெறிகள் கடினம். தவம் யோகம் விரதம் இவைகள் பக்தியைப் போல் சுலபமான நெறிகள் அல்ல.

> ''கருமமா தவஞ்செபஞ்சொல் காசறு சமாதி ஞானம்
> புரிபவர் வசமதாகிப் பொருந்திடோம் புரிவொன்றின்றி
> திரிவறும் அன்புசெய்வார் வசமதாய்ச் சேர்ந்து நிற்போம்
> உரைசெய்வோம் அவர்முன் எய்தி அவருளத் துறைவோம்
> என்றும்''

என்று வாயு சங்கிதையில் சிவபெருமானே கூறுகின்றார்.

> ''பக்தி வலையில் படுவோன் காண்க''

> ''பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்
> சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனை ஆண்ட அத்தன்''
> —மணிவாசகர்.

> ''அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே'' —திருவருட்பா.

கடவுள் அன்பில் விளைகின்ற அமுதம் என்று அறிக. மலரில் உள்ள மணத்தைக் கரத்தினுல் தொட்டும், கண்ணினுல் கண்டும், காதால் கேட்டும், நாவினுல் சுவைத்தும் அறிய முடியாதல்லவா? நாசியினுல் மோந்து அறிதலே முறை. அது போல் இறைவனை அன்பு என்ற ஒன்ருலேயே அறிய முடியும்.

''கடவுளை நான் காணமுடியுமா?'' என்று ஒருவர் ஒரு பெரியவரைக் கேட்டார்.

அப்பெரியவர் ''காணமுடியும்'' என்ருர். அவர் ''எவ்வாறு காணமுடியும்'' என்ருர்.

'தாய்க்குத் தன் அருமைக் குழந்தை மேல் உள்ள அன்பு' 'லோபிக்குப் பணத்தின் மீதுள்ள ஆசை'

'கற்புடை மங்கை கணவன் மீது வைத்த காதல்'

இந்த மூன்றும் ஒன்றுபட்டு நின்ற அன்பு உனக்குக் கடவுள் மீது இருக்குமானால் ஒரு கணத்தில் அவரைக் காணலாம்'' என்று பெரியவர் பக ்தனர். அதுதான் ''எதிரிலாத பத்தி'' யாகும்.

கண்ணப்பர் காளத்தியப்பர் மீது வைத்த அன்புக்குச் சமான மில்லை. ''கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்'' என்கின்றார் மாணிக்கவாசகர்.

பத்தியே முத்தியைத்தரும் என்கின்றார் அருணகிரிநாதர் வேளைக்காரன் வகுப்பில்.

''ஆனபயபத்தி வழிபாடு பெறுமுத்தி''

இனியதாள் நினைப்பை:—

இறைவனுடைய இணையடிமலர் கரும்பினும் கற்கண்டினும், கனியினும் இனிமையானது.

கனியினுங் கட்டிபட்ட கரும்பினும்
பனிமலர்க் குழற் பாவை நல்லாரினுந்
தனிமுடி கவித்தாளு மரசினும்
இனியன் தன்னடைந் தார்க்கிடை மருதனே. —அப்பர்.

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே. —அப்பர்.

பிறவி வெப்பத்தை மாற்றும் குளிர்ந்த நிழல் பெருமானுடைய திருவடி நிழல். அது சித்தத்தில் தித்திக்கும் தீஞ் சுவையுடையது.

இருபோதும்:—

இருபோது என்பதற்கு காலையும் மாலையும் என்று பொருள் செய்யக்கூடாது. காலை மாலையன்றி மற்ற நேரங்களிலும் இறைவனை மறத்தல் கூடாது. ஆகவே இரவும் பகலும் என்று கூறுதலே சிறப்பு.

'' இரவும் பகலும் பிரியாது வணங்குவன் எப்பொழுதும் ''
—அப்பர்.

இதய வாரிதிக்குள் உறவாகி:—

வாரிதி—கடல். உள்ளத்தைக் கடல் என்று உருவகித்தனர். கடல் ஆழமுடையது. அதுபோல் உள்ளமும் ஆழ

முடையது. இதயமாகிய கடலுள் இறைவன் திருவடியாகிய மந்தரகிரி சேர்வதால் திருவருளமுதம் தோன்றும்.

ஏனதுளே சிறக்க அருள்வாயே:—

திருவடித் தியானம் உள்ளத்தில் சிறப்பாக இருத்தல் வேண்டும். "நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்" ஆதலின் நன்று நினைத்து இறைவனை உள்ளக் கோயிலில் எழுந்தருளப் புரிவார் உய்வு பெறுவார்.

கதிரகாம வெற்பில் உறைவோனே:—

கதிர்காமம் என்பது மிகவும் புனிதமான திருத்தலம். இது ஈழ நாட்டில் இருப்பது. மாணிக்க கங்கை அருகில் ஓடுகின்றது. அந்நதியில் இனிய தண்ணீர் வெள்ளம் தூய்மையாக எப்பொழுதும் ஓடிக்கொண்டிருக்கும்.

முருகவேள் சூரசங்காரத்தின் பொருட்டு போர்க்கோலத்துடன் ஏமகூடம் என்ற மலையில் படைகளுடன் தங்கினர். அத்தலமே கதிர்காமம் என்க. பாசறை: போர்க்கோலமூர்த்தி; என்று இங்கு திரைக்கே வணக்கஞ் செலுத்துவது வழக்கம். இத்தலத்தில் பக்த கோடிகள் கற்பூர தீவட்டியுடன் அன்பு வெள்ளம் பொங்கிக் கரைபுரண்டு ஓட வழிபடுவார்கள்.

கனகமேரு ஒத்த புயவீரா:—

முருகவேளுடைய புயங்கள் பொன்மேருகிரி போன்ற திட்பமுடையது. உலகங்களைக் காக்கின்ற கடவுளுக்குத் தோள் வலி சிறப்புடையது. அதனாலேதான் "ஆறிருதடந்தோள் வாழ்க" என்று முதலில் தோள்களை வாழ்த்துகின்றனர் கச்சியப்பர்.

இராமர் மிதிலை சென்றபோது அங்குள்ள அறிவுள்ள பெண்கள் அவருடைய தோளை முதலில் நோக்கினர்களாம்.

"தோள்கண்டார் தோளேகண்டார்" —கம்பர்.

"அலகிலவுணரைக் கொன்ற தோளென" —திருப்புகழ்.

மதுரவாணியுற்ற கழலோனே:—

இனிய மொழியை யுடையவள் கலைமகள், "மதுரவாணி தானுட" என்று பிறிதொரு திருப்புகழிலும் கூறினர்.

இனிய மொழியே உலகத்தைக் கவர்ந்து உய்விக்கும். எத்துணைப் பெரிய முரடர்கட்கும் இனிமையாகக் கூறினால் எடுபடும்.

கலைமகள் மதுர மொழியால் உலகிற்கு கலை நலத்தை உணர்த்துகின்றனள். முருகக் கடவுள் மதுர மொழியால் அகில உலகங் கட்கும் அருட்கலை நலத்தை உணர்த்துகின்றனர். அதனால் வாணி வந்து பணிகின்ருள்.

"மதுரமொழியா லுல கனைத்தையு முணர்த்துமவன்
வடவனல நேர்கொடிய குக்குட முயர்த்த குகன்"—திருவகுப்பு (6)

வழுதி கூனிமிர்த்த பெருமாளே:—

முருகவேள் சிவமூர்த்தமே யாகும்.

"ஈசனே யவன் ஆடலால் மதலையாயினன் காண்"
"........அநாதியாய் நங்கட்கெல்லாம்
மூலகாரணமாம் வள்ளல் மூவிருமுகங் கொண்டுற்ருன்"
"மாலயன் றனக்கும் ஏனைவானவர் தமக்கும் எட்டா
மூலகாரணமாய் நின்ற மூர்த்தியிம் மூர்த்தியன்ருே"
—கந்தபுராணம்.

ஆகவே சிவமூர்த்தியோ பிறப் பிறப்பில்லாதவர். சிவமே முருகவேள் என்றமையால் முருகனுக்கும் பிறப்பிறப்பில்லை என்பது பெறப்பட்டது.

"பெம்மான் முருகன் பிறவான் இறவான்" —அநுபூதி (12)

ஆதலினுல் முருகன் திருஞான சம்பந்தராக அவதரித்தார் என்பது பதியிலக்கணத்துக்கு முரணுகும். அங்ஙனம் தெய்வச் சேக்கிழாரும் செப்பினுரில்லை.

எனவே முருகவேள் திருவருள் திருஞானசம்பந்தரை அதிஷ்டித்து மதுரையில் சைவ சமயத் தாபனம் நிகழ்ந்தது. அதனுல் முருகவேள் மீது அதனை வைத்து அருணகிரிநாதர் பல இடங்களில் இங்ஙனம் கூறுகின்ருர் என உணர்க.

கருத்துரை

கதிர்காமவேலவரே! வீரப்புயாசலரே! வாணிதொழும் வள்ளலே! சைவசமயத்தாபகரே! ஒப்பற்ற அன்புடன் இடையருது உமது திருவடியை நினைக்க அருள்புரிவீர்.

**188**

கடகட கருவிகள் தபவகி ரதிர்கதிர்
காமத் தரங்கம் மலைவீரா
கனகத நககுலி புணரித குணகுக
காமத் தனஞ்சம் புயனேடை

வடசிக ரகிரித விடுபட நடமிடு
மாவிற் புகுங்கந் தவழாது
வழிவழி தமரென வழிபடு கிலனென
வாவிக் கினம்பொன் றிடுமோதான்

அடவியி ருடியப்பி நவகும ரியடிமை
யாயப் புனஞ்சென் றயர்வோனே
அயிலவ சமுடன தத்திரி தருகவி
யாளப் புயங்கொண் டருள்வோனே

இடமொரு மரகத மயில்மிசை வடிவுள
ஏழைக் கிடங்கண் டவர்வாழ்வே
இதமொழி பகரினு மதமொழி பகரினும்
ஏழைக் கிரங்கும் பெருமாளே.

## பதவுரை

கட கட கருவிகள் தப - கட கட என்று ஒலிக்கும் பறை முதலிய கருவிகளின் ஒலியும் அடங்குமாறு, வகிர் அதிர் - கோடுகளையுடைய புலிகள் ஒலி செய்கின்ற, கதிர் காம - கதிர் காமத்து ஈசனே! தரங்கம் அலை வீரா - அலைகளுடன் கூடிய கடலை அலைத்து வருத்திய வீரமூர்த்தியே! கன கத - பெருமையும் கோபமும் பொருந்திய, நககுலி - மலையை யொத்த யானை வளர்த்த தேவயானையை, புணர் இதகுண - மருவிய இனிய குணங்களையுடையவரே! குக - இதயகுகையில் வாழ்பவரே! காம அத்தன் - மன்மதனுடைய பிதாவாகிய திருமால், அஞ்ச - பயப்படவும், அம்புயன் ஓட - தாமரை மலரில் வாழும் பிரமன் ஓடவும், வடசிகரகிரி தவிடுபட - வடக்கேயுள்ள மேருமலை தவிடுபொடி படவும், நடம் இடு - நடனஞ் செய்கின்ற, மாவில் - மயிலாகிய குதிரை மீது, புகும் கந்த - ஆரோகணித்து வருகின்ற கந்தக்கடவுளே! அடவி இருடி - கானகத்தில் தவஞ் செய்திருந்த சிவ முனிவரின், அபிநவ குமரி - புதுமையான புதல்வியாகிய வள்ளி நாயகிக்கு, அடிமை ஆய் - அடிமையாகி, அ புனம் சென்று அயர்வோனே அந்தத் தினைப் புனத்திற்குச் சென்று தளர்ந்தவரே, அவசமுடன் - வெயிலால் மயக்கமுடன், அததி திரிதரு - அந்தச் சமயத்தில் போய்க் கொண்டிருந்த, கவி ஆள - கவியாகிய பொய்யா மொழிப் புலவரை ஆட்கொண்டருளும் பொருட்டு, அயில் புயம் கொண்டு அருள்வோனே - வேலைத் தோளில் ஏந்திச் சென்று அருள்புரிந்தவரே! இடம் ஒரு மரகத மயில் மிசை வடிவு உள - தமது இடப் பாகத்தில் மரகத மயிலுக்கு மேலான அழகுள்ள, ஏழைக்கு இடம் கண்டவர் வாழ்வே - பார்வதி தேவிக்கு இடந்தந்த சிவ

பெருமானுக்குச் செல்வக் குமாரரே! இத மொழி பகரினும் - அடியேன் இனிமையான மொழிகளைக் கூறினாலும், மத மொழி பகரினும் - சிறிது செருக்குடன் பேசினாலும், ஏழைக்கு இரங்கும் - இந்த ஏழையினிடத்தில் இரக்கங் காட்டும், பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! வழாது - தவறுதல் இல்லாமல், வழிவழி தமர் என - வழிவழியாக உறவினன் என்னும்படி, வழிபடுகிலன் - அடியேன் தேவரீரை வழிபடுகின்றிலேன்; என் அவா-எனது மூவாசைகளும், விக்கினம் - மற்றுள்ள தடைகளும், பொன்றிடுமோதான் - அழிந்து ஒழியுமோ?

## பொழிப்புரை

கட கட என்று ஒலிக்கும் பறை முதலிய கருவிகளின் ஒலி அடங்குமாறு ஒலிக்கின்ற புலிகள் வாழ்கின்ற கதிர்காமத்து ஆண்டவரே! கடலை வருத்திய வீர மூர்த்தியே! பெருமையும் கோபமும் உடைய மலை போன்ற ஐராவத யானை வளர்த்த தெய்வயானையைத் தழுவுகின்ற இனிய குணத்தையுடைய குக மூர்த்தியே! மன்மதனுடைய பிதாவாகிய திருமால் அஞ்சவும், தாமரையில் வாழும் பிர்மன் ஓடவும், வடமேருகிரி தவிடு பொடியாகவும் நடிக்கின்ற மயிலின் மீது ஏறும் கந்தக் கடவுளே! கானகத்தில் தவஞ் செய்த சிவமுனிவரின் புதுமையான புதல்வியாகிய வள்ளி நாயகிக்கு அடிமையாகி அத்தினைப்புனம் போய் தளர்ச்சியுற்றவரே! வெயிலின் கொடுமையால் மயக்கமுற்று அத்தருணத்தில் சென்று கொண்டிருந்த பொய்யா மொழிப் புலவரை ஆட்கொண்டருளும் பொருட்டு வேலைத் தோளில் ஏந்திச் சென்று அருள் புரிந்தவரே! தமது இடப்பக்கத்தில் மரகத மயிலுக்கு மேலான அழகுள்ள பார்வதிதேவிக்கு இடந்தந்த சிவபெருமானுடைய செல்வக்குமாரரே! அடியேன் இனிய மொழி பகர்ந்தாலும், தருக்குற்று கடுஞ் சொற்கள் பகர்ந்தாலும் ஏழையேனுக்குக் கருணை புரியும் பெருமிதம் உடையவரே! தவறுதல் இல்லாமல், வழி வழியாக உறவினன் என்னும்படி அடியேன் உம்மை வழிபடும் ஆற்றல் இல்லாதவனாக இருக்கின்றேன். எனக்குள்ள மூவாசைகளும் ஏனைய தடைகளும் அழிந்து ஒழியுமோ?

## விரிவுரை

**கட கட கருவிகள் தப வகிரதிர்:—**

வகிர் - கீற்று. கீற்றுக்களையுடைய புலியைக் குறிக்கின்றது. கட கட என்று முழங்குகின்ற பறை முதலிய வாத்தியங்களின் ஒலியை அடக்கி புலிகள் முழங்குகின்றன.

கதிர்காமத்தலம் பெருங்காட்டில் திகழ்கின்றது. புலிகளும் யானைகளும் பிற விலங்குகளும் இரவு பகல் இரை தேடியுலாவு கின்றன.

தரங்கமலை விரா:—

தரங்கம் அலை வீரா. தரங்கம் - அலை. தானியாகு பெயராகக் கடலைக்குறிக்கின்றது. சமுத்திரத்தை அலை - அலைத்த வீரா. தரங்கம் - அருவிகளின் அலைகளுடன் கூடிய மலையில் வாழும் வீரரே! என்றும் பொருள் கொள்ளலாம்.

கனகத நககுலி:—

கனம் - பெரும். கதம் - கோபம். நகம் - மலை.

இது உவம ஆகு பெயராக யானையைக் குறிக்கின்றது. பெருமையும் கோபமும் உடையமலைபோன்ற யானையாகிய ஐராவதத்தின் மகள் தெய்வயானை.

காமத்தனஞ் சம்புயனோட:—

காம அத்தன் அஞ்ச அம்புயன் ஓட என்று பதப்பிரிவு செய்க; காம அத்தன் - மன்மதனுக்குத் தந்தை; திருமால். மயிலின் நடனத்தைக் கண்டு திருமால் அஞ்சினார்; பிரமன் அஞ்சி ஓடினான்.

வடசிகர கிரி தவிடுபட நடமிடு மா:—

மா - குதிரை. இது மயிலைக் குறிக்கின்றது.

மயில் நடனம் செய்யும் போது பொன்மேருகிரி இடிந்து தவிடு பொடிபட்டது.

> "வாசி விசைகொண்ட வாகனப் பீலியின் கொத்
> தசைபடு கால்பட்டசைந்தது மேரு; அடியிடஎண்
> திசைவரை தூள்பட்ட; அத்தூளின் வாரி திடர்பட்டதே"
>
> —கந்தரலங்காரம் (11)

அடவி இருடி யபிநவ குமரி:—

திருமால் சிவமுனிவராய்ப் பிறந்தார். அவர் வள்ளிமலைக் காட்டில் தவஞ் செய்து கொண்டிருந்தார்.

மகாலட்சுமியே மானாக வந்து அங்கு உலாவினாள். அம்மானை அவர் நயனத்தால் புணர்ந்தார். மான் கருவுற்று வள்ளியைப் பெற்றது.

"தத்து கவனவரி ணத்து உபநிடவி
தத்து முனியுதவு மொழியாறுத்
தத்தை நறவையமு தத்தை நிகர்குறவர்
தத்தை தழுவியப னிருதோளா" —(அத்துகிரி) திருப்புகழ்.

அயிலவசமுடன ததிதிரி தருகவி யாளப்புயங்கொண் டருள்வோனே:—

அயில் புயங்கொண்டருள் வோனே என்று கூட்டுக. அவசமுடன் அ ததி திரிதரு கவி. கவி - பொய்யாமொழிப் புலவன். "வெயிலின் கொடுமையால் மயங்கி அந்த நேரத்தில் காட்டில் திரிந்த புலவன். அ - அந்த. ததி - தருணம்.

## பொய்யா மொழிப்புலவர் வரலாறு

சோழ நாட்டில் பொய்யாமொழிப் புலவர் வாழ்ந்தார். இவர் சிவபெருமான் ஒருவரையே பாடும் நியமம் உடையவர். ஒரு முருகனடியார் முருகனைப் பாடுமாறு வேண்டினர். "கோழியைப் பாடிய நாவால் குஞ்சைப் பாடமாட்டேன்" என்று கூறி மறுத்தார்.

முருகனைப் பாட மறுத்த வினையால் வறுமையாம் சிறுமை வந்துற்றது. வாடினர், வருந்தினர். பாண்டிய நாடு சென்று, பாண்டியனையும், பாண்டிமா தேவியையும், மந்திரியையும், கானப் பேர் கணிகையரையும் பாடிப் பொன்னும் பொருளும் நிரம்பப் பெற்றுத் திரும்பினர். ஒரு பாலைவனத்தின் வழியே வரும்போது, முருகர் வேடனாக வில்லும் அம்புந் தாங்கி வந்து அவரை வழி மறித்தார். புலவர் நடுநடுங்கினர்.

"இந்தப் பாலையைச் சிறப்பித்து "நற்றுயிரங்கல்" என்ற துறையாக, என் பேர் முட்டை, என் பேரையும் அமைத்துப் பாடுக" என்றார் வேடனாக வந்த வேலவர்.

பொய்யாமொழிப் புலவர்.

"பொன்போலுங் கள்ளிப் பொறி பறக்குங் கானலிலே
என்பேதை செல்லற் கியைந்தனளே—மின்போலு
மானவேல் முட்டைக்கு மாறாய தெவ்வர்போங்
கானவேல் முட்டைக்குங் காடு."

என்று பாடினர்.

முருகர், "புலவரே! நின்பாடலில் பொருட்குற்றம் உளது. பால் நிறைந்த கள்ளிச் செடி எரிந்து கரிந்துபோம் காட்டில் ஈரமில்லாத வேலமுள் சாம்பலாகப் போயிருக்குமே? அது

எப்படித் தைக்கும்? ஆதலால் இது பிழை" எனக் "கூறி நகைத்து, "நானும் கவி பாடுவேன் உன் பேரைக் கூறு; உன் பேரை அமைத்து இதே துறையில் நான் பாடுகின்றேன் பார்" என்றார்.

'என் பேர் பொய்யாமொழி' என்றார் புலவர்.

"விழுந்ததுளி அந்தரத்தே வேம் என்றும் வீழின்
எழுந்து சுடர்சுடும் என்றும்—செழுங்கொண்டல்
பெய்யாத கானகத்துப் பெய்வளையும் போயினளே
பொய்யா மொழிப்பகைஞர் போல்.

என்று முருகவேள் பாடியருளினர்.

பின்னர் "புலவனே! நீ குஞ்சைப் பாடமாட்டேன் என்றாயே; இப்பொழுது முட்டையைப் பாடினாயே; எனக் கூறி, அவர் உள்ளத்தைத் திருத்தி தமது காட்சியைத் தந்தனர். சிவனே முருகன், இருவருக்கும் பேதம் இல்லை என்று உணர்த்தி அருள் புரிந்து மறைந்தருளினர்.

"முற்பட்ட முரட்டுப் புலவனை
முட்டைப் பெயர் செப்பிக்கவிபெறு பெருமாளே"
—(பத்தித்தர) திருப்புகழ்

"நற்றாயிரங்கல்" என்ற துறையில் பாடினர் என்றும் அருணகிரியார் கூறுகின்றார்.

"கற்றாவிற் காட்டிக் கரைதுறை
நற்றாயிற் காட்டிப் புகழ்கலை
கற்றார்சொற் கேட்கத் தனிவழி வருவோனே"
—(சிற்றாய) திருப்புகழ்.

"பொய்யா மொழிப்புலவர் மதுரையிற் சங்கம்
புரக்க எழுநாள் மறவனாய்ப்
புறவுற வளைத்தெனது பெயர் முட்டை பாடெனப்
பொன்போலும் என்றுபாட
வெய்யான பாலைக்கி தேலாது நும்பெயர்
விளம்பென விளம்ப அவர்மேல்
விழுந்ததுளி என்றெடுத்துப்பாடியவர் நாவில்
வேல்கொடுத்து பொறித்த சதுரா"
—திருவிரிஞ்சை முருகன் முருகன்பிள்ளைத்தமிழ்.

ஏழைக்கிடங் கண்டவர்:—

ஏழை - பெண்.

"எருதேறி யேழையுடனே" —சம்பந்தர்.
"ஏழைபங்காளனையே பாடேலோ ரெம்பாவாய்" —திருவாசகம்.

**இதமொழி பகரினும் மதமொழிபகரினும் ஏழைக்கிரங்கும் பெருமானே:—** முருகப்பெருமான் கருணைமூர்த்தி. அப்பெருமான், தன்னை இகழ்ந்தாலும், புகழ்ந்தாலும் கருணைபுரிவான். கல்லாலும் வில்லாலும் அடித்தவர்க்கு அருளிய கண்ணுதற் கடவுளின் புதல்வர் அல்லவா?

### கருத்துரை

கதிர்காமக் குமரேசா! என் ஆசைகளும் தடைகளும் தொலைய அருள் செய்வீர்.

## 189

சமரமுக் வேலொத்த விழிபுரள வாரிட்ட
தனமசைய வீதிக்குள் மயில்போலு லாவியே
சரியைக்ரியை யோகத்தின் வழிவருக்ரு பாசுத்தர்
தமையுணர ராகத்தின் வசமாக மேவியே

உமதடியு ளுருக்கு மனுமரண மாயைக்கு
முரியவர் மகாதத்தை யெனுமாய மாதரார்
ஒளிரமளி பீடத்தி லமடுபடு வேனுக்கு
முனதருள்க்ரு பாசித்த மருள்கூர வேணுமே

இமகிரிகு மாரத்தி யனுபவைப ராசத்தி
யெழுதரிய காயத்ரி யுமையாள்கு மாரனே
எயினர்மட மானுக்கு மடலெழுதி மோகித்து
இதணருகு சேவிக்கு முருகாவி சாகனே

அமரசிறை மீள்விக்க அமர்செய்துப்ர தாபிக்கு
மதிகவித சாமர்த்ய கவிராஜ ராஜனே
அழுதுலகை வாழ்வித்த கவுணியகு லாதித்த
அரியகதிர் காமத்தி லுரியாபி ராமனே.

### பதவுரை

இமகிரி குமாரத்தி - இமயமலையின் புதல்வியும், அநுபவை - இன்ப நுகர்ச்சிகளை உயிர்கட்கு ஊட்டுபவளும், பராசக்தி - பேராற்றலுடைய வளும், எழுத அரிய காயத்ரி-எழுதுதற்கு அரிய காயத்ரி மந்திர சொரூபியும், உமையாள்-உமாதேவியுமாகிய பார்வதியம்மையின், குமாரனே -

புதல்வரே! எயினர் மட மானுக்கு - வேடர் குலப் பாவையாகிய வள்ளி யின் பொருட்டு, மடல் எழுதி மோகித்து - மடற்பனையில் ?அவள் உருவை எழுதி விரும்பி, இதண் அருகு சேவிக்கு - பரண் அருகில் சேவித்து நின்ற, முருகா - முருகக் கடவுளே! விசாகனே - விசாக மூர்த்தியே! அமரர் சிறை மீள்விக்க - தேவர்களைச் சிறையிலிருந்து விடுவிக்கும் பொருட்டு, அமர் செய்து - போர் புரிந்து, ப்ரதாபிக்கும் - கீர்த்தி யடைந்த, அதிகவித சாமர்த்ய - மிகுந்த மேலான திறமை வாய்ந்த, கவி ராஜ ராஜனே - கவிச் சக்ரவர்த்தியே! அழுது உலகை வாழ்வித்த - அழுது உலகங்களை யெல்லாம் வாழ வைத்த, கவுணிய குல ஆதித்த - கவுணிய குலத்தில் உதித்த சூரியனே! அரிய கதிர்காமத்தில் உரிய - அருமையான கதிர்காமத்திற்கு உரிய, அபிராமனே - அழகரே! சமரமுக - போர் முகத் துக்கு உரிய, வேல் ஒத்த - வேலாயுதம் போன்ற, விழி புரள - கண்கள் புரளவும், வார் இட்டதனம் அசைய - இரவிக்கை யணிந்த தனங்கள் அசை யவும், வீதிக்குள் மயில் போல் உலாவியே - தெருவில் மயில் போல் நட மாடி, சரியை க்ரியை யோகத்தின் வழிவரும் - சரியை கிரியை யோகம் என்ற வழிகளில் நிற்கும், க்ருபா சுத்தர் தமை - அருளும் தூய்மையும் உடைய பெரியோர்களும், தமை உணர் - தம்மைக் கண்டு மோகிக்கும் படியாக, அராகத்தின் வசம் ஆக மேவியே - ஆசைகாட்டும் வழிகளில் பொருந்தி, உமது அடி உஞருக்கும் - உமது திருவடியை நினையாதவருக் கும், அனுமரண மாயைக்கும் - மரணத்துடன் கூடிய மாயையிற்பட்டவர்க் கும், உரியவர் மகாதத்தை எனும் - உரியவராய் சிறந்த கிளிகள் எனப் படும், மாய மாதரார் - மாயத்தில் வல்ல பொது மாதர்களுடைய, ஒளிர் அமளி பீடத்தில் - விளங்குகின்ற படுக்கை யிடத்தில், அமடு படுவேனுக்கு- சிக்கிக் கொண்ட அடியேனுக்கும், உனது அருள் க்ருபா சித்தம் - உமது திருவருள் கருணையுள்ளத்தை, அருள்கூர வேணுமே - தந்தருள வேண்டும்.

## பொழிப்புரை

இமயமலையின் புதல்வியும், இன்பங்களை நுகரச் செய்கின்ற வளும், பேராற்றலுடையவளும், எழுதவொண்ணாத காயத்ரி மந்திர சொரூபிணியும் ஆகிய உமாதேவியின் திருக்குமாரரே! வேடர் குலப்பாவைக்கு மடல் எழுதி விரும்பி, பரண் அருகில் சென்று சேவித்து நின்ற முருகக் கடவுளே! விசாக மூர்த்தியே! தேவர்களின் சிறையை விடுவிக்கும் பொருட்டு, போர் புரிந்து கீர்த்திபெற்ற மிகுந்த மேன்மையும் ஆற்றலும் படைத்த கவி ராஜராஜனே! அழுது உலகங்களை யெல்லாம் வாழ வைத்த கவுணிய குல சூரியனே! அரிய கதிர்காமத்திற்கு உரிய அழ கரே! போர் முகத்துக்குரிய வேல் போன்ற கண்களைப் புரட்டி யும், இரவிக்கை யணிந்த தனங்கள் அசையவும் தெருவில் மயில் போல் உலாவி, சரியை, கிரியை, யோகம் என்னும் வழிகளில்

நின்று, அருளும், தூய்மையும் வாய்ந்த பெரியோர்களும் தமைக்கண்டு மோகிக்கும்படிச் செய்து, உமது திருவடியை நினையாதவர்க்கும், மரணத்தோடு கூடிய மாயைக்கும் உரியவராய், சிறந்த கிளியைப் போன்றவரும், மாயைகளில் வல்லவரும் ஆகிய பொதுமாதர்களுடைய, ஒளி செய்கின்ற பஞ்சணையில் சிக்கிக் கொண்ட அடியேனுக்கும் உமது அருட் கருணைத் திருவுள்ளத்தை அருள் கூர்ந்து அளிக்கவேண்டும்.

## விரிவுரை

சரியை க்ரியை யோகத்தின் வழிவரு க்ருபா சுத்தர் தமையுணர ராகத்தின் வசமாக மேவியே:—

சரியா மார்க்கம், கிரியா மார்க்கம், யோக மார்க்கம் என்ற வழிகளில் நின்று கருணையும் தூய்மையும் உடைய பெரியோர்களும் தம்மைக் கண்ட மாத்திரத்தில் தம் வசமாகி மோகித்து உழலுமாறு ஈர்க்கும் ஆற்றல் படைத்தவர்கள் பொது மாதர்கள்.

உமதடி யுனுருக்கு மனுமரண மாயைக்கு முரியவர்:—

முருகனுடைய திருவடியை நினைக்காத பாவிகளுக்கும் தொடர்ந்து வருகின்ற மரணத்துடன் கூடிய மாயைக்கும் அவர்கள் உரியவர்கள்.

மடலெழுதி:—

தான் விரும்பிய தலைவியை யடையும் பொருட்டு, பனைமடல்களால் குதிரையாகச் செய்து, அதன்மீது தலைவன் ஏறி, தலைவியின் உருவத்தை எழுதிய கொடியைப் பிடித்து ஊரவர் அறிய உலாவி வருவன்.

அழுதுலகை வாழ்வித்த கவுணிய குலாதித்த:—

முருக சாரூபம் பெற்ற ஒருவர் சீகாழியில் கவுணியர் குலத்தில் திருஞானசம்பந்தராகத் திருவவதாரம் புரிந்தார். அவர் உலகந் தழைக்க அழுது, சிவஞானப்பாலையுண்டு, பதினாருயிரந் திருப்பதிகங்களைப் பாடியருளினார்.

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.—பெரியபுராணம்.

## கருத்துரை

கதிர்காமக்கடவுளே! உனது அருட்டிருவுள்ளத்தை யளித்தருள்வீர்.

## 190

சரத்தே யுதித்தா யுரத்தே குதித்தே
சமர்த்தா யெதிர்த்தே வருசூரைச்
சரிப்போன மட்டே விடுத்தா யடுத்தாய்
தகர்த்தா யுடற்ரு ணிருகூருச்
சிரத்தோ டுரத்தோ டறுத்தே குவித்தாய்
செகுத்தாய் பலத்தார் விருதாகச்
சிறைச்சேவல் பெற்ருய் வலக்கார முற்ருய்
திருத்தா மரைத்தா ளருள்வாயே
புரத்தார் வரத்தார் சரச்சே கரத்தார்
பொரத்தா னெதிர்த்தே வருபோது
பொறுத்தார் பரித்தார் சிரித்தா ரெரித்தார்
பொரித்தார் நுதற்பார் வையிலேபின்
கரித்தோ லுரித்தார் விரித்தார் தரித்தார்
கருத்தார் மருத்தூர் மதனுரைக்
கரிக்கோல மிட்டார் கணுக்கான முத்தே
கதிர்க்காம முற்ருர் முருகோனே.

### பதவுரை

புரத்து ஆர் வரத்தார் - திரிபுரத்தில் வாழ்ந்த வரம் பெற்றவர்கள், சர சேகரத்தார் - அம்புகளின் கூட்டத்தைக் கொண்டவர்கள், பொரத்தான் எதிர்த்தே வருபோது - போர் செய்வதற்கு எதிர்த்து வந்தபோது, பொறுத் தார்-பொறுமையுடன் இருந்தார்; பரித்தார்-போர்க் கோலத்தைத் தாங்கிஞர்; சிரித்தார் - சிரித்தார்; எரித்தார்-திரிபுரத்தை எரித்தார்; நுதல்பார்வையிலே பொரித்தார் - நெற்றிக் கண்ணுல் பொரிபடச் செய்தார்; பின் கரி தோல் உரித்தார் - பின்பு யானையின் தோலை உரித்தார்; விரித்தார் - அதை விரித் தார்; தரித்தார் - தரித்துக் கொண்டார்; கருத்து ஆர் மருத்து ஊர் மதனுரை - தமது திருவடியிலே கருத்துடையராய் தென்றல் தேரில் ஊர்ந்து வந்த மன்மதனுரை, கரிகோலம் இட்டார்-கரி அலங்காரமாக்கிஞர்; ஆகிய சிவபெருமானுடைய, கணுக்கு ஆன முத்தே - கண்களுக்குப் பிரியமான முத்தே; கதிர்க்காமம் உற்று ஆர் - கதிர் காமத்தில் எழுந்தருளியிருக்கும், முருகோனே - முருகக் கடவுளே! சரத்தே உதித்தாய் - நாணற் காட்டின் இடையே தோன்றினீர்; உரத்தே - வலிமையுடன், குதித்தே - குதித்துக்

கொண்டு, சமர்த்தாய் எதிர்த்தே வருசூரை - சாமர்த்தியமாய் எதிர்த்து வந்த சூரபன்மனை, சரிப்போன மட்டே விடுத்தாய் - சரியாக நடந்த வரையில் சும்மா விட்டிருந்தீர்; அடுத்தாய் - நெருங்கினீர்; உடல்தான் இருகூரு தகர்த்தாய் - உடல் இருபாதியாகும்படி பிளந்தீர்; சிரத்தோடு உரத்தோடு அறுத்தே குவித்தாய் - தலையுடன் மார்பையும் அறுத்துக்குவித்தீர்; செகுத்தாய் - கொன்றீர்; விருது ஆக - வெற்றிக்கு அடையாளமாக, பல தார் - பலவகை மாலைகளையும், சிறை சேவல் பெற்றாய் - சிறகையுடைய சேவலையும் பெற்றீர்; வலக்காரம் உற்றாய் - வெற்றியை யடைந்தீர். (அத்தன்மையராகிய நீர்,) திரு தாமரை தாள் அருள்வாயே - அழகிய தாமரையன்ன திருவடிகளைத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

திரிபுரத்திலிருந்த வரம் பெற்றவர்கள், அம்புகளின் கூட்டத்துடன் எதிர்த்துப் போருக்கு வந்தபோது, பொறுமையுடன் இருந்தார்; போர்க்கோலத்தைத் தாங்கினார்; சிரித்தார்; எரித்தார்; நெற்றிக்கண் பார்வையால் பொரிபடச் செய்தார். பின்பு யானையை உரித்து அதன் தோலை விரித்துத் தரித்துக் கொண்டார்; தமது திருவடியில் கருத்துடையவனாய் தென்றல் தேரில் ஏறி வந்த மன்மதனை கரியலங்கார மாக்கினார் ஆகிய சிவபெருமானுடைய கண்களுக்குப் பிரியமான முத்தே! கதிர்காமத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் முருகக் கடவுளே! நாணல் காட்டின் இடையே உதித்தீர்; வலிமையுடன் குதித்துக் கொண்டு ஆற்றலோடு எதிர்த்து வந்த சூரபன்மனை, சரியாக நடந்த வரை விட்டுவைத்தீர்; சரிதப்பியபின் அடுத்து நெருங்கி வந்தீர்; உடல் இருகூருகுமாறு பிளந்தீர்; சிரத்தையும் மார்பையும் அறுத்துக் குவித்தீர்; அவனைக் கொன்றீர்; வெற்றிக்கு அடையாளமாகப் பல மாலைகளையும் சிறகையுடைய சேவலையும் பெற்றீர்; வெற்றி பெற்றீர்; இத்தகைய தேவரீர் அடியேனுக்கு உமது தாமரையன்ன அழகிய பாதமலரைத் தந்தருளுவீர்.

## விரிவுரை

சரத்தே யுதித்தாய்:—

சரம் - தர்ப்பை. கங்கையின் அருகில் இருந்த தருப்பை வனஞ் சூழ்ந்த பொய்கையில் முருகவேள் தோன்றியருளினார். அதனால் சரவணபவன் என்ற திருநாமம் ஏற்பட்டது.

சரிப்போன மட்டே விடுத்தாய் அடுத்தாய்:—

சூரபன்மன் அடக்கமாக வாழ்கின்ற வரை அவனை விட்டு வைத்தார் இறைவர்; தவறுகள் மிகுதியாகச் செய்யத் தொடங்கியபின் அவனை நெருங்கிப் போர் புரிந்தார்.

உடற்றுன் இரு கூறும்:—

அவனிடம் இருந்த அகங்காரம் மமகாரம் என்ற இரண்டையும் வேறு வேருக்கி யழியுமாறு செய்தார்.

புரத்தார் வரத்தார் சரச் சேகரத்தார்:—

பொன், வெள்ளி, இரும்பு என்ற மூன்று லோகத்தால் ஆகிய கோட்டைகளையுடையவர்கள், திரிபுராதிகள். கமலாட்சன் தாரகாட்சன், வித்யுன்மாலி என்போர். அவர்கள் வரப்பிரசாதம் பெற்றவர்கள்; பல சிறந்த பாணங்களைச் சேகரித்திருந்தார்கள்.

பொறுத்தார்:—

சிவபெருமான் திரிபுராதிகளைக் கண்டு பொறுமையுடன் இருந்தார்.

பரித்தார்:—

தேரும் வில்லும் அம்பும் கொண்டு போர்க்கோலந் தாங்கினுர்.

சிரித்தார் எரித்தார்:—

ஒவ்வொரு தேவனும் தான் தான் துணை செய்வதனுல் தான் திரிபுரவதம் நிகழ்கின்றது என்று எண்ணித் தருக்குற்றுர்கள். "நமக்குத் தேரும் வில்லும் வேண்டுமோ" என்று திருவுளம் பற்றிச் சிவபிரான் சிறுநகை செய்தார். அந்நகையில் இருந்து தோன்றிய அனற் பொறியால் அப்புரங்கள் எரிந்து சாம்பலாயின.

கரித்தோலுரித்தார் விரித்தார் தரித்தார்:—

கஜமுகன் என்ற அவுணன் சிவபெருமான் மீது போருக்கு வந்தான். அந்த யானையை உரித்துத் தோலைச் சிவபெருமான் போர்த்துக் கொண்டார்.

கருத்தார் மருத்தார் மதனுர்:—

பிரமாதி தேவர்கள், சிவபெருமான் சனகாதியருக்கு மௌன நிலையையுணர்த்தி யோகியாயிருந்த தவநிலையை பழிக்குமாறு மன்மதனுக்குக் கட்டளையிட்டார்கள்.

மன்மதன் அதைக் கேட்டு நடுங்கினன். "நான் தேவரையும் மூவரையும் சித்தரையும் முத்தரையும் மயக்குவேன். அனல் வடிவான சிவபெருமானை மயக்க முடியுமோ? அவர் கையுந் தழல்; கண்ணுந்தழல்; மெய்யுந்தழல்; தழலைப் புழு அணுகுமோ?" என்றெல்லாம் கூறினன் மன்மதன்.

அயன் முதலிய அமரர் வற்புறுத்தி யனுப்பினர்கள். அதனல் சிவன் பாதத்தில் "கருத்தார்" என்றார்.

மருத்து ஊர். மருத்து – காற்று. மன்மதனுக்குத் தென்றல் காற்று தேர். தென்றற் காற்ருகிய தேரில் ஊர்பவன்.

குடக்கோடு வானெயிறு கொண்டாற்குக் கேழல்
முடக்கோடு முன்னம் அணிவாற்கு—வடக்கோடு
தேருடையான் தெவ்வுக்குத் தில்லையதள் மேற்கொள்ளல்
ஊருடையான் என்னும் உலகு. —சிவப்பிரகாசர்.

கணுக்கான முத்தே:—

"சிவபெருமானுடைய கண்ணுக்குப் பிரியமான முத்தையரே! என்று அருமையாக அருணகிரிநாதர் அழைக்கின்ருர்.

கருத்துரை

கதிர்காமக் கடவுளே! உன் கழல் தாமரையைத் தந்தருள்வீர்.

191

சரியையா ளர்க்குமக் கிரியையா ளர்க்குநற்
சகலயோ கர்க்குமெட் டரிதாய
சமயபே தத்தினுக் கணுகொணு மெய்ப்பொருட்
டருபரா சத்தியிற் பரமான

துரியமே லற்புதப் பரமஞா னத்தனிச்
சுடர்வியா பித்தநற் பதிநீடு
துகளில்சா யுச்சியக் கதியையீ றற்றசொற்
சுகசொரு பத்தையுற் றடைவேனே

புரிசைசூழ் செய்ப்பதிக் குரியசா மர்த்யசற்
புருஷவீ ரத்துவிக் ரமசூரன்
புரளவேல் தொட்டகைக் குமரமேன் மைத்திருப்
புகழையோ தற்கெனக் கருள்வோனே

கரியயூ கத்திரட் பலவின்மீ திற்சுளைக்
கனிகள்பீ றிப்புசித் தமராடிக்
கதலிசூ தத்தினிற் பயிலுமீ ழத்தினிற்
கதிரகா மக்கிரிப் பெருமாளே.

## பதவுரை

புரிசை சூழ் - திருமதில்களால் சூழப்பெற்ற, செய் பதிக்கு உரிய சாமர்த்ய - வயலூர் என்னும் திருத்தலத்துக்கு உரியவராகிய சமர்த்தரே! சத் புருஷ - சிறந்த ஆண்டகையே! வீரத்து விக்ரம சூரன் - மிகுந்த வீர முடைய சூரபன்மன், புரள வேல் தொட்ட கை குமர - பதைத்து வீழ்ந்து புரளுமாறு வேற்படையை விடுத்தருளிய குமாரக் கடவுளே! மேன்மை திருப்புகழை ஓதற்கு எனக்கு அருள்வோனே - மேன்மை பொருந்திய திருப் புகழை ஓதுதற்கு அருள்புரிபவரே! கரிய யூக திரள் - கரிய குரங்குக் கூட் டம், பலவின்மீதில் - பலாமரத்தின்மீது தாவி, சுளை கனிகள் பீறி புசித்து - சுளைகளோடு கூடிய பழங்களைக் கிழித்து உண்டு, அமர் ஆடி - ஒன்றுடன் ஒன்று போர்புரிந்து, கதலி சூதத்தினில் பயிலும் - வாழை மா ஆகிய சோலை களில் நடமாடுகின்ற, ஈழத்தினில் - ஈழநாட்டில் சிறப்புற்று விளங்கும், கதிர காம கிரி பெருமாளே - கதிர்காம மலையில் எழுந்தருளியுள்ள பெருமையின் மிக்கவரே! சரியை யாளர்க்கும் - சரியை மார்க்கத்தினருக்கும், அ கிரியை யாளர்க்கும் - அந்த கிரியை மார்க்கத்தினருக்கும், நல் சகல யோகர்க்கும்- நலம் பொருந்திய எல்லா வகையான யோக மார்க்கத்தினருக்கும், எட்ட அரிதாய - எட்டுதற்கு அரியதானதும், சமய பேதத்தினுக்கு - ஒன்றோ டொன்று பேதித்துத் தர்க்க மிடுகின்ற சமயங்களாலே, அணுக ஒணு - நெருங்க முடியாததும், மெய் பொருள் தரு - உண்மைப் பொருளாகிய சிவத்தை யடையச் செய்கின்ற, பராசத்தியில் - பெரிய அருளில் அடங்கி, பரம் ஆன - பெரியதான, துரியமேல் - துரியாதீதத்தில், அற்புத பரம ஞான தனி சுடர் வியாபித்த நல்பதி - அற்புதமான மேலான சுத்த ஞான மயமாகிய ஒப்பற்ற. ஜோதி நிறைந்த நல்ல பதியாக விளங்குவதும், நீடு - நித்தியமானதும், துகள் இல் - குற்றமில்லாததும் ஆகிய, சாயுச்சிய கதியை - சாயுச்சிய முத்தியை, ஈறு அற்ற - முடிவில்லாத, சொல் சுக சொரூபத்தை உற்று - புகழப்படுகின்ற இன்ப நிலையைப் பொருந்தி, அடை வேனோ - அடைய மாட்டேனோ?

## பொழிப்புரை

**திருமதில்கள் சூழ்ந்த வயலூர் என்னுந் திவ்ய க்ஷேத்திரத் திற்கு உரியவராகிய சாமர்த்திய முடையவரே! சிறந்த ஆண்ட கையே! மிக்க வீரமுடைய சூரபன்மன் வீழ்ந்து புரளுமாறு வேலாயுதத்தை விடுத்தருளிய திருக்கரத்தையுடைய குமாரக்**

கடவுளே! மேன்மையுடைய திருப்புகழைப் பாடுதற்கு அடியேனுக்கு அருள்புரிந்தவரே! கருங்குரங்குக் கூட்டம் பலாமரத்தின்மீது ஏறி பலாப்பழங்களைப் பீறிப் புசித்து ஒன்றுடன் ஒன்று போராடி வாழை மா முதலிய மரங்களில் உலாவுகின்ற ஈழநாட்டில் விளங்கும் கதிர்காமம் என்னுந் திருமலையில் வாழுகின்ற பெருமிதமுடையவரே! சரியாமார்க்கத்தில் நின்றவர்க்கும், கிரியாமார்க்கத்தில் நின்றவர்க்கும், நலம் பொருந்திய எல்லா வகைப்பட்ட யோகமார்க்கத்தில் நின்றவர்க்கும் எட்ட அரிதானதும், ஒன்றோடொன்று பிணங்கும் சமயங்களுக்கு நெருங்க முடியாததும், உண்மைப் பொருளாகிய சிவத்தை அடையச் செய்கின்ற பெரிய அருளாகிய சத்தியில் அடங்கி, மேலான துரிய நிலைகடந்த மேல் நிலையில், அற்புதமான பெரிய ஞானமயமாகிய ஒப்பற்ற ஒளி நிறைந்த நன்மை மிக்க இடமும், நித்தியமானதும், குற்றமில்லாததுமாகிய சாயுச்சிய முத்தியை, முடிவில்லாத புகழுடைய இன்பவடிவத்தைப் பொருந்தி அடியேன் அடையமாட்டேனோ?

## விரிவுரை

**சரியை:—**

ஆலயத்தை அலகிடுதல், மெழுகல், பூமாலை தொடுத்துக் கொடுத்தல், விளக்கிடுதல் முதலிய திருத்தொண்டுகள் செய்தல்.

நந்த னப்பணி யியற்றுநர் நறுமலர் பறித்துப்
பந்த முற்றிடத் தொடுத்தணி பவர்தளிப் பரவ
முந்த நெய்விளக் கிடுபவர் பிறபணி முடிப்போர்
எந்த வானருங் கீழ்ப்பட மேற்படு மியல்பார்.

—திருப்பெருந்துறைப் புராணம்.

இதனை, "புறத்தொழிலால் உருவத் திருமேனியை வழிபடுதல்" என்று சுருங்கச் சொல்லலாம்.

**கிரியை:—**

இறைவனை உள்ளம் உருகிப் பாடுதல், மந்திரத்தைச் செபித்தல், திருவுருவத்தைப் பூசித்தல் முதலியன.

வாழ்த்த வாயு நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேனெடுங் காலமே. —அப்பர்.

இதனை, "அகத்தொழில் புறத்தொழில் இரண்டாலும் உருவாருவத் திருமேனியை வழிபடுதல்" என்று சுருங்கச் சொல்லலாம்.

சகலயோகர்:—

மந்திரயோகம், ஆதாரயோகம், நிராதாரயோகம், கர்மயோகம், பக்தியோகம், ஹடயோகம், ராஜயோகம், சிவயோகம் முதலியன.

அருவத் திருமேனியை அகத்தொழிலால் மட்டும் வழிபடுதல்.

மறவாமை யானமைத்த மனக்கோயி லுள்ளிருத்தி
உறவாதி தனையுணரு மொளிவிளக்குச் சுடரேற்றி
இறவாத வானந்த மெனுந்திருமஞ் சனமாட்டி
அறவாணர்க் கன்பென்னு மமுதமைத்தர்ச் சனைசெய்வார்.
—பெரியபுராணம்.

ஆக இந்தச் சரியை கிரியை யோகங்களாலேயே ஆனந்தானுபவ முத்தி யுண்டாக மாட்டாது. ஞானத்தாலேயே உண்டாகும். சரியை முதலியன, ஞானத்தைப் பெறுவதற்குச் சாதனங்கள்.

ஞானம் அறிவு மாத்திரத்தால் உரு, அருவுரு, அரு ஆகிய மூன்றையுங் கடந்த அகண்டகார ஜோதிமயமான திருமேனியை வழிபடுதல்.

ஞானத்தின் மிக்க வறநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமு நன்றல்ல
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவா
ஞானத்தின் மிக்கார் நரரின்மிக் காரே. —திருமந்திரம்.

அரியவிம் மானிட யாக்கை பெற்றவர்
கருமயோ கங்களாற் காலந் தள்ளுவர்
உரிய மெய்ஞ் ஞானயோ கத்தி லுலரன்
துரிய ஞானத்தினைச் சோதியார்களே. —பதிபசுபாச விளக்கம்.

"சரியை கிரியா யோகஞ் செலுத்தியபின்
ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்" —சித்தியார்.

ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராண
நல்லவாகமஞ் சொல்ல அல்லவா மென்னும்
ஈனத்தா ரென்கடவர். —சித்தியார்

சமயபேதம்:—

சமயங்கள் பல. அவை ஒன்றுடன் ஒன்று பிணங்குவனவே.

"விபரித சமய கலைகளு மலமலம்" —(அருவமிடை) திருப்புகழ்

"கலகல கலெனக் கண்ட பேரொடு
சிலுகிடு சமயப் பங்க வாதிகள்"
—(அலகிலவுணரை) திருப்புகழ்.

"பேதித்த சமயமோர் ஒன்றுசொன பொடியொன்று
பேசாது." —தாயுமானர்

துரியமேலற்புத பரமஞானத்தனி சுடர்வியாபித்த நற்பதி:—

கற்சுவர் போன்ற தூலதேக வுறையும், பளிங்குச்சுவர் போன்ற சூக்குமதேக வுறையும், மெல்லாடை போன்ற குண சரீர வுறையும், பாம்புரி போன்ற கஞ்சுக சரீர வுறையும், பால் நுரை போன்ற காரண சரீர வுறையு மாகிய ஐவகை யுறையினையுங் கவித்துக்கொண்டு ஜீவான்மா வசிக்கின்றது. இங்ஙனம் வகுக்கப்பட்ட அன்னமயகோச மென்ற தூல சரீரத்தின் கண் ணின்று ஆன்மாவின் அறிவு விளங்கப் பெறுகின்ற அவசரம் ஜாக்கிரம் எனப்படும். அப்போது கருவி 35.

| | |
|---|---|
| மெய் வாய் கண் நாசி செவி (ஞானேந்திரியம்) | 5 |
| வாக்கு பாணி பாதம் பாயுரு உபஸ்தம் (கன்மேந்திரியம்) | 5 |
| மனம் புத்தி சித்தம் அகங்காரம் (கரணம்) | 4 |
| சப்த பரிச ரூப ரச கந்தம் (தன்மாத்திரை) | 5 |
| வசனம் கமனம் தானம் விசர்க்கம் ஆனந்தம் (கன்மம்) | 5 |
| பிராணன் அபானன் உதானன் வியானன் சமானன் நாயகன் கூர்மன் கிரிகரன் தேவதத்தன் தனஞ்சயன் (வாயு) | 10 |
| புருடன் | 1 |
| ஆக | 35. |

பிராணமயகோச மென்ற சூக்கும சரீரத்தின்கண்ணின்று ஆன்மாவின் அறிவு விளங்கப்பெறுகின்ற அவசரம் சொப்பனம் எனப்படும். அப்போது கருவி 25.

கன்மேந்திரியம் 5 ம், ஞானேந்திரியம் 5 ம் நீங்க ஏனைய தத்துவங்களாம்.

மனோமயகோச மென்ற குணசரீரத்தில் ஆன்மாவின் அறிவு விளங்கப் பெறுகின்ற அவசரம் சுழுத்தி எனப்படும்.

அப்போது கருவி சித்தம் பிராணன் புருடன் என்ற 3. வாயு 9 வசனாதி 5 தன்மாத்திரை 5 கரணம் 3 ஆக 22 நீங்கியது.

விஞ்ஞானமயகோச மென்கின்ற கஞ்சுக சரீரத்தில் ஆன்மாவின் அறிவு விளங்கப் பெறுகின்ற அவசரம் துரியம் எனப்படும்.

மேற்கூறிய மூன்றில் சித்தமும் நீங்க, பிராணனும் புருடனுமாகிய கருவி 2.

ஆனந்தமயகோச மென்கின்ற காரண சரீரத்தில் ஆன்மாவின் அறிவு விளங்கப் பெறுகின்ற அவசரம் துரியாதீதம் எனப்படும். அப்போது பிராணனும் நீங்க புருடன் மட்டும் கருவி 1.

இங்ஙனம் கருவிகள் ஒடுங்கி துரியாதீதத்தில் ஆன்மா சுத்த அஞ்ஞான மயமாய் நிற்கும் அவசரத்தினையே கீழாலவத்தை என்பர்.

இனி இறைவனுடைய அருட்சத்தியானது சுத்த சுயம் பிரகாசமாய் ஆன்மாவினையும், அவ்வான்மாவினைப் பொதிந்த ஆணவத்தினையும், அவ்வான்மாவிற்கு ஐந்து சட்டைகளான பஞ்சகோசத்தினையும் வியாபித்துக் கொண்டு பேரொளிப் பிழம்பாய் நிற்கும். இந்த நிலையே மெய்ஞ்ஞான நிலை.

சாயுச்சிய கதியை........ அடைவேனோ?:—

துரியாதீத நிலையை யடைந்து "எல்லாமற என்னையிழந்த நலம்" என்ற தன்மையையுற்று இன்பவடிவாகி பரகதியை யடைய வேண்டும்.

மேன்மைத் திருப்புகழை யோதற்கெனக் கருள்வோனே:—

திருப்புகழ் முருகவேள் திருவருள் மயமாக விளங்குவதால் மேனமை என்ற அடை தரப்பட்டது. அதனைப் பாடுதற்கு அருணகிரியார்க்கு வயலூரில் முருகவேள் அருள் புரிந்தனர்.

"பாத பங்கய முற்றிட உட்கொண்
டோதுகின்ற திருப்புகழ் நித்தம்
பாடுமன்பது செய்ப்பதி யிற்றந் தவநீயே"
—(கோலகுங்கும) திருப்புகழ்.

## கருத்துரை

வயலூரா! சூரனை யடக்கிய வீரரே! கதிர்காமரே! துரியாதீத நிலையுற்று இன்புருவமாகிய முத்திபெற அருள்புரிவீர்

## 192

பாரவித முத்தப்ப டீரபுள கப்பொற்ப
யோதர நெருக்குற்ற இடையாலே
பாகளவு தித்தித்த கீதமொழி யிற்புட்ப
பாணவிழி யிற்பொத்தி விடுமாதர்
காரணி குழற்கற்றை மேல்மகர மொப்பித்த
காதில்முக வட்டத்தி லதிமோக
காமுகனை கப்பட்ட வாசையைம றப்பித்த
கால்களைம றக்கைக்கும் வருமோதான்
தேரிரவி யுட்கிப்பு காமுதுபு ரத்திற்றெ
சாசிரனை மர்த்தித்த அரிமாயன்
சீர்மருக அத்யுக்ர யானைபடும் ரத்னத்ரி
கோணசயி லத்துக்ர கதிர்காம
வீரபுன வெற்பிற்க லாபியெயி னச்சிக்கு
மேகலை யிடைக்கொத்தி னிருதாளின்
வேரிமழை யிற்பச்சை வேயிலரு ணக்கற்றை
வேல்களி லகப்பட்ட பெருமாளே.

### பதவுரை

தேர் இரவி - தேரிலே வருகின்ற சூரியன், உட்கி புகா-அஞ்சி உள்ளே புகாத, முது புரத்தில் - பழைய ஊராகிய இலங்கையில், தெசா சிரனை மர்த்தித்த - பத்துத் தலைகளையுடைய இராவணனைப் பிசைந்து கடைந்த, அரி மாயன் - திருமாலின், சீர்மருக - சிறந்த மருகரே! அதி உக்ர - அதிக உக்கிரமான, யானைபடும் - யானைகள் எதிர்ப்படும், ரத்ன அத்ரி - இரத்தினங்கள் கிடைக்கும் மலையாகிய, கோண சயிலத்து - திருக்கோண மலையில் வீற்றிருக்கும், உக்ர கதிர்காம - உக்ரமான கதிர்காமக் கடவுளே! வீர - வீரமூர்த்தியே! புனவெற்பில் - தினைப்புனம் நிறைந்த வள்ளி மலையில், கலாபி எயினச்சிக்கு - மயில்போன்ற வேடப் பெண்ணின், மேகலை இடை - மேகலை யணிந்த இடையிலும், கொத்து இன் இருதாளின் - பூங்கொத்துக்கள் உடைய இனிய இருதாள்களிலும், வேரி மழையில் - வாசனை தங்கிய மேகம் போன்ற கூந்தலிலும், பச்சை வேயில் - பசிய மூங்கில் போன்ற தோள்களிலும், அருண கற்றை வேல்களில் - சிவந்த ஒளித்திரளைக் கொண்ட வேல் போன்ற கண்களிலும், அகப்பட்ட - சிக்கிக் கொண்ட, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! பாரவித - பாரங்கொண்டதும்,

முத்தம் - முத்துமாலை யணிந்ததும். படிர - சந்தனம் பூசப் பெற்றதும், புாக - புளகாங்கிதங் கொண்டதும், பொன் பயோதர - அழகியதும் ஆகிய தனங்களால், நெருக்கு உற்ற இடையாலே - நெருக்குண்ணும் இடையாலும், பாகு அளவு தித்தித்த - சர்க்கரைப்பாகு போல் தித்தித்த, கீத மொழியில் - கீதம் போன்ற இனிய மொழிகளாலும், புட்ப பாண விழியில் - மன்மதனுடைய மலர்க் கணைகள் போல் தைக்கும் கண்களாலும், பொத்தி விடும் மாதர் - ஆண்களை ஆசைமயக்கத்தால் மூடிவிடுகின்ற பொதுமாதர்களின்,கார்அணி குழல் கற்றை மேல் - மேகம் போன்றகூந்தல் கட்டினாலும், மகரம் ஒப்பித்த காதில் - மகர மீன்போன்ற குழை யணிந்த காதினாலும், முகவட்டத்தில் - முகமண்டலத்தினாலும், அதிமோக - அதிக மோகங் கொண்ட, காமுகன் - காமியாகிய அடியேன், அகப்பட்ட ஆசையை மறப்பித்த - சிக்கிக் கிடந்த ஆசையை அடியோடு மறக்கச் செய்த. கால்களை மறக்கைக்கும் வருமோதான் - உமது திருவடிகளை மறக்கவும் கூடுமோ? (மறவேன்).

## பொழிப்புரை

தேரில் வருகின்ற சூரியபகவான் அஞ்சி உள்ளே புகமாட்டாத பழைய ஊராகிய இலங்கையில் பத்துத் தலைகளையுடைய இராவணனைக் கலக்கிக் கடைந்த திருமாலின் சிறந்த மருகரே! மிகுந்த வேகமுடைய யானைகள் எதிர்ப்படும், இரத்தின மணிகள் கிடக்கும் திருக்கோண மலையில் வீற்றிருக்கும், உக்கிரமான கதிர்காமக் கடவுளே! வீர மூர்த்தியே! தினைப்புனத்துடன் கூடிய வள்ளிமலையில், மயில் போன்ற வேடப் பெண்ணாகிய வள்ளி நாயகியின் மேகலை யணிந்த இடையிலும், பூங்கொத்துக்களுடைய இனிய இருதாள்களிலும், வாசனை தங்கிய மேகம் போன்ற கூந்தலினாலும், பசிய மூங்கிலை யொத்த தோள்களிலும், சிவந்த ஒளிவிடும் கூரிய வேல் போன்ற கண்களிலும் சிக்கிக் கொண்ட பெருமிதமுடையவரே! பாரங் கொண்டதும், முத்துமாலை அணிந்ததும், சந்தனம் பூசப்பட்டதும், புளகாங்கிதங் கொண்டதும், அழகியதுமான தனங்களால் நெருக்குண்ணும் இடையினாலும், சர்க்கரைப்பாகு போல் தித்திக்கின்ற கீத மொழியினாலும், மன்மதனுடைய மலர்க்கணைகள் போன்ற கண்களாலும், ஆடவர்களைக் காம மயக்கத்தில் மூடிவிடுகின்ற பொது மாதர்களின், மேகம் போன்ற கூந்தல் கட்டினாலும், மகர மீன் போன்ற குழைகளையுடைய காதுகளினாலும், முகமண்டலத்தாலும், அதிமோகங் கொண்ட, காமியாகிய அடியேன், சிக்கிக்கிடந்த ஆசையை அடியுடன் மறக்கும்படிச் செய்த உமது திருவடிகளை மறக்கவும் வருமோ? (ஒரு போதும் மறவேன்)

## விரிவுரை

இத்திருப்புகழ் அருணகிரிநாதருடைய வரலாற்றுத் தொடர்புடையது. மூன்று அடிகளில் தன்னை மயக்கிய கணிகையரது அங்க நலன்களைக் கூறுகின்றார்.

காமுகனகப்பட்ட ஆசையை மறப்பித்த கால்களை மறக்கைக்கு வருமோதான்:—

"பொது மாதரது வசமாகிய ஆசைக்கடலில் முழுகியிருந்த அடியேன், அந்த ஆசையை அடியோடு மறக்குமாறு அருள் புரிந்த உமது பாதமலரை மறக்க வொண்ணுமோ! ஒரு போதும் மறவேன்; மறவேன்" என்று சுவாமிகள் கூறுகின்றார்.

தேரிரவியுட்கிப்புகா முதுபுரம்:—

இராவணனுடைய ஆணைக்கு அஞ்சி இலங்கையில் சூரியன் தேர் செல்ல மாட்டாது.

"பகலவன் மீதியங்காமை காத்த பதியோன்" —சம்பந்தர்.

"பகலவன் மீதியங்காத இலங்கை" —பெரியதிருமொழி.

"புணரியில் விரவி எழுந்த ஞாயிறு
விலகிய புரிசை இலங்கை வாழ்பதி" —(கிணமொடு) திருப்புகழ்.

அத்யுக்ர யானைபடும் ரத்னத்ரி கோண சயிலம்:—

அதி உக்ர—அத்யுக்ர. கோண சயிலம்—திருக்கோணமலை.

இது இலங்கையில் உள்ள அருமையான தலம். தேவாரப் பாடல் பெற்றது.

"கனமணிவரன்றிக் குரைகடல் ஓதம்
நித்திலம் கொழிக்கும் கோணமா மலை" —சம்பந்தர்.

வேரி மழையில்:—

வேரி—வாசனை. மழை—மேகம். இது ஆகு பெயராகக் கூந்தலைக் குறிக்கின்றது.

வேல்களில்:—

வேல் போன்ற கண். இதுவும் ஆகு பெயர்.

## கருத்துரை

கதிர்காமத் திருமுருகா! அடியேனுடைய ஆசையை யகற்றிய உன்பாத மலரை ஒரு போதும் மறவேன்.

## 193

மருவரு வெற்றி மலர்தொடா விற்கை
    வலிசெயா நிற்கு மதனாலும்
மதில்கள்தா வுற்ற கலைபடா வட்ட
    மதிசுடா நிற்கு மதனாலும்
இருகணால் முத்த முதிரயா மத்தி
    னிரவினால் நித்த மெலியாதே
இடருரு மெத்த மயல்கொளா நிற்கு
    மிவளைவாழ் விக்க வரவேணும்
கரிகள்சேர் வெற்பி லரியவே டிச்சி
    கலவிகூர் சித்ர மணிமார்பா
கனகமா ணிக்க வடிவனே மிக்க
    கதிரகா மத்தி லுறைவோனே
முருகனே பத்த ரருகனே முத்தி
    முதல்வனே பச்சை மயில்வீரா
முடுகிமே லிட்ட கொடியசூர் கெட்டு
    முறியவேல் தொட்ட பெருமாளே.

### பதவுரை

கரிகள் சேர் வெற்பில் - யானைகள் வாழும் மலையில், அரிய வேடிச்சி - அருமையான வள்ளிபிராட்டியின், கலவி கூர் - கலவியின்பம் மிகுந்த, சித்ர மணி மார்பா - அழகிய மணிகள் நிறைந்த திருமார்பினரே! கனகமாணிக்க வடிவனே - பொன்னில் பதித்த மாணிக்கம் போன்ற உருவினரே! மிக்க கதிர காமத்தில் உறைவோனே - சிறந்த கதிர்காமத்தில் வாழ்கின்றவரே! முருகனே - முருகக் கடவுளே! பத்தர் அருகனே - அடியார்களின் அருகில் இருப்பவரே! முத்தி முதல்வனே - முத்தியுலகிற்குத் தலைவரே! பச்சை மயில் வீரா - பச்சைமயிலில் வரும் வீரமூர்த்தியே! முடுகி மேல் இட்ட - விரைந்து வந்து மேலிட்டு எதிர்த்த, கொடிய சூர் கெட்டு முறிய - கொடுமையான சூரன் கெட்டு அழியுமாறு, வேல் தொட்ட - வேலை விடுத்த, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! மரு அரு - வாசனை நீங்காததும், வெற்றி மலர் தொடா - வெற்றி பெறுவதுமான மலர்க்கணைகளை தொட்டுப் பயிலும், வில்.கை - வில்லைக் கையில் பிடித்து, வலி செயா நிற்கும் - வலிமையைச் செய்து நிற்கும், மதனாலும் - மன்மதனாலும், மதில்கள் தாவு உற்ற - மதில்

களைத் தாண்டி வருகின்ற, கலை படா - கலைகள் குறையாத, வட்டமதி - வட்டமாயுள்ள சந்திரன், சுடா நிற்கும் அதனாலும் - சுட்டு நிற்பதனாலும், இரு கணால் - இரண்டு கண்களில், முத்தம் உதிர - முத்துப் போன்ற கண்ணீர் சிந்த, யாமத்தின் இரவினால் - யாமங்கள் கொண்ட இரவில், நித்தம் மெலியாதே - தினந்தோறும் மெலிவு அடையாமல், இடர் உரு - துன்பம் அடைந்து, மெத்த மயல் கொளா - மிகவும் மயக்கம் கொண்டு, நிற்கும் இவளை வாழ்விக்க - வருந்தி நிற்கும் இந்த நாயகியை வாழ்விக்கும் பொருட்டு, வரவேணும் - தேவரீர் வந்தருளவேணும்.

## பொழிப்புரை

யானைகள் வாழும் வள்ளிமலையில் அருமை வாய்ந்த வேட்டுவப் பெண்ணாகிய வள்ளியம்மையின் கலவியின்பம் மிகுந்த அழகிய மணிமார்பினரே! பொன்னுடன் கூடிய மாணிக்க மணி போன்ற வடிவினரே! சிறந்த கதிர்காமத்தில் உறைகின்றவரே! முருகப் பெருமானே! அடியார்களின் அருகில் உறைபவரே! முத்திக்கு முதல்வரே! பச்சை மயில் வீரரே! மிகுந்த வேகத்துடன் வந்த கொடிய சூரன் கெட்டு அழிய வேலைத் தொட்டருளிய பெருமிதமுடையவரே! வாசனை நீங்காததும் வெற்றி பெறுவதும் ஆன மலர்க்கணைகளைத் தொட்டுப் பயிலும் வில்லைக் கையில் வைத்து வலிமை செய்யும் மன்மதனாலும், மதில்களைத் தாண்டிவரும் கலைகள் குறையாத வட்டவடிவான சந்திரன் சுட்டு நிற்பதனாலும், இருகண்களில் முத்துமுத்தாய் கண்ணீர் சிந்த யாமங்கள் தோறும் ஒவ்வொரு நாளும் இரவில் மெலியாதவாறு, காமமயக்கத்தால் துன்புற்று நிற்கும் இவளை வாழ்விக்க வந்தருள வேண்டும்.

## விரிவுரை

இந்தத் திருப்புகழ் அகப்பொருள் துறையில் அமைந்தது.

தலைவியின் துன்பத்தைக் கண்டு இரங்கிய பாங்கி தலைவணாகிய முருகனிடம் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

மருவவுறு வெற்றி.........மதனாலும்:—

வாசனையும் வெற்றியும் பொருந்திய மலர்க் கணைகளால் மன்மதன் இவளைச் சித்திரவதை செய்கின்றான். அதனால் இவளை முருகா! நீ வாழ்வித்தருள்.

மதிசுடா நிற்கு மதனாலும்:—

தலைவிக்கு விரகதாபத்தை மிகுதிப்படுத்திச் சந்திரன் சுடுகின்றான்.

ஊரைச் சுடுமோ உலகத்தைத் தான்சுடுமோ?
ஆரைச் சுடுமோ? அறிகிலேன்—பாரில்
பொருப்பு வட்டமானமுலைப் பூவையை வாட்டும்
நெருப்பு வட்டமான நிலா.

இருகணால் முத்த முதிர:—

இத் தலைவி தலைவனை நினைந்து இருகண்களினின்றும் முத்து முத்தாய் கண்ணீர் சிந்தி வருந்துகின்றாள்.

யாமத்தின் இரவினால் நித்தம் மெலியாதே:—

யாமம்—3 மணி நேரம். 7½ நாழிகை.

யாமந்தோறும் இரவில் இவள் தினமும் வேதனைப்படுகின்றாள். ஆதலால் காதலால் மெலியும் இவளை வாழ்விக்க முருகா! நீ வந்தருள்.

கனகமாணிக்க வடிவனே:—

அருணகிரியார் கதிர்காமம் சென்று தெரிசித்தபோது பொன்னில் பதித்த மாணிக்கம் போன்ற அழகிய திருவுருவுடன் முருகவேள் காட்சி தந்தருளினார்.

கருத்துரை

கதிர்காம வேலவனே! உன்னை நாடும் இத்தலைவியை வாழ்விக்க வந்தருள்வீர்.

## 194

மாதர்வச மாயுற் றுழல்வாரும்
மாதவமெ ணுமற் றிரிவாரும்
தீதகல வோதிப் பணியாரும்
தீநரக மீதிற் றிகழ்வாரே
நாதவொளி யேநற் குணசீலா
நாரியிரு வோரைப் புணர்வேலா
சோதிசிவ ஞானக் குமரேசா
தோமில்கதிர் காமப் பெருமாளே.

பதவுரை

நாத ஒளியே - ஒலி ஒளியாக விளங்குபவரே! நல்குண சீலா - நல்ல அருட் குண சீலரே! நாரி இருவோரை புணர்வேலா - வள்ளியம்மை தேவசேனை யென்ற இரு சக்திகளை மருவுகின்ற வேலாயுதரே! சோதி-ஜோதியே

சிவஞான குமர ஈசா - சிவஞானத்தைத் தரும் குமாரக் கடவுளே! தோம் இல் கதிர்காம - குற்றமில்லாத கதிர்காமத்தில் வாழும், பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! மாதர் வசம் ஆய் உற்று உழல்வாரும் - பெண்கள் வசப்பட்டுத் திரிபவர்களும், மாதவம் எணுமல் திரிவாரும் - சிறந்த தவத்தை நினைக்காமல் திரிபவர்களும், தீது அகல ஓதி பணியாரும் - தீமைகள் அகலும்படி திருமுறைகளை ஓதி வணங்காதவர்களும், தீ நரகமீதில் திகழ்வாரே - கொடிய நரகத்திலே விளக்கமுற்றுக் கிடப்பார்கள்.

## பொழிப்புரை

ஒலி ஒளி மயமாகத்திகழ்பவரே! நல்ல அருட்குண சீலரே! வல்லி தேவசேனை யென்ற இரு சக்திகளை மருவுகின்றவரே! ஜோதியே! சிவஞானத்தை வழங்கும் குமாரக் கடவுளே! குற்றமில்லாத கதிர்காமத்தில் வாழும் பெருமிதமுடையவரே! பெண்கள் வசமாகி உழல்கின்றவர்களும், சிறந்த தவத்தை நினைக்காமல் திரிகின்றவர்களும், தீமைகள் விலகும்படி, திருமுறைகளை ஓதி வணங்காதவர்களும், கொடிய நரகத்தில் கிடந்து துன்புறுவார்கள்.

## விரிவுரை

மாதர் வசமாயுற் றுழல்வாரும்:—

பல்லூழி காலந் தவஞ் செய்து வந்தது இம்மனிதப் பிறவி. கடலைக் கையால் நீந்திக் கரைசேர்ந்தது போல் நால்வகைப் பிறப்பு, ஏழுவகை யோனிகளுடன் எண்பத்து நான்கு லட்ச பேதங்களாகிய பிறவிகளை எடுத்து எடுத்து உழன்று சுழன்று இம் மானிடப் பிறவி எடுத்தோம். இப் பிறப்பின் அருமையும் பெருமையுந் தெரியாது, பிறவிப் பயனைப் பெற முயலாது அற்ப இன்பத்தை நாடிப் பெண்கள் வசமாகி உழல்கின்றார்கள் மாந்தர்கள். அந்தோ! அந்தோ! பரிதாபம்! பரிதாபம்!!

மாதவமெணுற் றிரி வாரும்:—

தவம் ஒன்றே சிவத்தைச் சார்விக்கும். அறஞ் செய்தால் அன்பு வரும்; அன்பு வந்தால் அருள் வரும்; அருள் வந்தால் தவம் வரும்; தவம் வந்தால் சிவம் வரும். சிவத்தைச் சார்ந்த உயிர் பிறப்பு இறப்பு நீங்கிப் பேரானந்தப் பெரு வாழ்வைப் பெற்று இன்புறும்.

ஆதலால் ஒவ்வொருவரும் நல்ல தவஞ் செய்ய வேண்டும்.

தீதகல வோதிப் பணியாரும்:—

திருமுறைகளை ஓதினால் ஏனைய தீமைகள் விலகிப் போம். காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கித் திருமுறைகளை ஓத வேண்

டும். "திருநெறிய தமிழ் வல்லவர் தொல்வினை தீர்தல் எளி தாமே" என்பார் திருஞானசம்பந்தர்.

"சினமே தவிராய் திருமுறைகள் ஓதாய்
மனமே உனக்கென்ன வாய்"

தீ நரக மீதில் திகழ்வாரே:—

மாதர் வசமானவரும், மாதவம் எண்ணாதவரும், திரு முறைகளை ஓதி இறைவனைப் பணியாதவரும் கொடிய நரகில் வீழ்ந்து கொடுந் துன்பத்தை நுகர்வார்கள்.

நாத வொளியே:—

நாதம்—ஒலி. ஒலி, ஒளியெல்லாம் இறைவன்தான்.

"ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே" —அப்பர்.

நாரியிரு வோரைப் புணர்வோனே:—

வள்ளியம்மை—மண்ணுலக மடந்தை. தெய்வயானை— விண்ணுலக மடந்தை. வள்ளியைக் கொண்டு இகலோக வாழ்வும், தெய்வயானையைக் கொண்டு பரலோக வாழ்வும் முருகப் பெருமான் வழங்குவார்.

சோதி சிவஞானக் குமரேசா:—

ஆணவ இருளையகற்றும் ஜோதி வடிவானவர் முருகர். சிவஞானத்தை வழங்குபவர்.

தோமில் கதிர்காமப் பெருமாளே:—

தோம்—குற்றம்.

குற்றமே இல்லாத புனிதமான திருத்தலம் கதிர்காமம். வணங்குபவர்களின் குற்றத்தைக் களைய வல்லது.

## கருத்துரை

கதிர் காமக் கடவுளே! மாதர்வசமாவோரும், இறைவழிபாடு செய்யாதாரும் நரகில் புகுவார்கள்.

## 195

முதிரு மார வார நட்பொ டிலகு மார வார மெற்றி
முனியு மார வார முற்ற கடலாலே
முடிவி லாத தோர் வடக்கி லெரியு மால மார்பி டத்து
முழுகி யேறி மேலெ றிக்கு நிலவாலே

வெதிரி லாயர் வாயில் வைத்து மதுர ராக நீடி சைக்கும்
விணவி டாத தாய ருக்கு மழியாதே
விளையு மோக போக முற்றி அளவி லாத காதல் பெற்ற
விகட மாதை நீயணைக்க வரவேணும்

கதிர காம மாந கர்க்கு ளெதிரி லாத வேல்த ரித்த
கடவு ளேக லாப சித்ர மயில்வீரா
கயலு லாம்வி லோச னத்தி களப மார்ப யோத ரத்தி
ககன மேவு வாளொ ருத்தி மணவாளா

அதிர வீசி யாடும் வெற்றி விடையி லேறு மீசர் கற்க
அரிய ஞான வாச கத்தை யருள்வோனே
அகில லோக மீது சுற்றி யசுரர் லோக நீறெ ழுப்பி
அமரர் லோகம் வாழ வைத்த பெருமாளே.

## பதவுரை

கதிரகாம மா நகர்க்கு உள் - கதிர்காம மா நகரத்தில், எதிர் இலாத வேல் தரித்த கடவுளே - ஒப்பில்லாத வேலாயுதத்தைத் தரித்த கடவுளே! கலாப சித்ர-தோகையின் அழகு வாய்ந்த, மயில் வீரா - மயிலில் வரும் வீர மூர்த்தியே! கயல் உலாம் விலோசனத்தி - மீன்போன்ற சிறந்த கண்களை யுடையவளும், களபம் ஆர் பயோதரத்தி - சந்தனக் கலவை அணிந்த தனங்களையுடையவளும், ககனமேவுவாள் ஒருத்தி - விண்ணுலகத்தில் வீற்றிருப்பவளுமாகிய தேவசேனையின், மணவாளா - கணவரே! அதிர வீசி ஆடும் - உலகங்கள் அதிரும்படி கைகளையுங் கால்களையும் வீசியாடுகின்ற, வெற்றி விடையில் ஏறும் - வெற்றியையுடைய இடபத்தின்மீது வரும், ஆரோகணிக்கின்றவரும் ஆகிய, ஈசர் கற்க - சிவபெருமான் அறியுமாறு, அரிய ஞான வாசகத்தை - அருமையான ஞான உபதேச மொழியை, அருள்வோனே - அருளியவரே! அகில லோக மீது சுற்றி - எல்லாவுலகங்களிலும் சுற்றி யுலாவி, அசுரர் லோகம் நீறு எழுப்பி - அசுரர்கள் வாழ்ந்த உலகங்களைத் தூளாக்கி, அமரர் லோகம் வாழவைத்த - தேவலோகத்தை வாழ வைத்த, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! மார வாரம் முதிரும் நட்பொடு - மன்மதனுக்கு உரிய அன்பு முதிர்ந்த நட்புடன், இலகும் ஆர் அ ஆரம் எற்றி - ஒளி பொருந்திய அந்த முத்துக்களை கரையில் வீசி, முனியும் ஆரவ்வாரம் உற்ற கடலாலே - கோபிக்கும் பேரொலி பொருந்திய கடலினுலும், முடிவு இலாதது - அழிவில்லாததாய், ஓர் வடக்கில் - ஒப்பற்ற கடலின் வடக்கில், எரியும்-ஊழித்தீயாம் வடவைக் கனல் போல் எரிவதாய், ஆலம் ஆர்பு இடத்து முழுகி - விஷம் நிறைந்து தோன்றிய இடமாம்

கடலில் முழுகி, ஏறி மேல் எறிக்கும் நிலவாலே - மேல் எழுந்து கிரணங்களை வீசும் சந்திரனாலும், வெதிரில் ஆயர் வாயில் வைத்து - வேய்ங்குழலை இடையர் வாயில் வைத்து, மதுர ராகம் நீடு இசைக்கும் - இனிமையான பண்களை நெடுநேரம் கேட்கச் செய்யும் இசை யொலியினாலும், வினைவிடாத தாயருக்கும் - தமது தொழிலை விடாத தாய்மாருக்கும், அழியாதே - அழியாமல், விளையும் மோக போகம் முற்றி - உண்டாகின்ற காமபோகமே நிரம்பி, அளவு இலாத காதல் பெற்ற - அளவு கடந்த ஆசைகொண்டுள்ள, விகடமாதை - இந்த அழகிய பெண்ணை, நீ அணைக்க வரவேணும் - தேவரீர் தழுவும் பொருட்டு வந்தருள வேண்டும்.

## பொழிப்புரை

கதிர்காமமா நகருக்குள் எழுந்தருளியிருக்கும் ஒப்பில்லாத வேலாயுதத்தைத் தரித்த கடவுளே! அழகிய தோகைகொண்ட மயிலையுடைய வீர மூர்த்தியே! மீன் போன்ற கண்களையுடையவளும், சந்தனக்கலவை நிறைந்த தனங்களையுடையவளும், விண்ணுலகில் வாழ்பவளுமாகிய தேவசேனையின் கணவரே! விண்ணும் மண்ணும் அதிருமாறு கரசரணங்களை வீசி நடனம் ஆடுகின்றவரும், வெற்றி விடையில் ஏறுபவருமாகிய சிவபெருமான் உணருமாறு, அருமையான சிவஞான உபதேச மொழியை அருளியவரே! எல்லா உலகங்களையுஞ் சுற்றி, அசுர உலகங்களைப் பொடியாகச் செய்து, அமர உலகத்தை வாழவைத்த பெருமிதம் உடையவரே! மன்மதனுக்கும் அன்பு முதிர்ந்த நட்புடன், ஒளி நிறைந்த அந்த முத்துக்களைக் கரையில் எறிந்து, கோபிக்கும் பேரொலியுடைய கடலினாலும், அழிவில்லாத வடவைத் தீயைப் போல் எரிவதாய், ஆலகால நஞ்சு தோன்றிய கடலில் முழுகி எழுந்து மேலே கிரணங்களை வீசுவதாயுள்ள நிலவினாலும், புல்லாங்குழலை இடையர்கள் வாயில் வைத்து இனிய பண்களை நீண்ட நேரம் ஒலிக்கும் இன்னிசையினாலும், தம் தொழிலை விடாத தாய்மாருக்கும், அழியாமல், உண்டாகின்ற காமபோகம் நிரம்பி அளவு கடந்த காதல் கொண்டுள்ள, இந்த அழகிய பெண்ணைத் தேவரீர் தழுவிக் கொள்ளும் பொருட்டு வந்தருள வேண்டும்.

## விரிவுரை

இத் திருப்புகழ் அகப்பொருள் துறையில் பாடியது.

முதிரு மார வார நட்பொடு:—

மாரன்—மன்மதன். வாரம்—அன்பு.

சமுத்திரம் மன்மதனுக்கு துந்துபி வாத்தியமாக விளங்குவது. மன்மதனுக்கு முதிர்ந்த அன்புடன் கூடிய நட்பு பூண்டது.

இலகு மார வார மெற்றி:—

இலகு ஆர் அ ஆரம் எற்றி.

இலகும்-ஒளி; ஆர்-நிறைந்த; அ-அந்த; ஆரம்-முத்து.

அலைகளாகிய கரங்களால் கடல் முத்தைக் கரையில் எறிகின்றது.

முனியு மார வார முற்ற கடல்:—

முனியும் ஆரவாரம் உற்ற. ஆரவாரம்—பேரொலி.

இந்த அடியில் மார வார என்ற சொற்களை மூன்று இடங்களில் வெவ்வேறு பொருள்களில் அமைத்துள்ள கவித்திறம் மிகவும் வியத்தற்குரியது. கடல், தலைவன் தலைவிக்குக் காதல் நோயை அதிகப்படுத்தும். "தொல்லை நெடு நீலக்கடலாலே" என்று பிறிதொரு திருப்புகழிலும் கூறுகின்றார்.

முடிவிலாததோர் வடக்கி லெரியும்:—

வடதிசை அழிவில்லாதது என்கின்றார். அது சிவபெருமான் இருக்கின்ற திசை. தென்திசை பலகாலும் கடலால் அழிவு பெற்றதையும் குறிக்கின்றார் போலும்.

வடக்கே கடலில் நீரைச் சுவற வைக்குந் தீ வடவாமுகாக்கினி. அத் தீயைப் போல் நிலவு வெம்மையைச் செய்கின்றது. யாருக்கு? காமுகர்க்கு.

ஆலமார் பிடத்து முழுகி:—

ஆலம் ஆர்பு இடத்து. ஆலகால விஷம் நிறைந்து தோன்றிய கடலில் முழுகி எழுவதால் சந்திரன் நஞ்சுபோல் எரிக்கின்றான் என்கின்றார்.

வெதிரி லாயர்:—

வெதிர்—மூங்கில். காட்டில் இயற்கையாய் விளைகின்ற மூங்கில் குழாயில் முறைப்படி துளையிட்டு ஆயர்கள் ஆடுமாடுகளை மகிழ்விக்கும் பொருட்டு இனிய ராகங்களையமைத்து ஊதுவார்கள். அது தலைவன் தலைவியர்க்கு வேதனையைத் தரும்.

அதிர வீசியாடும்.........ஈசர்:—

இறைவனுடைய ஆட்டத்துக்கு இந்த உலகமாகிய அரங்கு காணவில்லை,

அடிபேரின் பாதாளம் பேரும் அடிகள்
முடிபேரின் வான்முகடு பேரும்—கடகம்
மறிந்தாடு கைபேரில் வான்திசைகள் பேரும்
அறிந்தாடும் ஆற்ரு தரங்கு. —அற்புதத் திருவந்தாதி

"அதிர வீசி வாதாடும் விடையிலேறு வாராட"
—(அதலசேட) திருப்புகழ்.

அமரலோகம் வாழவைத்த பெருமான்:—

களைகளைப் பறித்து, நெற்பயிரை வாழவைப்பது போல், அசுர லோகத்தைப் பொடியாக்கி, அமர லோகத்தை எம் பெருமான் வாழ வைத்தருளினர்.

அசுரர்கள்—துர்க்குணங்கள். அமரர்கள்—நற்குணங்கள்.

இந்தத் திருப்புகழில் ஒவ்வோரடியிலும் பிற்பகுதிகளை எடுத்து ஒன்று கூட்டிஞல் எதுகையென்ற இலக்கணம் ஒன்று மட்டும் இன்றி ஏனைய இலக்கணங்களும் பொருளும் பொருந்தப் பிறிதொரு திருப்புகழ்ப் பாடலாகித் திகழ்கின்றது.

முனியு மார வார முற்ற — கடலாலே
முழுகி யேறி மேலெ றிக்கு — நிலவாலே
வினைவி டாத தாய ருக்கு — மழியாதே
விகட மாதை நீயணைக்க — வரவேணும்

கடவு ளேக லாப சித்ர — மயில்வீரா
ககன மேவு வாளொ ருத்தி — மணவாளா
அரிய ஞான வாச கத்தை — யருள்வோனே
அமரர் லோகம் வாழ வைத்த — பெருமாளே.

கருத்துரை

கதிர்காமக் கடவுளே! உன்னை நினைந்து வருந்தும் இப் பெண்ணைத் தழுவியருள நீ வரவேண்டும்.

## 196

வருபவர்க ளோலை கொண்டு
நமனுடைய தூத ரென்று
மடிபிடிய தாக நின்று — தொடர்போது
மயலதுபொ லாத வம்பன்
விரகுடைய ஞகு மென்று
வசைகளுட னேதொடர்ந்து — அடைவார்கள்

கருவியத னூலெ றிந்து
சதைகள்தனை யேய றிந்து
கரியபுன லேசொ றிந்து விடவேதான்
கழுமுனையி லேயி ரென்று
விடுமெனும வேளை கண்டு
கடுகிவர வேணு மென்றன் முனமேதான்

பரகிரியு லாவு செந்தி
மலையினுட னேயி டும்பன்
பழநிதனி லேயி ருந்த குமரேசா
பதிகள்பல வாயி ரங்கள்
மலைகள்வெகு கோடி நின்ற
பதமடியர் காண வந்த கதிர்காமா

அரவுபிறை பூளை தும்பை
விலுவமொடு தூர்வை கொன்றை
யணிவர்சடை யாளர் தந்த முருகோனே
அரகர சிவாய சம்பு
குருபரகு மார நம்பு
மடியர்தமை யாள வந்த பெருமாளே.

## பதவுரை

பரகிரி - திருப்பரங்குன்றத்திலும், உலாவு செந்தி மலையின் உடனே - திருவுலா இடையறாது நிகழ்வதாகிய திருச்செந்தூர் என்ற சந்தன மலை யிலும், இடும்பன் பழநிதனிலே - இடும்பனால் கொணரப்பட்ட பழநிமலை மீதும், இருந்த - எழுந்தருளியிருக்கும், குமர ஈசா - குமாரக் கடவுளே! பதிகள் பல ஆயிரங்கள்-பல்லாயிரக்கணக்கான திருத்தலங்களிலும், மலை கள் வெகு கோடி - கோடிக்கணக்கான மலைகளிலும், நின்ற - நிலையாக இருந்து, பதம் அடியர் காண வந்த - திருவடியைக் கண்டு அடியவர் கள் நலம் பெறுமாறு வந்தருளிய, கதிர் காமா - கதிர்காமக் கடவுளே! அரவு - பாம்பையும். பிறை - பிறைச் சந்திரனையும், பூளை - பூளைப் பூவை யும், தும்பை - தும்பை மலரையும், விலுவமொடு - வில்வத்தையும், தூர்வை - அறுகம்புல்லையும், கொன்றை - கொன்றைப் பூவையும், அணி வர் சடையாளர் - சடைமீது தரித்துக்கொண்ட சிவபெருமான், தந்த - பெற்றருளிய, முருகோனே - முருகப் பெருமானே! அரகர - பாவங்களை

நீக்குபவரும், சிவாய - சிவாய என்ற மூன்று எழுத்துக்களையுடையவரும், சம்பு - சுககாரணருமாகிய சிவமூர்த்தியின், குருபர - குருநாதரே! குமார - குமாரக் கடவுளே! நம்பும் அடியர்தமை ஆளவந்த - எப்போதும் நீயே கதியென்று நம்பியுள்ள அடியார்களை ஆட்கொள்ளும்பொருட்டு வந்த, பெருமாளே - பெருமிதம் உடையவரே! ஓலை கொண்டு வருபவர்கள் - இயமனுடைய ஓலையை எடுத்துக்கொண்டு வருபவர்களாகிய காலதூதர்கள், நமனுடையதூதர் என்று - நாங்கள் இயமனுடைய தூதர்கள் என்றுகூறி, மடி பிடியது ஆக நின்று-மடியில் கைபோட்டுப் பிடிப்பதுபோல நின்று, தொடர் போது - அடியேனைத் தொடர்கின்ற பொழுதில், மயலது பொலாத வம்பன்- இவன் மயக்கமுடைய பொல்லாதவனாகிய வம்புக்காரன் என்றும், விரகு உடையன் ஆகும் என்று - வஞ்சனைக்காரன் ஆகும் என்றும், வசைகள் உடனே தொடர்ந்து -வசைச்சொற்களுடனே தொடர்ந்து, அடைவார்கள்- என் உயிரைப் பற்ற நெருங்கிவருவார்கள், கருவி அதனால் எறிந்து - (என் உயிரைப் பற்றிக்கொண்டுபோய் கூற்றுவன் முன் நிறுத்தி) ஆயுதங்களினால் என்னைத் துன்புறுத்தி, சதைகள்தனையே அரிந்து - சதைகளைத் துண்டு துண்டாகச் சேதித்து, கரிய புனலே சொரிந்துவிடவேதான் - இரும்பை உருக்கிய நீரை என் வாயிலே விட்டு, கழு முனையிலே இரு என்று விடும் எனும் - கழுவின் முனையிலே கிடத்தி என்று என்னை கழுவில் ஏற்றிவிடுகின்ற, அவ்வேளை கண்டு - அவ்வேளையில் சிறியேனுடைய துன்பத்தைப் பார்த்து, என்றன் முனம் கடுகி வரவேணும் - அடியேன் முன் விரைந்து வந்தருள வேண்டும். (ஏ, தான் - அசைகள்)

## பொழிப்புரை

திருப்பரங்குன்றத்திலும், திருவுலா வருவதற்கேற்ற செந்திலம் பதியாகிய சந்தன மலையிலும் இடும்பனால் கொணரப் பெற்ற பழநிமலையிலும், எழுந்தருளியுள்ள குமாரக் கடவுளே! ஆயிரக்கணக்கான திருத்தலங்களிலும், கோடிக்கணக்கான மலைகளிலும் விளங்கி, திருவடிமலரை அடியார்கள், தெரிசித்து உய்யுமாறு வந்தருளும் கதிர்காமக் கடவுளே! பாம்பு, பிறை மதி, பூளைப்பூ, தும்பைமலர், வில்வம், அறுகு, கொன்றைப்பூ, இவைகளை அணிந்த சடைமுடியுடைய சிவபெருமான் பெற்றருளிய குமாரமூர்த்தியே! பாவங்களை நீக்குபவரும், மூவெழுத்தின் முதல்வரும் சுககாரணருமாகிய சிவமூர்த்தியின் குருநாதரே! நம்புகின்ற அடியவரை ஆட்கொள்ளவந்த பெருமிதமுடையவரே! இயமனுடைய ஓலையை எடுத்துக்கொண்டு காலதூதர்கள் வந்து "நாங்கள் நமனுடைய தூதர்" என்று கூறி மடியைப் பிடித்து இழுப்பதுபோல் நின்று தொடர்கின்றபோது, "இவன் மயக்கமிக்க பொல்லாத வம்பன்; வஞ்சனைக்காரன்" என்ற வசைமொழிகளைக் கூறி, என்பால் நெருங்கு

வார்கள்; (அப்படி வந்த கால தூதர் என்னைப் பற்றிக்கொண்டு போய் இயமனுக்கு முன் நிறுத்தி) ஆயுதங்களால் துன்புறுத்தி சதைகளை யரிந்து, உருக்கிய இரும்பு நீரை என் வாயில் விட்டு கழுவின் முனையில் ஏற்றிவிடுகின்ற காலத்தில், எனது துன்பத்தைக் கண்டு கருணை புரிந்து, விரைந்து அடியேன் முன் வர வேணும்.

## விரிவுரை

வருபவர்களோலை கொண்டு:—

தீவினை செய்த உயிர்களைக் கொண்டுபோகும் பொருட்டு இயமதூதர் வருவர். அவ்வாறு வரும்போது இயமனுடைய ஓலையையும் உடன் கொணர்வர். இதனைப் பின்வருந் திருவாக்குகளாலும் அறிக.

"அமுதுததி விடமுமிழு செங்கட் டிங்கட்
பகவினொளிர் வெளிறெயிறு துஞ்சற் குஞ்சித்
தலையுமுடை யவனரவ தண்டச் சண்டச் சமனோலை
அதுவருகு மளவில்" —திருப்புகழ்.

"ஏட்டின் விதி வழி ஓட்டமறிகிலை"
—(பாட்டிலுருகிலை) திருப்புகழ்.

"ஓலையுந் தூதருங் கண்டுதிண்டாடல் ஒழித்தெனக்குக்
காலையுமாலையு முன்னிற்குமே கந்தவேள் மருங்கில்
சேலையுங்கட்டிய சீராவுங் கையிற் சிறந்த செச்சை
மாலையுஞ் சேவற் பதாகையுந் தோகையும் வாகையுமே.
—அலங்காரம் (27)

"என் ஓலை என்று வருமோ? என் ஓலை எங்கு கிழிந்து விட்டதோ?" என்று வயோதிகர்கள் கூறும் சலிப்புரைகளையுங் காண்க.

நமனுடைய தூதர்:—

பாவிகளைப் பற்றுதற்கு நமன்தூதர் வருவர். புண்ணிய சீலர்களை யழைக்கச் சிவகணங்களும் விஷ்ணுகணங்களும் வரும்.

"சிவனடியார்கள்பால் நீங்கள் செல்லவேண்டா. அவர்களைக் கண்டால் பணிந்து, மிகவும் தொலைவாக விலகிச் செல்லுங்கள்" என்று இயமன் தனது தூதர்கள்பால் கூறுவன்.

தொழுது நமனுந்தன் தூதுவர்க்குச் சொல்லும்
வழுவிலாக் காளத்தி மன்னன்—பழுதிலாப்
பத்தர்களைக் கண்டால் பணிந்தகலப் போமின்கள்
எத்தனையுஞ் சேய்த்தாக என்று. —நக்கீரர்.

மடிபிடியதாக நின்று தொடர்போது:—

வழக்குத்தலத்திலிருந்து வந்த சேவகன், நியாயத்தலத்தின் உடன் அழைப்புக் கடிதத்தை எடுத்துக் கொண்டு வந்து, மடியில் கையைப் போட்டு வலிந்து இழுத்துக் கொண்டு போவதுபோல், நமனுடைய தூதுவர் வந்து கடுமையுடன் அழைப்பர்.

"மயலது பொலாத வம்பன் விரகுடைய னுகுமென்று வசைகளுடனே தொடர்ந்து அடைவார்கள்":—

இயமனுடைய தூதர்கள் "இவன் மயக்கம் மிகுந்த பாதகன்; குற்றமே புரியுங் குணக்கேடன்; வம்பு புரியும் வஞ்சகன்; கொலையும் புலையுமிக்க குண்டகன்;" என்பனவாதி நிந்தனைச் சொற்களைக் கூறி ஏசுவார்கள்.

கருவியதனு லெறிந்து:—

புலை, கொலை, சூது, வாது, பிறன்மனை நயத்தல், கள்ளருந்தல், குருநிந்தை முதலிய தீமைகளைப் புரிந்தவர்களை இயமனுடைய தூதர்கள் நரகலோகத்தில் வைத்து, பற்பல ஆயுதங்களால் இடித்தும், அடித்தும், குத்தியும், எத்தியும், உதைத்தும், வதைத்தும் துன்புறுத்துவார்கள்.

நன்மை செய்யாவிடினும், தீமையாவது செய்யாதிருத்தல் வேண்டாவோ? தெய்வத்தை வந்திக்கா தொழியினும் நிந்திக்காமலாவது இருத்தல் வேண்டாவோ? உயர்ந்த மானுடப் பிறப்பு பலகாலும் வேண்டியதனுல் தரப்பட்டது. அரிய இம் மனித உடம்பினுல் தனக்கும் பிறர்க்கும் நலஞ் செய்ய வேண்டியதை விட்டு, சலஞ் செய்தபடியால், இயமதூதர் சினந்து தண்டிப்பர். நரிவெரூஉத்தலையார் என்ற சங்க காலத்துப் புலவர் கூறுகின்றார்.

பல்சான் றீரே! பல்சான்றீரே!!
கயல்முள் அன்ன நரைமுதிர் திரைகவுள்
பயனில் மூப்பின் பல்சான்றீரே!!!
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திறல் ஒருவன்
பிணிக்குங்காலை இரங்குவிர் மாதோ;

நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின்; அதுதான்,
எல்லாரும் உவப்பது; அன்றியும்
நல்லாற்றுப் படூஉம் நெறியுமா றதுவே. —புறநானூறு.

"பயனில்லாமல் மூப்பு எய்திக்கிடக்கும் பலராகிய மூத்தோர்களே! கூர்மையான மழுவையேந்தியவனும், மிக்க வன்மையுள்ளவனுமாகிய கூற்றுவன் இனி விரைவில் வருவான்; அப்போது நீங்கள் வருந்துவீர்கள். நல்லது செய்தல் இனி உங்களுக்கு முடியாமலிருக்கலாம். நல்லது அல்லாததாயினும் செய்யாமலிருக்க முயலுங்கள். அதுதான் இனி எல்லோரும் மகிழக்கூடியது. அல்லது செய்யாமல் காக்கும் அப் பழக்கம் ஒருகால் உங்களை நல்லது செய்யும் நெறியில் சேர்த்தாலும் சேர்க்கும்."

சதைகள் தனையே யரிந்து:—

"கொன்றால் பாவம் தின்றால் போயிற்று" என்பது பழமொழி. அதாவது ஆடு கோழி பன்றி முதலிய வாயில்லாத உயிர்களைக் கொன்ற பாவம் தின்றுவிட்டால் போய்விடும் என்பது இதன் பொருள். அப்படியாயின் புலாலுண்ணல் மிகப் பெரிய பாவம் என்று திருவள்ளுவனார் செப்பாரன்றோ?

"உண்ணாமை யுள்ள துயிர்நிலை ஊனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு"

என்பது அவர் திருவாக்கு.

அங்ஙனமாயின் மேற் போந்த பழமொழியின் கருத்துதான் யாதோ எனின் பழமொழி ஒருபோதும் பிழைமொழியாது. உயிர்களைக் கொன்ற பாவிகளைக் கொண்டுபோய் இயமதூதுவர்கள், நரகில் கிடத்தி அவர்கள் மாமிசத்தை யறுத்து அறுத்து அவர்கள் வாயில் ஊட்டி "மாமிசத்தை யுண்ட மடையனே! இதோ உன் மாமிசத்தை யருந்து" என்று உண்பிப்பார். தன்னிறைச்சியைத் தின்றால்தான் கொன்றபாவந் தீரும். எனவே கொன்றால் பாவம் தின்றால் போகும். உயிர்களை வதைத்த பாவம் தன் உடம்பின் சதைகளைத் தின்றால்தான் தீரும். இதுதான் அப் பழமொழியின் உட்பொருள் என உணர்க.

"அனலூடே
தவனப் படவிட் டுயிர் செக் கிலரைத்
தணிபற்க ளுதிர்த் தெரிசெப்புருவைத்
தழுவப் பணி முட்களில் கட்டியிசித் துடிவாய்கண்

சலனப்பட எற்றி யிறைச்சி யறுத்
தயில்வித்து முரித்து நெரித்துலையத்
தலையிட் டுவருத்தும் யமப்ரகரத் துயர்தீராய்"
—(புவனத்தொரு) திருப்புகழ்,

கரியபுனலே சொரிந்து:—

தசையை அறுத்து அறுத்து வாயில் வைத்து "விழுங்கு" என்று இயமதூதுவர் இடர் செய்கின்றபோது, தன்னிறைச்சியைத் தானே யுண்ண மயங்கி சிறிது தியங்குவாராயிள், உருக்கிய இரும்பு நீரை வாயில் விடுவர்.

இரும்பை உருக்கி வாயில் விட்டால் வேதனைப்படும் அவவுயிர் மாளாதோ? எனின், அங்கு ஏற்பட்ட வுடம்பு துன்பத்தை அனுப்பவிப்பதற்கு மட்டும் ஏற்பட்ட எட்டு தத்துவங்களுடன் கூடிய, யாதனு சரீரம் என்க.

கழுமுனையிலே யிரு என்று விடும்:—

முன் கூறியவாறு பாவிகளைப் பலகாலும் பலவாறு தண்டனையுங் கண்டனையும் புரிந்து, "இந்தப் பாவி பிறப்பதும் இறப்பதும் பாவஞ் செய்வதுமாகவே இருக்கின்ருன். சிலகாலம் கழுவில் ஏற்றி வையுங்கள்" என்று கூறி, மழுவில் எறிந்து கழுவில் ஏற்றுவர்.

அவ்வேலை கண்டு கடுகி வரவேணும் என்றன் முனமேதான்:—

"முருகா! சிறியேன் பிழை செய்தேனுயினும், என்னை நமன் தண்டித்து கழுவில் ஏற்றி, இனி தப்புவதற்கு வழியே யில்லையென்று தவிக்கும் வேலையில், கருணைக்கடலாகிய தேவரீர் விரைந்து அடியேன்முன் வந்து காப்பாற்றுவீர்.

"என்று நீ அன்று நான் உன்னடிமை யல்லவோ?" உனது அடிமையாகிய என்னை, நீயே தண்டனை செய்; அல்லது, உனது பரிவாரங்களாகிய, வீரவாகு தேவர், வேறு பலவாகவுள்ள பூதகணங்கள் தண்டிக்கட்டும். இயமன் கையில் காட்டிக் கொடுக்காதே.

மக்களைத் தந்தையே தண்டிப்பான்; அல்லது தாயை விடுத்தும், மூத்தமகனை விடுத்தும் தண்டிப்பான். அப்படிக்கு இன்றி வீதி வழியே போகும், குண்டாந்தடிப்பயில்வானிடம் தந்து தண்டிக்கவிடுவது பொருந்துமோ? அதுபோல் எளியேனை எமதண்டனைக்கு ஆளாக்காமல் காப்பாற்றும்.

இடும்பன் பழநிமலை:—

பழநிமலை இடும்பன் என்ற ஒருவன் கொணர்ந்து வைத்தது. அதனால், "இடும்பன் பழநிமலை" என்று கூறியருளினார்.

இடும்பன் வரலாறு

செந்தண்மை மிக்க பைந்தமிழ் முனிவராகிய அகத்தியர், கந்தகிரி சென்று, கந்தவேளைச் சிந்தையன்புடன் தொழுது துதித்து, "ஐயனே! பன்னிருகையனே! அடியேன் பொதிய மலையில் வைத்துப் பூசிப்பதற்கு, ஈண்டு சிவ சொருபமாகவும் சத்திருபமாகவும் விளங்கும், சிவமலை சத்திமலை என்ற இரு சிகரங்களையும் தந்தருளல் வேண்டும்" என்று வேண்டினார். வேண்டும் அடியர் புலவர் வேண்ட அரிய பொருளை வேண்டுமளவில் உதவும் வேலாயுதக் கடவுள் அவ்வாறே அகத்தியனாருக்கு அருமலைகள் இரண்டையும் அளித்தருளினார். அகத்தியனார் மகத்துவ மிக்க அத் திருமலைகள் இரண்டையும் பெயர்த்துக் கொண்டு பூவுலகின்கண் வந்தார். பூர்ச்சவனம் என்னும் தலம் வந்ததும், செவ்வேளின் திருவருளால் அச் சிகரிகள் இரண்டினையும் அங்கு வைத்துப் பொதியை நோக்கி வருவாராயினார்.

சூரபன்மன், சிங்கமுகன், தாரகன் என்னும் அசுரர்களின் சேனைகளுக்கும், அக் குலத்தினருக்கும் வில்வேதமாகிய அத்திர சத்திர வித்தைகளைப் பயிற்றியவன் இடும்பாசுரன். அவன் மனைவி இடும்பி. சூராதியவுணர்கள் வேலாயுதத்தினால் ஒடுங்கிய பின், வில்லாசிரியனான இடும்பன் தன் மனைவி இடும்பியுடன், வீரமகேந்திரபுரியை விடுத்து, சிவ சிந்தையுடன் வனசஞ்சாரம் புரிந்து கொண்டிருந்தான். ஒரு சிறந்த வனத்தில் சிவபெருமானை நேசித்துப் பூசித்தான். சிவபெருமான் தோன்றியருளினார். இடும்பன் எல்லையில்லாத மகிழ்ச்சியுடன் தொழுதான்; அழுதான். "எந்தையே! ஈசனே! இமையவர் நேசனே! அடியேன் அறுமுகக் கடவுளுக்கு அடிமையாகி அப் பரம கருணாநிதியின் திருவருளைப் பெறவேண்டும்" என்று வேண்டினான். அரனார் அவ்வரம் நல்கி மறைந்தருளினார்.

அவன் சிவமூர்த்தியை வழிபட்ட தலம் இடும்பவனம் எனப்பட்டது. அது கோயிலூருக்குத் தென்கிழக்கே பத்து கல் தொலைவில் உள்ளது.

இடும்பன் மனைவியுடன் வனசஞ்சாரம் புரிந்து கொண்டு திருக்குற்றாலமலையைச் சார்ந்தான். அங்கு அகத்தியமுனிவரைக் கண்டு, அவரது அடிமலர்மீது வீழ்ந்து வணங்கி "தவப் பெருந் தலைவரே! தயாநிதியே. அடியேன் சூராதியவுணர்களின் வில்லாசிரியன். கந்தவேள் கருணையை நாடி நிற்கின்றேன். தேவரீர் முருகவேளின் சீடரன்றோ? சிறியேனைக் குமரவேளின் திருவருட்கு உரியவனாக்கி ஆண்டருள்வீர். அடியேன் உமது அடிமலர்க்கு அடைக்கலம்" என்று வேண்டினான்.

அகத்தியனார் அவனை அருட்கண்ணோக்கம் புரிந்து, அஞ்சேல் என்று அங்கையமைத்துக் கூறுவார். "அன்பனே! உனக்குக் குமரவேள் திருவருள் கிடைக்கும். திருக்கேதார தலத்திற்கு அருகில் உள்ள பூர்ச்சவனத்திலே சத்திகிரி சிவகிரி என்ற இரு சிகரங்கள் இருக்கின்றன. அவற்றையெடுத்து நம் பொதியமலைக்கு வருவையேல் உனக்குக் குமரநாயகன் திருவருள் கிடைக்கும். அழியாத புகழும் பெறுவாய். அத் திருமலைகளின் பெருமை சொல்லுந்தரமன்று; சென்று கொணர்தி" என்று பணித்தருளினார். அங்கு செல்லும் வழியையும் உணர்த்தி, சடக்கர மந்திர உபதேசமும் செய்து அனுப்பினார்.

இடும்பன் தன் மனைவி இடும்பி யென்பாள் காய்கனி கிழங்குகள் தந்து உபசரித்துவர, குறுமுனியாகிய குருபரன் கூறிய வழியே சென்றான். இடையில் உள்ள திருத்தலங்களையெல்லாம் தரிசித்துக்கொண்டு பூர்ச்சவனம் என்னும் திருத்தலத்தைச் சேர்ந்தான். அங்கு அகத்தியர் வைத்த சத்திகிரி சிவகிரிகளைக் கண்டு களித்தான். "யானே தவமுடையேன்; என் புண்ணியமே புண்ணியம்" என்று உள்ளம் உவந்தான். பூசைக்குரிய சாதனங்களை மனைவி ஆயத்தம் புரிந்து தர இடும்பன் அம் மாமலைகளைப் பூசித்தான். அகத்தியர் உபதேசித்த சடக்கர மந்திரத்தை விதிப்படி ஜெபித்துக் கண்களை மூடி, ஒருமையுடன் தவம் புரிந்தான்.

அப்போது பிரமதண்டம் புயதண்டாகவும், அட்டதிக்கு நாகங்களும் கயிறுகளாகவும் அவனருகில் வந்தன.

அவற்றைக் கண்டு அதிசயித்த அத்திருவாளன் துண்ணென்றெழுந்து, எட்டு நாகங்களையும் உறிபோற் சமைத்து, இரு மலைகளையும் அதில் வைத்து, பிரமதண்டுடன் பிணித்து, மூல மந்திரத்தைச் சிந்தித்து, முருகவேளை வந்தித்து, காவடி

யாக்கி எடுத்துத் தோளில் வைத்தான். முழங்காலை மண்ணில் ஊன்றி யெழுந்தான். "அரோகரா!" "அரோகரா" என்று கூவிக்கொண்டு தென்திசை நோக்கி நடந்தான். பல காதங்கள் கடந்தான்.

பன்னிருகட்பரமன் திருவிளையாட்டினால், வழி மயங்கி, விந்தமலை வழியாக, ஸ்ரீசைலம், திருக்காளத்தி, திருத்தணிகை, திருக்காஞ்சி, திருவருணை, திருமுதுகுன்றம் முதலிய தலங்களைச் சேவித்துக்கொண்டு வந்தான். ஆங்காங்கு காவடியை யிறக்கி இறைவனை வழிபட்டு, மனைவி தேடித்தரும் காய்கனிகளை யருந்தி, தண்ணீர் பருகி இளைப்பாறிக்கொண்டு சென்னிமலை யென்ற புட்பகிரியைச் சார்ந்தான். அங்கு வழி தெரியாது மயங்கினான். அங்கு அறுமுகவேள் ஓர் அரசகுமாரனைப்போல் தோன்றி "இடும்பைக்கு இடும்பை தரும் இடும்பா? நீ இவ்வழியே போய் வராகமலையில் தங்கி, அவ்வழியே பொதியாசலம் போகக்கடவாய்" என்று கூறியருளினார்.

இடும்பன் அகமகிழ்ந்து வராகமலை வழி சென்று திருவாவினன்குடியை யடைந்தான். திருவேலிறைவன் திருவிளையாட்டால் மலைகள் மிகவும் பாரமாகித் தோளை வருத்தின. இடும்பன் சிறிது இளைப்புடன் காவடியை இறக்கி வைத்துவிட்டு, வாமதேவ முனியாச்சிரமஞ் சென்று, இடும்பி தந்த இனிய காய் கனி கிழங்குகளை யுண்டு இளைப்பாறி, மீண்டும் மலைகளைத் தூக்கத் தொடங்கினான். எத்துணை முயன்றும் காவடி எழவில்லை. பெருமூச்சு விட்டான். மீண்டும் மீண்டும் பெரிதும் முயன்று எடுக்கலுற்றும் மலைகள் மேல் எழாமை கண்டு கவலையுற்றான். சுற்றும் முற்றும் பார்த்தான். சிவகிரியின் மீது ஒருபுறம் குராமர நிழலில் ஒரு சிறு குழந்தை நிற்பதைக் கண்டான்.

அசுரகுல திலகன் அதிசயித்தான். "இப் பாலகன் யாவன்? தேவகுமாரனோ? இயக்கனோ? சித்தனோ? முருகவேளோ?" என்று ஐயுற்று அருகிற் சென்றான்.

அமரர் போற்றுங் குமரநாயகன், பிடரியில் இருண்டு சுருண்ட தலைமயிர் தொங்கவும், கருணையொழுகும் கண்களும், ஆயிரகோடி சூரியர் ஒருங்கே திரண்டாலன்ன ஒளி மிகுந்த திருமேனியும், முப்புரிநூல் புரளும் திருமார்பும் தண்டு தாங்கிய திருக்கரமும் விளங்க நிற்கக் கண்டான். "ஏ! குழந்தாய்! நீ யார் மகன்? இங்கு நீ தனித்து நிற்கும் காரணம் யாது? வழி

தவறி வந்தனை கொல்? விரைந்து சொல்'' என்று வினவினன். முருகவேள் ஒன்றும் பதில் கூறாது முறுவல் புரிந்தனர்.

இடும்பன் ஆலகாலம்போல் சீறி, ''ஏ மைந்த! மலையினின்றும் இறங்கி விலகிப்போ; யான் கொலையே புரியும் அசுரகுல குரு. வீணே துன்பத்தைத் தேடிக்கொள்ளாதே'' என்றான். குழந்தை வேலவர் நகைத்து ''அப்பா அசுரனே! இம்மலை எமக்கு இருக்கையாகும். உனக்கு வலிமையிருக்குமாயின் இவற்றை எடுத்துக்கொண்டு போதி'' என்றனர். இடும்பன் மிகவுஞ் சினங்கொண்டான். ''ஏ பாலகனே! நீ மாயையில் வல்லவன் போலும். நன்று; நன்று. நான் மாயவனைச் சிவனுக்குக் குறுகச் செய்தருளிய குறுமுனிவரது அடியவன். உன் செருக்கையும் மாயையையுங் காண்கின்றேன்'' என்று கூறிக் கரங்களைப் பிசைந்தான். பற்களைக் கடித்தான். வாயை மடித்தான். புருவத்தை நெறித்தான். குராவடிக் குமரன் மீது பாய்ந்தான்.

குராவடிக் குழந்தை வேற்குமரக் கடவுள், தமது திருக்கரத்தில் விளங்கும் தண்டாயுதத்தினால் சிறிது தாக்கினார். மூதண்ட முகடு உடைந்து வீழ்ந்தது போல் இடும்பன் அலறி வீழ்ந்து மடிந்தான். நாகங்களும் பிரமதண்டும் அஞ்சியகன்று அகத்தியனார்பால் சென்று அஞ்சலி செய்து நிகழ்ந்ததைப் புகன்று தத்தம் இருப்பிடஞ் சேர்ந்தன.

இடும்பன் இறந்த பேரொலியைக் கேட்ட இடும்பி உள்ளம் பதைபதைத்து ஓடிவந்து கணவன்மீது வீழ்ந்து புலம்பினாள்.

''என் உயிர்த்துணைவா! குறுமுனியின் அருள்பெற்ற கொற்றவ! சூரர்க்கும் வில்வித்தை கற்பித்த வீராதிவீர! நின்னைக் கொன்ற வீரன் யாவன்? அந்தோ! நினையிழந்து நான் எங்ஙனம் வாழ்வேன்? பதியை யிழந்த பாவியானேனே. தெய்வமே! நின் சோதனையோ! முன் புரிந்த வினையின் வாதனையோ?'' என்று பலவாறு புலம்பி அழுதாள்.

குராமரத்தின் நிழலில் நிற்குங் குழந்தையைக் கண்டாள். ''இவர்தான் என் கணவரைக் கொன்றவர் போலும். சூரனைக் கொன்றவர்தான் சூரனது வில்லாசிரியராம் என் கொழுநரைக் கொல்லுதல் கூடும். இவர்தான் எம் குலமுழுது மாளவந்த குன்றம் எறிந்த கூர்வேலவர்; சூர்முதல் தடிந்த சீராளர்'' என்று திருவருள் உணர்த்த உணர்ந்தாள். ஓடி எம்பிரான்

இணையடி மீது வீழ்ந்தாள். "தேவதேவா! மூவர் தொழும் முதல்வா! நினது திருவிளையாடலின் திறத்தை யறியாத எனது கணவனைக் கொல்வது முறையோ? கருணைக் கடலே!

"புங்கவர் வழுத்தும் வேற்கைப் புனிதனே அயிராணிக்கு
மங்கல நாணை யீந்த வரதனே என்றும் நின்ருட்
பங்கயம் போற்றும் நாயேன் பதியினை யளித்துப் பொன்னுண்
இங்கெனக் களிப்பாய் தண்டம் ஏந்திய இளைய தேவே.
வேலனே போற்றி ஞான விகிர்தனே போற்றி ஞானக்
கோலனே போற்றி தெய்வக் குமரனே போற்றி ஈசன்
பாலனே போற்றி ஞான பண்டித போற்றி ஞான
சீலனே போற்றி தேவ தேவனே போற்றி போற்றி"

என்று துதித்தாள். அவள் கண்களினின்றும் கண்ணீர் ஆறுயப் பெருகியது. அங்குள்ள கல்லும் உருகியது.

அயில்வேற் கடவுள் மயில்மேல் காட்சி தந்தருளினார்! கணங்கள் புடைசூழ்ந்தன; வேதங்கள் ஒலித்தன; தேவ துந்துபிகள் முழங்கின; கந்தவேள் கடைக்கண் கருணை இடும்பன் மீது வீழ்ந்தது. தூங்கி யெழுந்தவனைப் போல் துண்ணென எழுந்தான். அண்டர் நாயகனைக் கண்டான். ஆராத காதல் கொண்டான்; ஆகுலத்தை விண்டான். "திருமுருகா! திருமால் மருகா! பார்வதி பால! அமரர் போற்றுங் குமர நாயக! சிறியேன் அறியாது செய்த பெரும்பிழையைப் பொறுத் தருள்க" என்று அடிமலர்மீது வீழ்ந்து துதித்தான்.

பழநியாண்டவர் "அன்ப! அஞ்சற்க. இம்மலைகள் இங்ஙனமே இருக்கத்தக்கன; குறுமுனியும் ஈண்டு வந்து வழிபடுவாராக. அடியார்கள் அனைவரும் ஈண்டு வந்து வந்தித்து வேண்டுவன பெறுவார்களாக. நீ இம்மலையின் இடைப்பகுதியில் நமக்கு அடியவனாக நிற்பாய். உலகில் உள்ளோர் வழிபாட்டிற்குரிய சாதனங்களை உன்போல் காவடியாகக் கொணர்வார்களாக. உன்னை முதலில் வழிபட்டு பின்னர் நம்மை வழிபாடு புரிவார்களாக. உன்னை வணங்கினோர் எம்மை வணங்கிய பயனைப் பெறுக. நமது பூரண அருளை நீ பெற்றாய்" என்று திருவருள் புரிந்து நின்றனர்.

அதுமுதல் பழநிமலைக்கு எண்ணில் காவடிகள் கொணர்ந்து இடும்பனையும் தண்டபாணியாகிய கடம்பனையும் அடியார்கள் என்றும் வழிபட்டு இன்புறுவாராயினர்கள்.

அரவு பிறை:—

இறைவன் திருமுடிமீது பாம்பையும் பனிமதியையும் சூடியுள்ளனர். பாம்புக்கும் சந்திரனுக்கும் பகை; இந்த இரண்டும் இறைவர்பால் ஒற்றுமைப்பட்டிருக்கின்றன. இறைவரிடத்திலே சென்றால் பகையுணர்ச்சி மாறி ஒற்றுமையுண்டாகும்.

ஹரஹர:—

அரன்—பாவத்தைப் போக்குபவன். "ஹர ஹர" என்று கூறுபவர் வல்வினை நீங்கப் பெறுவர்.

"ஹரஹரா எனுமுடர்" —(இரதமானதேனூறல்) திருப்புகழ்.

"ஹர ஹர" என்று முழங்கினால் உலகந் துயர் தீர்ந்து உயர்வு எயதும்.

........."எல்லாம் அரன்நாமமே
சூழ்க வையகமுந் துயர் தீர்கவே" —ஞானசம்பந்தர்.

சிவாய:—

இது திரியக்ஷரம் பக்குவப்பட்ட ஆன்மாக்கள் நாவசையாமல் ஜெபிக்கும் அருள் நலமுடையது.

"சிவாய வெனு நாமமொரு காலு நினையாத
திமிராகரனை" —(அவாமருவி) திருப்புகழ்.

"ஹரஹரசிவாய வென்று தினமுநினையாமல்"
—(கருவினுரு) திருப்புகழ்,

## கருத்துரை

பழநிமலை முதலிய எல்லா இடங்களிலும் விளங்கும் கதிர்காம முருகக் கடவுளே! இயம்வாதனை மேலிடும்போது அடியேனைக் காத்தருளுவீர்.

## அருக்கொணமலை

## 197

தொடுத்த வாளென விழித்து மார்முலை
யசைத்து மேகலை மறைத்து மூடிகள்
துடித்து நேர்க்லை நெகிழ்த்து மாவியல் கொளுமாதர்
சுகித்த ஹாவென நகைத்து மேல்விழ
முடித்த வார்குழல் விரித்து மேவிதழ்
துவிர்த்த வாய்சுருள் அடக்கி மால்கொடு
வழியேபோய்ப்

படுத்த பாயலி லணைத்து மாமுலை
பிடித்து மார்பொடு மழுத்தி வாயிதழ்
கடித்து நாணம தழித்த பாவிகள் வலையாலே
பலித்து நோய்பிணி கிடச்து பாய்மிசை
வெளுத்து வாய்களு மலத்தி னுயெலா
பசித்து தாகமு மெடுத்தி டாவுயி ருழல்வேனோ

வெடுத்த தாடகை சினத்தை யோர்கணை
விடுத்து யாகமும் நடத்தி யேயொரு
மிகுத்த வார்சிலை முறித்த மாயவன் மருகோனே
விதித்து ஞாலம தளித்த வேதனை
யதிர்த்து வோர்முடி கரத்து லாயனல்
விழித்து காமனை யெரித்த தாதையர் குருநாதா

அடுத்த ஆயிர விடப்ப ணுமுடி
நடுக்க மாமலை பிளக்க வேகவ
டரக்கர் மாமுடி பதைக்க வேபொரு மயில்வீரா
அறத்தில் வாழுமை சிறக்க வேயறு
முகத்தி னோடணி குறத்தி யானையொ
டருக்கொ ணுமலை தருக்கு லாவிய பெருமாளே.

## பதவுரை

வெடுத்த தாடகை - வெடு வெடு என்று கோபித்து வந்த தாடகையின்,
சினத்தை ஓர் கணை விடுத்து - கோபத்தை ஒரு கணை விடுத்து அடக்கியும்,
யாகமும் நடத்தியே - யாகத்தைக் காவல் செய்து நடாத்தியும், ஒரு மிகுத்த
வார் சிலை முறித்த - ஒப்பற்றதும் சிறப்பு மிகுந்ததும் நீண்டதுமான வில்லை
முறித்தவரான, மாயவன் மருகோனே - திருமாலின் திருமருகரே! விதித்து-
இது இது இப்படி இருக்க வேண்டும் என்று விதி செய்து, ஞாலம் அது
அளித்த வேதனை - பூமியைத் தந்த பிரமதேவனை, அதிர்த்து - அதிர்ச்சி
யுறச் செய்து, ஓர் முடி கரத்து உலாய் - அவனுடைய ஒரு தலையைத் தமது
திருக் கரத்தில் உலாவ வைத்து, அனல் விழித்து - நெற்றிக் கனற் கண்
ணைத் திறந்து, காமனை எதிர்த்த தாதையர் - மன்மதனை எரித்த தந்தை
யாரது, குருநாதா - குருநாதரே! அடுத்த - நெருங்கியுள்ள, ஆயிரவிட
பணுமுடி நடுக்க - விடமுள்ள ஆயிரம் பணாமுடிகளையுடைய ஆதிசேடன்
நடுங்கவும், மாமலை பிளக்க - கிரவுஞ்சமலை பிள்வுபடவும், கவடு அரக்கர்

மாமுடி பதைக்கவே பொரு - வஞ்சனையுடைய அரக்கர்களின் பெரிய தலைகள் பதைக்கவும் போர் புரிந்த, மயில் வீர - மயில் மீது வரும் வீர மூர்த்தியே! அறத்தில் வாழ் உமை - அறங்களை வளர்ந்து வாழ்கின்ற உமா தேவி, சிறக்கவே - மகிழும்படி, அறுமுகத்தினோடு-ஆறுமுகங்கள் விளங்க, அணிகுறத்தி ஆனையோடு - அழகிய வள்ளியுடனும் தெய்வயானையுடனும், அருக்கொணுமலை-அருக்கொணுமலை யென்ற தலத்தில், தருக்கு உலாவிய - களிப்புடன் உலாவுகின்ற, பெருமாளே-பெருமையிற் சிறந்தவரே! தொடுத்த வாள் என விழித்து - செலுத்தப்பட்ட வாளாயுதம் என்று சொல்லும்படி பார்த்து, மார் முலை அசைத்து-மார்பிலுள்ள தனங்களை அசைத்து, மேகலை மறைத்து மூடிகள் - மேகலையினால் உடம்பை மறைத்து மூடும் மாதர்கள், துடித்து - அன்புடையவர்கள் போல் துடித்து, நேர்கலை நெகிழ்த்து - எதிரே ஆடையைத் தளர்த்தி, ம இயல் கொளும் மாதர் - நல்லொழுக்கத்தைப் பறிகொள்ளுமாதர்கள், சுகித்து அஹா என நகைத்து - சுகத்தை அனுபவித்து அஹா என்று நகை செய்து, மேல் விழ-மேலேவிழ, முடித்த வார்குழல் விரித்து - முடித்திருந்த நீண்ட கூந்தலை விரித்து, இதழ் துவர்த்த வாய் சுருள் அடக்கி - இதழ் சிவக்கும்படி வாயில் வெற்றிலைச் சுருளை அடக்கி, மால் கொடு வழியே போய் - காம ஆசையைக் கொடுக்கின்ற வழியிலே போய், படுத்த பாயலில் அணைத்து - படுத்த படுக்கையில் தழுவி, மாமுலை பிடித்து - பெரிய தனங்களைப் பற்றி, மார் பொடும் அழுத்தி - மார்பினில் அழுத்தி, வாய் இதழ் கடித்து - வாய் அதரத்தைப் பருகி, நாணம் அது அழித்த பாவிகள் - நாணத்தை அழித்த பாவி களாகிய பொது மாதர்களின், வலையாலே - வலையினாலே; நோய் பிணி பலித்து - நோய்களும் பிணிகளும் உண்டாகி, கிடத்து பாய் மிசை வெளுத்து - பாயில் கிடந்து உடல் வெளுத்து, வாய்களும் மலர்த்தின் நாய் என - வாய்கள் மலந்தின்னும் நாய் என ஆக, பசித்து தாகமும் - பசியுந் தாகமும் உற்றும், எடுத்திடா உயிர் உழல்வேனோ - எடுத்திட்ட உயிருடன் திரிவேனோ?

## பொழிப்புரை

கோபத்தால் வெடுவெடுத்து வந்த தாடகையின் கோபத்தை ஓர் அம்புவிடுத்து அடக்கியும், யாகத்தை நடாத்தியும், ஒப்பற்ற-சிறந்த-நீண்ட வில்லை எடுத்தவருமான திருமாலின் திருமருகரே! உலகத்தைச் சிருட்டித்து, இந்த பூமியைத் தந்த பிரமதேவனை நடுங்க வைத்து, அவனுடைய தலையைக் கிள்ளி காத்தில் வைத்து. நெற்றிக் கண்ணால் பார்த்து மன்மதனை யெரித்த தந்தையாகிய சிவபெருமானுடைய குருநாதரே! நெருங்கியுள்ள ஆயிரம் விடப்பணுமகுடங்களைக் கொண்ட ஆதிசேடன் நடுக்கமுறவும், கிரவுஞ்சமலை பிளந்து தூளாகவும், வஞ்சக அரக்கர்களின் பெரிய தலைகள் பதைக்கவும் போர்

புரிந்த மயில் வீரரே! அறங்களை வளர்த்து வாழ்கின்ற உமாதேவி மகிழுமாறு, ஆறுமுகங்கள் விளங்க, அழகிய வள்ளியுடனும் தேவயானையுடனும், அருக்கொணு மலையில் மகிழ்ச்சியுடன் உலாவுகின்ற பெருமிதமுடையவரே! செலுத்திய வாளாயுதம் போன்ற கண்களை விழித்துப் பார்த்து மார்பிலுள்ள தனங்களை அசைத்து, மேகலையால் உடம்பை மறைத்து மூடும் மாதர்கள், துடித்து, எதிரே புடவையைத் தளர்த்தி, நல்லொழுக்கத்தைப் பறி கொள்கின்ற மாதர்கள், இன்பவதை அநுபவித்து 'அஹா' என்று நகைசெய்து மேலே விழ, முடித்திருந்த கூந்தலை விரித்து, இதழ் சிவக்கும்படி வாயில் வெற்றிலைச் சுருளை அடக்கி ஆசையைத் தருகின்ற அந்த வழியிலே போய்ப், படுத்த படுக்கையில் தழுவி, பெரிய தனங்களைப் பிடித்து, மார்புடன் அழுத்தி அதரபானஞ் செய்து, நாணத்தை அழித்த பொது மாதர்களின் வலையால், உண்டான நோய்களால் படுக்கையில் கிடந்து உடல் வெளுத்து, மலந்தின்னும் நாய்போல் வாயைப் பிளந்து, பசி தாகம் அடைந்து, எடுத்திட்ட உயிருடன் அடியேன் திரிவேனோ?

## விரிவுரை

தொடுத்த வாளென விழித்து:—

பொது மாதர்களின் கண்கள் வாள்போல் இளைஞர்களின் உள்ளத்தை வெட்டிப் பிளக்கும் வன்மையுடையது.

வெடுத்த தாடகை:—

கோபத்தால் கொதித்து வெடு வெடு என்று வேகத்துடன் வந்த தாடகையை ஒரு கணையால் இராமர் கொன்றருளினார்.

> சொல்லொக்குங்கடிய வேகச் சுடுசரம் கரிய செம்மல்
> அல்லொக்கும் நிறத்தினுள் மேல் விடுதலும் வயிரக் குன்றக்
> கல்லொக்கும் நெஞ்சிற்றங்காது அப்புறங்கழன்று கல்லாப்
> புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற்றன்றே.
>
> —கம்பர்

யாகமும் நடத்தி:—

விச்வாமித்திரர் புரிந்த தவ வேள்வியை, மாரீசன் தாடகை முதலிய அரக்கர்கள் பன்னெடுங்காலமாகத் தடுத்துக் கெடுத்து வந்தார்கள். ஸ்ரீராமர், தாடகையையும் சுபாகுவையும், வதைத்தும், மாரீசனைக் கடலில் வீழ்த்தியும் வேள்விக்காவல் செய்து, முடித்துக் கொடுத்தார்.

எண்ணுநூற் காக்கரி திரண்டு மூன்றுநாள்
விண்ணவர்க் காக்கிய முனிவன் வேள்வியை
மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்
கண்ணினைக் காக்கின்ற இமையில் காத்தனர். —கம்பர்.

விதித்து ஞாலம்:—

அவரவர்கள் கன்மங்களுக்கு ஏற்ப விதிக்கின்றவன் பிரமன். ஞாலம்—பூமி. நால்—தொங்குவது. நால்வாய்—தொங்குகின்ற வாய்.

நால் என்ற சொல் ஞகரம் போலியாய் ஞால் எனத்திரிந்து, அம் சாரியை புணர்ந்து "ஞாலம்" என்றாயிற்று. ஞாலம் என்றால் தொங்குவது என்பது பொருள்.

ஓர் முடிகரத்துலாய்:—

பிரமன் தான் படைப்புத் தலைவன் என்று தருக்குற்றதனால் சிவபெருமான் வைரவரையேவி பிரமனுடைய நடுத்தலையை நகத்தினால் கிள்ளச் செய்தார்.

"நல்லமலரின்மேல் நான்முகனார்தலை
ஒல்லை யரிந்த தென் றுந்தீபற
உகிரால் அரிந்த தென்றுந் தீபற" —திருவாசகம்.

காமனை யெரித்த:—

சிவமூர்த்தி மன்மதனை நெற்றிக்கண்ணால் எரித்தருளினார். திருமாலின் மக்களான பிரமனைத் தலையரிந்தும் மதனனைச் சாம்பராக்கியும் தண்டித்தருளினார்.

ஆயிரவிடப் பணாமுடி நடுக்க:—

மயில் நடப்பதனால் ஆதிசேடனுடைய ஆயிரம்பணாமகுடங்களும் நடுங்குகின்றன.

"சேடன் முடிதிண்டாட ஆடல்புரி வெஞ்சூரர்
திடுக்கிட நடிக்கு மயிலாம்"

"பாரப்பணாமுடி அனந்தன் முதல் அரவெலாம்
பதைபதைத்தே நடுங்க" —மயில்விருத்தம்,

அறத்தில் வாழுமை சிறக்க:—

காஞ்சிமா நகரில் காமாட்சியம்மை முப்பத்திரண்டு அறங்களையும் செய்தருளினார். சிறக்க—மகிழ.

"குறைவற முப்பத்திரண்டறம்புரி கின்றபேதை"
—(தலைவலை) திருப்புகழ்.

அருக்கொணுமலை தருக்குலாவிய:—

தருக்கு—மகிழ்ச்சி.

"கீதம் வந்த வாய்மையால் கிளர்தருக்கினு்" —சம்பந்தர்.

அருக்கொணுமலை என்பது கீரிமலை யெனவும் வழங்குகின்றது. இத்தலம் யாழ்ப்பாணத்திலிருந்து 12 கல் தொலைவில் கடற்கரையில் திகழ்கின்றது.

கருத்துரை

அருக்கொணுமலையண்ணலே! மாதராசையால் துன்புற்று உயிர் உழல்வேனே?

திருக்கோணமலை

198

விலக்கு மேனியி லணிக்கோவை மேகலை
தரித்த வாடையு மணிப்பூணு மாகவெ
மினுக்கு மாதர்க ளிடக்காம மூழ்கியெ மயலூறி
மிகுத்த காமிய னெனப்பாரு ளோரெதிர்
நகைக்க வேயுட லெடுத்தேவி யாகுல
வெறுப்ப தாகியெ யுழைத்தேவி டாய்படு
கொடியேனைக்

கலக்க மாகவெ மலக்கூடி லேமிகு
பிணிக்கு ளாகியெ தவிக்காம லேயுனை
கவிக்கு ளாய்சொலி கடைத்தேற வேசெயு
மொருவாழ்வே

கதித்கு நாதனி யுனைத்தேடி யேபுக
ழுரைக்கு நாயெனை யருட்பார்வை யாகவெ
கழற்கு ளாகவெ சிறப்பான தாயருள் தரவேணும்

மலைக்கு நாயக சிவக்காமி நாயகர்
திருக்கு மாரனெ முகத்தாறு தேசிக
வடிப்ப மாதொரு குறப்பாவை யாள்மகிழ் தருவேளே
வசிட்டர் காசிபர் தவத்தான யோகியர்
அகத்ய மாமுநி யிடைக்காடர் கீரனும்
வகுத்த பாவினில் பொருட்கோல மாய்வரு
முருகோனே

நிலைக்கு நான்மறை மகத்தான பூசுரர்
திருக்கொ ணுமலை தலத்தாரு கோபுர
நிலைக்குள் வாயினில் கிளிப்பாடு பூதியில் வருவோனே
நிகழ்த்து மேழ்பவ கடற்சூறை யாகவெ
யெடுத்த வேல்கொடு பொடித்தூள தாஎறி
நினைத்த காரிய மநுக்கூல மேபுரி பெருமாளே.

## பதவுரை

மலைக்கு நாயக - மலைகளுக்குத் தலைவராக விளங்குபவரே! சிவகாமி நாயகர் - உமாதேவியாருடைய கணவராகிய சிவபெருமானுடைய, திருக் குமாரனெ - சிறந்த செல்வப் புதல்வரே! முகத்து ஆறு தேசிக - ஆறு திரு முகங்களையுடைய பரம குரு நாதரே! வடிப்ப மாது-அழகின்மிக்க பெண்ண ரசியும், ஒரு - ஒப்பற்றவரும் ஆகிய, குற பாவையாள் - வள்ளியம்மையார், மகிழ்தரு வேளே - உள்ளம் உவந்து விரும்புகின்றவரே! வசிட்டர் - வசிட்ட முனிவர், காசிபர் - காசிப முனிவர், தவத்து ஆன யோகியர் - தவத்திற் சிறந்த சிவயோகியர், அகத்யமாமுனி - பெருமைமிக்க அகத்திய முனிவர், இடைக்காடர் - இடைக்காடர், கீரனும் - நக்கீரதேவர் ஆகிய ஆன்றோர் கள், வகுத்த பாவினில் - வகுத்துக் கூறிய அருட்பாடல்களில், பொருள் கோலமாய் வரும் முருகோனே - பொருள் வடிவாகத் தோன்றும் முருகக் கடவுளே! நிலைக்கும் நால்மறை - என்றும் நிலைத்திருப்பனவாகிய வேதங்கள் நான்கிலும் வல்ல, மகத்து ஆன பூசுரர் - பெருமைமிக்க அந்தணர்கள் வாழுகின்ற, திருக்கொணுமலை - திருக்கோணமலை என்ற, தலத்து ஆர் (உ-சாரியை) கோபுர நிலைக்குள் வாயினில் - திருத்தலத்தில் அருமையான கோபுரவாயிலுக்குள், கிளிப்பாடு பூதியில் - கிளிப்பாடு பூதியென்னும் இடத் தில், வருவோனே - எழுந்தருளி வருபவரே! நிகழ்த்தும் ஏழ் பவ கடல் - உயிரைத் தொழிற்படுத்துகின்ற எழுவகைப் பிறவிகளாகிய கடல்கள், சூறை ஆகவெ - கொள்ளை போக, எடுத்த வேல்கொடு - திருக்கரத்து ஏந்திய வேலாயுதத்தைக் கொண்டு, பொடி தூளது ஆ எறி - மிகவும் பொடிபட்டு போமாறு எறிந்த, நினைத்த காரியம் - அடியேங்கள் எண்ணிய கருமங்கள், அநுக்கூலமே புரி - அநுகூலமே யாகுமாறு (ஏ - தேற்றம்) அருள்புரிகின்ற, பெருமாளே - பெருமையின் மிக்கவரே! விலைக்கு மேனி யில் - விலைசெய்யும் உடம்பில், அணி கோவை - அழகிய மாலைகளும், மேகலை - மேகலை என்ற ஆபரணமும், தரித்த ஆடையும் - உடுத்த ஆடை யும், மணிபூணும் ஆகவெ - இரத்தினங்கள் பதித்த ஆபரணங்களும் பூண்டு, மினுக்கும் மாதர்கள் இடகாம மூழ்கியெ - மினுக்குகின்ற விலை மகளிரிடத்தில் ஆசைவைத்து அவ்வாசைக் கடலில் முழுகி, மயல் ஊறி - மயக்கத்தில் ஊறி, மிகுத்த காமியன் என - மிகுந்த விருப்பமுடையவன் என்று, பாருளோர் எதிர் நகைக்கவே - உலகில் உள்ளவர்கள் முன்

நகைக்குமாறு, உடல் எடுத்தே - உடம்பெடுத்து, வியாகுல வெறுப்பது ஆகியெ - துன்புற்று அதனால் வெறுப்பை யடைந்து, உழைத்தே விடாய் படு - மீளமீள உலக வாழ்வில் உழைத்து தாகமுறுகின்ற, கொடியேனை - கொடியவனாகின்ற அடியேனை, கலக்கம் ஆகவெ - அறிவு கலக்கமுற்று, மல கூடிலே - மலக்கூடாகிய இவ்வுடம்புடன் கூடி, மிகு பிணிக்கு உள் ஆகியெ - மிகுந்த நோய்களுக்கு உள்ளாகி, தவிக்காமலே - தவியாமற் படிக்கு, உனை கவிக்குளாய் சொலி - தேவரீரை தமிழ்க் கவிதைகளைச் சொல்லி, கடைத்தேறவே செயும் - ஆவி யீடேறுமாறு செய்தருளிய, ஒரு வாழ்வே - நிகரற்ற வாழ்வாக விளங்குபவரே! கதிக்கு நாதன் நி - பரகதிக் குத் தலைவர் நீரே, உனை தேடியே - தேவரீரைத் தேடி, புகழ் உரைக்கும் நாயேனை - திருப்புகழ் பாடும் நாயேனை, அருள்பார்வையாகவெ - திருவருட் பார்வையாகப் பார்த்து, கழற்குள் ஆகவே - தேவரீருடைய திருவடிக்குள் ளாகுமாறு, சிறப்பு ஆன - சிறந்ததாகிய, தாய்அருள் - தாயின் கருணையை யொத்த திருவருளை, தரவேணும் - தந்தருள்வீர்.

## பொழிப்புரை

மலைகளுக்குத் தலைவரே! உமையம்மையாருடைய கொழுநராகிய சிவபெருமானுடைய திருப்புதல்வரே! ஆறு திருமுகங்களையுடைய குருநாதரே! ஒப்பற்ற அழகின்மிக்க வள்ளியம்மையார் விரும்பி மகிழும் மணவாளரே! வசிட்டர், காசிபர், தவத்திற் சிறந்த சிவயோகியர், பெருமையின்மிக்க அகத்திய முனிவர், இடைக்காடர், நக்கீரதேவர் ஆகிய அறிவான்ற பெரியோர்கள் வகுத்துப் பாடிய பாடல்களில் உட்பொருள் வடிவமாகத் தோன்றுபவரே! நிலைத்துள்ள வேதங்கள் நான்கையும் ஓதி யுணர்ந்த சிறந்த அந்தணர்கள் வாழுகின்ற திருக்கோணமலை யென்னும் திருத்தலத்தில் விளங்குகின்ற கோபுரவாயிலில் கிளிப்பாடுபூதி யென்னும் இடத்தில் எழுந்தருளியுள்ளவரே! (ஆன்மாவை இங்கு மங்குமாக) தொழிற்படுத்துகின்ற தாவரம், ஊர்வன, நீர்வாழ்வன, பறப்பன, விலங்கு, மனிதர், தேவர் என்ற எழுவகைப் பிறவிகளாகிய ஏழுகடல்களும் புழுதிபட்டுக் கொள்ளைபோக வேலாயுதத்தை விடுகின்றவரும், நினைத்த காரியங்களை அநுகூலமே புரிந்தருளுகின்றவரும் ஆகிய பெருமையின் மிக்கவரே! விலைசெய்கின்ற உடம்பில் அழகிய மாலைகள் உடுக்கின்ற ஆடை இரத்தினாபரணங்கள் இவைகளை யணிந்து மினுக்குகின்ற விலைமகளிரிடத்தில் காமுற்று மயக்கக் கடலில் முழுகி அதிலேயே ஊறி மிகுந்த விருப்பினனென்று உலகிலுள்ளோர் சிரிக்குமாறு உடம்பெடுத்து துன்ப மிகுதியால் வெறுப்புற்று உலக மாயையில் உழைத்து அதிதாகமுற்ற கொடியவ

ஞகிய அடியேனை, அறிவு கலக்குற்று மலபாண்டமாகிய உடலு டன் கூடி மிகுந்த நோய்வாய்ப்பட்டு தவிக்காமற்படிக்கு தேவ ரீரைத் தமிழ்க்கவிபாடி கடைத்தேறச் செய்தருளிய எம்பெரு மானே! தேவரீரே முத்தி உலகிற்குத் தலைவர்; உமது திரு வடியையே தேடி திருப்புகழ் பாடுகின்ற அடியேனைத் திருவருட் பார்வையாகப் பார்த்து உமது சரணாரவிந்தங்களுக்கு ஆளாகு மாறு சிறந்த தாயருளைத் தந்து ஆட்கொள்வீர்.

## விரிவுரை

விலைக்குமேனியி......மயலூறி :—

விலைக்குமேனி என்பதற்கு விலைபடுத்துகின்ற மேனி என் பது கருத்து. மேகலை என்பது இடையில் பெண்களணியும் ஓர் ஆபரணம். மினுக்குமாதர்—விலைமகளிர். "விலைமகட்கழகு தன் மேனி மினுக்குதல்" என்பது நறுந்தொகை. விலைமாதரி டத்தில் விருப்பத்தை வைத்து அவர்களது ஆசைப் பெருங் கடலுளாழ்ந்து அதிலேயே ஊறிக்கொண்டிருத்தல்.

மிகுத்த காமியன்.........கொடியேனை :—

உலகத்தவர்கள் இவன் "மிகுந்த காமி" என்று எள்ளி நகையாட சிறிதும் நாணமின்றி உலாவியும், அதனால் மிகுந்த வியாகுலமுற்றும், நல்ல விஷயத்தில் வெறுப்புற்றும், குடும்பத் திற்காகவும் வயிற்றுக்காகவும் உழைத்து உழைத்து அருள்தாக மடையாமல் காமதாகமடைந்து தடுமாறி விலை மதிக்கமுடியாத மாணிக்கமாகிய வாணாளை வீணாக்குவதைச் சுவாமிகள் வெறுக் கின்றனர்.

உனை கவிக்குளாய்சொலி கடைத்தேற வேசெயு :—

செந்தமிழ்ப் பரமாசிரியராகிய செவ்வேட் பரமன் அருண கிரியார்க்கு அருட்கோலங் காட்டி, "அறியுமறி தத்துவமும் அபரிமித வித்தைகளும் அறியென இமைப் பொழுதில் வாழ் வித்து" "நம் திருப்புகழைப் பாடுதி" என்று பணித்தருளினன். அருணகிரிநாத சுவாமிகள் கடல் மடை திறந்த வெள்ளம் போல், வேதாகம புராணேதிகாசக் கருத்துக்களை யெல்லாம் அமைத்து, தொனிக்க இனிப்பதும், சித்தத்தில் சிந்திக்குந் தொறும் தித்திப்பதும், நினைத்தது மளிப்பதும், கருங்கல் மனத்தையும் கரைந்துருகச்செய்வதும், கருவறுத்துப் பிறவாட் பெற்றியை எளிதில் தருவதுமாகிய பதினாறாயிரந் தமிழ் வேதத் திருப்புகழ்ப் பாடல்களைப் பாடியருளினார்.

"அற்புதத் திருப்புகழ்
தேனூற வோதி எத்திசைப் புறத்தினும்
ஏடேவு ராஜதத்தினைப் பணித்ததும் மறவேனே"
—(ஆனதஞான) திருப்புகழ்.

கதிக்கு நாதனி:—

கதிக்கு நாதன் நீ. நீ என்பது குறுகல்விகாரம் பெற்றது; கதி—முத்தி. முத்தி உலகிற்கு முதல்வன் முருகக் கடவுளே. பரகதியும் அவரே.

"தெரிசன பரகதி யானாய் நமோநம" —(அவகுண) திருப்புகழ்.

தாயருள் தரவேணும்:—

தாய் மகவினிடம் காட்டுங் கருணை நிகரற்றது; பயன் கருதாதது; இறைவனுடைய கருணைக்கு ஏகதேச உவமையாக உள்ளது. இறைவனைப் "பொன்னே மணியே" என்று ஆன்றோர்கள் கூறுகின்றனர்.

"பொன்னே மணியே பொருளே யருளே
மன்னே மயிலே றியவா னவனே" —அநுபூதி (27)

இறைவன் பொன்னினும் மணியினும் பல்கோடி மடங்கு சிறந்தவர். எனினும் நமக்குத் தெரிந்த பொருள்களுக்குள் பொன்னும் மணியும் சிறந்தன. ஆதலினால் நாமறிந்த பொருள்களுக்குள் உயர்ந்தவற்றின் பேரால் இறைவனை யழைக்கின்றோம். அதே போல் ஆண்டவன் வரம்பற்ற கருணையுடையவர். நமது வாழ்வில் நாம் அறிந்தவற்றுக்குள் தாயன்பு சாலச் சிறந்தது. ஆதலினால் ஆன்றோர்கள் இறைவன் கருணையைக் குறிப்பிடும்போதெல்லாம் தாயின் கருணையைக் குறிப்பிடுவர்.

"பால்நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப்பரிந்து"

"தாயிற் சிறந்த தயாவான தத்துவனே"

"தாயினும் நல்லன்"

"ஆய்புரி அருட்செறிந்தவி நாசியுள் மேவிய பெருமாளே"
—(மனத்திரைந்தெழு) திருப்புகழ்

"தாய்போ லடியார் தமைப்புரப்பார்"

மலைக்குநாயக :—

குமாரக் கடவுள் குறிஞ்சிநிலக் கடவுள்.

"சேயோன் மேய மைவரை யுலகும்" —தொல்காப்பியம்.

"குறிஞ்சிக் கிழவனென் றேதுங் குவலயமே" —அலங்காரம் (5)

முருகவேளின் முழுமுதற் றன்மையை யறிந்த பண்டைத் தமிழர்கள், உயர்ந்தவனை உயர்ந்த இடத்தில் வைப்பதுபோல், மயிலேறும் வள்ளலை மலைமிசை வைத்து வணங்கினர்.

வசிட்டர்...... ... பொருட்கோலமாய் வரும்:—

வசிட்டாதி முனிவர் பெருமக்களும், நக்கீரராதி நாவலரேறுகளும், சித்தர் யோகியர்களும் முருகவேளைப் பாடிப் பரவி வழிபட்டு அருணலமுற்றார்கள்.

சிவவாக்கியர் வழிபட்ட சிவமலையும், பிண்ணாக்கு சித்தர் வழிபட்ட சென்னிமலையும், பாம்பாட்டிச் சித்தர் வழிபட்ட மருதமலையும், போகர் வழிபட்ட பழநிமலையும், கொங்கணசித்தர் வழிபட்ட கொங்கணகிரியும், அகத்தியர் வழிபட்ட இலஞ்சிப் பதியும், வசிட்டர் வழிபட்ட வேப்பூரும் இன்றும் கண்கூடாகக் கண்டு மகிழ விளங்குகின்றன.

திருக்கொணமலை :—

இது ஈழநாட்டிலுள்ள அரிய திருத்தலம்.

கிளிப்பாடுபூதி:—

அத் தலத்தின் திருக்கோயிலிலுள்ள ஓரிடமென்பர். இனி, அருணகிரியார் கிளிவடிவமுற்று கந்தரநுபூதி பாடினர் என்னும் வரலாறுண்மையில், வருங்காலத்தைச் சுட்டி அங்ஙனம் பாடினார் என்றும் கூறுவர்.

ஏழ்பவகடல் :—

எழுவகைப் பிறவிகளையும் ஏழு கடல்களாக அருணகிரிநாதர் உவமிக்கும் அழகு சிந்திக்கத்தக்கது.

"தரையி னூழ்த்திரை யேழே போலெழு
பிறவி மாக்கட லூடே நானுறு
சவலை தீர்த்துன தாளே சூடி"
—(நிருதரார்க்கொரு) திருப்புகழ்.

## கருத்துரை

மலைமன்ன! சிவமைந்த! வள்ளிமகிண! அருட்பாக்களின் பொருட்கோல! திருக்கோணமலைத்தேவ! நினைத்தவை முடிக்கும் நெடுஞ்சுடர்வேல! மாதர் மயக்குற்ற அடியேனை ஆட்கொண்ட அண்ணல்! புகழுரைக்கும் அடியேனைத் திருவடிப் பேறு தந்து தாயருள் புரிந்து காப்பாற்றுவீர்.

## குன்றுதோறாடல்

## 199

அதிருங் கழல்ப ணிந்து னடியேனுன்
அபயம் புகுவ தென்று நிலைகாண
இதயந் தனிலி ருந்து க்ருபையாகி
இடர்சங் கைகள்க லங்க அருள்வாயே
எதிரங் கொருவ ரின்றி நடமாடும்
இறைவன் தனது பங்கி லுமைபாலா
பதியெங் கிலுமி ருந்து விளையாடிப்
பலகுன் றிலும மர்ந்த பெருமாளே.

### பதவுரை

எதிர் அங்கு ஒருவர் இன்றி - அந்தத் தேவ சபையில் தனக்கு சமானம் ஒருவரும் இன்றி, நடம் ஆடும் – ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளும், இறைவன்தனது பங்கில் - சிவபெருமானுடைய இடப்பாகத்தில் விளங்கும், உமை பாலா-உமாதேவியாருடைய திருக்குமாரரே! பதி எங்கிலும் இருந்து விளையாடி - திருத்தலங்கள் எங்கனும் நின்று திருவிளையாடல் புரிந்து, பல குன்றிலும் அமர்ந்த பெருமாளே - பல மலைகளிலும் எழுந்தருளிய பெருமையின் மிக்கவரே! அதிரும் கழல் பணிந்து - இனிது ஒலிக்கும் வீரக்கழலையணிந்துள்ள தேவரீரது திருவடிகளைத் தொழுது, உன் அடியேன் - தேவரீருடைய தொண்டனாகிய நாயேன், உன் அபயம் புகுவது என்றும் - உமது திருவடியே புகலிடமென்று நாள்தோறும் தஞ்சம் புகுகின்றேன்; (ஆதலால்) நிலைகாண - மெய்ந் நிலையைக் காணுதற்கு, இதயந்தனில் இருந்து - தேவரீர் அடியேனுடைய உள்ளத்தில் வீற்றிருந்து, க்ருபை ஆகி - கருணை செய்து, இடர் சங்கைகள் கலங்க அருள்வாயே - அடியேனுடைய துன்பமும் சந்தேகங்களும் கலங்கி யொழியத் திருவருள் புரிவீர்.

### பொழிப்புரை

தனக்குவமையின்றி தனிப்பெருந் தலைவராய்த் தேவசபையில் நின்று அநவரத ஆனந்தத் தாண்டவம் புரியும் எப்பொருட்கும் இறைவராகிய சிவபெருமானுடைய இடப்பக்கத்தில் விளங்கும் உமை யம்மையாரது திருப்புதல்வரே! திருத்தலங்கள் எங்கணும் எழுந்தருளிப் பல திருவிளையாடல்களைப் புரிந்து, மலைகள் தோறும் நின்று நிலவும் பெருமிதமுடையவரே! இனிது ஒலிக்கும் வீரக்கழலையணிந்த தேவரீரது திருவடிகளைப் பணிந்து, உமக்கே மீளா அடிமைப்பட்ட நாயேன்,

உம்மையே நாடோறும் சரணம் புகுகின்றேன்; ஆதலால், அடியேனுடைய உள்ளத்தில் தேவரீர் எழுந்தருளிக் கருணை செய்து, எனது துன்பங்களும் சந்தேகங்களும் கலங்கி யழியு மாறு அருள் புரிவீர்.

## விரிவுரை

அதிருங்கழல் :—

கழல் என்பது வீரர்கள் தாளில் அணிந்துகொள்ளும் ஓர் ஆபரணம். வீரவிரவீராதிவீர விறலோன் வெற்றிவேற்கடவுள் ஒருவரே யாதலின் அவருடைய திருவடியில் அரதன வீரக் கழல் ஒலித்துக் கொண்டிருக்கின்றது. அது ஆகுபெயராய் கழலையுடைய திருவடியை உணர்த்தியது.

எதிரங்கொருவரின்றி :—

சிவபெருமான் "சமான ரகிதர்" தனக்குவமை யில்லாத் தனிப்பெருந் தலைவன்.

இறைவன் :—

எல்லாப் பொருள்களிலும் தங்கி இருப்பவன்; எல்லாப் பொருள்களும் தன்னகத்தே தங்க இருப்பவன்.

## கருத்துரை

பார்வதிபால! குன்றுதோருடுங் குமர! தேவரீர் அடியேன் உள்ளத்தில் உறைந்து இடர் சங்கைகளைக் களைந்து அருள்புரிவீர்.

## 200

எழுதிகழ் புவன நொடியள வதனி
லியல்பெற மயிலில் வருவோனே
இமையவர் பரவி யடிதொழ அவுணர்
மடிவுற விடுவ தொருவேலா
வழுதியர் தமிழி னொருபொரு ளதனை
வழிபட மொழியு முருகேசா
மலரடி பணியு மடமகள் பசலை
மயல்கொடு தளர்வ தழகோதான்

முழுகிய புனலி லினமணி தரள
முறுகிடு பவள மிகவாரி
முறையொடு குறவர் மடமகள் சொரியு
முதுமலை யழக குருநாதா
பழகிய வினைகள் பொடிபட அருளில்
படிபவ ரிதய முறுகோவே
பருவரை துணிய ஒருகணை தெரிவ
பலமலை யுடைய பெருமாளே.

## பதவுரை

முழுகிய புனலில் - முழுகிய நீரில், இனமணி தரள - கூட்டமான முத்து மணிகளையும், முறுகிடு பவளம் - பின்னிய பவளங்களையும், மிகவாரி - நிரம்ப வாரியெடுத்து, முறையொடு குறவர் மடமகள் சொரியும் - வாங்குங்கள் என்ற முறையீட்டோடு குறப் பெண்கள் சொரிகின்ற, முதுமலை அழக - பழமலையில் விளங்கும் அழகரே! குருநாத-குருநாதரே! பழகிய வினைகள் - என்னுடன் கூடவே பழகி வருகின்ற வினைகள், யாவும் பொடிபடும்படி, அருளில் படிபவர் - உனது திருவருளில் தோய்பவருடைய, இதயம் உறுகோவே - உள்ளத்தில் வீற்றிருக்கின்ற தலைவரே! பருவரை துணிய - பருத்த கிரவுஞ்சமலை பொடிபடும்படி, ஒருகணை தெரிவ - ஒப்பற்ற ஆயுதத்தைத் தேர்ந்தெடுத்து விட்டவரே! பலமலை உடைய பெருமாளே - பலமலைகட்கும் தலைவனாயுள்ள பெருமையிற் சிறந்தவரே! எழுதிகழ் புவனம் - ஏழு என விளங்கும் புவனங்களை, நொடி அளவு அதனில் - நொடிப்பொழுதில், இயல்பெற மயிலில் - அழகு விளங்க மயில்மீது, வருவோனே - வலம் வந்தவரே! இமையவர் - தேவர்கள், பரவி அடிதொழ - துதி செய்து திருவடியைத்தொழ, அவுணர் மடிவுஉற விடுவது - அசுரர் முடிவை யடையுமாறு செலுத்திய, ஒரு வேலா - ஒப்பற்ற வேலாயுதரே! வழுதியர் தமிழின் - பாண்டியர்கள் போற்றி வளர்த்த தமிழில், ஒரு பொருள் அதனை - ஒப்பற்ற பொருளதிகாரத்தின் உரையை, வழிபட மொழியும் - சங்கப் புலவர்கள் வழிபட்டு நிற்க ஆராய்ந்து உரைத்த, முருக ஈசா - முருகக் கடவுளே! மலர் அடிபணியும் - உமது மலர்போன்ற திருவடியைப் பணிகின்ற, மடமகள் பசலை - இந்த மடமகளானவள் ஆசைநோயால் உற்ற நிற வேறுபாட்டுடன், மயல்கொடு தளர்வது-மோகமயக்கத்தால் தளர்ச்சியடைவது, அழகோதான் - நியாயமாகுமோ?

## பொழிப்புரை

நீரில் மூழ்கியெடுத்த கூட்டமான முத்துமணிகளையும், கொடிபோற் பின்னிய பவளங்களையும் நிரம்ப வாரியெடுத்து,

"முத்து வாங்குங்கள், பவளம் வாங்குங்கள்" என்று கூவி யழைத்து குறச் சிறுமியர் சொரிகின்ற, பழமலையில் வாழ்கின்ற அழகரே! குருநாதரே! அடியேனுடன் பழகிய வினைகள் முற்றிலும் பொடிபடுமாறு, திருவருளில் தோய்ந்த அடியவர்களின் இதயக் கோயிலில் வாழ்கின்ற தலைவரே! பருத்த கிரவுஞ்ச கிரி அழியும்படி ஒப்பற்ற கணையை விடுத்த பல மலைகட்குந் தலைவராகிய பெருமிதம் உடையவரே! ஏழு என்ற எண்ணிக்கையுடன் விளங்கும் உலகங்களை ஒரு நொடிப் பொழுதுக்குள் வலமாக அழகுடன் மயிலில் வந்தவரே! தேவர்கள் துதி செய்து திருவடியை வணங்க அசுரர்கள் மடியுமாறு வேலாயுதத்தை விட்டருளியவரே! பாண்டிய மன்னர்கள் வளர்த்த தமிழில் செய்த அகப்பொருள் இலக்கணத்தின் உரையைச் சங்கப் புலவர்கள் வழிபட்டுக் கேட்க, உணர்த்திய முருகப் பெருமானே! மலர்போன்ற திருவடியைத் தொழுகின்ற இம்மடமகள் பசலை நோயுற்று மயல்கொண்டு தளர்ச்சியடைவது உமது கருணைக்கு அழகாகுமோ?

## விரிவுரை

எழுதிகழ் புவன நொடியளவதனில் இயல்பெற மயிலில் வருவோனே:—

கனி காரணமாக முருகவேள் மாமயிலின்மீது ஆரோகணித்து ஏழு உலகங்களையும் ஒரு நொடிப்பொழுதில் எங்குந் தானாகுந் தன்மையை உலகம் உணர்ந்து உய்யும்பொருட்டு வலம் வந்தருளினார். இதன் விளக்கத்தை திருப்புகழ் விரிவுரை (முதல் தொகுதி 3-ம் பக்கத்தில் காணலாம்.)

இமையவர் :—

கண்கள் இமைக்காமையால் தேவர்கள் இமையவர் என்று பேர் பெற்றார்கள். எப்போதும் எச்சரிக்கையாக விழிப்புடன் இருப்பவர்கள் என்பது பொருள்.

வழுதியர் தமிழின் :—

வழுதியர்—பாண்டியர். மதுரையில் பாண்டிய மன்னர்கள் தமிழ்ச் சங்கம் அமைத்துத் தமிழை வளர்த்தார்கள்.

ஒரு பொருளதனை வழிபட மொழியும் :—

இறையனார் அகப்பொருள் என்ற நூலுக்குச் சங்கப் புலவர்கள் உரை கண்டார்கள். அவற்றுள் எது சிறந்த உரையென்று தெளிவு பெறாமல் தமக்குள் வாதிட்டுக்கொண்டார்கள். இறை

வன் கட்டளைப்படி, முருகவேளின் திருவுருவாய் வந்த உருத்திர சன்மரை யழைத்து வந்து சங்கப் பலகை மீது எழுந்தருளச் செய்து, சங்கப் புலவர்கள் தாம் தாம் உரைத்த உரையைக் கூறினர்கள். உருத்திரசன்மர், மற்ற உரைகளைக் கேட்டு ஒவ்வோரிடங்களில் மட்டும் சிரக்கம்பம் புரிந்தும், நக்கீரர் செய்த வுரையைக் கேட்டு முழுவதும் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தும், சிரக்கம்பம் கரக்கம்பம் புரிந்தும் சிறந்த உரை யென விளக்கியருள்புரிந்தார்.

மலரடி பணியும் மீடமகள் பசலை மயல் கொடு தளர்வதழகோதான் :—

இப் பாடல் அகப்பொருள் துறையாக அமைந்தது.

பசலை என்பது ஒரு பெண்ணுக்குக் காமநோயால் உண்டாகும் நிறவேறுபாடு. இறைவன் நாயகனுகவும் ஆன்மாவை நாயகியாகவும் கொண்டு, இறைவனுகிய நாயகன்மீது வைத்த ஆசை நோயினுல் பசலையுற்று நாயகி வருந்துகின்ருள்.

மடமகள் :—

மடம்—கொளுத்தியது விடாமை. ஆன்ருேர்கள் கூறிய அறவுரையை விடாது பற்றிக்கொள்ளுங் குணம்.

இறைவனே! உன்னையடையப்பெருது ஆன்மாவாகிய இப் பெண் தளர்ச்சியடைகின்ருள். அங்ஙனம் தளர்வது நின் கருணைத் திறனுக்கு அழகு ஆகுமோ? ஆகாது. ஆதலால் விரைந்து ஆட்கொள்வாய்.

முழுகிய புனலில் இனமணி தரள முறுகிடு பவள மிகவாரி முறையொடு குறவர் மடமகள் சொரியு முதுமலை:—

தண்ணீரில் முழுகி நிரம்பவும் முத்து மணிகளை வாரியெடுப்பர். பவளத்தைப் பின்னலாக முறுக்கி மாலை செய்வார்கள். குறப் பெண்கள் முத்தையும் பவளத்தையும் சுமந்து பழமலையென்ற தலத்தில் "முத்தோ! பவளமோ!" என்று கூவி விற்பார்கள். அங்ஙனம் விலை கூறி யழைத்து, நிரம்பவும் சொரிந்து விற்பார்கள். இத்தகைய வளமையுள்ளது பழமலை. பழமலைக்கு அருகில் ஓடுவது மணிமுத்தாறு என வுணர்க.

"திறங்கொள் மணித் தரளங்கள் வரத்திரண்டங்
கெழிற்குறவர் சிறுமிமுர்கள்
முறங்களினுல் கொழித்து மணி செலவிலக்கி
முத்துலைப்பெய் முதுகுன்றமே" —சம்பந்தர்

அருணகிரிநாதர் திருஞானசம்பந்தருடைய தேவாரத்தில் ஈடுபாடுடையவர் என்பது இதனுல் தெளிவாகின்றது.

பழகிய வினைகள் பொடிபட:—

முன் செய்து விளைந்த வினைக் கூட்டங்கள், ஆன்மாவுடன் பழகி உடனுக வந்து பயன் விளைக்கும். அவ் வினைகள் முருகன் அருளால் வெந்து நீருகும்.

அருளில் படிபவர் இதயமுறுவோனே:—

திருவருளிலேயே அடியவர்கள் தோய்ந்து நிற்பார்கள். அவ் வண்ணந் திருவருளில் தோய்ந்து அருள் வசப்பட்ட அடியவர்களது உளக்கோயிலில் முருகன் எழுந்தருளியிருப்பான்.

பலமலையுடைய பெருமாளே:—

"சேயோன் மேய மைவரையுலகும்"

என்ற தொல்காப்பிய வாக்கின்படி, குறிஞ்சி நிலக்கடவுள் குமரன். எல்லா மலைகளையும் தனக்கு உறைவிடமாகக் கொண்டவன். உயர்ந்தவனை உயர்ந்த இடத்தில் வைப்பார்கள். அதுபோல தெய்வநாயகனைப் பழம் பெருமக்கள் மலைமீது வைத்து வழிபட்டார்கள்.

கருத்துரை

மலைதோறும் மேவிய முருகவேளே! இப் பெண்ணின் தனிமையைத் தீர்த்து ஆட்கொள்வாய்.

## 201

தறையின் மானுட ராசையி னுல்மட
லெழுது மாலருள் மாதர்கள் தோதக
சரசர் மாமல ரோதியி னுலிரு கொங்கையாலுந்
தளர்மி னேரிடை யாலுடை யால்நடை
யழகி னுல்மொழி யால்விழி யால்மருள்
சவலை நாயடி யேன்மிக வாடிம யங்கலாமோ

பறவை யானமெய்ஞ் ஞானிகள் மோனிகள்
அணுகொ ணுவகை நீடுமி ராசிய
பவன பூரக வேகிக மாகிய விந்துநாதம்
பகரொ ணுதது சேரவொ ணுதது
நினையொ ணுதது வானத யாபர
பதிய தானச மாதிம ஞேலயம் வந்துதாராய்

சிறைவி டாதநி சாசரர் சேனைகள்
மடிய நீலக லாபம தேறிய
திறல்வி நோதச மேளத யாபர அம்புராசித்
திரைகள் போலலை மோதிய சீதள
குடக காவிரி நீளலை சூடிய
திரிசி ராமலை மேலுறை வீரகு றிஞ்சிவாழும்

மறவர் நாயக ஆதிவி நாயக
ரிளைய நாயக காவிரி நாயக
வடிவி னாயக ஆனைத னாயக எங்கள்மானின்
மகிழு நாயக தேவர்கள் நாயக
கவுரி நாயக னார்குரு நாயக
வடிவ தாமலை யாவையு மேவிய தம்பிரானே.

## பதவுரை

சிறை விடாத - தேவர்களுடைய சிறையை விடாது நின்ற, நிசாசரர் சேனைகள் - அசுரர்களுடைய படைகள், மடிய - மாண்டொழிய, நீலகலாபம் அது ஏறிய - நீலநிறமுடைய தோகை மயிலின் மீது ஆரோகணித்த, திறல்விநோத சமேள - பேராற்றலும் திருவிளையாடலும் பொருந்தியவரே! தயாபர - கருணையின் மிக்கவரே! அம்புராசி - கடலினது, திரைகள் போல் அலை மோதிய - அலைகளைப் போல பேரலைகள் வீசுகின்றதும், சீதள - குளிர்ச்சி பொருந்தியதுமாகிய, குடககாவிரி - குடகுமலையினின்றும் பெருகி வரும் காவேரி யாற்றின், நீள் அலை சூடிய-நீண்ட அலைகளைப் பொருந்திய, திரிசிராமலை மேல் உறை வீர - திரிசிராமலையின்மேல் எழுந்தருளி யுள்ள வீரரே! குறிஞ்சி வாழும் - மலையிடங்களில் வாழ்கின்ற, மறவர் நாயக - வேடர்களது தலைவரே! ஆதி விநாயகர் - முதற்கடவுளாகிய கணேசப் பெருமானுடைய, இளைய நாயக - இளைய சகோதரராகிய நாயகரே! காவிரி நாயக - காவிரி நதிக்குத் தலைவரே! வடிவின் நாயக - அழகின் மிக்க தலைவரே! ஆனைதன் நாயக - தெய்வயானை யம்மையாருக்குத் தலைவரே! எங்கள் மானின் மகிழும் நாயக-எங்களுடைய மான்போன்ற வள்ளியம்மை யாரிடத்தில் உள்ளம் உவக்கின்ற தலைவரே! தேவர்கள் நாயக - தேவர் களுக்குத் தலைவரே! கவுரி நாயகனார் குருநாயக - உமையம்மையாருக்குத் தலைவராகிய சிவபெருமானுக்குக் குருமூர்த்தியாகிய நாயகரே! வடிவது ஆம் மலை யாவையும் மேவிய - அழகிய மலைகள் எல்லாவற்றிலும் விரும்பி வாழும், தம்பிரானே - தனிப்பெருந்தலைவரே! தறையின் மானுடர் - மண் ணுலகில் வாழும் ஆடவர், ஆசையினால் மடல் எழுதும் - தம்மீது கொண்ட ஆசையால் மடலேறுவதற்கு வடிவத்தை எழுதுகின்ற, மால் அருள் மாதர்

கள் - மயக்கத்தைத் தருகின்ற பெண்களாகிய, தோதக சரசர் - வஞ்சக மான காமச் செயலுடையாரது, மாமலர் ஓதியினுல் - சிறந்த பூக்களைச் சூடிய கூந்தலினுலும், இரு கொங்கையாலும் - இரண்டு தனங்களாலும், தளர் மின்னேர் இடையால் - சோர்கின்ற மின்னலைப் போன்ற இடையினுலும், உடையால் - ஆடையின் பொலிவாலும், நடை அழகினுல்-நடையின் அழகினுலும், மொழியால் - இனிய மொழியாலும், விழியால் - (உள்ளத்தைக் கவர்கின்ற) கண்களாலும், மருள் - மயக்கத்தை யடைகின்ற, சவலை நாய் அடியேன் - பலவீனனுகிய நாயிற்கடையேனுகிய அடியேன், மிக வாடி மயங்கலாமோ - மிகவும் வருத்தமுற்று மயங்குதல் தகுதியோ? பறவை ஆன மெய் ஞானிகள் - பறவைபோல் ஓரிடத்திலும் தங்காது பற்றற்றுத் திரியும் உண்மை ஞானிகளும், மோனிகள் - மௌனிகளும், அணுக ஒணு வகை - சேர்வதற்கு முடியாத வண்ணம், நீடும் இராசியம் - மிக்க இரகசிய மானதும், பவன பூரக ஏகிகம் ஆகிய விந்துநாதம் - பிராணவாயுவை ஒடுக்கிச் செய்யும் யோகத்தில் ஒன்றுபட்ட விந்துநாதங்களால், பகர வொணுதது - சொல்ல வொண்ணுததும், சேர ஒணுதது-சேர முடியாததும், நினை யொணுதது-நினைக்க முடியாததும், ஆன-ஆகிய, தயாபர பதியது ஆன - அருளோடு கூடித் தலைமைபெற்றுள்ள, சமாதி மனேலயம் - மனம் இலயப் படுவதாகிய சிவ சமாதியை, வந்து தாராய்-தேவரீர் வந்து அடியேனுக்குத் தந்தருள்வீர்.

## பொழிப்புரை

தேவர்களுடைய சிறையை விடாது மறுத்த இராக்கதர்களுடைய சேனைகள் மாய்ந்தொழியுமாறு நீலநிறமுடைய தோகை மயிலின்மீது ஊர்ந்த ஆற்றலும் விநோதமுமுடையவரே! கருணைகரரே! கடலைப்போல் அலைகளை வீசுகின்றதும் குளிர்ந்திருப்பதும் குடகமலையினின்றும் பெருகி வருவதுமாகிய காவிரி நதியின் நீண்ட அலைகளை மாலையாகச் சூடியுள்ள திரிசிராமலை என்னும் திருமலையின்மீது வாழ்கின்ற வீரரே! மலைப்பக்கங்களில் வாழ்கின்ற வேடர்களுக்குத் தலைவரே! முதற்கடவுளாகிய விநாயகமூர்த்திக்கு இளையவராக வந்த நாயகரே! காவிரிநதிக்குத் தலைவரே! அழகின்மிக்க நாயகரே! தெய்வகுஞ்சரியம்மைக்குத் தலைவரே! எங்களுடைய வள்ளியம்மையாரிடத்தில் மகிழ்கின்ற தலைவரே! தேவர்களுக்குத் தலைவரே! உமாதேவிக்குத் தலைவராகிய சிவமூர்த்திக்குக் குருமூர்த்தியாக உபதேசித்த நாயகரே! அழகிய மலைகள் எல்லாவற்றிலும் நிவாசஞ் செய்கின்ற பெருமிதமுடையவரே! பூவுலகில் ஆடவர்கள் தம்மீதுள்ள ஆசையினுல் மடற்குதிரையின்மீது ஏறும் பொருட்டு உருவத்தை எழுதுகின்ற

மயக்கத்தைத்தரும் பெண்களாகிய வஞ்சக லீலைகளைச் செய்வோருடைய சிறந்த இடையினாலும், ஆடையினாலும், நடையின் அழகினாலும், மொழியினாலும், கருத்தைக் கவர்கின்ற கண்களாலும், மயக்கத்தையுற்ற அறிவில் பலமற்ற நாயிற் கடையேன் வருந்தி மயங்கி வீணே அழிவது தக்கதோ? பறவையைப்போல் ஓரிடமும் பற்றின்றி திரியும் மெய்ஞ்ஞானிகளும் மௌன விரதியரும் சேரவொண்ணுவகையினுள்ள, மிக்க இரகசியமும், பிராணவாயுவை ஒடுக்கிச் செய்யும் யோகத்தில் ஒன்றுபட்ட விந்து நாதங்களால் சொல்ல முடியாததும், சேர வொண்ணாததும், நினைய வொண்ணாதது மான தயையோடு கூடி தலைமைபெற்றுள்ள மனோலய சிவ சமாதியைத் தேவரீர் வந்து அடியேனுக்குத் தந்தருள்வீர்.

## விரிவுரை

இப்பாடலின் பிற்பகுதியில் 10-முறை நாயக என்று வருவது போற்றற்குரியது.

**தறையின் மானுடர் :—**

எதுகைநோக்கி தரை என்பது வல்லின 'ற'கரம் பெற்றது. கம்பராமாயணப் பாடலையும் சான்று காண்க.

"அறையு மாடரங்கும் மடப்பிள்ளைகள்
தறையிற் கீறிடிற் றச்சருங் காய்வரோ"

**ஆசையினால் மடல் எழுதும் :—**

பண்டைக்காலத்தில் ஆடவர் தாங் காதலித்த பெண்ணை யடையும் பொருட்டு, மடற்பரியின்மீது மடலெழுதி ஊராரறிய வலம் வருதல் வழக்கில் இருந்தது.

காய்சின வேலன்ன மின்னியல் கண்ணின் வலைகலந்து
வீசின போதுள்ள மீனிழந் தார்வியன் தென்புலியூர்
ஈசனசாந்து மெருக்கு மணிந்தோர் கிழிபிடித்துப்
பாய்சின மாவென வேறுவர் சீறூர்ப் பனைமடலே.

—திருக்கோவையார்.

காம முழந்து வருந்தினார்க் கேம
மடலல்ல தில்லை வலி. —திருக்குறள்.

**தோதக சரசர்:—**

வஞ்சகமான காமசேட்டை; விலைமகளிர் பொருள் பறிக்கச் செய்யும் சூழ்ச்சிகள்.

ஓதி:—

பெண்மயிர்.

"வாழைப்பூ வெனப் பொலிந்த வோதி" —சிறுபாணாற்றுப்படை.

சவலை :—

பெண்களுடைய அழகிய மயிர், தனம், இடை, நடை, உடை, மொழி, விழி இவைகளைக் கண்டு உள்ளம் உடைந்து, உருகி, உணர்வு இளைத்துத் தேய்ந்து மெலிந்து போவது.

சவலை—பாலில்லாக் குழந்தை. அதுபோல் இளைத்து மெலிவது.

"சவலையாய் நாயேன் கழிந்து போவேனோ" —திருவாசகம்.

"சவலை தீர்த்துன தாளே சூடி" —(நிருதரார்க்கொரு) திருப்புகழ்.

பறவையான மெய்ஞ்ஞானிகள்:—

ஓரிடமென்று நில்லாது பறந்து திரியும் பறவை போலிருக்கின்ற பற்றற்ற உண்மைஞானிகள் என்பது ஒரு பொருள்; இனி, முட்டைக்குளிருந்து பறவைக் குஞ்சு முற்றியவுடன் அம்முட்டையை யுடைத்துக்கொண்டு வெளிப்பட்டபின் திரும்ப எவ்வாறு அம்முட்டையை விரும்பி அதனிடம் வருவதில்லையோ, அதுபோல், துறந்து நீங்கியபின், தான் வாழ்ந்த ஊர் வீடு மனைவி மக்கள் என்பவைகளை மனதாலும் பற்றாமல் நிற்கும் மெய்யறிவினர் என்பது வேறு பொருள். பறவை எவ்வாறு இரு சிறகினால் வானிற் பறக்கின்றதோ, அதுபோல், உறுதி, அன்பு என்ற இரு சிறகினால் மேல் நிலையில் உலாவுபவர் என்பதும் மற்றொரு பொருள். அந்த உறுதி, அன்பு என்ற இரண்டு கிடைப்பது மிக அருமையிலும் அருமை. இறைவனருளாலேயே கிடைக்கத் தக்கதாம்.

உன்றிரு வடிக்கீ ழுறுதியு மன்பு முன்றிரு வருளினாற் கிடைப்ப
தன்றிநூல் பலவு மாய்ந்ததா லுரைசெ யளப்பறுந் திறமையான் மதியான்
மன்றவே கிடைப்பதன்று மற்றதனை மாதவஞ் செய்திலாக் கயமை
துன்றிய புலையோர் யாங்ஙனம் பெறுவர் சோதியே கருணைவாரிதியே.
—சிவதத்துவ விவேகம்.

மோனிகள் :—

ஆசாநிகளத்தைத் துகளாக்கிய பின் பேசா அனுபூதியில் நின்றவர். மோனமே ஞானவரம்பு. சும்மா இருக்கும் சுகசாந்த நிலை.

இராசியம் :—

இரகசியம் அநுபவத்தில் அறியும் தன்மையது.

'சமாதி மனோலயம்:—

மனமிலயப்பட்ட அசைவற்றநிலை. இதனைப் பேசவும் நினைக்கவும் சேரவும் முடியாது. என்னின் எழுதுவது எங்ஙனே யமையும். நம் அருணையடிகள் அந்த அனுபவத்தில் திளைத்து நின்ற இன்பத்தைப் பல இடங்களில் குறிப்பிட்டு வியந்து நிற்கின்றார்.

"தன்னந் தனிநின் றது தானறிய
இன்னம் மொருவர்க் கிசைவிப் பதுவோ" —அநுபூதி (49)

வேலே விளங்கு கையான் செய்யதாளினில் வீழ்ந்திறைஞ்சி
மாலேகொள இங்ஙன் காண்பதல்லால் மனவாக்குசெய
லாலே யடைதற்கரிதா யருவுரு வாகியொன்று
போலே யிருக்கும் பொருளை எவ்வாறு புகல்வதுவே.

—அலங்காரம் (28)

......................."நவிலந்தகுமோ
யானாகிய என்னை விழுங்கி வெறுந்
தானாய் நிலைநின் றது தற்பரமே" —அநுபூதி (29)

"அவ்வா றறிவா றறிகின் றதலால்
எவ்வா றொருவர்க் கிசைவிப் பதுவே" —அநுபூதி (30)

சமேள :—

சமேளனம்—சேர்க்கை.

வடிவினாயக ஆனைதனாயக :—

அழகின் மிக்கவராகிய தெய்வயானை யம்மையாருக்குத் தலைவரே என்றும் பொருள் கூறலாம்.

எங்கள் மானின் :—

வள்ளியம்மையார் இச்சாசக்தியாதலாலும், மண்ணுலகில் வந்துபிறந்தும் நம்முடன்கூடி நம்போல் மானுடவடிவந்தாங்கி நின்றமையாலும், "எங்கள் மான்" என்று சொந்தம் பாராட்டினார்.

"நம் செந்தில் மேய வள்ளிமணாளர்க்குத் தாதை கண்டாய்"

என்ற அப்பர் மூர்த்திகள் அருமை வாக்கையும் உன்னுக.

வடிவதாமலை யாவையு மேவிய:—

முருகனே முழுமுதற் கடவுளாதலின், உயர்ந்தோர்க்கு உயர்ந்த ஆசனந்தருதல்போல், அப்பரமபதியை மலையின்மீது வைத்து வழிபட்டனர் நம் பழந்தமிழர்.

''மலைக்கு நாயக'' ''கிரிராஜ'' என்ற அருள்வாக்குகளை உன்னியுள்ளம் உவக்க, எம் உள்ளத்தின் முன்னே வந்து தோன்றுகின்றன. அதனாலன்றோ நம் அடிகள் யாவர்க்கும் நாயகன் என்று அடுக்கிச் சொன்னார்.

### கருத்துரை

யாவர்க்கும் நாயகனே! அடியேன் மாதராசைப்பட்டு மயங்காவண்ணம் மனோலய சிவசமாதியைத் தந்தருள்வீர்.

## 202

வஞ்சக லோப மூடர் தம்பொரு ளூர்கள் தேடி
மஞ்சரி கோவை தூது பலபாவின்
வண்புகழ் பாரி காரி யென்றிசை வாது கூறி
வந்தியர் போல வீணி லழியாதே

செஞ்சர ணாதகீத கிண்கிணி நீப மாலை
திண்டிறல் வேல்ம யூர முகமாறும்
செந்தமிழ் நாளு மோதி உய்ந்திட ஞான மூறு
செங்கனி வாயி லோர்சொ லருள்வாயே

பஞ்சவ னீடு கூனு மொன்றிடு தாப மோடு
பஞ்சற வாது கூறு சமண்மூகர்
பண்பறு பீலி யோடு வெங்கழு வேற வோது
பண்டித ஞான நீறு தருவோனே

குஞ்சரம் யாளி மேவு பைம்புன மீது லாவு
குன்றவர் சாதி கூடி வெறியாடி
கும்பிட நாடி வாழ்வு தந்தவ ரோடு வீறு
குன்றுதொ ருடல் மேவு பெருமாளே.

### பதவுரை

பஞ்சவன் - பாண்டியனுடைய, நீடுகூனும் - நீண்டு வளைந்திருந்த கூனும், ஒன்றிடு தாபமோடு - இடையில் வந்து பொருந்திய வெப்புநோயும், பஞ்சு அற - பஞ்சாகப் பறந்து அழியுமாறும், வாது கூறு - வாதம் புரிந்த, சமண் மூகர் - சமணர்களாகிய ஊமைகள், பண்பு அறு பீலியோடு

நன்மையற்ற மயிற்பீலியுடன், வெம் கழு ஏற - வெப்பமான கழுவில் ஏறு மாறும், ஓது பண்டித - ஞானசம்பந்தராக வந்து தமிழ் வேதத்தை ஓதி யருளிய மாபெரும் புலவரே! ஞான நீறு தருவோனே - ஞானமயமான திரு நீற்றைத் தந்தவரே! குஞ்சரம் - யானைகளும், யாளி - யாளிகளும், மேவு - விரும்பி வாழ்கின்ற, பை புனம் மீது உலாவும் - பசுமை தங்கிய தினைப் புனத்தின் கண் திரிகின்ற, குன்றவர் ஜாதி கூடி - வேடர் குலத்தினர் ஒருங்கு கூடி, வெறியாடி கும்பிட - ஆவேசம் வந்து ஆடியும் பாடியும் வழிபட, நாடி வாழ்வு தந்து - அவர்களது களங்கமற்ற பக்தியை எண்ணி அவர்கட்கு நல் வாழ்வு நல்கி, அவரோடு - அக்குன்றவருடன் குலாவி, வீறு - பெருமை தங் கிய, குன்றுதோறு ஆடல் மேவு - மலைகள்தோறும் நின்று திருவிளையாடல் புரிகின்ற, பெருமாளே - பெருமையின் மிக்கவரே! வஞ்சக லோப மூடர் தம் - வஞ்சகமும் உலோப குணமும் மூடத்தனமுமுள்ள கீழ்மக்களிருக் கின்ற, பொருள் ஊர்கள் தேடி - செல்வம் நிறைந்த ஊர்களைத் தேடிச் சென்று, மஞ்சரி கோவை தூது - மஞ்சரி தூது கோவை முதலிய, பல பாவின் - பலவகையான பிரபந்தங்களினால், வண் புகழ் பாரி - அவ்வுலுத் தரைத் தெளிந்த புகழை யுடைய பாரியென்றும், காரி - காரியென்றும், என்று இசை வாது கூறி - புகழ்ந்து அதற்குறும் தடைகளை நீக்க வாதஞ் செய்து, வந்தியர் போல - புகழ்ந்து பாடுகின்றவரைப்போல, வீணில் அலை யாதே - பயனின்றி அலைந்து அழியாமல், செம்சரண் - தேவரீருடைய சிவந்த தாள்மலர்களையும், நாத கீத கிண்கிணி - பாதத்திலணிந்துள்ள நாத கீதங்களுடன் கூடிய கிண்கிணிகளையும், நீப மாலை - கடப்பமலர் மாலையை யும், திண்திறல் வேல் மயூரம் - மிகுந்த வலியை யுடைய வேலையும் மயிலை யும்,ஆறுமுகம்-ஆறுமுகங்களையும், செந்தமிழ் நாளும் ஓதி-செந்தமிழ் மொழி யால் நாள்தோறும் துதிசெய்து, உய்ந்திட - அடியேன் உய்யும் பொருட்டு, ஞானம் ஊறு - மெய்ஞ்ஞானம் சுரந்து ஊற்றெடுக்கின்ற, செங்கனி வாயில் - தேவரீருடைய சிவந்த திருவாக்கினால், ஓர் சொல் - ஒப்பற்ற ஒரு உபதேச மொழியை, அருள்வாயே - அருள்புரிவீர்.

## பொழிப்புரை

பாண்டியனுடைய நெடிய கூனும், (சம்பந்தப் பெருமான் திருமடத்தில் அமணர் தீ வைத்ததனால்) வந்து பொருந்திய வெப்பு நோயும் பஞ்சுபோல் பறந்து போகுமாறும், தங்கள் சமயமே மெய்ச் சமயம் என்று வாதுசெய்த சமணர்களாகிய ஊமைகள் வெப்பமான கழுவில் ஏறி யழியுமாறும், (ஞான சம் பந்தப் பிள்ளையாராக வந்து) தமிழ் வேதத்தை ஓதி யருளிய ஞான பண்டிதரே! சிவஞானத்தைத் தருகின்ற திருநீற்றைத் தந்தவரே! யானை, யாளி முதலிய விலங்குகள் உலாவுகின்ற பசுமை தங்கிய தினைப்புனத்தின் கண் திரிகின்ற வேடுவர்கள் ஒருங்குகூடி வெறியாட்டயர்ந்து வணங்க அவர்களது அன்புக்கு

மகிழ்ந்து அவர்கட்கு நல்வாழ்வு நல்கி அவர்களுடன் மலைகள் தோறும் நின்று ஆடல்புரிகின்ற பெருமிதமுடையவரே! வஞ்சகமும் லோபமும் அறிவின்மையு முடையவர்களிடம் பொருளைக் குறித்துச் சென்று, மஞ்சரி, கோவை, தூது முதலிய பிரபந்தங்களைப் பாடி, பாரி காரி என்ற வள்ளல்கள் நீவிரே என்று புகழ்ந்து வாது செய்து, புகழ்ந்து பாடுவோராகிய வந்தியர்களைப் போல அவமே திரிந்து அழியாமல், தேவரீருடைய சிவந்த சீறடியையும், நாதகீதமுடைய கிண்கிணியையும் கடப்ப மலர் மாலையையும், சிறந்த வலிபெற்ற வேலையும், மயிலையும், அறுமுகங்களையும் செந்தமிழ் மொழியால் நாள்தோறும் பரவிப் பாடி அடியேன் உய்யுமாறு மெய்ஞ்ஞானம் ஊற்றெடுக்கின்ற சிவந்த திருவாக்கால் இணையற்ற ஒரு மொழியை உபதேசித்து அருள்புரிவீர்.

## விரிவுரை

வஞ்சக லோப மூடர்:—

செல்வத்தை நிரம்ப வுடையவர்களாயிருந்தும் வஞ்சகமும், உலோபத்தனமும், அறிவின்மையும் உடையவர்களிடம் சென்று, காமதேனுவின் பாலைக் கமரில் கவிழ்த்தது போல் அருமையான தமிழால், மஞ்சரி, கோவை, பரணி, தூது, மாலை முதலியபிரபந்தங்களை அவ் வுலோபர் மீது பாடி வறிதே யழிகின்றதை சுவாமிகள் இப்பாடலில் நன்கு கண்டிக்கின்றார். முருகனைப் பாடினால் இம்மையில் சோறுங் கூறையுந் தந்து இடர் கெடுத்து, எம்பெருமான் மறுமையில் சிவகதியையும் வழங்குவர்.

தம்மையே புகழ்ந்திச்சை பேசினுஞ்
சார்வினுந் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடாதே யெந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்
இம்மையே தரும் சோறும் கூறையும்
ஏத்தலாம் இடர் கெடலுமாம்
அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுறவில்லையே.
மிடுக்கிலாதானை வீமனேவிறல்
விசயனே வில்லுக் கிவனென்று
கொடுக்கிலாதானைப் பாரியே யென்று
கூறினுங் கொடுப்பா ரிலை, —சுந்தரர்

வண்புகழ் பாரி:—

## பாரி

பாரி பறம்பு நாட்டை யாண்டவன்; பெரிய வீரன்; இவன் வேளிர் வழிவந்தவனுதலால் ''பாரிவேள்'' ''வேள் பாரி'' என்று கூறுவர். மூவேந்தரையும் வென்று புகழ்மாலை சூடிய வன்; கபிலர் என்னும் செந்தமிழ்ப் புலவரை நண்பராக உடை யவன். எல்லா வகையிலுஞ் சிறந்தவன். இல்லை யென்ருர்க்கு இல்லை யென்னது வழங்கும் பெருவள்ளல். பறம்பு நாட்டிற்கு 300 ஊர்கள் உண்டு. அந்த முன்னூறு ஊர்களைப் பரிசில் களாகப் பலர்க்கு வழங்கி விட்ட பெருங் கொடையாளி.

பாரி வள்ளல் ஒருநாள் பொற்றேரின் மீது ஏறிக்கொண்டு கானகஞ் சென்ருன். அங்கே உலாவிக் கொண்டு வந்தான். ஆங்கு ஒரு முல்லைப்பூங்கொடி கொழுகொம்பு இல்லாமல் காற்ருல் அலைந்து கொண்டிருந்தது. பாரி அதனைக் கண்டான். கருணை தங்கிய அவன் உள்ளந் துடித்தது. ஓரறிவுடைய அந்தக் கொடி யலைவதற்கு அவன் மனம் சகிக்கவில்லை. முன் பின் ஒன்றும் யோசியாமல் உடனே தேரை விட்டுக் கீழே இறங்கி ஞன். அம்முல்லைக் கொடியருகில் தேரை நிறுத்திஞன். கொடியை அதன் மேல் எடுத்து விட்டான். பின்பு அக் கொ டியை நோக்கி, ''பூங்கொடியே! இனிய காட்சியும், நறிய மணத் தையும் நீ உலகுக்கு நல்குகின்றனை, காற்றிஞல் அலைந்தனை; இனி உனக்குக் காற்ருல் ஒருவிதத் துன்பமும் நேராது. இன்ப மாய் எழுந்து வளர்ந்து இன்புறுவாயாக'' என்று வாழ்த்தி விட்டு, இரதத்தில் பூட்டிய குதிரைகளை அவிழ்த்து, ஒன்றின் மேல் ஏறிக்கொண்டு ஏனையவை தன் பின்வர வீடுபோய்ச் சேர்ந்தான். ஆ! ஆ!! எத்துணைப் பெரிய கொடை? பாரியைத் தவிர இவ்வாறு செய்வார் யாருளர்? இது உலகிற்கு வியப்பாக இருக்கும். ''இவன் சுத்த அசடு; ஒரு கொடிக்கு தேரைக் கொடுப்பது அறிவுடைமையா?'' என்று உலோபியர் கூறலாம். சற்று சிந்தித்தால் விளங்கும். ஒரு கொடியினிடத்து இவ்வளவு கருணையைக் காட்டிஞல் அவன் உள்ளம் எத்துணைப் பெரிது; கருணையின் ஊற்று அவன் உள்ளத்தில் இடைவிடாது சுரந்து கொண்டிருந்தது. கொடிக்கே இவ்வளவு பெரிய கொடை கொடுத்தவன் மனிதரிடம் எப்படி நடந்திருப்பான். அதஞ லல்லவா சமயகுரவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திகள் திருவாக்கில் பொன்னே போல் விளங்கும் பெரும்பேறு பெற்ருன்.

காரி:—

காரியும் பாரியைப் போல் கடை யெழுவள்ளல்களில் ஒருவன்.

பஞ்சவனீடு கூனு..............தருவோனே!

ஒருகால் பாண்டிய நாடு சமண இருளால் மூடப்பெற்றது; அப்போது அங்கு அரசாண்டவன் கூன் பாண்டியன். அங்கு பாண்டிமா தேவியும் குலச்சிறையார் என்கின்ற அமைச்சர் பெருமானும் சிவபக்தியிற் சிறந்திருந்தார்கள். அவ்விருவர்களது அழைப்பிற் கிணங்கி திருமறைக் காட்டில் தங்கி யிருந்த திருஞானசம்பந்த சுவாமிகள் அடியார் குழாங்கள் சூழ மதுரைக்கு எழுந்தருளினூர். அப்பொழுது சமணர்கட்குப் பல துன்னிமித்தங்கள் உண்டாயின. மங்கையர்க் காசியார் ஏவ குலச்சிறையார் எதிர்கொண்டு இறைஞ்சி ஏத்தித் திருக்கோயிலுக்குக் கொண்டு சென்றூர். வெம்பந்த நீக்குஞ் சம்பந்தர் மங்கையர்க்கரசியர்ரையும் குலச்சிறையாரையும் சிறப்பித்துப் பதிகம் பாடியருளினூர். பிறகு திருமடத்தில் தங்கி யிருந்தார். கொடுங்குணமுடைய சமணர்கள் அழுக்காறுற்று, பிள்ளையாரிருந்த திருமடத்திற் றீ வைத்தனர். சம்பந்தப் பிள்ளையார் அத்தீயைப் "பையவே சென்று பாண்டியற்காகவே" என்று வாய் மலர்ந்தருள, உடனே அத்தீ பாண்டியனைப் பற்ற வெப்பு நோயால் வெதும்பி கழிபெருந் துன்புற்றூன். சமணர் மணி மந்திர ஔஷதங்களால் நீக்க முயன்று பயன்பெருது ஓய்ந்தனர். அவர்கள் முயற்சியால் நோய் வளர்ந்தது. மன்னன் வருந்திஞன்; மங்கையக்கரசியார் கணவன் அனுமதி பெற்று சம்பந்தப் பெருமானை எழுந்தருளச் செய்தார். பிள்ளையார் அங்கு வர அவரது அருளுருவைச் சமணர்கள் கண்டு கதிரவனைக் கண்ட குமுதமலர்கள் போலாயினர். ஏனையோர்,

> ஞானத்தின் றிருவுருவை நான்மறையின் றனித்துணையை
> வானத்தின் மிசையன்று மண்ணில்வரு மதிக்கொழுந்தை
> தேனக்க மலர்க்கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்கும்
> கானத்தி னெழுபிறப்பைக் கண்குளிரக் கண்டார்கள்.

பெருமான் "மந்திரமாவது நீறு" என்ற திருப்பதிகத்தை யுலகம் உய்யப் பாடி, திருநீறு பூசி, பாண்டியன் வெப்பு நோயைத் தீர்த்தருளினூர். பிறகு சமணருடன் கனல்வாது, புனல்வாது புரிந்து, "வாழ்க அந்தணர்.........வேந்தனும் ஓங்குக" என்று பாடியருளி, பாண்டியன் கூனையும் நீக்கி

யருளினர். பாண்டியன் நின்ற சீர் நெடுமாற நாயனராக விளங்கினன். சமணர்கள் கழுவேறினர்கள். விரிவை திருப்புகழ் விரிவுரை 5-ம் தொகுதி 129-ம் பாகத்தில் பார்க்கலாம்.

## கருத்துரை

ஞானசம்பந்தராக வந்து சைவசமயத்தை வளர்த்தவரே! மலைகள் தோறும் நின்ற முருகவேளே! உலோபிகளைப் பாடி வீணேயழியாமல் தேவரீரைப்பாடி யுய்யுமாறு அருள் புரிவீர்.

## 203

வஞ்சமே கோடி கோடிகள் நெஞ்சமே சேர மேவிய
வன்கண ரார வாரமு மருள்வோராய்
வம்பிலே வாது கூறிகள் கொஞ்சியே காம லீலைகள்
வந்தியா ஆசை யேதரு விலைமாதர்

பஞ்சமா பாவ மேதரு கொங்கைமேல் நேச மாய்வெகு
பஞ்சியே பேசி நாடொறு மெலியாதே
பந்தியாய் வானு ளோர்தொழ நின்றசீ ரேகுலாவிய
பண்புசேர் பாத தாமரை யருள்வாயே

அஞ்சவே சூரனைவ னுய்ஞ்சுபோ காமலே யயில்
அன்றுதா னேவி வானவர் சிறைமீள
அன்பினோ டேம னோரத மிஞ்சமே லான வாழ்வருள்
அண்டர்கோ வேப ராபர முதல்வோனே

கொஞ்சவே காலின் மேவுச தங்கைதா னுட ஆடிய
கொன்றையா னுரு மேமகிழ் புதல்வோனே
கொந்துசேர் சோலை மேவிய குன்றுசூழ் வாக வேவரு
குன்றுதோ ருடல் மேவிய பெருமாளே.

## பதவுரை

அஞ்சவே சூரன் ஆனவன் - சூரன் அஞ்சும்படியும், உய்ஞ்சு போகாமல் - பிழைத்திராதபடியும், அயில் அன்று தான் ஏவி - வேலாயுதத்தை அந்நாள் செலுத்தி, வானவர் சிறைமீள - தேவர்கள் சிறையினின்றும் மீளுமாறு, அன்பினோடே மனோரதம் மிஞ்ச - அன்புடன் அவர்களின் விருப்பம்

நிறைவேற, மேலான வாழ்வு அருள் - மேலான நல்வாழ்வை அவர்கட்கு வழங்கிய, அண்டர்கோவே - தேவர் தலைவரே! பரா பர - பெரும் பெரும் பொருளே! முதல்வோனே - முதன்மையானவரே! கொஞ்சவே - இனிய ஒலி கொஞ்சும்படி, காலின்மேவு சதங்கைதான் ஆட - திருவடியில் விளங்கும் சதங்கைகள் ஒலிக்க, ஆடிய - திரு நடனம் புரிந்த, கொன்றையான் - கொன்றைமலர் சூடிய சிவபெருமான், நாளுமே மகிழ் புதல்வோனே - நாள் தோறும் மகிழ்கின்ற திருமைந்தரே! கொந்து சேர் சோலை மேவிய - பூங் கொத்துக்கள் சேர்ந்த சோலைகள் பொருந்திய, குன்று சூழ்வாகவே வரு - குன்றுகளின் சூழல் உள்ள, குன்றுதோறு ஆடல் மேவிய - மலைகள்தோறும் திருவிளையாடல் புரிந்து வீற்றிருக்கும், பெருமாளே - பெருமையின் மிகுந் தவரே! வஞ்சமே கோடி கோடிகள் - கோடிக்கணக்கான வஞ்சனைகள்; நெஞ்சமே சேரமேவிய - உள்ளத்தில் பொருந்தவைத்துள்ள, வன்கணர் - கொடியவர்கள், ஆரவாரமும் அருள்வோராய் -ஆரவாரத்துடன் அருள் புரிபவர்கள் போல, வம்பிலே வாது கூறிகள் - வீண்வாது பேசுபவர்கள், கொஞ்சியே - கொஞ்சிப்பேசி, காமலீலைகள் வந்தியா - காமலீலைகளைப் பற்றிப் புகழ்ந்து, ஆசையேதரு விலைமாதர் - ஆசையை வளர்க்கின்ற விலைமாதர்களுடைய, பஞ்சமா பாவமே தரு - ஐம்பெரும் பாதகங்களையுந் தருகின்ற, கொங்கைமேல் நேசமாய் - தனங்களின்மீது விருப்பம் வைத்து, வெகு பஞ்சியே பேசி - மிகுந்த வருத்தங்காட்டிப் பேசி, நாள்தோறும் மெலியாதே - தினந்தோறும் அடியேன் மெலிந்து போகாமல், பந்தியாய் வானுளோர் தொழ - வரிசையாக நின்று தேவர்கள் தொழுது வணங்க, நின்ற சீரே குலாவிய - நிலைபெற்ற சிறப்பு விளங்குகின்ற, பண்பு சேர் பாத தாமரை அருள்வாயே - பண்பு மிகுந்த தேவரீருடைய பாதமாகிய தாமரையை அடியேனுக்கு அருள் புரிவீராக.

## பொழிப்புரை

சூரபன்மன் அஞ்சும்படியும், அவன் பிழைத்துப் போகா வண்ணமும், அந்நாள் வேலாயுதத்தை விடுத்து தேவர்கள் சிறையினின்றும் விடுதலையடையும்படியும், அன்புடன் அந்த அமரர்களின் மனவிருப்பம் நிறைவேறும்படியும், அவர்கட்கு நல்வாழ்வு நல்கிய தேவாதிதேவரே! பராபரமுதல்வரே! திருவடியில் உள்ள சதங்கைகள் இனிய ஒலியுடன் கொஞ்சியாடு மாறு திருநடம் புரிந்த கொன்றை மலரைச் சூடிய சிவபெருமான் திருவுளம் மகிழ்கின்ற திருக்குமாரரே! பூங்கொத்துகள் பொருந்திய சோலைகளையுடைய குன்றுகளால் சூழ்ந்துள்ள மலைகள்தோறும் எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! நெஞ்சில் கோடிக்கணக்கான வஞ்சனைகள் நிறைந்த கொடியவர்கள்; ஆடம்பரத்தைத் தருகின்றவர்கள்; வீண்வாதம் புரிபவர்கள்; கொஞ்சிப் பேசிக் காமலீலைகளைப் புகழ்ந்து மயலைத் தரு

கின்ற விலைமாதருடைய ஐம்பெரும் பாவங்களைப் புரிகின்ற தனங்களின் மீது ஆசைப்பட்டு, வெகு வருத்தப்பாடுடன் பேசி தினந்தோறும் சிறியேன் மெலியாது. வரிசையாக நின்று தேவர்கள் தொழுது வணங்குகின்ற பெருமை தங்கிய பண்புடைய தேவரீரது திருவடிகளை அடியேனுக்குத் தந்தருளுவீராக.

## விரிவுரை

வஞ்சமே கோடி கோடிகள் நெஞ்சமே சேர மேவிய வன்கணர்:—

நெஞ்சத்தில் கோடிக்கணக்கான வஞ்சனைகள் குவிந்து உறைய தம்மை யடுத்தோர்க்குக் கொடுமை புரிபவர்கள்.

ஆரவாரமு மருள்வோராய்:—

ஆடம்பரமான வாழ்க்கையுடையவராய், தம்மையடுத்தவரையும் அப்படி வாழுமாறு கற்பிப்பவர்கள்.

விலையுயர்ந்த துணிமணிகளும், உயர்ந்த விலை தந்து பெறும் நறுமணப் பொருள்களும், விலை மதிக்கமுடியாத சயனங்களும் உடையவராய் ஆடவரை மயக்குபவர்.

வம்பிலே வாது கூறி:—

வீணான வகையில் தருக்கம் பேசிப் போது கழிப்பார்கள். இல்லாததை உண்டு என்றும், இருப்பதை இல்லையென்றும், துரும்பைத் தூண் என்றும், தூணைத் துரும்பென்றும், கரும்பை இரும்பென்றும், இரும்பைக் கரும்பென்றும் பேசி வாதம் புரிவார்கள்.

கொஞ்சியே:—

குழந்தைகள் கொஞ்சிப் பேசுவதைப்போல், ஆடவரிடம் மழலை மொழியால் கொஞ்சிக் கொஞ்சிப் பேசி மயக்குவார்கள்.

காம லீலைகள் வந்தியர்:—

வந்தித்தல்—புகழ்தல். ஆசையுடன் ஆடல்களை ஆடியும், பாடல்களைப் பாடியும் புகழ்ந்து கூறுவர்.

புகழ்ந்து பாடுவோருக்கு வந்தியர் என்று பெயர். ஆசை ஆடல்களைப் புகழ்ந்து கூறித் திரிவோர்.

பஞ்சமா பாவமே தரு கொங்கை:—

பொது மகளிரது தனங்களை விரும்புவதனால் ஐம்பெரும் பாவங்களும் விளையும்.

ஆசைவயப்பட்டு கொலை, களவுகள், பொய், சூது ஆகிய மாபாதகங்களை ஆடவர்கள் புரிவார்கள்.

பந்தியாய் வானுளோர் தொழ:—

தேவர்கள் கடப்பமலர்மாலைகளைத் தனித்தனியே கரங்களில் ஏந்திக்கொண்டு முருகனைத் தொழும்பொருட்டு வருகின்றார்கள். தனித்தனியே வந்தவர்களை முறையே வணங்குமாறு வீரவாகு தேவர் பணிக்கின்றார். வரிசையாகக் கடப்பமலர் மாலையைச் சூட்டி வானவர்கள் வணங்குகின்றார்கள்.

> ..................... "மயிலேறு மையன்
> காலுக் கணிகலம் வானோர்முடியும் கடம்பும்"
> —கந்தரலங்காரம் (62)

பண்பு சேர் பாத தாமரை யருள்வாயே:—

நற்குணங்களின் சிகரமாகத் திகழ்வது பண்பு.

> அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
> மக்கட்பண் பில்லாதவர்.
>
> "பண்புடை மக்கட் பெறின்" —திருக்குறள்.

இத்தகைய இனிய பண்புகள் திரண்டு புகலிடமாக முருகன் திருவடிகளில் சென்று சேர்ந்தன.

சூரனைவ னுய்ஞ்சுபோகாமலே யயில் அன்றுதான் ஏவி:—

சூரனும் பன்மனும் முற்பிறப்பில் முருகப்பெருமானுக்கு மயிலும் சேவலுமாகித் தொண்டுபுரிய விரும்பி அளவற்ற அரும் பெருந் தவம் புரிந்தார்கள்.

அவ்விருவரும் சேர்ந்து சூரபன்மனாகப் பிறந்தனர். ஆயிரத்தெட்டு அண்டங்களையும், நூற்றெட்டு யுகங்கள் அரசு புரிந்தான் சூரபன்மன்.

முருகவேள் அவனை அரக்கனாகவே இருந்து பிழைக்காவண்ணம், வேலால் தடிந்து, முற்பிறப்பில் செய்த தவத்தின் காரணத்தால் சேவலும் மயிலுமாக்கி ஆட்கொண்டருளினார்.

முன் தேவர்கள் சூரபன்மனை அச்சத்தால் வணங்கினார்கள். இப்போது "சேவலும் மயிலும் போற்றி" என்று அன்பினால் வணங்குகின்றார்கள்.

மேலானவாழ் வருள் அண்டர்கோவே:—

தேவர்களையும், தேவ மாதர்களையும் சூரன் சிறையில் அடைத்துப் பெருந் துன்பம் விளைத்தான். இனி நமக்கு வாழ்வு இல்லையென்று கருதித் துன்பக் கடலில் அழுந்தி வேதனையுற்றார்கள்.

முருகவேள் சூரனைத் தடிந்து, தேவர் சிறை தீர்த்து உயர்ந்த வாழ்வினை வழங்கி அருள் புரிந்தருளினார்.

தேவ தேவ தேவாதி தேவனாக விளங்கும் தனிப் பெருந் தெய்வசிகாமணி முருகவேள்.

கொஞ்சவே காலின்மேவு சதங்கைதானாட ஆடிய கொன்றையானுமே மகிழ் புதல்வோனே:—

உலகமெல்லாம் அசையும்பொருட்டு இறைவன் அசைந்து ஆடுகின்றான். உலகின் நடு இடத்தில் அப்பரமபதி ஆடுகின்றான்.

குன்று தோறாடல் மேவிய:—

மன்றுதோறாடுகின்ற மணிகண்டரது மகனார், குன்றுதோறாடுகின்ற குகனார்.

## கருத்துரை

குன்று தோறும் ஆடிய குமரவேளே! மாதர் மயல் அற உனது பாதமலரைத் தருவீர்.

---

# பழமுதிர்சோலை

(ஆறுவது படைவீடு)

மதுரைக்கு வடக்கே 12 கல் தொலைவில் உளது. மிகவும் அரிய திருத்தலம். பரிபாடல் முதலிய பல நூல்களில் இத் தலம் கூறப்பட்டுள்ளது. இங்குள்ள சுனை நூபுர கங்கை எனப்படும். மதுரையிலிருந்து போகவர பஸ் வசதி உண்டு.

I

வாதினை யடர்ந்த வேல்விழியர் தங்கள்
மாயம தொழிந்து தெளியேனே
மாமலர்கள் கொண்டு மாலைகள் புனைந்து
மாபத மணிந்து பணியேனே
ஆதியொடு மந்த மாகிய நலங்கள்
ஆறுமுக மென்று தெரியேனே
ஆனதனி மந்த்ர ரூபநிலை கொண்ட
தாடுமயி லென்ப தறியேனே
நாதமொடு விந்து வானவுடல் கொண்டு
நானில மலைந்து திரிவேனே
நாகமணி கின்ற நாதநிலை கண்டு
நாடியதில் நின்று தொழுகேனே
சோதியுணர் கின்ற வாழ்வுசிவ மென்ற
சோகமது தந்து எனையாள்வாய்
சூரர்குலம் வென்று வாகையொடு சென்று
சோலைமலை நின்ற பெருமாளே.

பதவுரை

சூரர் குலம் வென்று - சூரபன்மனுதி யவுணர் குலத்தையழித்து வெற்றி பெற்று, வாகையொடு சென்று - வெற்றிமாலை சூடிச்சென்று, சோலை மலை நின்ற - பழமுதிர் சோலை என்னும் திருமலை மீது எழுந்தருளிநின்ற, பெருமாளே - பெருமையின் மிக்கவரே! வாதினை அடர்ந்த - வாதுபுரியும் தன்மையே நிறைந்த, வேல் விழியர் தங்கள் - வேல்போன்ற கண்களுடைய

பெண்களினுல் வரும், மாயம் அது ஒழிந்து - மாயத்தை அறவே நீங்கி, தெளியேன் - அடியேன் தெளிவடையவில்லை; மாமலர்கள் கொண்டு-பெருமையுடைய மலர்களைக்கொண்டு, மாலைகள் புனைந்து - திருமாலைகள் தொடுத்து, மாபதம் அணிந்து - தேவரீருடைய பெருமைமிக்க திருவடிகளிற் சூட்டி, பணியேன் - அடியேன் ஒருபோதும் பணிந்திலேன், ஆதியொடும் அந்தம் ஆகிய நலன்கள்-முற்றறிவுடைமை முதலாக முடிவிலாற்றலுடைமை ஈருகவுள்ள ஆறு அருட்குணங்களே, ஆறுமுகம் என்று - தேவரீருக்கு ஆறுமுகங்களாக அமைந்திருக்கின்றன என்பதை, தெரியேன் - அடியேன் இதுகாறும் தெரிந்து கொள்ளாதிருந்தேன், ஆன தனி மந்த்ர ரூப நிலைகொண்டு - எல்லாக் கலைகளுக்கும் எல்லா தேவர்களுக்கும் பிறப்பிடமாக விளங்கும் ஒப்பற்ற ஒருமொழியாகிய ஓங்கார வடிவத்தைக் கொண்டு, அது ஆடும் மயில் என்பது அறியேன் - அந்த மயில் ஆடும் என்பதை அடியேன் அறிந்துகொண்டேனில்லை; நாதமொடு விந்து ஆன உடல் கொண்டு - நாதவிந்துக்களான உடம்பை நிலையெனக் கொண்டு, நால் நிலம் அலைந்து - நான் வகையான திணைகளுடன் கூடிய பூமண்டலத்தில் வீணே அலைந்து, திரிவேன் - அடியேன் திரிந்து கெடுகின்றேன், ந அகம் அணிகின்ற நாத - நான் அல்ல என்று அன்பர்கள் அர்ச்சிக்கும் சிவபோதமாகிய மலரை அணிகின்ற தலைவரே! நிலைகண்டு - தேவரீருடைய நிலையைக் கண்டு, நாடி அதில் நின்று -அந்நிலையை உற்றுப்பார்த்து அவ்வகப்பார்வையில் நிலைத்துச் சலனமற்று நின்று, தொழுகேன் - ஒருபோதும் தொழுதேனில்லை, சோதி உணர்கின்ற வாழ்வு - அருட்சோதியை உணர்கின்ற சுகவாழ்வே, சிவம் என்ற - மங்கலம் என்று கூறுகின்ற, ச அகம் அது தந்து - அது நான் என்ற சிவோகம் பாவனையைத் தந்து, எனை ஆள்வாய் - அடியேனை ஆட்கொண்டருள்வீர்.

## பொழிப்புரை

சூரபன்மனாதி யவுணர்களின் குலத்தை வேருடன் களைந்து வெற்றிமாலை சூடிக்கொண்டு வந்து பழமுதிர் சோலையென்னும் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள் பெருமிதமுடையவரே! வாது செய்யுந் தன்மை நிறைந்த வேல் போன்ற கூரிய கண்களையுடைய பெண்களின் மாயையை அறவே ஒழிந்து தெளிவு பெற்றேனில்லை; பெருமைதங்கிய நறுமலர்களை எடுத்து திருமாலைகளாகத் தொடுத்து தேவரீருடைய பெருமைமிகுந்த திருவடிகளில் அணிந்து தொழுகின்றேனில்லை; முற்றறிவு முதலாக முடிவிலாற்றலுடைமை ஈருகவுள்ள அருட்குணங்கள் ஆறுமே ஆறு திருமுகங்களாக அமைந்தன என்பதை அறிந்தேனில்லை; எல்லாக் கலைகட்கும் பிறப்பிடமான ஓகாரவடிவத்தைக் கொண்டு தேவரீருடைய ஊர்தியாகிய மயில் ஆடுகின்றது என்ற நுட்பத்தையும் அடியேன் உணர்கின்றேனில்லை

நாதவிந்துக்களான இவ்வுடம்பை விடாதுகொண்டு குறிஞ்சி மருதம் நெய்தல் முல்லை யென்று நான்குவகையாகப் பிரிந்துள்ள உலகில் அவமே அலைந்து திரிகின்றேன்; நான் அல்ல என்று சிவபோதத்தை மலராக அன்பர்கள் அர்ச்சிக்க அம்மலரினையணிகின்ற தலைவரே! உமது திருவருள் நிலையை ஊன்றிப் பார்த்து அந்நிலையில் உறைத்து நின்று தொழுகின்றேனில்லை. அருட்சோதியை யுணர்கின்ற சுகவாழ்வே சிவானந்தப் பேறு என்று தெளிந்து அது நான் என்ற சிவோகம் பாவனையைத் தந்து அடியேனை யாட்கொண்டருள்வீர்.

## விரிவுரை

வாதினையடர்ந்த வேல்விழியர்:—

"என்று நீ அன்று நான்" என்றார் தாயுமானார்; அதனால் ஆன்மாக்கள் அநாதிநித்தியமென்பது ஒருதலை; ஆனால் உயிர்கள் ஓவாது பிறப்பதும் இறப்பதுமாக யோனிவாய்தோறும் மாறிமாறி உழன்றுகொண்டே யிருக்கின்றன. அப்பிறப்புக்கு வித்து அவாவெனப்படும்.

> அவாவென்ப எல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
> தவாஅப் பிறப்பீனும் வித்து. —குறள்.

அவ்வவா மூவகைப்படும்; மண்ணவா, பெண்ணவா பொன்னவா என்பன; இவற்றுள் பொன்னவாவும் மண்ணவாவும் மனிதப் பிறப்புக்கே யுரியன; ஏனைய பிறப்புக்களுக்கு இல்லை; பெண்ணவா பிறவிகடோறுந் தொடர்ந்து வருவது. எனவே அதுவே கேடுகள் அனைத்தையுந் தருவது.

> "வாமமேகலை மங்கைய ரால்வரும்
> காமமில்லை யெனிற் கடுங் கேடெனும்
> நாமமில்லை நரகமுமில்லையே" —இராமாயணம்.

அவாவை விளைப்பது அவரது கண்களேயாதலின் "வாதினையடர்ந்த வேல்விழி" என்றனர்; வேல் கூர்மையாக நின்று நெஞ்சைப் பிளக்கும்; அங்ஙனமே அவர்கள் விழியும் கூர்மையாக நின்று இளைஞர்களின் நெஞ்சைப் பிளக்கும்.

மாயமதொழிந்து தெளியேனோ:—

மாயம்—நிலையற்றது; இல்லாதவற்றை உள்ளது போல் காட்டுவது எனினும் பொருந்தும். இன்பம்போல் காட்டி துன்பத்தையே விளைவிக்கும்; இச்சிறு இன்பமும் நிலையில்லாதது.

மாமலர்கள் கொண்டு............பணியேனே:—

மேற்கூறிய மாதர்மய லறுப்பதற்கு வழி மகமாயை களைந்திட வல்ல பிரானாகிய மயிலேறும் பெருமானுடைய மலரடியில் மலர்மாலை சூட்டி வணங்குவதேயாம்; வணக்கம் மலருடன் சேர்ந்து புரிய வேண்டும்.

கைகாள் கூப்பித்தொழீர்—கடி மாமலர் தூவிநின்று
பைவாய்ப் பாம்பரை யார்த்த பரமனைக்
கைகாள் கூப்பித்தொழீர். —அப்பர்.

அன்பர்கள் அதிகாலை யெழுந்து நீராடி சிவபூசை செய்து, திருநந்தனவனம் புகுந்து வாசமலர் வகைவகையாக எடுத்துத் தொடுத்துக் கூடையில் நிரப்பி இறைவன் திருக்கோயிலுக்குச் சுமந்தேகுவர்.

நீநாளு நன்னெஞ்சே நினைகண்டா யாரறிவார்
சாநாளும் வாழ்நாளும் சாய்க்காட்டெம் பெருமாற்கே
பூநாளும் தலைசுமப்பப் புகழ்நாமஞ் செவிகேட்ப
நாநாளு நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே. —சம்பந்தர்.

ஆதியொடு மந்த மாகிய நலங்கள் ஆறுமுகம்:—

1. கந்தப் பெருமானுடைய கருணைகூர் முகங்கள் ஆறும் ஆறுகுணங்களே என்ப. அவ் வருட்குணங்கள் ஏனைய தேவர்களிடம் இல்லை.

ஏவர்தம் பாலு மின்றி யெல்லைதீ ரமலற் குள்ள
மூவிரு குணனுஞ் சேய்க்கு முகங்களாய் வந்த தென்னப்
பூவியல் சரவ ணத்தண் பொய்கையில் வைகு மையன்
ஆவிகட் கருளு மாற்றல் அறுமுகங் கொண்டா னன்றே.
—கந்தபுராணம்.

அவ்வருட்குணங்க ளாவன :

1. முற்றறி வுடைமை.
2. வரம்பிலின்ப முடைமை,
3. இயல்பாகவே பாசங்களில் நீங்குதல்,
4. தம்வய முடைமை.
5. பேரரு ளுடைமை.
6. முடிவி லாற்ற லுடைமை.

இதனை வடமொழியில் முறையே சருவஞ்ஞதை, திருப்தி, அநாதிபோதம், சுவதந்திரத்வம், அலுப்தசக்தி, அநந்தசக்தி என்பர்.

ஸர்வக்ஞதா த்ருப்தி ரநாதிபோத:
ஸ்வதந்த்ரதா நித்ய மலுப்த சக்தி:!
அநந்த சக்திஸ்ச நிராமயாத்மா
விசுத்த தேஹஸ்ஸசிவத்வமேதி!!.

—சர்வஞானோத்தராகமம்.

நிராமயாத்மா என்ற குணம் அநாதி போதத்திலும் விசுத்த தேஹம் என்ற குணம் அலுப்தசக்தியிலும் அடங்கி எண்குணம் ஆறுகுமாறு காண்க.

2. மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்களே ஆண்டவனுக்கு ஆறுமுகங்கள் என்ப.

3. ஆதிசக்தி, பராசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி, இச்சா சக்தி, குடிலாசக்தி என்ற ஆறு சக்திகளே ஆறுமுகங்கள் என்ப.

3. அகர உகர மகர நாத விந்து கலை ஏன்ற ஆறுமே ஆறுமுக மென்ப.

4. மந்திரம், பதம், வன்னம், புவனம், கலை, தத்துவம் என்ற அத்துவாக்கள் ஆறுமே ஆறுமுகங்கள் என்ப.

5. ஐஸ்வரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்ற மற்றொருவகையான குணங்கள் ஆறுமே ஆறுமுக மென்ப.

6. சைவம், வைணவம், காணபத்யம், கௌமாரம், சௌரம், சாக்தம் என்ற ஆறு சமயங்கட்குந் தானே தலைவன் என்று இறைவன் ஆறுதலையோடு விளங்குகின்றனன்.

7. ஆறுமுகங்களி லிருந்து வெளிப்படும் பிரகாசங்களாவன : ஞானப்ரகாசம், ஞானனந்தப்ரகாசம், சர்வஞான வியாபகப்ரகாசம், சுத்தஞான சாட்சிப்ரகாசம், சர்வபரி சுத்த பிரம ஞானனந்த அருட்ப்ரகாசம், அநாதிநித்ய பிரமஞானனந்த சிவப்ரகாசம்.

8. சிட்சை, வியாகரணம், சந்தஸ், நிருத்தம், ஜோதிடம், கல்பம் என்ற அங்கங்கள் ஆறுமே ஆறுமுக மென்ப.

9. கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, கீழ், மேல் என்ற ஆறு திசைகளுமே ஆறுமுக மென்ப.

இங்ஙனங் ஆறுமுகங்கட்கு எண்ணில்லாத விளக்கங்கள் உள. அவற்றையெல்லாங் அவனருளறிவுகொண்டு ஆய்ந்துணர்க.

ஆட்டுஞ் சமய மாறினுக்கும் ஆதா ரங்க ளாறினுக்கும்
அத்து வாவோ ராறினுக்கும் அமையுந் தானே முதலென்று
தீட்டும் படியா வருந்தெளியத் தெளித்தாங் கஈறு முகந்திகழச்
செல்வ மலியு மிடைக்கழிவாழ் சேயைப் பரிந்து காக்கவே.
—மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை.

ஆன தனிமந்த்ர ரூப நிலைகொண்ட தாடுமயில்:—

"தாமரைக் கண்ணன் முதலிய பண்ணவர் தமக்கும்
ஏமுறப் படு மறைக்கெலா மாதிபெற் றியலும்
ஓம்"

என்னும் குடிலையின் சொரூபமாக மயில் ஆடுகின்றது. மயில் ஆடுகின்றபொழுது உற்றுக்கவனியுங்கள்; அதன் முகத்திலிருந்து தொடங்கி விரிந்துள்ள தோகைவழியே போய் காலில் வந்து முடிந்தால் ஓகாரமாகும். அவ் வோங்காரத்தின் நடுவே ஆண்டவன் அருட்ஜோதி மயமாக வீற்றிருக்கின்றனன். இந்த நுட்பத்தை அறிவிக்கவந்த பரமாசிரியராகிய அருணகிரிநாத அடிகள் எவ்வளவு அழகாகத் தெரிவிக்கின்றார்.

"ஆனதனிமந்த்ர ரூபநிலைகொண்ட
தாடுமயிலென்ப தறியேனே"

"ஓகார பரியின்மிசை வரவேணும்" என்றார் பிறிதோரிடத்தில்.

நாகமணிகின்ற நாதநிலைகண்டு:—

நாகம் அணிகின்ற நாத என்ற சொல்லுககு அடியில் வருமாறு பலபொருள்கள் கூறலாம்.

(1) நாகம் – பாம்பு : சர்ப்பாபரணத்தை யணிகின்ற நாதரே !

(2) சர்ப்பத்தை அணிதலின் பொருளாகிய நாதத்தின் இருப்பிடத்தைக்கண்டு; (சுத்தமாயையின் அந்தமாயுள்ள நாததத்துவத்தின் இருப்பிடங்கண்டு). நாகம் என்பது குண்டலி - சுத்தமாயை.

அதாவது பிராணாயாமஞ் செய்வதனால் பாம்பு மண்டலமிட்டுப் படுத்திருப்பதுபோலுள்ள குண்டலி நடுவிலுள்ள

தீ மண்டி எழுந்திருக்க, அதனுல் எழும் பிரம்ம நாதத்தைக் கேட்டு சிவயோகிகள் இன்புறுவர்.

(3) நாஹம் என்றசொல் தமிழில் நாகம் எனவந்தது. இதேபாடலில் 14வது வரியில் சோஹம் என்றசொல் சோக மென வந்திருப்பதையுங்காண்க. ந - அஹம் என்பது நாஹம்; அஹம - நான்; ந - அல்ல; நாஹம் - நானல்ல; அடியார்கள் இறைவன் திருவடியில் நானல்ல என்ற சிவபோதத்தை ஒரு மலராக அர்ச்சிப்பர்.

"பாதமலர் மீதிற் போதமலர் தூவிப்
பாடுமவர்தோழத் தம்பிரானே"
—(ஆலவிழி) திருப்புகழ்.

என்று சுவாமிகளே பிறிதொரு திருப்புகழில் இங்ஙனங் கூறியருளுகின்ருர்.

நாடியதில்நின்று தொழுகேனே:—

சீவபோதமிழந்த நிலையில் காண்பான், காட்சி, காட்சிப் பொருள் என்ற மூன்றுமற்ற நிலையில் நின்று தன்மயமாக விளங்கித் தொழுதல்.

சோதியுணர்கின்றவாழ்வு சிவம்:—

மேற்கூறியவாறு சீவபோதம் இழந்தவுடன் ஆணவ மல நீக்கத்தினுல் அருட்சோதி தெரிசனம் உண்டாகும்.

உலகத்தில் காணப்படும் சோதி விறகு முதலிய ஒரு பொருளைப்பற்றி நிற்கும். அது சுத்த சுயஞ் சோதியாக விளங்குவது; உண்மை வடிவாக நிற்பது; வேத முடிவில் விளங்குவது; பரிசுத்தமான சிவானந்த சொரூபமாகத் துலங்குவது; துரியாதீதத்தில் இணையற இலங்குவது; ஏகாந்தமாக இசைவது; ஆன்மாக்களின் உள்ளங்கள் தோறும் நிறைந்திருந்து பக்குவமில்லாத ஆன்மாக்களினுல் காணமாட்டாமல் பேரொளிப் பிழம்பாக ஒளிசெய்வது. "காண்பரிய பேரொளியே" என்ருர் மணிவாசகரும். மரணமில்லாப் பெருவாழ்வு தருவது; சீவனைத் தன் மயமாக்கிக் கொள்ளும் தயவு நிறைந்து குளிர்ந்து விளங்குவது.

மெய்யேமெய் யாகிய சோதி—சுத்த
வேதாந்த வீட்டில் விளங்கிய சோதி
துய்ய சிவானந்த சோதி—குரு
துரியத்தலத்தே துலங்கிய சோதி

ஏகாந்த மாகிய சோதி—என்னுள்
என்றும் பிரியா திருக்கின்ற சோதி
சாகாவரந்தந்த சோதி—என்னைத்
தானாக்கிக் கொண்டதோர் சத்திய சோதி.

—இராமலிங்க அடிகள்.

**சோகமது தந்து எனையாள்வாய்:—**

சோஹம் என்ற வடசொல் சோகம் என வந்தது; ஸ அஹம் எனப் பிரியும். ஸ - அது, அஹம் - நான்; "அது நான்" எனப் பொருள்படும். சீவன் அநாதியே ஆணவமலத்தால் தொடக்குண்டது. சிவன் அநாதியே மலநீக்கமுடையவர். சீவன் சிவமாகத் தன்னைப் பாவனை புரிவதால் மலநீக்கமுறும். கருடோஹம்பாவனை புரிவதனால் விடநீக்க முறுவதுபோல் என்றறிக.

"தேனுந்து முக்கனிகள் பால்செங் கருப்பிளநிர்
சீரும் பழித்த சிவம் அருளூறத்
தீதும் பிடித்தவினை ஏதும் பொடித்துவிழ
சீவன் சிவச்சொருப மெனதேறி
நானென்ப தற்றுயிரொ டுனென்ப தற்றுவெளி
நாதம் பரப்பிரம வொளிமீதே
ஞானஞ் சுரப்பமகி ழானந்த சித்தியொடெ
நாளுங் களிக்கபதம் அருள்வாயே"

—திருப்புகழ்.

**சோலைமலைநின்றபெருமாளே:—**

இது பழமுதிர்சோலை: ஆறுவதுபடைவீடு; ஆஞ்ஞை என்னும் ஆறுவது ஆதாரம். புருவநடுவே நிலாப்பிறை போன்ற வடிவத்துடன் 'ய' கரத்தை இடமாகக் கொண்டது பழமுதிர்சோலை மதுரைக்கு வடகிழக்கே 12 மைல் தொலைவில் விளங்குவது; இப்போது அழகர்கோயில் என வழங்குகின்றது. முருகு என்றால் அழகு என்பதுதானே பொருள்; அழகர் எனினும் முருகர் எனினும் ஒரே பொருளைக் குறித்து நிற்கும். இப்போது அழகர்கோயில் திருமால் கோயிலாக விளங்குகின்றது. பண்டைக் காலத்தில் பலபத்திரன் கோயிலும், திருமால் கோயிலும், முருகவேள் கோயிலும் இருந்தன; பிறகு காலவேற்றுமையால் மறைந்தும் மாறியும் போய்விட்டன.

"பழமுதிர் சோலை மலைகிழவோனே" —நக்கீரர்.

ஆக்ஞாஸ்தானமாகிய ஆறுவது படைவீட்டில் "சோஹம் அதுதந்து ஆள்வாய்" என்று முடிந்த முடிபாகிய வேண்டு

**கோலை சுவாமிகள் விண்ணப்பஞ்செய்வது ஊன்றிக் கவனிக்கத் தக்கது.**

### கருத்துரை

பழமுதிர்சோலையில் எழுந்தருளிய பரமனே! மாதர்மய லற மலரிட்டு வணங்கி, ஆறுமுகத்தின் பொருளையும் மயிலின் தன்மையையும் உணர்ந்து சீவபோதங் கழன்று ஐக்கிய முத்திபெற அருள்புரிவீர்.

### 2

வார்குழையை யெட்டி வேளினைம ருட்டி
மாயநம னுக்கு முறவாகி
மாதவம ழித்து லீலைகள் மிகுத்து
மாவடுவை யொத்த விழிமாதர்
சீருட னழைத்து வாய்கனிவு வைத்து
தேனித ழளித்து அனுபோக
சேர்வைதனை யுற்று மோசம்வினை வித்து
சீர்மைகெட வைப்ப துறவாமோ.
வாரினை யறுத்து மேருவை மறித்து
மாகனக மொத்த குடமாகி
வாரவணை வைத்து மாலளித முற்று
மாலைகளு மொய்த்த தனமாது
தோரணி புயத்தி யோகினி சமர்த்தி
தோகையுமை பெற்ற புதல்வோனே
சூர்கிளை மடித்து வேல்கர மெடுத்து
சோலைமலை யுற்ற பெருமாளே.

### பதவுரை

வாரினை அறுத்து - கச்சுதனைக்கிழித்து, மேருவை மறித்து - மேரு மலையையும் தடுத்துக்கீழ்ப்படுத்தி, மா கனகம் ஒத்த குடம் ஆகி - சிறந்த பொன் போன்ற குடம் போல் விளங்கி, வார அணைவித்து - அன்பாகிய ஆதரவைவைத்து, மாலளிதம் உற்று - மிக்க அழகைக் கொண்டு, மாலை

களும் மொய்த்த - மாலைகள் நெருங்கிய, தன மாது - தனங்கள் விளங்கும் பெண்மணியும், தோர் அணிபுயத்தி - அணிவடம் பூண்ட புயங்களையுடையவரும், யோகினி - யோகினியும், சமர்த்தி - சாமார்த்தியம் உடையவளும், தோகை-மயில் போன்றவளுமாகிய, உமை பெற்ற புதல்வோனே- உமாதேவியார் பெற்ற குமாரரே! சூர்கிளை மடித்து - சூரனையும் அவன் சுற்றத்தாரையும் அழித்து, வேல்கரம் எடுத்து - வேலாயுதத்தைத் திருக் கரத்தில் ஏந்தி, சோலைமலை உற்ற - சோலைமலையில் வீற்றிருக்கின்ற, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! வார்குழையை எட்டி - நீண்ட காதணியை எட்டியும், வேளினை மருட்டி - மன்மதனை மருட்சியுறச் செய்தும், மாய நமனுக்கும் உறவு ஆகி - மாயத்தில் வல்ல யமனுடன் உறவுபூண்டும், மாதவம் அழித்து - நல்லதவநிலையை அழித்து, லீலைகள் மிகுத்து - காமவிளையாடல்கள் மிகுத்து, மா வடுவை ஒத்த - மாவடுவுக்கு நிகரான, விழி மாதர் - கண்களையுடைய பொதுமாதர்கள், சீருடன் அழைத்து - மரியாதையுடன் அழைத்து, வாய் கனிவு வைத்து - வாய்ப் பேச்சில் இனிமையை வைத்துப் பேசி, தேன் இதழ் அளித்து - தேன் போன்ற இதழைத்தந்து, அநு போக சேர்வைதனை உற்று - காமநுகர்ச்சிக் கலவியில் உறவைத்து, மோசம் விளைவித்து - மோசம் விளையுமாறு செய்து, சீர்மை கெட வைப்பர் - நன்மையழியுமாறு செய்வார்கள்; உறவு ஆமோ - அத்தகைய மாதரது உறவு ஆகுமோ? (ஆகாது.)

## பொழிப்புரை

கச்சினைக் கிழித்து, மேருமலையையும் இழிவாக்கி, சிறந்த பொன் போன்ற குடம்போல் விளங்கி, அன்பாகிய ஆதரவை வைத்து, மிகுந்த அழகைக்கொண்டு, மாலைகள் நெருங்கிய தனங்களையுடைய பெண்மணியும், அணிவடம் பூண்ட புயங்களையுடையவளும், மோகினியும், சாமார்த்தியம் நிறைந்தவளும், மயில் போன்றவளும் ஆகிய உமாதேவியார் பெற்ற புதல்வரே! சூரபன்மனையும், அவனுடைய சுற்றத்தாரையும் அழித்து, வேலாயுதத்தைத் திருக்கரத்தில் ஏந்தி, சோலை மலையில் வீற்றிருக்கும் பெருமிதமுடையவரே! நீண்ட காதணியை எட்டியும், மன்மதனை மருளுமாறு செய்தும், மாயத்தில் வல்ல இயமனுடன் உறவு பூண்டும், நல்ல தவத்தை அழித்து, காமலீலைகள் மிகுத்து மாவடுவினை நிகர்த்த கண்களையுடைய பொதுமாதர்கள், மரியாதையுடன் அழைத்து, வாய்ப் பேச்சில் இனிமையை வைத்துப் பேசி, தேன் போன்ற வாயிதழைக் கொடுத்து, காமநுகர்ச்சிச் சேர்க்கையில் வைத்து மோகத்தைச் செய்து, நன்மையை அழிப்பார்கள்; இத்தகைய அப்பொது மகளிரின் உறவு ஆகுமோ? ஆகாது.

## விரிவுரை

வார்குழையை யெட்டி :—

கண்ணுக்கு உரிய சிறந்த இலக்கணங்களுக்குள் ஒன்று நீளமாக இருத்தல். காதுவரை கண்கள் நீண்டிருக்கின்றன என்று இங்கே கூறுகின்றார்.

வேளினை மருட்டி :—

வேள்—விருப்பம். விருப்பத்தைச் செய்கின்றவன் மன்மதன். அம்மதனனையே மருளுமாறு செய்கின்றதாம் கண்கள். அத்துணை அழகியவை.

மாய நமனுக்கு முறவாகி :—

நமன் பல மாயங்களைச் செய்து உயிர்களைக் கொல்லுவான். இவர்களின் கண்களும் பலமாயங்கள் செய்து ஆடவரைக் கொல்லும். அதனால் கொலைத் தொழிலில் இயமனுடன் உறவு ஆகியது.

மாதவமழித்து :—

முனிவர்கள் புரியும் தவநிலையை அழிக்கும் ஆற்றல் படைத்தது அக்கண்கள்.

லீலைகள் மிகுத்து :—

பலப்பல காமலீலைகள் புரியவல்லது.

மாவடுவை யொத்தவிழி :—

மாம்பிஞ்சினைப் பிளந்தால் கண்களைப்போல் காட்சிதரும். அதனால் கண்ணுக்கு உவமை மாவடு.

சேர்வைதனையுற்று :-

உற்று-உறவைத்து. ஆடவரைத் தம்முடன் கூட்டுறவில் வைத்து மோசம் புரிவார்கள்.

வாரினையறுத்து :—

வார்-கச்சு. அக்காலங்களில் தனங்களை வார்கொண்டு கட்டுவர். பழங்காலத்து சிற்பங்களைப் பார்த்தால் இது விளங்கும்.

மேருவை மறித்து :—

பெரிய மலையாகிய மேருமலையைத் தனக்கு நிகரில்லையென்று தடுத்துக் கீழாகச் செய்யும் அழகியதனம்.

வாரவணை வைத்தும் :—

வாரம்-அன்பு. அணை-ஆதரவு. அன்பினால் ஆதரவை வைத்து உலகங்களைக் காக்குந் தன்மையது அம்பிகையின் தனபாரங்கள்.

தோரணி புயத்து :—

தோரை-அணிவடம். தோரை என்ற சொல் தோர் எனக் குறுகிற்று.

யோகினி :—

யோகத்தையுடையவள் யோகினி.

## கருத்துரை

பழமுதிர்சோலைப் பரமனே! மாதர் உறவு கூடாது.

## 3

அகரமுமாகி யதிபனு மாகி யதிகமு மாகி அகமாகி
அயனென வாகி அரியென வாகி அரனென வாகி
அவர்மேலாய்

இகரமு மாகி யெவைகளு மாகி யினிமையுமாகி
வருவோனே

இருநிலமீதி லெளியனும் வாழ எனதுமு னோடி
வரவேணும்

மகபதி யாகி மருவும்வ லாரி மகிழ்களி கூரும் வடிவோனே
வனமுறை வேட னருளிய பூஜை மகிழ்கதிர் காம
முடையோனே

செககண சேகு தகுதிமி தோதி திமியென ஆடு
மயிலோனே

திருமலி வான பழமுதிர் சோலை மலைமிசை மேவு
பெருமாளே.

## பதவுரை

அகரமும் ஆகி - எழுத்துக்களில் அகர எழுத்தாகியும், அதிபனும் ஆகி - எல்லாவுலகங்கட்குந் தலைவராகியும், அதிகமும் ஆகி - எல்லா

வற்றிற்கும் மேம்பட்டவராகியும், அகம் ஆகி - முக்தி வீடாகியும், அயன் என ஆகி - நான்முகனாக நின்று உலகத்தைப் படைத்தும், அரி என ஆகி- திருமாலாக நின்று உலகத்தைக் காத்தும், அரன் என ஆகி - உருத்திர மூர்த்தியென நின்று எல்லாவற்றையும் அழித்தும், அவர் மேலாய் - அம் மூவர்க்கு மேலான முதல்வராகியும், இகரமும் ஆகி - சமீபத்தில் இருப்பவருமாகியும், எவைகளும் ஆகி - எல்லாப் பொருள்களுமாகியும், இனிமையும் ஆகி - இனிமையாகியும், வருவோனே - வருபவரே! மகபதி ஆகி மருவும் - நூறு அஸ்வமேதயாகங்களைச் செய்து யாக பதியாக விளங்கி, வல அரி - வலன் என்ற அசுரனைக் கொன்ற இந்திரன், மகிழ் களி கூரும் வடிவோனே - மிக்க மகிழ்ச்சியடையும் பேரழகுடையவனே! வனம் உறை வேடன் அருளிய பூஜை - காட்டில் வாழுகின்ற வேடுவன் செய்தருளிய வழிபாட்டை, மகிழ் - களிப்புடன் ஏற்றுக்கொண்ட, கதிர்காமம் உடையோனே - கதிர்காமம் என்னுந் திருத்தலத்தை உடையவரே! செககண சேகு தகுதிமி தோதி திமி என ஆடும் - என்ற தாள இசையுடன் நடனஞ் செய்கின்ற, மயிலோனே - மயில்வாகனத்தையுடையவரே! திருமலிவு ஆன - செல்வம் மலிந்து கிடக்கும், பழமுதிர் சோலை மலை மிசை மேவு - பழமுதிர் சோலை மலை மீது எழுந்தருளியுள்ள, பெருமாளே - பெருமையின் மிக்கவரே! இரு நில மீதில் - பெரிய நிலவுலகத்தின் கண், எளியனும் வாழ - எல்லோரும் உய்வு பெறுவதுடன் அடியேனும் உய்ந்து ஈடேறும்பொருட்டு, எனது முன் ஓடி வரவேணும் - என்முன் ஓடிவந்து ஆட்கொள்வீர்.

## பொழிப்புரை

**எழுத்துக்களில் முதன்மை பெற்ற அகர எழுத்தாகியும், எல்லா வுலகங்கட்குந் தலைவராகியும், எல்லாவற்றிற்கும் மேம்பட்டவராகியும், பரகதியாயும், நான்முகனாகியும், திருமாலாகியும், உருத்திர மூர்த்தியாகியும், அம்மூவருக்கும் மேற்பட்டவராகியும், சமீபத்தில் உள்ளவராகியும், எல்லாமானவராகியும், இனிமையாக விளங்குபவருமாகியும் வருபவரே! நூறு அசுவமேதயாகங்களைப் புரிந்து மகபதியென்று பேர் பெற்றவனும் வலன் என்ற அசுரனைக்கொன்றவனும்ஆகிய தேவர் கோமான் மிக்கமகிழ்ச்சியுறுகின்ற கட்டழகுடையவரே! வனத்தில் வாழுகின்ற வேடன் செய்த வழிபாட்டை ஏற்று மகிழ்ந்து அருள் புரித்த கதிர்காமம் என்னும் திருத்தலத்தை யுடையவரே! செககண சேகு தகுதிமி தோதி திமி என்ற தாள இசையுடன் ஆடுகின்றமயிலை வாகனமாக உடையவரே! செல்வம் மலிந்துள்ள பழமுதிர் சோலையென்னுந் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள பெருமிதமுடையவரே! பெரிய நிலவுலகின்கண் எல்லோரும் ஈடேறவும் அடியேன் உய்வு பெறவும் என்முன் ஓடிவந்து ஆட்கொள்ள வேண்டும்.**

## விரிவுரை

அகரமுமாகி :—

"அகரமுதல எழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு"

என்ற தெய்வப்புலவர் திருவாக்கை யறியாதார் யார்? எழுத்துக்களெல்லாம் அகரத்தை முதலாக வுடையது. அகரமின்றி ஏனைய எழுத்துக்கள் இயங்காது; இறைவனின்றி உலகமும் உயிரும் இயங்கா. அகரமும் எல்லா எழுத்துக்களில் சிவணிக் கொண்டிருக்கிறது; இறைவனும் எல்லாப் பொருள்களிலும் சிவணி நிற்கின்றனன். யாதொரு முயற்சியுமின்றி வாய் திறந்த மாத்திரத்தில் அகர உச்சரிப்பு உண்டாகின்றது; அதுபோல் இறைவன் தானே இயங்குபவன்; அகரத்திற்குள் அ, உ, ம, என்ற மூன்றெத்தும் அடங்கியிருப்பதை நுனித்துணர்க. அது போல் இறைவன் முத்தொழிலையும் இயற்றுபவன்; அகரத்திற் குள் ஒருபகுதியுள் அருளெழுத்தாகிய வகரமும் அடங்கியிருக்கு மாறு காண்க; இறைவனும் அருளோடு கூடியிருப்பவன். அகரம் தூரத்திலுள்ள பொருளைச் சுட்டுவது; அதுபோல் இறைவனும் தூய்மையில்லாதார்க்குச் சேய்மையிலுள்ளவன்.

அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில்இறை நிற்கும் நிறைந்து.

—திருவருட்பயன்

பேராய அண்டங்கள் பலவும் பிண்ட பேதங்கள் பற்பலவும் பிண்டாண்டத்தின்
வாராய பல பொருளுங்கடலு மண்ணுமலை யுளவுங்கடலுளவு மணலும்வானு
மூராதவான் மீனுமணுவுமற்றை யுள்ளனவு மளந்திடலா மோகோவுன்னை
யாராலு மளப்பரி தென்றனந்த வேதமறைந்திளைக்கவதி தூரமாகுந்தேவே.

திருவருட்பா.

அகரமென வறிவாகி யுலகமெங்கு மமர்ந்தகர வுகரமக ரங்க டம்மாற்
பகருமொரு முதலாகி வேறு மாகிப் பல்வேறு திருமேனி தரித்துக்கொண்டு
புகரில்பொரு ளுன்கினையு மிடர்தீர்ந் தெய்தப் போற்றுநருக் கறக்கருணை புரிந்தல் லார்க்கு
நிகரின்மறக் கருணைபுரிந் தாண்டுகொள்ளு நிருமலனைக் கணபதியை நினைந்து வாழ்வாம்.

—விநாயக புராணம்.

அதிபனுமாகி :—

முருகப்பெருமானே தனிப்பெருந் தலைவர்;

"எந்தக் கடவுளும் என் தோள் போழ்
கந்தக்கடவுளை மிஞ்சாதே" —பாம்பனடிகள்.

"அரனார்க் கதிக பொருள் காட்டதிப
அடியார்க் கெளிய பெருமாளே"
—(நிலையாப்பொருளை) திருப்புகழ்.

என்று அருணகிரியார் கூறும் அருமையினும் அருமையாகிய அருள்வாக்கை யுன்னுக.

அதிகமுமாகி :—

எல்லாவற்றிற்கும் மேம்பட்டவர் குமாரமூர்த்தி; "சுக்குக்கு மிஞ்சிய வைத்தியமுமில்லை, சுப்ரமண்யருக்கு மிஞ்சிய தெய்வமுமில்லை" என்ற பழமொழியும் சுருதி வாக்கியங்களும் இதனை வற்புறுத்தும்.

அகமாகி :—

அகம் - வீடு; இது முத்தி வீட்டைக் குறிக்கின்றது; முத்தி வீட்டிற்குத் தலைவனும் முத்திவீடாக விளங்குபவனும் முருகனே யாகும்.

"கதிக்கு நாதனே" —(விலக்கு) திருப்புகழ்.
"தெரிசன பரகதியானாய்" —(அவகுண) திருப்புகழ்.

என்ற அருள் வாக்குகளை யுய்த்துணர்க.

அயனெனவாகி அரியெனவாகி அரனெனவாகி அவர் மேலாய் :—

பிரமதேவராகவும் திருமாலாகவும் உருத்திரராகவும் நின்று முத்தொழிலை யியற்றுபவர் முருகப்பெருமானே.

இதனைத் திருமால் இந்திரனிடங் கூறுமாறு காண்க.

பொன்னுரு வமைந்த கஞ்சப் புங்கவ னாகி நல்கும்
என்னுரு வாகிக் காக்கும் ஈசன்போ லிறுதி செய்யும்
மின்னுரு வென்னை யார்க்கும் வெளிப்படை போலு மன்னான்
தன்னுரு மறைக ளாலுஞ் சாற்றுதற் கரிய தன்றே.

மூவராகியும் மூவர்காணாத முதலாகியும் எம்பெருமான் விளங்குகின்றனன் என்பதனைப் பல இடங்களிலும் சுவாமிகள் கூறுவதை ஆங்காங்கு காண்க.

"படைத்தளித் தழிக்குந் த்ரிமூர்த்திகள் தம்பிரானே"
—(கனைத்ததிர்க்கு) திருப்புகழ்.

"மன்று வயற்பதி மன்று குறத்தியின்
மன்று முவர்க்கொரு நம்பிரானே"
—(என்றுல்பிறக்கவும்) திருப்புகழ்

"அரியர பிரமபுரந்தராதியர் கும்பிடுந் தம்பிரானே"
—(கரியுரி)— திருப்புகழ்

இகரமுமாகி :—

ஓராதார்க்குத் தூரமாகிநின்ற இறைவன் உன்னுவார்க்கு அதி சமீபத்தில் இருக்கின்றான்.

"வீசத்தில் தூர மிலாதது" —(வேதத்திற்) திருப்புகழ்

எவைகளுமாகி :—

முருகன் அங்கிங் கெனாதபடி எங்கும் நிறைந்து விளங்குபவராதலால் "எவைகளுமாகி" என்றார்.

"எப்பொருளுமாய" என்றார் பிறிதோரிடத்தில்.

இனிமையுமாகி :—

முருகன் அன்பர்கள் உணர்வில். இனிக்கும் இனியனாய் இலங்குகின்றனன்.

கனியினும் இனியன்; கட்டிபட்ட கரும்பினும் இனியன்; பனிமலர்க்குழல் பாவையரினும் இனியன்; தனிமுடி கவித் தாளும் அரசினும் இனியன்; உயிரினும் இனியன்;

கனியினும் கட்டிபட்ட கரும்பினும்
பனிமலர்க்குழல் பாவை நல்லாரினும்
தனிமுடி கவித் தாளு மரசினும்
இனியன் றன்னடைந்தார்க்கிடைமருதனே.

என்னி லாரு மெனக்கினி யாரில்லை
என்னிலும் மினி யாெருவ னுளன
என்னு ளேயுயிர்ப்பாய்ப்புறம் போந்துபுக்
கென்னு ளேநிற்கு மின்னம்ப ரீசனே. —அப்பர்.

எளியனும் வாழ எனதுமுன்னோடி வரவேணும்:—

எளியனும் என்ற எச்ச உம்மையால் மற்ற ஆன்மாக்களும் என்று வருவிக்கப்பட்டது; வையகமெல்லாம் வாழவேண்டு வதே ஆன்றோர் மரபு. "வையகமும் துயர் தீர்க" என்றார் திருஞானசம்பந்தர்.

விரைந்து இறைவனைக் காண விரும்புகின்றார் ஆதலின் "ஓடிவரவேணும்" என்று அழைக்கின்றார்.

வனமுறை வேடனருளிய பூஜை மகிழ் கதிர்காமம் :—

இது கதிர்காமம் என்ற ஈழநாட்டுத் திருத்தலத்தில் ஒரு வேடன் அன்புருவாகிப் பூசித்து அருள் பெற்ற வரலாற்றைக் குறிக்கின்றது.

### கருத்துரை

எல்லாமாய் நின்ற இறைவரே! கட்டழகுடையவரே! கதிர் காம வேலவரே! மயிலேறும் வள்ளலே! பழமுதிர் சோலை மேவும் பரமரே! உலகமும் அடியேனும் வாழ என்முன் விரைந்து வந்தருள்வீர்.

### 4

இலவிதழ் கோதிநேதி மதகலை யாரவார
இளநகை யாட ஆடி மிகவாதுற்
றெதிர்பொரு கோர பாரம் ருகமத கோலகால
இணைமுலை மார்பிலேற மதராஜன்
கலவியி லோடி நீடு வெகுவித தாகபோக
கரணப்ர தாபலீலை மடமாதர்
கலவியின் மூழ்கியாழு மிழிதொழி லேனுமீது
கருதியுஞான போத மடைவேனோ
கொலைபுரி காளிசூலி வயிரவி நீலி மோடி
குலிசகு டாரி யாயி மகமாயி
குமரிவ ராகி மோகி பகவதி யாதி சோதி
குணவதி யால வூணி யபிராமி
பலிகொள்க பாலி யோகி பரமகல்யாணி லோக
பதிவ்ரதை வேத ஞானி புதல்வோனே
படையொடு சூரன்மாள முடுகிய சூரதீர
பழமுதிர் சோலைமேவு பெருமாளே.

### பதவுரை

கொலை புரி காளி - பகைவரைக் கொலை செய்கின்ற காளி, சூலி — சூலத்தை யேந்தியவள், வயிரவி - வயிரவி, நீலி - நீல நிறத்தினள், மோடி -

துர்க்கை, குலிச குடாரி ஆயி - குலிசத்தையும் அங்குசத்தையும் ஏந்தியுள்ள அன்னை, மகமாயி - மகாமாயி, குமரி - குமரி, வராகி - வராகி, மோகி - மோகத்தைச் செய்பவள், பகவதி - ஆறுகுணங்களையுடையவள், ஆதி - முதன்மையானவள், சோதி - சோதிமயமானவள், குணவதி - அருங்குணங்களையுடையவள், ஆல ஊணி - நஞ்சு உண்டவள், அபிராமி - அழகி, பலிகொள் கபாலி - பலி ஏற்கும் பிரம கபாலத்தையுடையவள்; யோகி - யோகஞ் செய்பவள்; பரம கல்யாணி - சிறந்த கல்யாணி; லோகபதிவ்ரதை- உலகம் போற்றும் பதிவிரதை, வேத ஞானி - வேதங்கள் அறிந்தவள் ஆகிய பார்வதி தேவியின், புதல்வோனே - திருக்குமாரரே! படையொடு சூரன் மாள - படைகளுடன் சூரபன்மன் இறக்க, முடுகிய சூர - எதிர்த்து ஓட்டிய சூரரே! தீர - தீரமூர்த்தியே! பழமுதிர் சோலை மேவு - பழமுதிர் சோலையில் விரும்பியிருக்கும், பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! இலவு இதழ் கோதி - இலவம் பூவைப் போன்ற சிவந்த இதழைத் திருத்தி, நேதி - முறையாக, மத கலை ஆரவார - மன்மதனுடைய கலைகளை ஆரவாரமும், இளநகை ஆட ஆடி - புன்சிரிப்பும் தோன்ற விளையாடி, மிக வாது உற்று - அதிக தர்க்கங்களைப் பேசி, எதிர் பொரு - எதிரில் தாக்கும், கோர பார - அச்சந்தரும் பாரமான, ம்ருகமத கோல கால - கஸ்தூரி அணிந்து ஆடம்பரமாகவுள்ள, இணை முலை மார்பில் ஏற - இரு தனங்களும் மார்பில் பொருந்த, மதராசன் - மன்மதராஜனுடைய, கலவியில் ஓடி - புணர்ச்சியில் வேகமாக ஓடி, நீடு வெகு விதமாக - நெடுநாள் பலவிதமான அன்புடன், போக கரணப்ரதாப லீலை - போக சுகத்துடன் கூடிய பேர் பெற்ற கலவி விளையாட்டுக்களையுடைய, மடமாதர் - பொதுமாதர்களுடைய, கலவியில் மூழ்கி - புணர்ச்சியில் முழுகி, ஆழும் இழி தொழிலேனும்- ஆழ்கின்றஇழிந்ததொழிலையுடைய அடியேனும், மீது கருதிய ஞான போதம் அடைவேனோ? - மேலாகக் கருதப்பட்ட ஞான அறிவை அடைவேனோ?

## பொழிப்புரை

பகைவரைக் கொலை செய்கின்ற காளி, திரிசூலத்தை யேந்தியவள், பயிரவி, நீல நிறத்தையுடையவள், துர்க்கை, குலிசத்தையும் அங்குசத்தையும் ஏந்தியுள்ள அன்னை, மகமாயி, குமரி, வராகி, மோகி, பகவதி, ஆதி, சோதி, குணவதி, நஞ்சு உண்டவள், அழகி, பிட்சை வாங்கும் கபாலி, யோகி, பரம கல்யாணி, உலகம் போற்றும் பதிவிரதை, வேதங்களை அறிந்தவள் ஆகிய பார்வதி தேவியின் குமாரரே! படைகளுடன் சூரபன்மன் இறக்கும்படி அவனை ஓட்டிய சூரரே! தீரமூர்த்தியே! பழமுதிர் சோலையில் எழுந்தருளிய பெருமிதமுடையவரே! இலவம் பூவைப் போன்ற சிவந்த வாயிதழ்களை வகைப்படுத்தி, முறையாக மன்மத கலைகளை ஆரவாரமும் புன்சிரிப்பும் தோன்ற விளையாடி, அதிக தர்க்கங்களைப் பேசி, எதிரில் தாக்கும் அச்சந்

தரும் பாரமான கஸ்தூரி பூசிய ஆடம்பரமான இரு தனங்கள் மார்பில் பொருந்த, மன்மத ராஜனுடைய காமலீலைச் சேர்க்கையில் வேகமாக ஓடி, நெடு நாள் பலவிதமான போகசுகத்தை விளைவிக்கும் புணர்ச்சியில் பேர் பெற்ற லீலைகளுடன் கூடிய பொது மாதர்களுடைய, கலவியில் மூழ்கி ஆழ்கின்ற இழிந்த தொழிலையுடைய அடியேன், மேலாகக் கருதுகின்ற ஞான அறிவை அடைவேனோ?

### விரிவுரை

இலவிதழ் கோதி :—

இலவ மலர் சிவப்பாக இருக்கும்; அது மிகவும் அழகாக இருக்கும். அது பெண்களின் இதழுக்கு உவமையாக இலக்கியங்களில் வரும்.

ஞான போத மடைவேனோ :—

ஆன்மா சிவஞான போதத்தை யடைதல் வேண்டும். அங்ஙனம் அடைந்த ஆன்மா மல பரிபாக முற்று, சத்தினிபாதம் பெற்று சிவாத்துவிதமெய்திப் பேரின்பத்தைத் துய்க்கின்றது.

இப்பாடலின் பிற்பகுதி அம்பிகையின் திருநாமங்களை அழகாகக் கூறுகின்றது.

### கருத்துரை

பழமுதிர் சோலைப் பரமனே! சிவஞான போதத்தைத் தந்தருள்வீர்.

### 5

காரணம தாக வந்து புவிமீதே
காலனணு காதி சைந்து கதிகாண
நாரணனும் வேதன் முன்பு தெரியாத
ஞானநட மேபு ரிந்து வருவாயே
ஆரமுத மான தந்தி மணவாளா
ஆறுமுக மாறி ரண்டு விழியோனே
சூரர்கிளை மாள வென்ற கதிர்வேலா
சோலைமலை மேவி நின்ற பெருமாளே

## பதவுரை

ஆர் அமுதம் ஆன - நிறைந்த அமுதம் ஆகிய, தந்தி - தெய்வயானை யம்மையின், மணவாளா - கணவரே! ஆறுமுகம் - ஆறுமுகங்களும், ஆறிரண்டு விழியோனே - பன்னிரு கண்களையும் உடையவரே! சூரர் கிளை மாள வென்ற - சூராதியவுணர்களும் அவர்களின் சுற்றங்களும் அழியும்படி வெற்றி பெற்ற, கதிர்வேலா - ஒளிமிகுந்த வேலாயுதரே! சோலைமலை மேவி நின்ற - பழமுதிர் சோலை மலையின்மீது எழுந்தருளியுள்ள, பெருமாளே - பெருமையின் மிகுந்தவரே! காரணம் அது ஆக புவிமீது வந்து - ஊழ்வினையின் காரணத்தினால் இப் பூதலத்தில் வந்து பிறந்து, காலன் அணுகாது - இயமனுடைய அமைச்சன் என்னை நெருங்காதபடி, இசைந்து - தேவரீர் மனம் பொருந்தி, கதி காண - அடியேன் நற்கதியை அடையுமாறு, நாரணனும் வேதன் முன்பு தெரியாத - திருமாலும் பிரமதேவனும் முன்பு கண்டறியாத, ஞான நடமே புரிந்து வருவாயே - ஞானநடனஞ் செய்து வந்தருளுவீராக.

## பொழிப்புரை

*நிறைந்த அமுதம் போன்ற இனிய தெய்வயானையம்மையின் கணவரே! ஆறுதிருமுகங்களையும் பன்னிரு கண்களையும் உடையவரே! சூராதியவுணரும் அவர்களின் சுற்றமும் மாளும்படி வென்ற ஒளி நிறைந்த வேலாயுதரே! சோலை மலையில் எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! வினையின் காரணமாக அடியேன் இப்பூமியில் பிறந்து, வினைப் போகம் முடிந்தபின் என்னைப் பற்றவருகின்ற காலன் வசம் நான் அடையாவண்ணம் - தேவரீர் திருவுள்ளம் இரங்கி, மாலும் அயனும் முன் கண்டறியாத ஞானத் திருநடனஞ் செய்து வந்தருளுவீராக.*

## விரிவுரை

காரணமதாக வந்து புவிமீதே :—

ஒவ்வொரு உயிரும், தாம் செய்தவினையின் காரணத்தினால், வந்து மண்ணுலகில் பிறக்கின்றது.

நமது சைவ சித்தாந்தக் கொள்கைகளில் அடிப்படையான தத்துவங்கள் நான்கு.

செய்வான், செய்வினை, வினைப்பயன், பயன் அறிந்து ஊட்டுபவன்.

செய்வான்—ஆன்மா.
செய்வினை - ஆன்மா செய் தவினை.
வினைப்பயன்—அவ்வினையின் பயன்.
அறிந்து ஊட்டுபவன்—இறைவன்.

வினை சடம் ஆதலின் தானே வந்து பொருந்தாது. சிற்றறிவுடைய ஆன்மாவுக்கும் முற்பிறப்பில் செய்தவினை இது என உணர்ந்து நுகரும் ஆற்றலும் அறிவும் இல்லை. ஆதலின் பேரறிவும் பெருங்கருணையும் பேராற்றலும் படைத்த இறைவன் காலமறிந்து இடமறிந்து அளவறிந்து வினைப்பயனை ஆன்மாவுக்கு ஊட்டுகின்ருன்.

செய்வினையுஞ் செய்வானும் அதன்பயனும் சேர்ப்பானும்
மெய்வகையால் நான்காகும் விதித்த பொருள் எனக்கொண்டே
இவ்வியல்பு சைவநெறி அல்லவற்றுக் கில்லையென
உய்வகையால் பொருள்சிவன் என்றருளாலே உணர்ந்தறிந்தார்.
—பெரியபுராணம்.

இன்ன இன்ன வினை செய்தான் இன்ன இன்ன வகையாக, இன்ன இன்ன இடத்திலே பிறக்க வேண்டும் என்பது இறைவனது அருட்கட்டளை.

எனவே பிறப்புக்குக் காரணமான வினையை யொழித்தால் பிறப்பு எய்தாது.

நாரணனும் வேதன் முன்பு தெரியாத ஞான நடம் :—

மாலும் அயனுங் காணுத அதியற்புதமான ஞான நடனம் புரிந்து எளியேனுக்கு அருள்புரிவீர்.

ஆரமுதமானதந்தி :—

ஆர்—நிறைவு. அமுதவல்லி—தெய்வயானை.

கருத்துரை

சோலைமலை மேவிய முருகா! ஞானநடனம் புரிந்து வந்தருள்வீர்.

6

சீலமுள தாயர் தந்தை மாதுமனை யான மைந்தர்
சேருபொரு ளாசை நெஞ்சு தடுமாறித்
தீமையுறு மாயை கொண்டு வாழ்வுசத மாமி தென்று
தேடினது போக என்று தெருவூடே
வாலவயதான கொங்கை மேருநுத லான திங்கள்
மாதர்மய லோடு சிந்தை மெலியாமல்
வாழுமயில் மீது வந்து தாளிணைகள் தாழு மென்றன்
மாயவினை தீர அன்பு புரிவாயே

சேலவள நாட னங்கள் ஆரவயல் சூழு மிஞ்சி
சேணிலவு தாவ செம்பொன் மணிமேடை
சேருமம ரேசர் தங்க ளூரிதென் வாழ்வு கந்த
தீரமிகு சூரை வென்ற திறல்வீரா
ஆலவிட மேவு கண்டர் கோலமுட னீடு மன்று
ளாடல்புரி யீசர் தந்தை களிகூர
ஆனமொழி யேப கர்ந்து சோலைமலை மேவு கந்த
ஆதிமுத லாக வந்த பெருமாளே.

### பதவுரை

சேலவள நாடு - சேல் மீன்கள் நிறைந்த வளப்பமான நாடு, அன்னங்கள் ஆர - அன்னங்கள் நிரம்பிய, வயல் சூழும் இஞ்சி - வயல்கள் சூழ்ந்துள்ள மதில்கள், சேண் நிலவு தாவ - ஆகாயத்தில் உள்ள நிலாவை எட்ட, செம்பொன் மணி மேடை சேரும்-செம்பொன்னாலாகிய மணி மேடைகள் கூடினவாய், அமர ஈசர் - இந்திரர், தங்கள் ஊர் இது என - தம் ஊர் இது என்று சொல்லும்படி, வாழ்வு உகந்த - தத்தம் ஊர் வாழ்வில் மகிழ்ச்சி கொண்ட, தீரமிகு சூரை வென்ற - தைரியம் மிகுந்த சூரனை வென்ற, திறல் வீரா - வலிமை மிக்க வீரமூர்த்தியே! ஆல்விடம் மேவு கண்டர் - ஆலவிடம் பொருந்திய கண்டத்தை உடையவரும், கோலமுடன் நீடு மன்று உள் - அழகுடன் நீண்ட சபையில், ஆடல்புரி - நடனம்புரிகின்றவருவாகிய, ஈசர் தந்தை களிகூர - தலைவராகிய தந்தை மகிழ்ச்சி மிகவும் அடைய, ஆன மொழியே பகர்ந்து - சிறந்ததான உபதேச மொழியை உபதேசித்து, சோலைமலை மேவு கந்த - சோலைமலையில் வீற்றிருக்கும் கந்தவேளே! ஆதி முதல் ஆக வந்த - ஆதி முதல்வராய் விளங்கும், பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! சீலம் உள்ள தாய - நல்லொழுக்கமுள்ள தாய், தந்தை - பிதா, மாது - மனைவி, மனை - வீடு, ஆன மைந்தர் - ஆகிய மக்கள், சேரு பொருள் ஆசை - சேர்ந்துள்ள பொருள் ஆகிய இவைகளில் ஆசை கொண்டு, நெஞ்சு தடுமாறி - மனம் தடுமாற்றம் அடைந்து, தீமை உறு மாயை கொண்டு - குற்றத்தைத் தருவதான மாயை யடைந்து, வாழ்வு சதம் ஆம் இது என்று - இவ்வாழ்வே நிலையானதாம் என்று எண்ணி, தேடினது போக என்று - தேடிய பொருள் யாவும் தொலைந்துபோக வேண்டி, தெரு ஊடே - நடுத் தெருவில்! வால வயது ஆன - இளம்வயதினராய், கொங்கை மேரு-தனங்கள் மேருமலை போலவும், நுதல் ஆன திங்கள்- நெற்றி பிறைச் சந்திரனைப் போலவும் கொண்டுள்ள, மாதர் மயலோடு சிந்தை - பொது மாதர்களின் மீதுள்ள ஆசைமயக்கத்தால் அடியேனுடைய மனம், மெலியாமல் - மெலிந்து போகாமல், வாழுமயில் மீது வந்து - என்றும் வாழ்கின்ற மயிலின் மீது தேவரீர் வந்து, தாள் இணைகள் தாழும் -

உமது இரு பாதங்களையும் பணிகின்ற, என்றன் மாய வினை தீர - அடியேனுடைய மாயவினை அழிய, அன்பு புரிவாயே - உமது அன்பைத் தருவீராக.

## பொழிப்புரை

சேல் மீன்கள் நிறைந்த நீர்வளமுடைய நாடு, அன்னங்கள் நிரம்பிய வயல்கள் சூழ்ந்துள்ள மதில்கள் விண்ணில் உள்ள சந்திரனைத் தீண்ட, செம்பொன்மயமான மணி மேடைகள் சேர்ந்தனவாய், இந்திரருடைய நகரம் இது என்று சொல்லும்படி வணங்கும் தத்தம் ஊர் வாழ்வில் மகிழ்ச்சி மிகுந்த, தைரியம் உள்ள சூராதியவுணர்களை வென்ற விறல் வீரமூர்த்தியே! ஆலகால விடம் பொருந்திய கண்டத்தை யுடையவரும், அழகிய நீண்ட சபையில் நடனம் புரிகின்ற ஈசருமாகிய தந்தையார், மகிழ்ச்சி மிகவும் அடையுமாறு, சிறந்த உபதேச மொழியை உபதேசித்தருளி, சோலைமலையில் எழுந்தருளியிருக்கும் கந்தக்கடவுளே! ஆதிமுதல்வராக விளங்கும் பெருமிதமுடையவரே! நல்லொழுக்கமுள்ள தாய், தந்தை, மனைவி, மக்கள், வீடு, சேர்ந்துள்ள பொருள்கள், இவைகளில் ஆசை கொண்டு, மனம் தடுமாற்றம் அடைந்து, தீமையைத் தரும் மாயையால், இவ்வாழ்வே நிலையானதாம் என்று எண்ணி, தேடிய பொருள் யாவும் தொலைந்து போகவேண்டி, நடுத்தெருவில், இளம் வயதினராய், தனங்கள் மேருமலை போலவும், நெற்றி பிறைச் சந்திரனைப் போலவும் கொண்டுள்ள, மாதர்களின் மீதுள்ள காம மயக்கத்தால் எளியேனுடைய சிந்தை மெலிந்து போகாமல், என்றுமுள்ள மயிலின் மீது தேவரீர் வந்து உமது பாதங்கள் இரண்டையும் பணிகின்ற அடியேனுடைய மாயவினை அழியுமாறு அன்பைத் தந்தருளுவீராக.

## விரிவுரை

சீலமுளதாயர் :—

சீலம்—சிறந்த ஒழுக்கம். தாயாரைப் பற்றிக்கூறும் போது, ஒழுக்கமுள்ள அன்னை யென்று கூறுகின்றார்.

பிறிதொரு திருப்புகழிலும், தாயின் கருணையைக் கூறுகின்றார்.

"தந்த பசிதனை யறிந்து முலையமுது
தந்து முதுகுதடவய தாயார்" —திருப்புகழ்.

சுற்றத்தார் முதலிய தொடர்களால் மனம் தடுமாறுகின்றது.

வாழ்வு சதமாமிதென்று:—

உலகில் உள்ள பொருள்கள் யாவும் சதமல்ல. சதமல்லாதவற்றை சதம் என்று எண்ணி மாந்தர் அலைகின்றனர்.

ஊருஞ்சதமல்ல உற்றார்சதமல்ல உற்றுப்பெற்ற
பேருஞ்சதமல்ல பெண்டீர்சதமல்ல; பிள்ளைகளும்
சீருஞ்சதமல்ல செல்வஞ்சதமல்ல தேசத்திலே
யாருஞ்சதமல்ல நின்தாள்சதங்கச்சி யேகம்பனே

—பட்டினத்தார்

அமரேசர் தங்களூரி தெனவாழ்வுகந்த:—

அமரர்கள் தங்கள் ஊர்கள் இந்திர நகரம் போல் இருக்கின்றன என்று மகிழ்கின்றார்கள்.

கருத்துரை

சோலைமலை மேவு சிவகுருவே! மாயவினை தீர அன்பு தருவீர்.

7

வீரமத னூல்வி ளம்பு போகமட மாதர் தங்கள்
வேல்விழியி னான்ம யங்கி புவிமீதே
வீசுகையி னாலி தங்கள் பேசுமவர் வாயி தஞ்சொல்
வேலைசெய்து மால்மி குந்து விரகாகிப்

பாரவச மான வங்க ணீடுபொருள் போன பின்பு
பாதகனு மாகி நின்று பதையாமல்
பாகம்வர சேர அன்பு நீபமலர் சூடு தண்டை
பாதமலர் நாடி யென்று பணிவேனோ

பூரணம தான திங்கள் சூடுமர னாரி டங்கொள்
பூவையரு ளால்வ ளர்ந்த முருகோனே
பூவுல கெலாம டங்க வோரடியி னால ளந்த
பூவைவடி வானு கந்த மருகோனே

சூரர்கிளை யேத டிந்து பாரமுடி யேய ரிந்து
தூள்கள்பட நீறு கண்ட வடிவேலா
சோலைதனி லேப றந்து லாவுமயி லேறி வந்து
சோலைமலை மேல மர்ந்த பெருமாளே.

## பதவுரை

பூரணம் அது ஆன திங்கள் சூடும் - என்றுந் தேயாது வளராது ஒரு தன்மையாயிருக்கும் சந்திரனைச் சூடியுள்ள, அரனார் இடம் கொள் - சிவ பெருமானது இடப்பாகத்தில் எழுந்தருளியுள்ள, பூவை அருளால் வளர்ந்த- நாகண வாய்ப் பட்சிபோன்ற பார்வதி தேவியின் திருவருளால் வளர்ந்த, முருகோனே - முருகக் கடவுளே! பூ உலகு எலாம் அடங்க - மண்ணுலக முழுவதும் அடங்குமாறு, ஓர் அடியினால் அளந்த - ஒரு அடியினால் அளந் தருளிய, பூவை வடிவான் உகந்த - காயாம் பூ வண்ணராகிய திருமால் மகிழ்கின்ற, மருகோனே - திருமருகோனே! சூரர்கிளையே தடிந்து - சூரர் களின் கூட்டங்களை அழித்து, பார முடியே அரிந்து - அவர்களது கனத்த முடிகளை அரிந்து, தூள்கள்பட நீறு கண்ட - அவர்கள் பொடிபட்டுச் சாம்ப லாகும்படிச் செய்த, வடிவேலா - கூரிய வேலாயுதரே! சோலைதனிலே பறந்து உலாவும் - சோலைகளில் பறந்து உலாவுகின்ற, மயில் ஏறி வந்து - மயிலில் ஏறிவந்து, சோலை மலைமேல் அமர்ந்த - சோலைமலைமீது வீற்றிருக் கின்ற, பெருமாளே - பெருமையில் மிகுந்தவரே! வீர மதன் நூல் விளம்பு - வீரம் பொருந்திய மன்மதனுடைய நூல்களில் சொல்லப்பட்ட, போகமட மாதர் தங்கள் - போகத்தைத் தருகின்ற மடமாதர்களின், வேல் விழியினால் மயங்கி - வேல் போன்ற கண்ணால் மயக்கத்தை யடைந்து, புவிமீதே - இப் பூமியின் மேல், வீசுகையினால் - கைகளை வீசி, இதங்கள் பேசும் - இன்ப மான வார்த்தைகளைப் பேசும், அவர் வாய் இதம் சொல் - அப்பொது மாதர் களின் வாயினின்று பிறக்கும் இன்ப மொழிகட்கு இணங்கி, வேலை செய்து - அவர்கள் இட்ட வேலைகளைச் செய்து, மால் மிகுந்து விரகு ஆகி - அவர் மேல் ஆசை மிகுந்து ஊக்கம் பூண்டு, பார வசம் ஆன - கனத்த தன்மை கொண்டு, அங்கண் நீடு பொருள் போன பின்பு - அந்த மிகுதியாக இருந்த பொருள் செலவழிந்த பின்னர், பாதகனும் ஆகி நின்று பதையாமல்- அடியேன் பாதகனாய் நின்று தவிக்காமல், பாகம் வர அன்பு சேர - பக்குவ நிலையைத் தரவல்ல அன்பு வந்து என்னிடம் பொருந்த, நீபமலர் சூடு - கடப்ப மலர் சூடியுள்ளதும், தண்டை - தண்டையணிந்ததுமான, பாத மலர் நாடி - உமது பாதாரவிந்தத்தை அடியேன் விரும்பி, என்று பணி வேனோ - எந்நாள் பணிவேனோ?

## பொழிப்புரை

தேயாமலும் வளராமலும் என்றும் ஒன்று போலிருக்கும் சந்திரனைத் தரித்த சிவபெருமானுடைய இடப்பாகத்தைக் கொண்டவரும், நாகணவாய்ப் பறவை போல் விளங்குபவரு மாகிய உமாதேவியாரது திருவருளால் வளர்ந்த திருமுருகரே! இந்த மண்ணுலக முழுவதும் ஒரு அடியால் அளந்தருளிய, காயாம்பூ வண்ணராகிய திருமாலின் திருமருகரே! சூராதிய வுணர்களின் கூட்டங்களை அழித்து, அவர்களின் பருத்த

தலைகளை அறுத்து, பொடியாகப் போகுமாறு செய்த கூரிய வேற்படை வீரரே! சோலைகளில் பறந்து உலாவுகின்ற மயிலின் மீது ஏறிவந்து சோலைமலையில் எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! வீரம் பொருந்திய மன்மதனுடைய நூல்களில் சொல்லப்பட்ட, போக இன்பத்தைத் தரவல்ல பொது மாதர் களின் வேல் போன்ற கண்களினால் மயக்கமுற்று, இப்பூமியின் மேல், கைவீசி இதமாகப் பேசும் அவ் விலை மாதர்களின் வாக்கி லிருந்து பிறக்கும், இனிய மொழிகளுக்கு இணங்கி, அவர் இட்ட வேலைகளைச் செய்து, அவர்மீது ஆசை மிகுந்து ஊக்க மாக, என்பால் மிகுந்திருந்த செல்வத்தை அவர்கட்கு ஈந்து, அவை போனபின், பாதகனாகி நின்று அடியேன் தவிக்காமல், பக்குவநிலை வருவதற்குரிய அன்பு என்பால் வந்துசேர, கடப்ப மலரையும் தண்டையையும் அணிந்த உமது திருவடியை நாடி என்று அடியேன் வணங்குவேனோ!

## விரிவுரை

**வீரமதனூல் விளம்பு போகம் :—**

மன்மதன் கடுந்துறவிகளையும், வீர தீர மன்னர்களையும் தன் மலர்க் கணையால் வெற்றி பெறுகின்றான். ஆதலினால் வீரமதன் என்றார்.

மதனூல்—காம சாத்திரம். அம் மதனாகமத்தில் கூறியுள்ள படி பலப்பல இன்பங்களைப் பொது மாதர் தருவார்கள்.

**வேல் விழியினால் மயங்கி :—**

மாதரது கூரிய கண்களால் இளைஞர் மயங்குவார்கள்.

"விழியாலுருக்குபவர்" —(குமரகுருபர முருக குகனே) திருப்புகழ்.

**வேலை செய்து :—**

அம்மாதர்கள் இட்ட வேலைகளைத் தெய்வகைங்கரியம் போல் செய்து திரிவார்கள்.

"வசமொழுகி யவரடிமையென மாத ரிட்டதொழில்
தனிலுழலு மசடனை" —(குமரகுருபர முருக குகனே) திருப்புகழ்.

**நீடு பொருள் போனபின்பு :—**

அரிதில் முயன்று பெரியோர்கள் தேடிய பொருள்கள் முழுவதையும் அம்மாதரிடங் கொட்டிக் கொடுத்து வறியவர் ஆவார்கள்.

"மதிக்குன்றி யுளகாசு மவர்க்குதவி மிடியாகி
வயிற்றிலெரி மிகமூள" —(வரிக்கலையி) திருப்புகழ்.

பாகம்வர சேர அன்பு :—

பாகம்—பக்குவம். ஆன்மாவுக்கு இருவினையொப்பு எய்திய பின் மலபரிபாகம் உண்டாகும்; அப்போது சத்திநிபாதம் எய்தும். அப்பக்குவ நிலையில் முறுகிய அன்பு சேரும். அன்பு சேர சிவமாம் பெற்றியால் இன்பம் சேரும்.

"உணக்கிலாத தொர் வித்துமேல் விளையாமல் என்வினை ஒத்தபின்
கணக்கிலாத் திருக்கோலம் நீவந்து காட்டினாய் கழுக்குன்றிலே"
—திருவாசகம்.

பூரணமான திங்கள் :—

இங்கே குறைமதியை நிறைமதி யென்றார். என்றும் ஒரு படியாய் இருக்கின்ற மதி என்று பொருள் கொள்ள வேண்டும்.

பூவுலகெலா மடங்க ஓரடியினாலளந்த:—

இந்த உலகமெல்லாம் திருமால் ஓரடியால் அளந்து அருளினார்.

"மூவடிகேட்டன்று மூதண்டகூட முகடுமுட்டச்
சேவடி நீட்டும் பெருமான்" —கந்தரலங்காரம் (15)

பூவை வடிவான:—

பூவை—காயாம் பூ. இது நீலநிறமுடைய அழகிய மலர். திருமாலின் நிறமும் நீலம். காயாம் பூ வண்ணன்.

கருத்துரை

சோலைமலை மேவு முருகா! உனது பாதமலரைப் பணிய அருள் செய்யும்.

8

வாரண முகங்கி ழிந்து வீழவு மரும்ப லர்ந்து
மால்வரை யசைந்த நங்கன் முடிசாய
வாளகிரி யண்ட ரண்ட கோளமுற நின்றெ ழுந்து
மாதவ மறந்து றந்து நிலைபேரப்

பூரண குடங்க டிந்து சீதகள பம்பு னைந்து
பூசலை விரும்பு கொங்கை மடவார்தம்
போக சயனந் தவிர்ந்து னடக பதம்ப ணிந்து
பூசனைசெய் தொண்ட னென்ப தொருநாளே

ஆரண முழங்கு கின்ற ஆயிர மடந்த வங்கள்
ஆகுதி யிடங்கள் பொங்கு நிறைவீதி

ஆயிர முகங்கள் கொண்ட நூபுர மிரங்கு கங்கை
யாரமர வந்த லம்பு துறைசேரத்
தோரண மலங்கு துங்க கோபுர நெருங்கு கின்ற
சூழ்மணிபொன் மண்ட பங்கள் ரவிபோலச்
சோதியின் மிகுந்த செம்பொன் மாளிகை விளங்குகின்ற
சோலைமலை வந்து கந்த பெருமாளே.

## பதவுரை

ஆரணம் முழங்குகின்ற - வேதங்கள் முழங்குகின்ற, ஆயிரம் மடம் - ஆயிரக் கணக்கான மடங்களும், தவங்கள் - முனிவர்களின் தவங்களும், ஆகுதி இடம் கொள் - ஓமப்புகை யென்ற இவைகள் நடைபெறும் இடங்களும், பொங்கும் நிறை வீதி - விளங்குகின்ற நிறைந்த வீதிகளும், ஆயிரம் முகங்கள் கொண்ட - பலகிளையாகப் பரந்து வருகின்ற, நூபுரம் இரங்கு கங்கை-நூபுர கங்கை இரங்கி வந்து, ஆர அமர வந்து அலம்பு துறைசேர-நிரம்பி ஒழுங்காய் வந்து ததும்பி ஒலிக்கும் நீர்த்துறைகள் பொருந்த, தோரணம் அலங்கு - தோரணங்கள் அசையும், துங்க கோபுரம் நெருங்குகின்ற - பரிசுத்தமான கோபுரங்கள் நெருங்கி நின்று, சூழ் மணி பொன் மண்டபங்கள்-சூழ்ந்துள்ள பொன்னும் மணியும் பதித்த மண்டபங்களும், ரவி போல-சூரியன் போல, சோதியில் மிகுந்த-ஒளி மிகுந்த, செம்பொன் மாளிகை விளங்குகின்ற - அழகிய மாளிகைகளும் விளங்குகின்ற, சோலை மலை வந்து உகந்த - சோலைமலையில் வந்து மகிழ்ந்து வீற்றிருக்கும். பெருமாளே-பெருமையில் மிகுந்தவரே! வாரண முகம் கிழிந்து வீழவும் - யானையை ஒப்பிடலாம் என்றால் அதன் முகம் ஒரு காலத்தில் சிவபிரானால் கிழிபட்டு விழுந்தது, அருவி அலங்கு - தாமரைப் புஷ்பத்தைப் ஒப்பிடலாம் என்றால் அது மலர்ந்து வாடுகின்றது, மால் வரை அசைந்து-பெரிய மலை [illegible] கயிலையை ஒப்பிடலாம் என்றால் அது இராவணனால் அசைவுற்றது, அநங்கன் முடி சாய-மன்மதனுடைய மகுடத்தை ஒப்பிடலாம் என்றால் சிவபெருமான் எரித்தபோது அந்த முடி சாய்ந்து வீழ்ந்தது, வானகிரி - சக்கரவானகிரி போல, அண்டர் அண்டகோளம் உற நின்று எழுந்து - தேவலோகத்தையும் அண்டகோளத்தையும் எட்டும்படி நிமிர்ந்து எழுந்து, மாதவம் அறம் துறந்து நிலைபேர-மகாதவசிகளும் தங்கள் தரும நெறியைக் கைவிட்டு நிலைகுலையவும், பூரண குடம் கடிந்து-பூரணமாகத் திரண்ட குடத்தையும் வென்று, சீத களபம் புனைந்து - குளிர்ந்த சந்தனக் கலவை தரித்து, பூசலை விரும்பு - காமலீலைப் போரை விரும்புகின்ற, கொங்கை மடவார்தம்-தனங்களையுடைய பெண்களின், போக சயனம் தவிர்ந்து - இன்பத்தை நுகரும் படுக்கையை விட்டு, உன் ஆடக பதம் பணிந்து - உமது பொன்மயமான திருவடியைப் பணிந்து, பூசை செய் தொண்டன் என்பது ஒரு

நாளே - அத்திருவடியைப் பூசிக்கும் தொண்டன் இவன் என்று கூறும்படி யான ஒரு நாள் எனக்கு உண்டாகுமோ?

## பொழிப்புரை

வேதங்கள் முழங்குகின்ற ஆயிரக்கணக்கான மடங்களும், தவம் யாகம் இவைகள் நடைபெறும் இடங்களும், விளங்குகின்ற நிறைவுள்ள வீதிகளும், ஆயிரங் கிளைகளாகப் பிரிந்து வருகின்ற சிலம்பாறு நிரம்பி ஒழுங்காய் வந்து ததும்பி ஒலிக்கும் நீர்த்துறைகள் பொருந்த, தோரணங்கள் அசையும் உயர்ந்த கோபுரமும், நெருங்கி நின்று சூழ்ந்துள்ள பொன் மணிகளுடன் கூடிய மண்டபங்களும், சூரியன் போல ஒளி மிகுந்த செம்பொன் மாளிகைகளும் விளங்குகின்ற சோலைமலையில் வந்து வீற்றிருக்கும் பெருமிதமுடையவரே! தனத்துக்கு யானையை ஒப்பிடலாம் என்றால், யானையின் முகம் ஒரு காலத்தில் சிவபிரானால் கிழிபட்டு விழுந்தது, தாமரை அரும்பை ஒப்பிடலாம் என்றால் அது மலர்ந்து வாடுகின்றது, பெரிய கயிலை மலையை ஒப்பிடலாம் என்றால் அது இராவணனால் அசைவுற்றது, மன்மதனுடைய மகுடத்தை ஒப்பிடலாம் என்றால், அது சிவபிரானால் எரிந்து சாய்ந்து வீழ்ந்தது; சக்கரவாளகிரி, போலத் தேவலோகம் அண்டகோளம் வரை நிமிர்ந்தெழுந்து, மகா தவமுனிவர்களும் தமது தருமநெறியை விட்டுவிலகி நிலைகுலையவும், பூரண கும்பத்தையும் வென்று, குளிர்ந்த சந்தனக் கலவையணிந்து, காமலீலைப் போரினை விரும்பும் தனங்களையுடைய பெண்களின், இன்பநுகரும் படுக்கையைவிட்டு நீங்கி, தேவரீருடைய பொன்மயமான திருவடியை வணங்கி, அத்திருவடியைப் பூசிக்குந் தொண்டன் இவன் என்னும் ஒருநாள் எனக்கு உண்டாகுமோ?

## விரிவுரை

இத்திருப்புகழில் முதல் மூன்று அடிகள் மாதரின் தனபாரத்தின் பெருமையை அதியற்புதமாகக் கூறுங் கவித்திறம் மிகவும் சிந்தனைக்குரியது.

வாரணமுகம் ஒழிந்து விழவும்:—

யானையின் மத்தகத்தை தனத்துக்கு உவமை கூறுவது கவிமரபு.

யானை மத்தகத்தை உவமை கூறுவதில் ஒரு குற்றம் உள்ளது: அது [illegible]

ஆயிர முகங்கள் கொண்ட நூபுர மிரங்கு கங்கை
யாரமர வந்த லம்பு துறைசேரத்
தோரண மலங்கு துங்க கோபுர நெருங்கு கின்ற
சூழ்மணிபொன் மண்ட பங்கள் ரவிபோலச்
சோதியின் மிகுந்த செம்பொன் மாளிகை விளங்குகின்ற
சோலைமலை வந்து கந்த பெருமாளே.

## பதவுரை

ஆரணம் முழங்குகின்ற - வேதங்கள் முழங்குகின்ற, ஆயிரம் மடம் - ஆயிரக் கணக்கான மடங்களும், தவங்கள் - முனிவர்களின் தவங்களும், ஆகுதி இடம் கொள் - ஓமப்புகை யென்ற இவைகள் நடைபெறும் இடங்களும், பொங்கும் நிறை வீதி - விளங்குகின்ற நிறைந்த வீதிகளும், ஆயிரம் முகங்கள் கொண்ட - பலகிளையாகப் பரந்து வருகின்ற, நூபுரம் இரங்கு கங்கை-நூபுர கங்கை இரங்கி வந்து, ஆர அமர வந்து அலம்பு துறைசேர-நிரம்பி ஒழுங்காய் வந்து ததும்பி ஒலிக்கும் நீர்த்துறைகள் பொருந்த, தோரணம் அலங்கு - தோரணங்கள் அசையும், துங்க கோபுரம் நெருங்கு கின்ற - பரிசுத்தமான கோபுரங்கள் நெருங்கி நின்று, சூழ் மணி பொன் மண்டபங்கள்-சூழ்ந்துள்ள பொன்னும் மணியும் பதித்த மண்டபங்களும், ரவி போல-சூரியன் போல, சோதியில் மிகுந்த-ஒளி மிகுந்த, செம்பொன் மாளிகை விளங்குகின்ற - அழகிய மாளிகைகளும் விளங்குகின்ற, சோலை மலை வந்து உகந்த - சோலைமலையில் வந்து மகிழ்ந்து வீற்றிருக்கும். பெருமாளே-பெருமையில் மிகுந்தவரே! வாரண முகம் கிழிந்து வீழவும் - யானையை ஒப்பிடலாம் என்றால் அதன் முகம் ஒரு காலத்தில் சிவபிரானால் கிழிபட்டு விழுந்தது, அரும்பு அலர்ந்து - தாமரையரும்பை ஒப்பிடலாம் என்றால் அது மலர்ந்து வாடுகின்றது, மால் வரை அசைந்து-பெரிய மலையாகிய கயிலையை ஒப்பிடலாம் என்றால் அது இராவணனால் அசைவுற்றது, அநங்கன் முடி சாய-மன்மதனுடைய மகுடத்தை ஒப்பிடலாம் என்றால் சிவ பெருமான் எரித்தபோது அந்த முடி சாய்ந்து வீழ்ந்தது, வாளகிரி - சக்கர வாளகிரி போல, அண்டர் அண்டகோளம் உற நின்று எழுந்து - தேவ லோகத்தையும் அண்டகோளத்தையும் எட்டும்படி நிமிர்ந்து எழுந்து, மாதவம் அறம் துறந்து நிலைபேர-மகாதவசிகளும் தங்கள் தரும நெறியைக் கைவிட்டு நிலைகுலையவும், பூரண குடம் கடிந்து-பூரணமாகத் திரண்ட குடத்தையும் வென்று, சீத களபம் புனைந்து - குளிர்ந்த சந்தனக் கலவை தரித்து, பூசலை விரும்பு - காமலீலைப் போரை விரும்புகின்ற, கொங்கை மடவார்தம்-தனங்களையுடைய பெண்களின், போக சயனம் தவிர்ந்து - இன்பத்தை நுகரும் படுக்கையை விட்டு, உன் ஆடக பதம் பணிந்து - உமது பொன் மயமான திருவடியைப் பணிந்து, பூசனை செய் தொண்டன் என்பது ஒரு

நாளே - அத்திருவடியைப் பூசிக்கும் தொண்டன் இவன் என்று கூறும்படியான ஒரு நாள் எனக்கு உண்டாகுமோ?

## பொழிப்புரை

வேதங்கள் முழங்குகின்ற ஆயிரக்கணக்கான மடங்களும், தவம் யாகம் இவைகள் நடைபெறும் இடங்களும், விளங்குகின்ற நிறைவுள்ள வீதிகளும், ஆயிரங் கிளைகளாகப் பிரிந்து வருகின்ற சிலம்பாறு நிரம்பி ஒழுங்காய் வந்து ததும்பி ஒலிக்கும் நீர்த்துறைகள் பொருந்த, தோரணங்கள் அசையும் உயர்ந்த கோபுரமும், நெருங்கி நின்று சூழ்ந்துள்ள பொன் மணிகளுடன் கூடிய மண்டபங்களும், சூரியன் போல ஒளி மிகுந்த செம்பொன் மாளிகைகளும் விளங்குகின்ற சோலைமலையில் வந்து வீற்றிருக்கும் பெருமிதமுடையவரே! தனத்துக்கு யானையை ஒப்பிடலாம் என்றால், யானையின் முகம் ஒரு காலத்தில் சிவபிரானால் கிழிபட்டு விழுந்தது. தாமரை அரும்பை ஒப்பிடலாம் என்றால் அது மலர்ந்து வாடுகின்றது. பெரிய கயிலை மலையை ஒப்பிடலாம் என்றால் அது இராவணனால் அசைவுற்றது, மன்மதனுடைய மகுடத்தை ஒப்பிடலாம் என்றால், அது சிவபிரானால் எரிந்து சாய்ந்து வீழ்ந்தது; சக்கரவாளகிரி, போலத் தேவலோகம் அண்டகோளம் வரை நிமிர்ந்தெழுந்து, மகா தவமுனிவர்களும் தமது தருமநெறியை விட்டுவிலகி நிலைகுலையவும், பூரண கும்பத்தையும் வென்று, குளிர்ந்த சந்தனக் கலவையணிந்து, காமலீலைப் போரினை விரும்பும் தனங்களையுடைய பெண்களின், இன்பநுகரும் படுக்கையைவிட்டு நீங்கி, தேவரீருடைய பொன்மயமான திருவடியை வணங்கி, அத்திருவடியைப் பூசிக்குந் தொண்டன் இவன் என்னும் ஒருநாள் எனக்கு உண்டாகுமோ?

## விரிவுரை

இத்திருப்புகழில் முதல் மூன்று அடிகள் மாதரின் தனபாரத்தின் பெருமையை அதியற்புதமாகக் கூறுங் கவித்திறம் மிகவும் சிந்தனைக்குரியது.

வாரணமுகங் கிழிந்து விழவும்: —

யானையின் மத்தகத்தை தனத்துக்கு உவமை கூறுவது கவிமரபு.

யானை மத்தகத்தை உவமை கூறுவதில் ஒரு குற்றம் உள்ளது. அது என்ன?

யானையைச் சிவபெருமான் உரித்துக் கிழித்தார். அப்போது யானை அழிந்து வீழ்ந்தது. அதனால் யானையின் முகம் தனத்துக்கு ஒப்பாகாது.

அரும்பலர்ந்து :—

தாமரையின் மொட்டு தனத்துக்கு உவமையாகும். அதிலும் ஒரு குற்றம் உளது. அது என்ன?

தாமரையின் மொட்டு மலர்ந்து மறுநாள் வாடி விடுகின்றது. தனம் மலராமலும் வாடாமலும் இருப்பதனால் அத்தாமரையின் மொட்டு இணையாகாது.

மால்வரை அசைந்து :—

மலைகளைத் தனங்கட்கு உவமை கூறுவர் புலவர். அதிலும் ஒரு குறையுளது? அது என்ன?

கயிலைமலை இராவணனால் அசைவுற்றது. இந்திரன் மலைகளின் சிறகுகளை வச்சிரத்தால் அரிந்தபோது மலைகள் அசைந்தன. தனங்கட்கு அப்படி ஒரு குறையின்மையால் மலைகளும் இத்தனத்துக்கு நிகரில்லை.

அநங்கன் முடி சாய :—

மன்மதனுடைய மணிமகுடம் தனத்துக்கு உவமையாகத் திகழும். அதிலும் ஒரு பிழையுளது. அது என்ன?

மன்மதனைச் சிவபெருமான் நெற்றிக் கண்ணால் எரித்த போது முடி சாய்ந்து வீழ்ந்தது. இத்தனம் அங்ஙனம் சாயாமையால் மன்மதனுடைய மகுடமும் நிகராகாது.

என்று அந்தந்த உவமைகளில் உள்ள குறைகளைக் கூறி விலக்கினார். இவைகள் யாவும் கவித்திறமை யாகும்.

வாளகிரி யண்டரண்ட கோளமுற நின்றெழுந்து :—

சக்கரவாளகிரி போல் ஓங்கி விண்ணுலகம் அண்டகோளகை வரை தனம் உயர்ந்துளது என்ற இந்த நயம் உயர்வு நவிற்சி.

மாதவ மறந்துறந்து நிலைபேர :—

மாதவ முனிவர்கள் இத் தனபாரத்தைக் கண்டவுடன் தமது தவம் குலைந்து, தருமம் தவிர்ந்து தடுமாறுகின்றார்கள்.

..............“துறவினர் சோரச் சோர
நக்கத்து” —திருப்புகழ்.

மாயையைக் கண்டு காசிபரும், மேனகையைக் கண்டு விசுவாமித்திரரும் தவங்குலைந்ததே சான்று.

பூரண குடங்கடிந்து :—

நிறை குடத்தையுந் தனக்கு நிகரில்லையென்று விலக்குகின்ற சிறந்த தனம்.

போக சயனம் :—

மாதரின் கலவி யின்பத்துடன் கூடிய பஞ்சணையை விலக்கிவிட வேண்டும். அது நோய்க்கிடமானது. தூய்மையில்லாதது. அணுத்துணையின்பம் பயந்து மலையளவு துன்பம் பயப்பது.

"மடவாரோடு
பொருந்தணை மேல் வரும்பயனைப் போக மாற்றி
பொது நீக்கித் தனைநினைய வல்லார்க் கென்றும்
பெருந்துணை" —அப்பர்.

தவிர்ந்துனுடக பதம் பணிந்து :—

தவிர்ந்து உன் நாடக பதம். உமது நடனம் புரியும் பாதம் என்றும் பொருள் கொள்ளலாம்.

தவிர்ந்து உன் ஆடக பதம். ஆடகம்—பொன். பொன் மயமான பாதம்.

ஆரண முழங்குகின்ற ஆயிரமடம் :—

பழமுதிர் சோலையின் பெருமையை இத்திருப்புகழின் பிற்பகுதி முழுவதும் கூறுகின்றது.

வேதியர்கள் மடங்களில் இருந்து சதா வேதபாராயணம் புரிகின்றார்கள்.

தவங்கள் ஆகுதி யிடங்கள் :—

தவம் புரிந்துகொண்டு உலக நலனுக்காக வேள்வி புரிகின்றார்கள்.

ஆயிர முகங்கள் கொண்ட நூபுர மிரங்கு கங்கை :—

பழமுதிர் சோலையில் மிகவும் பெருமை பொருந்தியது நூபுர கங்கை. இது சிலம்பாறு எனப்படும்.

"சிலம்பாறுபாயுந் திருமாலிருஞ் சோலையே" —பெரியாழ்வார்.

"ஆமாநல் ஏறு சிலைப்பச் சேண் நின்று
இழுமென இழிதரும் அருவிப்
பழமுதிர்சோலை மலைகிழ வோனே" —திருமுருகாற்றுப்படை.

## கருத்துரை

பழமுதிர்சோலைப் பரமனே! உனது திருவடியைப் பூசிக்குந் திருத்தொண்டு தந்தருள்வீர்.

## 9

ஆசை நாலுசது ரக்கமல முற்றிுனொளி
வீசி யோடியிரு.பக்கமொடு றச்செல்வளி
ஆவல் கூரமண்மு தற்சலசபொற்சபையுமிந்துவாகை
ஆர முணுபதி யிற்கொளநி றுத்திவெளி
யாரு சோதி நுறு பத்தினுட னெட்டுஇத
ழாகி யேழுமள விட்டருண விற்பதியின் விந்துநாத

ஓசை சாலுமொரு சத்தமதி கப்படிக
மோடு கூடியொரு மித்தமுத சித்தியொடு
மோது வேதசர சத்தியடி யுற்றதிரு நந்தியூடே
ஊமை யேனையொளிர் வித்துனது முத்திபெற
மூல வாசல்வெளி விட்டுனது ரத்திலொளிர்
யோக பேதவகை யெட்டுமிதி லொட்டும்வகை
யின்றுதாராய்

வாசி வாணிகனெ னக்குதிரை விற்றுமகிழ்
வாத வூரனடி மைக்கொளுக்ரு பைக்கடவுள்
மாழை ரூபன்முக மத்திகைவி தத்தருண
செங்கையாளி

வாகு பாதியுறை சத்திகவு ரிக்குதலை
வாயின் மாதுதுகிர் பச்சைவடி விச்சிவையென்
மாசு சேரெழுபி றப்பையும றுத்தவுமை தந்தவாழ்வே

காசி ராமேசுரம் ரத்நகிரி சர்ப்பகிரி
ஆருர் வேலூர் தெவூர் கச்சிமது ரைப்பறியல்
காவை மூதுரரு ணக்கிரிதி ருத்தணியல்
செந்தில்நாகை

காழி வேளூர்பழ நிக்கிரிகு றுக்கைதிரு
நாவ லூர்திருவெ ணெய்ப்பதியின் மிக்கதிகழ்
காதல் சோலைவளர் வெற்பிலுறை முத்தர்புகழ்
தம்பிரானே.

## பதவுரை

வாசி வாணிகன் என - குதிரை வியாபாரியாக வந்து, குதிரை விற்று - மதுரையில் பாண்டியனிடம் குதிரை விற்று, மகிழ்வாதவூரன் அடிமை கொளும் - அதனால் மனம் மகிழ்ந்த திருவாதவூரரை அடிமை கொண்ட வரும், க்ருபைக் கடவுள் - கருணைக் கடவுளும், மாழைரூபன் - பொன்னிற முடையவரும், முகம் மத்திகை விதத்து அருண செம் கையாளி - ஒலிக்கின்ற குதிரைச் சம்மட்டியால் குதிரையைச் செலுத்துகின்ற வகை பொருந்திய ஒளியும் அழகும் உடைய திருக்கரத்தை யுடையவரும் ஆகிய சிவபெருமானுடைய, வாகு பாதி உறை சத்தி - இடப்பாகத்திலிருக்கும் ஆற்றலுடையவரும், கவுரி - பொன்னிற முடையவரும், குதலை வாயின் மாது - மழலை மொழி பேசும் பெண்ணமுதமானவரும், துகிர் பச்சை வடிவி- பவளங்கலந்த பச்சை நிறத்தையுடையவரும், சிவை - மங்கலம் பொருந்திய வரும், என் மாசு சேர் எழு பிறப்பையும் அறுத்த உமை - அடியேனுடைய குற்றமிக்க ஏழுவகையான பிறப்புக்களையும் அறுத்து ஆட்கொண்ட உமா தேவியாரும் ஆகிய அம்பிகை, தந்த வாழ்வே - பெற்றருளிய திருமைந்தரே! காசி - காசியம்பதி, ராமெசுரம் - திருவிராமேச்சுரம், ரத்னகிரி - வாட்போக்கி என்னும் இரத்தினகிரி, சர்ப்பகிரி - திருச்செங்கோடு, ஆரூர்- திருவாரூர், வேலுர் - வேலூர், தெவுர் - தேவூர், கச்சி - காஞ்சீபுரம், மதுரை - மதுரையம்பதி, பறியல்-திருப்பறியலூர், காவை-திருவானைக்கா, மூதுர் - பழமலை என்னும் விருத்தாசலம் (திருப்புனவாயில் எனினும் அமையும்) அருணக்கிரி - திருவண்ணமலை, திருத்தணியல் - திருத்தணிகை, செந்தில் - திருச்செந்தூர், நாகை - நாகப்பட்டினம், காழி - சீகாழி, வேளூர் - புள்ளிருக்கும் வேளூர் என்னும் வைத்தீச்சுரன் கோயில், பழநிக் கிரி - பழநிமலை, குறுக்கை - குறுக்கை, திருநாவலூர் - திருநாவலூர், திருவெணெய்ப்பதியில் - திருவெண்ணெய் நல்லூர் என்னுந் திருத்தலங்களிலும், மிக்க திகழ் காதல் சோலை வளர் வெற்பில் உறை - மிகவும் திகழ்கின்றதும் அன்பை விளைவிப்பதும் சோலை வளர்கின்றதுமாகிய பழமுதிர் சோலை என்னும் திருத்தலத்திலும் வாழ்கின்ற, முத்தர் புகழ் - சீவன் முத்தர்களால் புகழப் பெறுகின்ற, தம்பிரானே - தனிப்பெருந்தலைவரே! இன் ஒளி வீசி ஓடி இருபக்கம் ஒடு உற செல்வளி - இனிய ஒலியைப் பரப்பி இடை பிங்கலை என்னும் இருநாடிகளின் வழியே ஓடிக்கழியும் வாயுவை, ஆசை நாலு சதுர கமலம் உற்று - நான்கு பக்கத்தையுடைய மூலாதாரத்திற் பொருந்தி, ஆவல்கூர - விருப்பமுற, மூணுபதியில் - அக்கினியாதி மூன்று மண்டலங்களிலுமுள்ள, மண்முதல் சலசம் - (அங்கிருந்து சுழுமுனை நாடி

வழியாக) சுவாதிஷ்டானம் முதல் ஆக்கினை யீருகவுள்ள ஐவகைக் கமலங் களிலும், இந்து வாகை ஆர பொற்சபையும்-சந்திரகாந்தி நிறைந்த பொற் சபையும், கொளநிறுத்தி - பிரமரந்திரக் கமலத்திலும் பொருந்த நிறுத்தி, வெளி ஆரு (ம்) சோதி நூறுபத்தினுடன் எட்டு இதழ் ஆகி ஏழும் அள விட்டு - அப்பால் ஆயிரத்தெட்டு இதழோடுங் கூடிய சோதி நிறைந்த வெளியாகிய துவாதசாந்த கமலம் என ஏழுதலங்களையும் பொருந்தி, அருணவில் பதியில் - சூரிய ஒளி பொருந்திய பிரமரந்திரத்தில், விந்துநாத ஓசைசாலும் ஒரு சத்தம் அதிகப்படு இகம் ஒடு கூடி - பிரணாத ஓசை மிகுந்த ஒப்பற்ற சத்தம் அதிகப்படுகின்ற இடத்துடன் கூடி, ஒருமித்து அமுத சித்தியொடும் - மதிமண்டலத்தினின்றும் பெருகிப் பாயும் கலா மிர்தப் பேற்றுடன், வேதம் ஓது சரசத்தி அடி உற்ற திருநந்தி ஊடே - வேதம் சொல்லுகின்ற வாசி சத்திக்கு ஆதாரமாகவுள்ள ஸ்ரீ நந்தி ஒளியை யும், ஊமை யேனை ஒளிர்வித்து - ஊமையேனுக்குத் தெரிசிப்பித்து, உனது முத்தி பெற மூல வாசல் வெளிவிட்டு - தேவரீருடைய முத்தியை அடியேன் பெற்றுய்யுமாறு பிரமரந்திர வெளிவிட்டு, உனது உரத்தில் ஒளிர் - உமது திருவருள் வலிமையினுல் விளங்குகின்ற, யோக பேத வகை எட்டும் இதில் ஒட்டும் வகை - அஷ்டாங்கயோகமும் இதனுடன் பொருந்தும் வகையை, இன்று தாராய் - இன்று தந்தருள வேண்டும்.

## பொழிப்புரை

*மதுரையம்பதியில்குதிரைவியாபாரியாக வந்துஅரிமர்த்தன பாண்டியனிடம் குதிரை விற்று, அதனுல் மகிழ்ச்சியுற்ற மாணிக்கவாசகரை அடிமைகொண்ட கருணைக் கடவுளும், பொன்னுர் மேனியரும், குதிரைச் சம்மட்டியினுல் குதிரையைச் செலுத்துகின்ற வகையும் ஒளியும் உடைய சிவந்த திருக் கரத்தை யுடையவரும் ஆகிய சிவபெருமானுடைய இடப்பாகத் தில் வீற்றிருப்பவரும், அருட்சத்தியும், பொன்னிற முடைய வரும், மழலை மொழி பேசும் மாதரசும், பவள நிறத்துடன் கூடிய பச்சை நிறமுடையவரும், மங்கலமானவரும், அடியே னுடைய ஏழு பிறப்பையும் அறுத்த உமாதேவியாருமாகிய பார் வதியம்மையார் பயந்த திருப்புதல்வரே! காசி, திருவிராமேச் சுரம், இரத்தினகிரி, திருச்செங்கோடு, திருவாரூர், வேலூர், தேவூர், காஞ்சி, மதுரை, திருப்பறியல், திருவானைக்கா, பழமலை, திருவண்ணுமலை, திருத்தணிகை, திருச்செந்தூர், நாகப்பட்டினம், சீகாழி, புள்ளிருக்கும் வேளூர், பழநி, குறுக்கை, திருநாவலூர், திருவெண்ணெய்நல்லூர் முதலிய திருத்தலங்களிலும், மிகவுந் திகழ்கின்றதும் சோலைகளுடன் கூடியதுமாகிய பழமுதிர் சோலையிலும் எழுந்தருளியுள்ள முத்*

தான்மாக்களால் புகழப்பெறுகின்ற தனிப்பெருந்தலைவரே! இனிய ஒளியைப் பரப்பி இடைகலை பிங்கலை யென்னும் இரு நாடிகளின் வழியாக ஓடிக்கழியும் பிராணவாயுவை நான்கு பக்கத்தையுடைய மூலாதாரத்திற் பொருந்தி, அங்கிருந்து சுழு முனை நாடி வழியாக, சுவாதிஷ்டானம் முதல் ஆக்ஞை யீறாக வுள்ள ஐந்து கமலத்திலும் ஓட்டி நிறுத்தி, அக்கினி சூரியன் சந்திரன் என்ற மூன்று மண்டலங்களிலுஞ் செலுத்தி, பிரம ரந்திர கமலத்திலும் பொருந்த நிறுத்தி, அப்பால் ஆயிரத் தெட்டு இதழோடுங் கூடிய சோதி நிறைந்த வெளியாகிய துவாதசாந்த கமலம் வரை ஏழுதலங்களையும் பொருந்தச் செலுத்தி, சூரிய ஒளி வீசும்ஒளி மண்டலத்தில் பிரமநாதமானது ஒலிக்க அதனுடன் ஒருமித்து, மதிமண்டலத்தில் கலாமிர்தம் பெருகிப் பாய அவ்வமிர்தப் பேற்றுடன், வேதங்கூறுகின்ற சரா சத்திக்கு ஆதாரமாகவுள்ள ஸ்ரீ நந்தி ஒளியையும் ஊமையே னுக்குத் தெரிசிப்பித்து, தேவரீரது முத்தியைப் பெற பிரம ரந்திர வெளி வாசல் திறந்துவிட்டு இங்ஙனஞ் செய்வதால், உமது திருவருள் வலிமையால் விளங்குகின்ற அஷ்டாங்க யோகங்களும் இதனுடன் பொருந்தும் வகையை அடியேனுக்கு இன்று தந்தருளவேண்டும்.

## விரிவுரை

ஆசைநாலு சதுர.........இந்து வாகை :—

ஆசை—பக்கம்; நாலு சதுரக் கமலம்-மூலாதாரம். இடை பிங்கலை யென்ற இரு நாடிகளின் வழியே ஓடிக்கழியும் பிராண வாயுவை அங்ஙனஞ் செல்லவிடாது முதுகு தண்டின் நடுவே தாமரை நூல்போல் நுணுகியுள்ள சுழுமுனை நாடி வழியே செலுத்துதல் வேண்டும். சிவயோகத்தின் கருத்தை மிகவும் தெள்ளிதின் உணர்ந்த அருணகிரிநாத சுவாமிகளேயன்றி யார்தான் இதனை விளக்கவல்லார்?

"மூலங்கிள ரோருரு வாய்நடு
நாலங்குல மேனடு வேரிடை
மூள் பிங்கலை நாடியொ டாடிய முதல்வேர்கள்.

மூணும்பிர காசம தாயொரு
சூலம்பெற வோடிய வாயுவை
மூலந்திகழ் தூண்வழி யேயள விடவோடி"
—திருப்புகழ்.

அங்ஙனம் சுழுமுனை வழியே செலுத்தும் பிராண வாயுவை முறைப்படி சுவாதிஷ்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆக்கினை யென்ற ஐந்து ஆதாரங்களில் நிறுத்தி பிரமரந்திரத்திற் செலுத்தி அதற்குமேல் சகஸ்ராரக்கமலமாகிய துவாதசாந்தத்தில் செலுத்துதல் வேண்டும்.

இந்துவாகை:—

இந்து—சந்திரன். இந்துவாகை ஆர—சந்திரகாந்தி நிரம்ப.

மூணுபதி :—

சந்திரமண்டலம், சூரியமண்டலம், அக்கினி மண்டலம்.

விந்துநாத ஓசைசாலும் ஒருசத்தம்............அமுத சித்தி :—

மூலாதாரத்தில் மூண்டெழுங் கனலை காலா லெழுப்புங் கருத்தறிந்து முறைப்படி எழுப்பி மதிமண்டலத்தில் தாக்கச் செய்வதால் அமிர்ததாரை பொங்கி வழியும். வாயு அடங்கி உடம்பெங்கும் வியாபிப்பதால் தசவிதநாதங்கள் உண்டாகும்.

"அங்கிதனை முட்டி அண்ட மொடு தாவி விந்து ஒலி
கத்த மந்திரவதான வெண்புரவி மிசை யேறி"
—(கட்டிமுண்ட) திருப்புகழ்.

"நாளுமதிவேக கால்கொண்டு தீமண்ட
வாசியன லூடுபோயொன்றி வானின்க
ளுமமதி மீதி லூறுங் கலா யின்ப அமுதூறல்
நாடியதன்மீது போயொன்றி ஆனந்த
மேலை வெளியேறி நீயின்றி நானின்றி
நாடியினும் வேறு தானின்றி வாழ்கின்ற தொருநாளே"
—(மூளும்வினை) திருப்புகழ்.

என்றுவரும் அநுபவத் தெளிவுகளாகத் திகழும் அருமைத் திருப்புகழடிகளாற் றெளிக.

ஊமையேனை :—

சிவயோகநிலையில் சித்திர தீபம் போல் அசைவற நிற்பதனால் பேசா அநுபூதி பிறக்கும். சொல்லறச் சும்மாயிருத்தல். அந்நிலைபெற விரும்புவதனால் ஊமையேன் என்றனர்.

"உரையவிழ வுணர்வவிழ உளமவிழ உயிரவிழ
உளபடியை உணருமவ ரநுபூதியானதுவும்" —திருவகுப்பு.

மூலவாசல் வெளிவிட்டு :—

பிரமரந்திர வழி திறத்தல்.

"தங்கிய தவத்துணர்வு தந்தடிமை முத்திபெற
சந்திரவெளிக்குவழி அருள்வாயே" —(ஐங்கரனை)திருப்புகழ்.

வாசி வாணிகன்........செங்கையாளி :—

மாணிக்கவாசகர் குதிரை வாங்கக் கொண்டுபோன செல்வத்தைத் திருப்பணியில் செலவழித்து குருந்தடியிற் குருவருள் பெற்று சிவஞான போதச் செல்வராயமர்ந்திருந்தனர். சிவபெருமான் அவர்பொருட்டு நரிகளைப் பரிகளாக்கி வேதப்புரவி மீது குதிரைச் சேவகராக மதுரையிற் சென்று பாண்டியனிடம் குதிரை விற்று மணிவாசகரை யாட்கொண்டருளினர்.

"பரியென்ப நரிகள்தமை நடனங்கொ டொருவழுதி
பரிதுஞ்ச வருமதுரை நடராஜன்"

—(திரைவஞ்ச) திருப்புகழ்.

ஏனைய அன்பர்கள் பற்பல செயற்கருஞ் செயல்களைத் திருத்தொண்டுபுரிந்து பெருமானுக்கு அடிமைப்பட்டனர். சிவப்ரகாச சுவாமிகள் கூறுமாறு காண்க.

"கடல்நிற வண்ணன் கண்ணெனன் றிடந்து
மறைச்சிலம் பரற்று மலரடிக் கணியப்
பரிதி கொடுத்த சுருதி நாயகற்கு
முடிவிளக் கெரித்தும் கடிமலர்க் கோதைச்
சுரிகுழற் கருங்கட் டுணைவியை யளித்தும்
அருமகள் நறும்பூங் கருமயி ருதவியும்
நென்முளை வாரி இன்னமு தருத்தியும்
கோவண நேர்தனை நிறுத்துக் கொடுத்தும்
அகப்படு மணிமீன் அரற்கென விடுத்தும்
பூட்டி யரிவாள் ஊட்டி யரிந்தும்
தலையுடை யொலிக்கும் சிலையிடை மோதியும்
மொய்ம்மலர்க் கோதை கைம்மலர் துணித்தும்
தந்தையைத் தடிந்தும் மைந்தனைக் கொன்றும்
குற்றஞ் செய்த சுற்றங் களைந்தும்
பூக்கொளு மாதர் மூக்கினை யரிந்தும்
இளமுலை மாதர் வளமை துறந்தும்
பண்டைநாள் ஒருசிலர் தொண்டராயினர்."

ஆனால் ஆராலுங்காணாத அரனார்,

"மதுரை மா நகரிற் குதிரை மாறியும்
விண்புகழ் முடிமிசை மண்பொறை சுமந்தும்
நீற்றெழின் மேனியின் மாற்றடிபட்டும்."

மாணிக்கவாசகரைத் தொண்டுகொண்டனர்,

ரத்னகிரி :—

இது குளித்தலை ரயில்வேஸ்டேஷனுக்குத் தெற்கே 6½ மைலில் உள்ளது.

சர்ப்பகிரி :—

திருச்செங்கோடு; நாகாசலம் என்றும் சொல்லப்படும்.

தேவூர் :—

இத் திருத்தலம் கீழ்வேளூர் ஸ்டேஷனுக்குத் தெற்கே 3 மைலில் உள்ளது. தேவர்கள் சிவபெருமானிடம் மந்த்ரோபதேசம் பெற்ற அருமைத் தலம்.

குறுக்கை :—

அட்டவீரட்ட தலங்களுள் ஒன்று; மன்மதனை எரித்த இடம். இது திரு அன்னியூரிலிருந்து வடமேற்கே மட்சாலை வழியே 3 மைல் சென்று அங்கு நின்று ஐயாவையன் வாய்க்காலுக்கு மேற்புறம் ½ மைலிலுள்ளது.

கருத்துரை

காசிமுதல் ராமேச்சுரம் ஈறுக பல தலங்களிலும் பழமுதிர் சோலையிலும் எழுந்தருளிய எம்பெருமானே! பார்வதி பாலரே! சிவயோகம் எட்டும் எளிதில் எனக்குச் சித்திக்கும் வகை இன்றே அருள்புரிவீர்.

10

கருவாகியெ தாயுத ரத்தினி
    லுருவாகவெ கால்கையு றுப்பொடு
    கனிவாய்விழி நாசியு டற்செவி    நரைமாதர்
  கையிலேவிழ வேகிய ணைத்துயி
      லெனவேமிக மீது துயிற்றிய
      கருதாய்முலை யாரமு தத்தினி    லினிதாகித்
தருதாரமு மாகிய சுற்றமு
    நலவாழ்வுநி லாதபொ ருட்பதி
    சதமாமிது தானென வுற்றுனை    நினையாத
  சதுராயுன தாளிணை யைத்தொழ
      அறியாதநிர் மூடனை நிற்புகழ்
      தனையோதிமெய்ஞ் ஞானமுறச்செய்வ தொருநாளே

செருவாயெதி ராமசு ரத்திரள்
தலைமூளைக ளோடுநி ணத்தசை
திமிர்தாதுள பூதக ணத்தொடு வருபேய்கள்
திகுதாவுண வாயுதி ரத்தினை
பலவாய்நரி யோடுகு டித்திட
சிலகூகைகள் தாமுந டித்திட அடுதீரா
அருமாமறை யோர்கள்து தித்திடு
புகர்வாரண மாதுத னைத்திக
ழளிசேர்குழல் மேவுகு றத்தியை அணைவோனே
அழகானபொன் மேடையு யர்த்திடு
முகில்தாவிய சோலை வியப்புறு
அலையாமலை மேவிய பக்தர்கள் பெருமாளே.

## பதவுரை

செருவாய் எதிர் ஆம் - போரின் கண் எதிர்த்து வந்த, அசுர திரள் - அசுரர் கூட்டங்களின், தலை மூளைகளோடு நிணம் தசை - தலை மூளை கொழுப்பு இறைச்சி இவைகளை, திமிர் தாது உள - தேகக் கொழுப்பும் சத்த தாதுக்களும் படைத்த, பூத கணத்தொடு வரு பேய்கள் - பூதக் கூட்டங்களுடன் வந்த பேய்கள், திகுதா உணவு ஆய் - திகுதிகு என்று உணவாகக் கொண்டு, உதிரத்தினை - உதிரத்தை, பலவாய் நரி ஓடு குடித்திட - மிகுதியாக நரிகளுடன் குடிக்க, சில கூகைகள் தாமும் நடித்திட - சில கோட்டான்களும் கூட நடித்திட, அடு தீரா - கொன்றருளிய தீர மூர்த்தியே! அரு மா மறையோர்கள் துதித்திடும் - அரிய சிறந்த வேதியர்கள் துதிக்கின்ற, புகர் வாரண மாது தனை - அழகிய தெய்வயானையம்மையையும், திகழ் அளிசேர் குழல் மேவு - விளங்குகின்ற வண்டுகள் சேரும் கூந்தலையுடைய, குறத்தியை அணைவோனே - வள்ளிநாயகியையும் தழுவுகின்றவரே! அழகு ஆன பொன் மேடை - அழகிய பொன்மயமான மேடைகளும், உயர்த்திடும் முகில் தாவிய சோலை - உயரத்திலுள்ள மேகத்தையளாவிய சோலைகளும், வியப்பு உறு அலை ஆம் மலை மேவிய - அற்புதத்தையுங் கொண்டு நிறைந்த மலையில் வீற்றிருக்கும், பத்தர்கள் - அன்பர்கள் போற்றுகின்ற, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! கரு ஆகியெ - கருவாய் அமைந்து, தாய் உதரத்தினில் - தாயின் வயிற்றில், உருவு ஆகவே - உருவம் பெற்று, காய் கை உறுப்பொடு - கால் கை என்ற உறுப்புக்களுடன், கனி வாய் விழி நாசி உடல் செவி - இனிய வாய் கண் மூக்கு உடல் காது என்னும் அங்கங்களுடன், நரைமாதர் கையிலே விழஏகி - மருத்துவச்சியின் கையில் விழும்படி வந்து, அணை துயில் எனவே-

படுக்கையில் தூங்கு என்று, மிகமீது துயிற்றிய - மிகவும் பாராட்டிப் படுக்கையில் தூங்கச் செய்த, கருது ஆய் முலை ஆர் அமுதத்தினில் - நலத்தை எண்ணுகின்ற அன்னையின் முலையில் நிறைந்துள்ள பாலில், இனிது ஆகி - அன்பனாகி வளர்ந்து, தரு தாரமும் - தனக்கென்று தந்த மனைவி, ஆகிய சுற்றமும் - உண்டாகியுள்ள உறவினர்களும், நல வாழ்வும் - நல்ல வாழ்வும், நிலாத பொருள் - நிலைத்து நிற்காத பொருளும், பதி - ஊரும், சதம் ஆம் இதுதான் என உற்று - இவையாவும் நிலையாம் என்று கருதி, உனை நினையாத சதுர் ஆய் - தேவரீரை நினையாத சாமர்த்தியம் உடையவனாய், உன தாள் இணையை - உமது இரு திருவடிகளை, தொழ அறியாத நிர் மூடனை - தொழுவதற்கு அறியாத முழு மூடனை, நின்புகழ் தனை ஓதி - உமது புகழினை ஓதி, மெய் ஞானம் உற செய்வது ஒருநாளே - உண்மை ஞானத்தை அடையச் செய்யும் நாள் ஒன்று உண்டாகுமோ?

## பொழிப்புரை

போர்க்களத்தில் எதிர்த்துவந்த அசுரர் கூட்டங்களின் தலை மூளை கொழுப்பு இறைச்சி இவைகளை, உடற் கொழுப்பும் ஏழு தாதுக்களும் படைத்த பூதக் கூட்டங்களுடன் வந்த பேய்கள், திகுதிகு என்று வேகமாக உணவாக உண்டு, நரிகளுடன் உதிரத்தை நிரம்பவும் குடித்து, சில கோட்டான்களுடன் கூத்தாடுமாறு கொன்ற தீரமூர்த்தியே! அரிய சிறந்த வேதியர்கள் துதி செய்கின்ற அழகிய தேவயானையையும், விளங்குகின்ற வண்டுகள் சேர்ந்த கூந்தலையுடைய வள்ளியம்மையையும் தழுவுகின்றவரே! அழகிய பொன்மயமான மேடைகளும், உயரத்திலுள்ள மேகங்கள் தழுவுகின்ற சோலைகளும் உடைய அற்புதமான பழமுதிர் சோலை யென்ற மலையில் வீற்றிருக்கும், அன்பர்கள் போற்றும் பெருமிதம் உடையவரே! தாயின் வயிற்றில் கருவாகி உருவம் பெற்று, கால் கை இனிய வாய் கண் மூக்கு உடல் காது என்ற உறுப்புக்களுடன் மருத்துவச்சியின் கையில் விழும்படி வந்து, தாய் மிகவும் சீராட்டிப் படுக்கையில் தூங்கு என்று தூங்கச் செய்த, நலத்தைக் கருதுகின்ற அன்னையின் முலையில் நிறைந்துள்ள பாலில் பிரியம் உடையவனாகி வளர்ந்து, தனக்கென்று தந்த மனைவி, சுற்றம், நல்லவாழ்வு, நிலையில்லாத செல்வம், ஊர் முதலியவைகளை நிலையானவையென்று எண்ணி, தேவரீரை நினையாத சாமர்த்தியத்தை உடையவனை, உமது இரு திருவடிகளை வணங்கத் தெரியாத முழு மூடனை, உமது புகழை ஓதி உண்மை ஞானத்தைப் பெறச் செய்யும் நாள் ஒன்று எனக்கு உண்டாகுமோ?

## விரிவுரை

கருவாகியெ தாயுதரத்தினில் உருவாகவே:—

உயிர்கள் அநேக பிறவிகளில் செய்த புண்ணியத்தால் மனிதப் பிறப்பில் வருகின்றன. தாயின் வயிற்றில் கருவில் உருவாகி கண் காது முதலிய அங்கங்களை இறைவன் அமைத்துத்தரப் பெறுகின்றோம்.

இந்த மனித உடம்பு பலப்பல கருவிகளுடன் கூடிய அழகிய படைப்பு. அதியற்புதமானது.

நரைமாதர் கையிலே விழவேகி:—

நரைமாது—மருத்துவச்சி. மகவைப் பெறும்போது அருகில் இருந்து உதவி செய்கின்ற அவள் கையிலே குழந்தை வந்து விழுகின்றது.

அணைத்துயிலென :—

அணை—படுக்கை. படுக்கையில் தூங்குக என்று தாய் தாலாட்டித் தூங்க வைப்பாள்.

தமிழ் நாட்டில் தாலாட்டும் பாட்டிலேயே பல அரிய உண்மைகள் அடங்கிக் கிடக்கும்.

கருதாய் :—

கருது ஆய். குழந்தையின் நலத்தையே எண்ணுகின்ற அன்னை.

தருதாரமுமாகிய சுற்றமு நலவாழ்வு நிலாத பொருட்பதி சதமாமிது தானென:—

பெண் வீட்டார் கன்னிகாதானமாகத் தந்த மனைவி, சுற்றத்தார்கள், நல்லவாழ்வு, நிலையில்லாத செல்வம், ஊர் முதலியவற்றை அறிவின்மையால் என்றும் சதம் என்று மாந்தர் கருதி மாய்கின்றனர்.

> நில்லாதவற்றை நிலையின என்றுணரும்
> புல்லறிவாண்மை கடை. —திருக்குறள்

உனதாளிணையைத் தொழ அறியாத நிர் மூடனை:—

இறைவனுடைய திருவடியைத் தொழுதால் நிலையான பேரின்பங் கிடைக்கும்.

இறைவனைத் தொழுதவரை உலகமெல்லாந் தொழும். அப் பரமனைத் தொழாதார் வறியராய் எல்லோரையுந் தொழுது அழுது அவல நிலையில் அல்லல் படுவர்.

நிற்புகழ் தனையோதி மெய்ஞ்ஞானமுறச் செய்வதொருநாளே:—

இறைவன் புகழ் இருள்சேர் இரு வினையைக் கெடுத்து ஞான வொளியைக் கொடுக்கும்.

இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு. —திருவள்ளுவர்.

"ஆதலால் முருகா! உனது திருப்புகழை யோதி அடியேன் மெய்ஞ் ஞான நிலையைப் பொருந்தும் நாள் என்று கிடைக்குமோ?" என்று அருணையடிகள் இறைவனிடம் முறையிடுகின்றார்.

திகுதாவுணவாய்:—

திகுதிகு எனல்—விரைவுக் குறிப்பு.

அலையாமலே:—

அலை—மிகுதி. அதிசயங்கள் மிகுந்த மலை சோலைமலை.

## கருத்துரை

சோலைமலைக் குமரா! உன் திருப்புகழைப் பாடி அடியேன் மெய்ஞ்ஞானம் பெற அருள்புரிவீர்.

## 11

சீர்சி றக்கு மேனி பசேல் பசே லென
நூபு ரத்தி னோசை கலீர் கலீ ரென
சேர விட்ட தாள்கள் சிவேல் சிவே லென வருமானார்
சேக ரத்தின் வாலை சிலோர் சிலோர் களு
நூறு லக்ஷ கோடி மயால் மயால் கொடு
தேடி யொக்க வாடி யையோ வையோ வென
மடமாதர்

மார்ப டைத்த கோடு பளீர் பளீ ரென
ஏம லித்தெ னுவி பகீர் பகீ ரென
மாம சக்கி லாசை யுளோ முளோ மென நினைவோடி
வாடை பற்று வேளை அடா அடா என
நீம யக்க மேது சொலாய் சொலா யென
வாரம் வைத்த பாத மிதோ இதோ என அருள்வாயே

பார தத்தை மேரு வெளீ வெளீ திகழ்
கோடொ டித்த நாளில் வரைஇ வரைஇ பவர்
பானு றக்க ணேசர் குவா குவாகனர் இளையோனே
பாடன் முக்ய மாது தமீழ் தமீ ழிறை
மாமு நிக்கு காதி லுணர் வுணர் விடு
பாச மற்ற வேத குரு குரு பர குமரேசா
போர்மி குத்த சூரன் விடோம் விடோ மென
நேரெ திர்க்க வேலை படீர் படீரென
போய றுத்த போது குபீர் குபீ ரென வெகுசோரி
பூமி யுக்க வீசு குகா குகா திகழ்
சோலை வெற்பின் மேவு தெய்வா தெய்வானை தோள்
பூணி யிச்சை யாறு புயா புயா றுள பெருமாளே.

## பதவுரை

பாரதத்தை - பாரதமென்ற சிறந்த இதிகாசத்தை, மேரு வெளீ - மேருகிரியின் பரந்த இடத்திலே, வெளீ திகழ் - வெண்மையாக விளங்குகின்ற, கோடு ஒடித்த நாளில் வரைஇ - கொம்பை கஜமுகாசுரவதத்தின் போது ஒடித்த நாளிலேயே இது மீண்டும் அசுரசம்மாரத்திற்கும் எழுதுவதற்கும் ஆகுமென்று முடிவு செய்துகொண்டபடி, வரைபவர் - எழுதியவரும், பானு நிறக் கண ஈசர் - சூரியனைப் போன்ற சிவந்த நிறமுடையவரும் கணங்கட்குத் தலைவரும், குவ ஆகுவாகனர் - திரண்டிருக்கின்ற பெருச்சாளியை வாகனமாக வுடையவரும் ஆகிய விநாயகமூர்த்தியின், இளையோனே - இளைய சகோதரரே! பாடல் முக்ய மாது - சிறந்த பாடல்களோடு கூடிய கலைமடந்தைக்கு, தமிழ் தமிழ் இறை - இனிய மொழியாகிய தமிழ் மொழிக்குத் தலைவராகிய, மாமுனிக்கு-அகத்திய முனிவருக்கு, காதில் உணர் - செவியில் ஞான உணர்ச்சியை, உணர் விடு - உணர்த்திவிட்ட, பாசம் அற்ற வேத குரு - இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கிய ஞான குருமூர்த்தியே! குருபர - குருமூர்த்திகளுக்கெல்லாம் முதன்மையானவரே! குமர ஈசா - குமாரக் கடவுளே! போர் மிகுத்த சூரன் - போர்த்திறத்திலே மிகுந்த சூரபன்மன், விடோம் விடோம் என நேர் எதிர்க்க - தேவர்கள் சிறையை விடமாட்டோம் விடமாட்டோம் என்று வீரவசனங்களைக் கூறி எதிராக வந்து எதிர்த்துப் போர்புரிதலும், வேலை படீர் படீர் என - கடல் படீர் படீர் என்று கதறவும், போய் அறுத்தபோது - வேலாயுதமானது சென்று அவுணர்கள் உடல்களை அறுத்த சமயத்தில், குபீர் குபீர் என வெகுசோரி பூமி உக்க வீசு குகா - குபீர் குபீர் என்று மிகுந்த உதிரம் பூமி

யிற் சிந்தும்படி வேலை விடுத்தருளிய குகக்கடவுளே! குகா திகழ் சோலை வெற்பின் மேவு தெய்வா - குகைகள் திகழ்கின்ற பழமுதிர்சோலை என்னும் மலையில் விரும்பி வாழ்கின்ற தெய்வமே! தெய்வானைதொள் பூண் இச்சை ஆறுபுயா - தெய்வயானை யம்மையாருடைய தோள்களை விருப்பத்துடன் அணிகின்ற ஆறு புயங்களையுடையவரே! புய ஆறு உள பெருமாளே - மற்றைய ஆறு புயங்களையுடைய பெருமையிற் சிறந்தவரே! சீர் சிறக்கு மேனி பசேல் பசேல் என - அழகிலே சிறந்த மேனி பசுமையாக ஒளி செய்யவும், நூபுரத்தின் ஓசை கலீர் கலீர் என - பாதத்திலுள்ள நூபுரமென்னும் ஆபரணத்தின் ஒலி கலீர் கலீர் என்று சத்திக்கவும், சேரவிட்ட தாள்கள் சிவேல் சிவேல் என - நெருங்க விடுகின்ற கால்கள் சிவந்து தோன்றவும்: வருமானுர் - ஒய்யாரமாக வருகின்ற விலைமகளிர், சேகரத்தின் வாலை சிலோர் சிலோர்களும் - கூட்டமாக இளம்பெண்களிற் சிலரும், நூறு லக்ஷ கோடி மயால் மயால் கொடு - எண்ணமுடியாத அளவில் மயக்கத்தை யடைந்து, தேடி ஒக்க வாடி ஐயோ ஐயோ என - விருப்பத்தினால் தேடித் திரிந்து வாடி ஐயோ ஐயோ என்று வருந்தும், மடமாதர் - மடமைக்குணம் பொருந்திய மாதர்களின், மார்படைத்த கோடு பளீர் பளீர் என - மார்பில் உள்ள தனங்கள் பளீர் பளீர் என்று அழகு செய்ய, ஏமலித்து என் ஆவி பகீர் பகீர் என - மிகுந்த மகிழ்ச்சியடைந்து என் உயிர் பகீர் பகீர் என்று பதறவும், மா மசக்கில் ஆசை உளோம் உளோம் என - பெரிய மயக்கி னால் ஆசைகொண்டிருக்கின்றோம் என்று கூற, நினைவு ஓடி - அவர்களிடம் எனது எண்ணம் விரைந்து செல்ல, வாடை பற்றும் வேளை - அம்மக ளிரினது மயல் காற்று என்னைப் பற்றுகின்ற காலத்து, அடா அடா என - அடாது அடாது என்றும், நீ மயக்கம் ஏது சொலாய் சொலாய் என - "உனக்கு ஏன் மயக்கம்? சொல்வாய் சொல்வாய்" என்றும், வாரம் வைத்த பாதம் இதோ இதோ என - 'நீஅன்புவைத்த திருவடி இதோ இருக் கின்றது' என்றும், அருள்வாயே - திருவருள்புரிவீர்.

## பொழிப்புரை

பாரதமென்ற பெருங்காவியத்தை வியாசமுனிவர் சொல்ல மேருகிரியில், வெண்மையாகத் திகழும் கொம்பை கஜமுக சம்மார காலத்தில் ஒடித்த அக்காலத்திலேயே முடிவு செய்த வாறு எழுதியவரும், சூரியனைப்போல சிவந்த நிறமுடைய வரும், கணங்கட்குத் தலைவரும், திரண்ட பெருச்சாளியை வாகனமாக வுடையவருமாகிய விநாயகப் பெருமானுடைய இளைய சகோதரரே! சிறந்த பாடல்களோடுகூடிய கலை மடந்தைக்கு இனிய மொழியாகிய தமிழ் மொழிக்குத் தலைவராம் அகத்திய மாமுனிவருக்கு அவருடைய செவியில் ஞான உணர்ச்சியை உணரவிட்டவரும், இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கியவருமாகிய மெய்ஞ்ஞான குருமூர்த்

தியே! போர்த்திறத்தில் சூரபன்மன் தேவர்கள் சிறையை ஒருபோதும் விடமாட்டோம் என்று கூறி எதிராக வந்து போர் புரிதலும், கடல் படீர்படீர் என்று கதறவும், வேற்படை சென்று அவுணர்களது உடலை அறுத்தபோது மிகுந்த உதிரம் குபீர்குபீர் என்று கொப்பளித்து பூமியில் சிந்த வேலை விடுத்தருளிய குகப் பெருமானே! குகைகளுடன் கூடிய பழமுதிர் சோலை யென்னும் திருத்தலத்தில் விரும்பி வாழுகின்ற தெய்வமே! தெய்வயானை யம்மையாருடைய தோள்களை அன்புடன் பூணுகின்ற ஆறு புயங்களையுடையவரே! பற்றைய ஆறு புயங்களையுடைய பெருமிதத்தின் மிகுந்தவரே! சிறந்த அழகியமேனி பசுமையாக ஒளி செய்யவும், காலிலுள்ள நூபுரங்கள் கலீர் என்று ஒலி செய்யவும், நெருங்கி விடுகின்ற கால்கள் சிவந்து அழகுசெய்யவும், ஒய்யாரமாக வருகின்ற விலைமகளிரில் இளம் பெண்களிற் சிலர் மிகுந்த மயக்கத்தை யடைந்து என்னைத் தேடி வந்து, "ஐயோ! மிகுந்த விருப்பத்தால் மயங்கியிருக்கின்றோம்" என்று கூறவும், அவர்களது மார்பில் உள்ள தனங்கள் மிகவும் அழகு செய்யவும், அதுகண்டு என் உயிர் பகீர் என்று துடிக்கவும், அவர்களிடத்தில் எனது எண்ணம் விரைந்து செல்லவும், அம் மகளிரது மயல்காற்று என்னைப் பற்றுகின்ற காலத்து, "அன்பனே! இது உனக்கு அடாது அடாது; உனக்கென்ன மயக்கம்? சொல்வாய். நீ அன்பு வைத்த பாதம் இதோ இருக்கின்றது" என்று திருவருள்புரிவீர்.

## விரிவுரை

வாடை பற்றும் வேளை அடா அடா என:—

பெண்கள் மயலை வாடைக்காற்ருக உருவகம் புரிந்தனர். வாடைக்காற்று குளிர் நடுக்கம் முதலிய துன்பம் புரிவதுபோல் பெண்மயலும் பெருத்த துன்பத்தைத் தரும்.

> "காமமில்லையெனிற் கடுங்கேடெனும்
> நாமமில்லை நரகமுமில்லையே" —இராமாயணம்.

அடாது அடாது என்பது அடா அடா என கடைக் குறையாக நின்றது.

திருநாவலூரில் ஆதிசைவர் மரபிலே சடையனுருக்கு இசைஞானியார்பால் அவதரித்த நம்பியாரூரரை, தடுத்தாட் கொள்ளும்பொருட்டு, திருக்கைலை மலையினின்று மண்ணுலகிற்கு, கிழவடிவு தாங்கிவந்து ஓலை காட்டி வலிதிலாட்கொண்ட

வள்ளலாகிய சிவபெருமானுடைய திருமைந்தராதலின் வாடை பற்றும் வேலே ஆட்கொள்ளுமாறு சுவாமிகள் வேண்டுகின்றனர்.

ஆலுமறை சூழ்கயிலை யின்கணருள் செய்தே
சாலுமொழி யால்வழி தடுத்தடிமை கொள்வான்
மேலுற வெழுந்துமிகு கீழுற வகழ்ந்து
மாலுமிரு வர்க்குமரி யாரொருவர் வந்தார்.

—பெரியபுராணம்.

நீ மயக்கம் ஏது சொலாய் சொலாய் என:—

"சுவாமீ! தேவரீர் மகமாயை களைந்திட வல்ல பிரானாதலின் பெண்மயலால் பீடித்து வருந்துகின்ற அடியேனை, 'அன்பனே! உனக்கு என்ன மயக்கம் சொல்லக்கடவாய்' என்று தடுத்து என் மயலை அயலாக்கி யருள்புரியவேண்டும்"

வாரம் வைத்த பாதம் இதோ இதோ என அருள்வாயே:—

வாரம்—அன்பு. "நீ அன்பு வைத்த திருவடி இதோ இருக்கின்றது' என்று காட்டி திருவடிப்பேற்றை அருள்வீர்" என்று பிரார்த்திக்கின்றனர்; இதோ இதோ என்று இரண்டில் முன்னையதைச் சுட்டாகவும், பின்னையதை இது ஓ எனப் பிரித்தும் இத் திருவடியே ஓகார மந்திரம் என்று கூறுவாரும் உளர்.

அறிவித்தாலன்றி ஆன்மா அறியாது. பசுத்தன்மை தானே யறியாது. இறைவன் அறிவு அறிவிக்க அறியு மியல்புடையது. கண் கதிரொளி துணை புரிந்தாலல்லது தானே காணாது. கண்ணொளிபோல் ஆன்ம அறிவு; கதிரொளிபோல் இறைவனுடைய அறிவு. ஆதலின், "பாதம் இதோ" என்று இறைவன் தனது திருவடியைக் காட்ட அவனருளே கண்ணாகக் கொண்டு காணவேண்டும்.

அங்ஙனம் இறைவன் காட்டக் கண்டவர் அப்பமூர்த்திகள்.

"கண்டேனவர்திருப் பாதங் கண்டறியாதன கண்டேன்"

—தேவாரம்.

பாரதத்தை மேருவெளீ.....................வரைபவர்:—

இதிகாசங்கள் மூன்றனுள் ஒன்று பாரதம். பரத வமிசத்தார் சரித மாதலின் பாரதம் எனப்பட்டது; தத்திதாந்த நாமம். வடமொழியில் விரிந்த விழுமிய காவியம். அதனை வியாசர் கூற விநாயகர் எழுதினர் எனின் அதன் பெருமையை அளவிட வல்லார் யாவர்?

## பாரதம் எழுதிய வரலாறு

கிருஷ்ணத்வைபாயனர் என்னும் வேதவியாசர் இமாசலத்தில் மூன்று ஆண்டுகள் யோகத்தில் அசைவற் றிருந்தனர். அந்த யோகக் காட்சியில் கண்ட பாரத வரலாற்றைச் சுலோக வடிவாகப் பாடவேண்டுமென்று துணிந்தனர். பாடுகின்ற கவிவாணன் பக்கலில் எழுதுகின்றவன் வேறு இருத்தல் அவசியம். பாடுகின்றவனே எழுதினால் பாடுகின்ற கவனசக்தி தடைபடும். எழுதுகின்றவர் சிறந்த மதிநலம் வாய்த்தவராக இருத்தல் அதனினும் அவசியம். பதங்களிலுள்ள எழுத்துக்களைச் சிறிது இடம் பெயர்த்து நிலைமொழியின் ஈற்றெழுத்தை வருமொழியோடு சேர்த்துவிட்டால் பேராபத்தாக முடிந்துவிடும். உதாரணமாக:

மா தேவா சம்போ கந்தா என்ற பதங்களை எழுதுகின்றவன் மாதே வா சம்போகந் தா என்று எழுதினால் எவ்வளவு பெரிய விபரீதமாக ஆகின்றது என்று பாருங்கள். ஆதலினால் விநாயகராகிய ஐந்துகர பண்டிதரே எழுதவல்லாரென்று வியாசர் நினைத்தனர். விநாயகமூர்த்தியை வேண்டித் தவமிழைத்தனர். ஆனைமுகத்தண்ணல் ஆகு வாகனமீது தோன்றியருளினார். விநாயகர் விரைமலரடி மேல் வியாசர் வீழ்ந்து பன்முறை பணிந்து, "எந்தையே! அடியேன் பாரதம் பாட மேற்கொண் டிருக்கின்றேன். அதனைத் தேவரீர் மேருகிரியில் எழுதியுதவிசெய்தல் வேண்டும்" என்று வேண்டிநின்றனர். விநாயகர் புன்னகை புரிந்து, "அன்பனே! நன்று நன்று. நின் எண்ணம் நன்று. நான் உன்னிடம் பாரதம் எழுத ஒப்புக்கொண்டேனாயின் எத்தனையோ அன்பர்களின் காரியங்களின் இடர்கெடுத்துஉதவுதல் வேண்டியதற்குத் தடைபடுமல்லவா? அதுவும் நீ நூதனமாகப் பாடப்போகின்றனை. ஜாமத்திற்குப் பத்து சுலோகமாகப் பாடிக்கொண் டிருந்தால் பாரதம் பாடிமுடிய எத்துணை ஆண்டுகள் செல்லுமோ? ஆதலின் இதற்கு நாம் உடன்பட மாட்டோம்" என்றனர்.

வியாசர், "ஆண்டவரே! அருட்கடலே! தேவரீரைத் தவிர இதனை எழுத வல்லார் வேறு இல்லை. வேண்டிய வரங் கொடுக்கும் கருணைவள்ளலாகிய நீர் இதனை மன்பதைகட் கெல்லாம் நலன் விளையும்பொருட்டு எழுதுதல் வேண்டும்" என்று வேண்டி வணங்கினார். விநாயகர், "அன்பனே! அங்ஙனமே நின் கருத்தின்படி நாம் எழுதுவோம். ஆனால் உனக்

கும் எமக்கும் ஒரு உடன்படிக்கை யிருத்தல் வேண்டும். அதாவது நாம் மிக்க வேகமாக எழுதுவோம். எமது எழுத்தாணி ஒழியாமல் நீ சொல்ல வேண்டும். சிறிது தடை பட்டாலும் நாம் எழுதுவதை நிறுத்திவிடுவோம்'' என்றனர். வியாசர், ''எம்பெருமானே! அங்ஙனமே மிக்க விரைவுடன் கூறுவேன்; ஆனால் அடியேன் கூறும் சுலோகங்களுக்குப் பொருள் தெரிந்து கொண்டு எழுதுதல் வேண்டும்'' என்றார். விநாயகரும் அதற்கு உடன்பட்டனர். வியாசர் விநாயகரைத் தியானித்துப் பாடத் தொடங்கினார். திருவருள் துணைசெய்ய வேகமாகப் பாடுவாராயினார். இடையில் மிக்கக் கடினமான பதங்களுடைய ஒரு சுலோகத்தைச் சொன்னார். விநாயகர் சற்று அதன் பொருளைச் சிந்திப்பதற்குள் பல்லாயிரம் சுலோகங்களை மனதில் சிந்தனை செய்து கொண்டனர். அவைகளை மிக்க விரைவுடன் கூறிய பின் மீண்டும் ஒரு கடின பதங்க ளமைந்த சுலோகத்தைக் கூறினார். ஐங்கரனார் அதன் பொருளைச் சிந்திப்பதற்குள் பலப் பல சுலோகங்களை உள்ளத்தில் ஆவாகனம் பண்ணிக் கொண்டார். இப்படியாக விநாயகர் சிந்தித்து எழுதும் பொருட்டு வியாசர் கூறிய சுலோகங்கள் எண்ணாயிரத்து எண்ணூறு. வியாசர், ''இதற்குப் பொருள் எனக்குத் தெரியும்; என் மைந்தன் சுகனுக்குத் தெரியும்; சஞ்சயனுக்குத் தெரியுமோ தெரியாதோ'' என்று அநுக்கிரமணிகா பர்வத்தில் கூறியிருக்கின்றனர்.

வியாசர் மொத்தம் பாடிய சுலோகங்கள் 60 லட்சம்.

''பகைகொள் துரியோதனன் பிறந்து
படைபொருத பாரதந் தெரிந்து
பரியதொரு கோடு கொண்டு சண்ட வரைமீதே

பழுதற வியாசனன் றியம்ப
எழுதிய விநாயகன் சிவந்த
பவளமத யானை பின்பு வந்த முருகோனே''
—(குகையினவ)திருப்புகழ்.

பாடன் முக்ய மாது.......... பாசமற்ற வேதகுரு:—

சிறந்த பாடல்களோடு கூடியது தமிழ்; தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி, திருமந்திரம் முதலிய மிகச் சிறந்த பாடல்களால் அலங்கரிக்கப் பெற்ற மொழி தமிழ் மொழியேயாம். ''வேதப் பாடலினும் விழுமியது திருவாசகப் பாடல்'' என்றார் சிவப்பிரகாச சுவாமிகள்.

"விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கட்
காரண னுரையெனும் ஆரண மொழியோ
ஆதிசீர்ப் பரவும் வாதவூ ரண்ணல்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ
யாதோ சிறந்த தென்குவீ ராயின்
வேத மோதின் விழிநீர் பெருக்கி
நெஞ்சநெக் குருகி நிற்பவர்க் காண்கிலேம்
திருவா சகமிங் கொருகா லோதின்
கருங்கன் மனமுங் கரைந்துகக் கண்கள்
தொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
அன்பரா குந ரன்றி
மன்பதை யுலகின் மற்றைய ரிலரே."

இத்தகைய பாடல்களையுடைய தமிழ்மொழிக்குத் தலைவர் அகத்திய முனிவர். தமிழ்—இனிமை.

"இனிமையும் நீர்மையும் தமிழெனலாகும்"—நிகண்டு

அகத்தியமுனிவருக்குப் பிரணவோபதேசத்தை முருகவேள் புரிந்தருளினர். முருகக்கடவுளுடைய முக்கிய சீடர்கள் மூவர். சிவபெருமான், அகத்திய முனிவர், அருணகிரிநாதர்.

வேலா சரணஞ் சரணமென் மேல்வெகுளாமலினி
மேலா யினுங் கடைக் கண்பார் பருப்பத வேந்தன்மகள்
பாலா குறுமுனி யார்க்குந் திருப்புகழ்ப் பண்ணவர்க்கும்
ஆல்ால முண்டவர்க்கும் உபதேசித்தவெ ஞண்டவனே.
—முருகரந்தாதி

போர்மிகுத்த சூரன்...........பூமியுக்க வீசுகுகா:—

சூரபன்மன் தேவர்களையும் இந்திரன் மகனாகிய சயந்தனையுந் தேவமாதர்களையும் சிறைப்படுத்தித் துன்புறுத்தினான். பலயுகங்களாகப் பதைபதைத்த தேவர்கள் "இனி உய்வு உண்டோ" என ஏங்கினர்.

"தண்டேன் றுளிக்குந் தருநிழற்கீழ் வாழ்க்கை வெஃகிக்
கொண்டேன் பெருந்துயரம் வான்பதமுங் கோதென்றே
கண்டேன் பிறர்தம் பதத் தொலைவுங் கண்டனனால்
தொண்டேன் சிவனேநின் தொல்பதமே வேண்டுவனே"

என்று சயந்தன் புலம்பினான்.

முடிவில் இந்திரனாதியிமையவர் இளம்பூரணனாகிய எந்தை கந்தவேள் திருமுன் சென்று, "வால குமரா குகா கந்தா

வேலா மயிலா'' என்று வழுத்தி வணங்கினார்கள். முருகவேள் படையுடன் புறப்பட்டு செந்திமாநகரம் வந்து திருக்கோயிலில் வீற்றிருந்தனர். அரசநீதிப்படி தேவர்கள், சிறையை விடுவிக்குமாறு வீரவாகு தேவரைத் தூது அனுப்பினார். வீரவாகு தேவர் அஞ்சாநெஞ்சுடன் தன்னந்தனியாக தனது தோளும் வாளும் துணையாகக் கொண்டு சூரபன்மன் பேரவைக்குள் பெருமிதமாகச் சென்றனர்.

நவரத்தின சிங்காசனத்தை முருகனருளால் தருவித்து அதன்மீதிருந்து முருகன் முழுமுதற்றன்மை முழுவதும் கூறியருளினார். ''அடா சூரபன்மனே! தேவர்களைச் சிறைவிடுமாறு கந்தக் கடவுளின் கட்டளை. முழுமுதலாகிய முருகவேளின் மொழியைத்தட்டாதே'' என்று பலப்பல நீதிகளைப் பகர்ந்தார். சூரபன்மன் கைகொட்டி நகைத்து,

''எண்ணிலாததோர் பாலகன் என்னை வெல்வனென்கை
விண்ணிலா தவன் றன்னையோர் கனியென வெஃகிக்
கண்ணிலாதவன் காட்டிடக் கையிலாதவன் போய்
உண்ணிலாத பேராசையாற் பற்றுமா றொக்கும்''

என்று கூறி தேவர் சிறையை விடாது மறுத்துவிட்டான். அதனால் முருகவேள் வேலாயுதத்தால் அவர்களை அழித்து அமரர் சிறை மீட்டனர்.

## கருத்துரை

விநாயகரது தம்பியே! குருபரரே! சூரபன்மனாதி யவுண குல காலரே! சோலைமலைக் கதிரேசரே! பெண்மயலுற்று வாடைபற்றும் வேளை தேவரீர் தடுத்தாண்டு காத்தருள்வீர்.

## 12

துடிகொ ளோய்க ளோடு வற்றி
தருண மேனி கோழை துற்ற
இருமல் லீளை வாத பித்த மணுகாமல்
துறைக ளோடு வாழ்வு விட்டு
உலக நூல்கள் வாதை யற்று
சுகமு ளாநு பூதி பெற்று மகிழாமே

உடல்செய் கோர பாழ்வ யிற்றை
நிதமு மூணி னாலு யர்த்தி
யுயிரி னீடு யோக சித்தி பெறலாமே
உருவி லாத பாழில் வெட்ட
வெளியி லாடு நாத நிர்த்த
உனது ஞான பாத பத்ம முறுவேனோ

கடிது லாவு வாயு பெற்ற
மகனும் வாலி சேயு மிக்க
மலைகள் போட ஆழி கட்டி யிகலூர்போய்க்
களமு றானை தேர்நு றுக்கி
தலைக ளாறு நாலு பெற்ற
அவனை வாளி யால டுத்தன் மருகோனே

முடுகு வீர சூர பத்மர்
தலையின் மூளை நீறு பட்டு
முடிவ தாக ஆடு நிர்த்த மயில்வீரா
முனிவர் தேவர் ஞான முற்ற
புனித சோலை மாம லைக்குள்
முருக வேல த்யாகர் பெற்ற பெருமாளே.

## பதவுரை

கடிது உலாவு வாயு பெற்ற மகனும் - வேகமாகவுலாவுகின்ற வாயு தேவன் பெற்ற மைந்தனும் அநுமனும், வாலி சேயும் - வாலியின் மகனும் அங்கதனும், மிக்க மலைகள் போட - மிகுதியாக மலைகளைக் கொணர்ந்து போட, ஆழி கட்டி - கடலில் அணைபுதுக்கி, இகல் ஊர்போய் - பகைவருடைய ஊருக்குச் சென்று, களம் உறு - போர்க்களத்தில் வந்த, ஆனை தேர் நுறுக்கி - யானைகளையும் தேர்களையுந் தூளாக்கி, தலைகள் ஆறு நாலு பெற்ற அவனை - பத்துத்தலைகள் படைத்த இராவணனை, வாளியால் அடு அத்தன் மருகோனே - அம்பினால் கொன்ற திருமாலின் மருமகரே! முடுகு வீர - போரில் முடுகிவந்த வீரராகிய, சூர பத்மர் - சூரபதுமர் என்பவரின், தலையின் மூளை நீறுபட்டு முடிவு அது ஆக - தலையில் உள்ள மூளையானது தூளாகி முடிவுபெற, ஆடும்நிர்த்தம் - நடனம் ஆடிய, மயில் வீரா - மயில் வீரரே! முனிவர் தேவர் - முனிவர்களும் தேவர்களும், ஞானம் உற்ற - ஞானத்தை யடைந்த, புனித சோலை மா மலைக்கு உள் முருக - பரிசுத்தமான

சோலை மாமலைக்குள் வீற்றிருக்கின்ற முருகக்கடவுளே! வேல - வேலவரே ! த்யாகர் பெற்ற - தியாகமூர்த்தியாம் சிவபெருமான் பெற்ற, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! துடி கொள் நோய்களோடு வற்றி - துடிக்கச் செய்கின்ற நோய்களால் உடல் வற்றி, தருணமேனி கோழை துற்ற - இளமையுடன் கூடிய மேனியில் கோழை நெருக்க, இருமல் ஈளை வாத பித்தம் அணுகாமல் - இருமல் காசம் வாதம் பித்தம் எனப்படும் நோயகள் அடியேனை அணுகாதபடி, துறைகளோடு வாழ்வு விட்டு - அறத்துறை களுடன் கூடிய இவ்வாழ்வை விடுத்து, உலக நூல்கள் வாதை அற்று - உலக சம்பந்தமான நூல்களைக் கற்கவேண்டிய வேதனை நீங்கி, சுகம் உள அநுபூதி பெற்று - சுகத்தையுடைய அநுபூதியைப் பெற்று, மகிழாமே - அடியேன் மகிழ்ச்சியடையாமல், உடல் செய் கோர பாழ் வயிற்றை - உடலை வளர்க்கும் கோரமான பாழான வயிற்றை, நிதமும் ஊணினால் உயர்த்தி - தினந் தினமும் உணவினால் வளரச் செய்து, உயிரின் நீடு யோக சித்தி பெறல் ஆமே - உயிர் நீண்ட காலம் இருக்கும்படியான யோகசித்தி களைப் பெறுதல் நன்றோ? உரு இலாத பாழில் - உருவம் கடந்த பாழ் வெளி யில், வெட்ட வெளியில் ஆடும் நாத நிர்த்த - வெட்ட வெளியிலே நாத கீதத் துடன் ஆடுகின்ற கூத்தக் கடவுளே! உனது ஞான பாத பத்மம் உறுவேனோ - தேவரீருடைய ஞானமேயான பாத தாமரையை அடை வேனோ ?

## பொழிப்புரை

வேகமாக வுலாவுகின்ற வாயுதேவன் பெற்ற அநுமனும், வாலிமகனாகிய அங்கதனும் மிகுதியான மலைகளைக் கொணர்ந்து போட, சமுத்திரத்தில் அணைகட்டி, பகைவருடைய ஊருக்குள் சென்று, போர்க்களத்தில் இருந்த யானைகளையும் தேர்களையுந் தூளாக்கி, பத்துத் தலைகளையுடைய இராவணனை அம்பினால் அழித்த அண்ணலாகிய திருமாலின் திருமருகரே! போருக்கு முடுகிவந்த சூரபத்மரின் தலையில் உள்ள மூளை தூளாகி முடியு மாறு நடனம்புரிந்த மயில் வீரரே! முநிவர்களும் தேவர்களும் ஞானம் அடைந்த பரிசுத்தத் தலமான சோலைமாமலைக்குள் வீற்றிருக்கும் முருகக்கடவுளே! வேலவரே! தியாகமூர்த்தியாம் சிவபெருமான் பெற்ற பெருமிதமுடையவரே! துடிக்கச் செய் கின்ற நோய்களால் உடல் வற்றி, இளமையுடன் கூடிய மேனி யில் கோழை நெருக்க, இருமல் ஈளை வாதம் பித்தம் என்கின்ற நோய்கள் அடியேனை வந்து அணுகாத வண்ணம், அறத் துறைகளுடன் கூடிய வாழ்வைவிட்டு, உலக நூல்களைக் கற்க வேண்டிய வேதனை நீங்கிச் சுகத்தைக் கொண்ட அநுபூதியைப் பெற்று அடியேன் மகிழாமல், உடலை வளர்க்கும் கோரமான

பாழான வயிற்றை நாள்தோறும் உணவினால் வளரச் செய்து, உயிர் நீடித்து வளரும்படியான யோகசித்திகளைப் பெறுவது நன்றன்று; உருவம் கடந்த பாழ் வெளியில், வெட்ட வெளியில் நாத கீதத்துடன் நடனம் புரிகின்றவரே! உமது ஞானமேயான திருவடியை அடியேன் அடைவேனோ?

## விரிவுரை

துடிகொணோய்களோடு வற்றி:—

துடி கொள் நோய்கள். உயிரையும் உள்ளத்தையும் உடம்பையும் துடிக்கச் செய்கின்ற நோய்களால் உடல் வற்றுகின்றது.

தருண மேனி கோழை துற்ற:—

தருணம்—இளமை. இளமையுடைய மேனி கெடுமாறு கோழை பொங்கி நெருக்க.

துறைகளோடு வாழ்வு விட்டு:—

துறை—வழி. இல்லறநெறி, துறவறநெறி எனவும், தாசமார்க்கம், சற்புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் எனவும் பலவழிகள் வாழ்வில் திகழ்கின்றன. இத்தகைய வழிகளுடன் கூடிய வாழ்வைத் துறந்து விலகி நிற்கின்றனர் மனிதர்.

உலகநூல்கள் வாதை யற்று:—

உலகநூல்-பௌதிகநூல். அணுவைப்பற்றி, நீரைப்பற்றி, மலையைப்பற்றி, சந்திரனைப்பற்றி, சூரியனைப்பற்றி, இன்னோரன்ன பொருள்களைப்பற்றி, ஆராய்கின்ற நூல்கள். இவைகளைக் கற்பதனால் ஆன்ம லாபம் ஏற்படாது. முத்தி சித்திக்காது. அதனால் அவைகளைக் கற்பதனால் எய்துகின்ற துன்பம அறவேண்டும் என்கின்றார்.

சுகமுளாநுபூதி பெற்று மகிழாமே:—

எல்லா உயிர்களும் சுகத்தை விரும்புவது இயல்பு. சுகம் அநுபூதியில் கிடைக்கின்றது. அநுபூதி என்ற சொல்லுக்கு தொடர்ந்து ஒன்றுபடுதல் என்று பொருள்.

அநுபூதி எப்படி இனிக்கும் என்பதை அருணகிரிநாதர் பிறிதொரு திருப்புகழில் கூறுகின்றார்.

"ஆரமுத மானசர்க் கரைதேனே
ஆன அநு பூதியைத் தருவாயே" —(நாரியர்கள்) திருப்புகழ்.

உடல்செய் கோர பாழ் வயிற்றை நிதமு மூணி னுலுயர்த்தி:—

நன்றி கெட்டவர்கள் எல்லோர்க்கும் தலைமை தாங்கும் பெருமையும் அருமையும் உடையது வயிறு. இந்த வயிற்றுப் பெருமான் உலகத்தில் உள்ள எல்லோரையும் ஆட்டி வைக்கின்றான். ஆ! ஆ! இந்த வயிற்றுக்காக எத்தனை ஆட்டம்; எத்தனை கூட்டம்; என்ன என்ன நாட்டம்; எங்கெல்லாமோ ஓட்டம். பிறந்தநாள் தொடங்கி இந்த பாழ் வயிற்றுக்குத் தினம் ஒன்றுக்கு நான்கு வேளை உணவு இடுகின்றோம். ஒரு நாள் உணவு தர வசதியில்லையானால் இந்த நன்றி கெட்ட வயிறு நம்மைப் படுத்துகின்றபாடு கொஞ்சநஞ்சமன்று.

வாழ்நாள் முழுவதும் வயிற்றை வளர்ப்பதிலேயே முடிவு பெறுகின்றது; மனிதர்களுக்கு அதிலேயே நாட்டம்.

"அவல வயிற்றை வளர்ப்பதற்கே
அல்லும் பகலும் அதில்நினைவாய்க்
கவலைப் படுவ தன்றிசிவ
கனியைச் சேரக் கருதுகிலேன்" —திருவருட்பா.

உயிரினீடு யோகசித்தி பெறலாமே:—

உயிர் வாழ்க்கையை நெடுங்காலம் நீடிக்கச் செய்யும் திறனுடையது யோகம். எத்தனை யுகங்கள் இருப்பினும் ஒரு நாள் அழியக் கூடிய உடம்புதானே? இதைக் கருதாமல், ஹட யோகம் முதலியவற்றைக் கைக்கொண்டு நிற்றல் தக்கதன்று.

உருவிலாத பாழில் வெட்ட வெளியிலாடு நாதநிர்த்த:—

உருவிலாத பாழ்-உருவம், செயல், பேர், ஊர் முதலிய யாவும் அற்ற சுத்தப் பாழ்.

"வெளியில் விளைந்த வெறும்பாழைப்பெற்ற வெறுந்தனியை"
—கந்தரலங்காரம் - (8)

எல்லாங் கடந்த வெட்ட வெளியில் அருள்நாத ஒலியுடன் முருகன் நடனம் புரிகின்றார்.

ஞான பாதபத்மம்:—

இறைவனுடைய திருவடி ஞானமேயாகும்.

"வள்ளல் தொழு ஞானக் கழலோனே"
—(துள்ளுமத) திருப்புகழ்.

"ஞானமேயான திருவடியுடையாய்"
—வில்லிபாரதம் (கண்ணன் தூது.)

கடிதுலாவு வாயு பெற்ற மகன்:—

அஞ்சனையென்ற பெண் வானரத்திடம் வாயுதேவனுக்குப் பிறந்தவர் அநுமார். சூரியனைக் கனியென்று பற்றச் சென்றவர். சூரியனிடம் ஒன்பது வியாகரணங்களையுங் கற்றவர். நைஷ்டிக பிரமசாரி. எட்டுச் சித்திகளிலும் வல்லவர்.

வாலிசேயும்:—

வாலிமகன்—அங்கதன். உபேந்திரனுடைய அம்சமாகப் பிறந்தவன். இராவணனிடம் தூது சென்றவன். பேராற்றல் படைத்தவன். இராமர் பொன்வாளைக் கொடுக்க, அதனை ஏந்தி நிற்பவன்.

"பொன்னுடை வாளைநீட்டி நீஇதைப் பொறுத்தி யென்றான்"
"அரியணை யநுமன்தாங்க அங்கதன் உடைவாள் ஏந்த"
—இராமாயணம்.

மிக்க மலைகள் போட ஆழிகட்டி :—

அநுமன் அங்கதன் முதலிய சிறந்த வாநர வீரர்கள் நிரம்ப மலைகளைக் கொணர்ந்து இட இராமர் நளன் என்பானைக் கொண்டு கடலில் அணைகட்டி, இலங்கைக்குச் சென்றார்.

முடுகுவீர சூரபத்மர் :—

சூரன், பதுமன் இருவரும் சேர்ந்து ஒருவராகப் பிறந்தார்கள்.

இவ்விருவரும் முற்பிறப்பில் முருகவேளுக்கு மயிலும் சேவலும் ஆகித் தொண்டுபுரியத் தவஞ் செய்தவர்கள். கருடனுக்கும் அன்னத்துக்கும் ஊறு செய்தபடியால், அசுரர்களாகுமாறு முருகவேள் சபித்தருளினார். அதனால் அவர்களைத் திரும்பவும் மயிலும் சேவலுமாக்கி அருள் புரிந்தார்.

நீவிர்தாம் இருவிர் ஒருவடிவாகி நிருதரிற் சூரபத்மாவென்
றேவிலா விறல்கூர் பெயர்தரித் திமையோர்க் குறுபகையா
யுடற்றிடுநாள்
தாவில்சீர் எமதாணையிலுமக் கொழுகு தாழ்பசுஞ் சிறகர் மாயூரம்
சேவலாம் வடிவுண்டாமென முறுவல் சிறிதுகூர்ந்
துரைத்தனுப்பினனால்.
—உபதேசகாண்டம். (ஞானவரோதயர்)

ஆடுநிர்த்த :—

சூரனைச் சங்கரித்தவுடன் முருகவேள் துடி என்ற கூத்து ஆடியருளினார்.

"சூர்த்திறங் கடந்தோன் ஆடிய துடியும்" —சிலப்பதிகாரம்.

முனிவர் தேவர் ஞானமுற்ற புனித சோலை மாமலை :—

முனிவர்களும், தேவர்களும் இந்தப் பழமுதிர்சோலையில் வந்து ஞானத்தைப் பெறுகின்றார்கள். இதனால் இந்தத் தலத்தின் பெருமை புலனாகின்றது.

சரியை—அரும்பு; கிரியை—மலர்; யோகம்—காய்; ஞானம்—பழம்.

விரும்பும் சரியைமுதல் மெய்ஞ்ஞான நான்கும்
அரும்புமலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே. —தாயுமானார்

### கருத்துரை

பழமுதிர் சோலை வேலவனே! ஞானத் திருவடியைப் பெற அருள் செய்வீர்.

## 13

பாசத் தால்விலை கட்டிய பொட்டிகள்
நேசித் தாரவர் சித்தம ருட்டிகள்
பாரப் பூதர மொத்தத னத்திகள் மிகவேதான்
பாவத் தால்மெயெ டுத்திடு பட்டிகள்
சீவிக் கோதிமு டித்தள கத்திகள்
பார்வைக் கேமய லைத்தரு துட்டிக ளொழியாக
மாசுற் றேறிய பித்தளை யிற்பணி
நீறிட் டேயொளி பற்றவி ளக்கிகள்
மார்பிற் காதினி லிட்ட பிலுக்கிகள் அதிமோக
வாய்வித் தாரமு ரைக்குமப த்திகள்
நேசித் தாரையு மெத்திவ டிப்பவர்
மாயைக் கேமனம் வைத்தத னுட்டின மலைவேனோ

தேசிக் கானக முற்றதி னைப்புன
மேவிக் காவல்க வட்கல்சு ழற்றுவள்
சீதப் பாதகு றப்பெண்ம கிழ்ச்சிகொள் மணவாளா
தேடிப் பாடிய சொற்புல வர்க்கித
மாகத் தூதுசெ லத்தரில் கற்பக
தேவர்க் காதிதி ருப்புக லிப்பதி வருவோனே

ஆசித் தார்மன திற்புகு முத்தம
கூடற் கேவைகை யிற்கரை கட்டிட
ஆளொப் பாயுதிர் பிட்டமு துக்கடி படுவோனே
டாரத் தோடகி லுற்றத ருக்குல
மேகத் தோடொரு மித்துநெ ருக்கிய
ஆதிச் சோலைம லைப்பதி யிற்றிகழ் பெருமாளே.

### பதவுரை

தேசி கானகம் உற்று அ திணைபுனம் மேவி - அழகிய காட்டில் சென்று அந்த திணைப்புனத்தை யடைந்து, காவல் கவண்கல் சுழற்றுவள் - அங்கு காவல்புரிந்து கவணில் கல்லை வைத்துச் சுழற்றுபவளும், சீதபாத - குளிர்ந்த திருவடியையுடையவளுமாகிய, குறபெண் மகிழ்ச்சி கொள் மணவாளா - குறமகளாகிய வள்ளிநாயகி மகிழ்ச்சி கொள்ளுகின்ற மணவாளரே! தேடிபாடிய - தலங்கள்தோறும் தேடிச்சென்று செந்தமிழ்ப் பாடல்கள் பாடிய, சொல் புலவர்க்கு - இனிய சொற்களையுடைய சுந்தர மூர்த்தி நாயனுருக்கு, இதம் ஆக - இன்பந்தரவேண்டி, தூதுசெல் அத்தரில் கற்பக - தூது சென்ற சிவபெருமானிடத்தில் தோன்றிய கற்பகமே! தேவர்க்கு ஆதி - தேவர்கட்குத் தலைவரே! திருபுகலி பதி வருவோனே - சிறந்த சீகாழியில் சம்பந்தராய் வந்தவரே! ஆசித்தார் மனதில் புகும் உத்தம - விரும்பி வாழ்த்துவோருடைய மனதில் புகும் உத்தமரே! கூடற்கே - மதுரையில், வைகையில் கரை கட்டிட - வைகைநதியில் வெள்ளம் வந்தபோது கரை கட்டும் பொருட்டு, ஆள் ஒப்பாய் - ஆளாக ஒப்புக் கொண்டு, உதிர்பிட்டு அமுதுக்கு-உதிர்ந்த பிட்டமுதத்தை வேண்டி, அடி படுவோனேடு - அடிபட்ட சொக்கநாதரோடு, ஆரத்தோடு - சந்தனமரமும், அகில் உற்ற தரு குலம்- அகில் மரமும்உள்ள மரக்கூட்டங்கள், மேகத்தோடு ஒருமித்து நெருக்கிய- மேகத்துடன் ஒன்றுபட்டு நெருங்கியுள்ள, ஆதி சோலை மலைபதியில் திகழ்- பழமையான சோலைமலை என்ற தலத்தில் விளங்குகின்ற, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! பாசத்தால் - தம்மிடம் வருபவர்கள் தம்மீது வைத்த ஆசைக்கு ஏற்ப, விலைகட்டிய பொட்டிகள் - விலைபேசி முடிவு செய்யும் வேசிகள்; நேசித்தார் அவர் சித்தம் மருட்டிகள் - தம்மை நேசித்தவர்களுடைய சித்தத்தை மயக்குபவர்கள்; பார பூதரம் ஒத்த தனத்திகள் - பாரமான மலையை யொத்த கொங்கையையுடையவர்கள்; மிகவேதான் பாவத்தால் மெய் எடுத்திடு பட்டிகள் - மிகுந்த பாவத்தினுல் உடம்பெடுத்த விபசாரிகள்; சீவி கோதி முடித்த அளகத்திகள் - சீவியும் கோதியும் முடித்த கூந்தலையுடையவர், பார்வைக்கே மயலை தருதுட்டிகள் - பார்வையாலேயே மோக மயக்கத்தைத் தருகின்ற துஷ்டைகள்; ஒழியாது மாசு உற்று ஒழிய - ஒழியாமல் அழுக்குப்பற்றியேறிய, பித்தளையில் பணி - பித்தளை ஆபரணங்களை, நீறு இட்டு - சாம்பலையிட்டு, ஒளிபற்ற விளக்கிகள் - பளபளப்

புண்டாகுமாறு விளக்குபவர்கள்; மார்பில் காதினில் இட்ட பிலுக்கிகள் - அந்த அணிகலன்களைத் தங்கள் மார்பிலும் காதுகளிலும் அணிந்து தளுக்கு செய்பவர்கள்; அதிமோக - அதிகமோகத்தையுண்டாக்குமாறு- வாய் வித்தாரம் உரைக்கும் அபத்திகள் - வாய்விரிவாகப் பேசும் பொய்யர்கள்; ஆரையும் நேசித்து - யாராயிருப்பினும் சிநேகஞ் செய்து, எத்தி வடிப்பவர்- ஏமாற்றி வடிகட்டுபவர்கள்; ஆகிய இத்தகைய பொதுமாதர்களின், மாயைக்கே மனம் வைந்து - மாயையில் என்மனத்தை வைத்து, அதன் உள்தினம் அலைவேனோ - அந்த மாயையுள் அடிமையேன் நாள்தோறும் அலைவேனோ ?

## பொழிப்புரை

அழகிய காட்டில் சென்று, அத்தினைப்புனத்தில் காவல் புரிந்து கவண் கல் சுழற்றுபவளும், குளிர்ந்த திருவடியையுடையவளுமாகிய குறமகளாம் வள்ளியம்மையின் மணவாளரே! தலங்கள் தோறும் தேடிச்சென்று, செந்தமிழ்ப் பாடல்கள் பாடிய சுந்தர மூர்த்தி நாயனுருக்கு இன்பம் உண்டாகுமாறு தூது சென்ற சிவபெருமானிடத்தில் தோன்றிய கற்பகமே! தேவர்கட்கு முதல்வரே! சீகாழியில் திருஞான சம்பந்தராக வந்தருளியவரே! விரும்பி வாழ்த்துவோர் மனக்கோயிலில் புகுந்துறையும் உத்தமரே! மதுரையம்பதியில் வைகையாற்றில் கரைகட்டும் பொருட்டு ஆளாகிச் சென்று, உதிர்ந்த பிட்டுக்காக, அடிபட்ட சொக்கநாதர் உறையும் மதுரைக்கு அருகில், சந்தனமரம் அகில்மரம் முதலிய மரக்கூட்டங்களுள் மேகத்துடன் ஒன்றுபட்டு நெருங்கியுள்ள, பழமையான பழமுதிர் சோலை மலையில் விளங்கும் பெருமிதமுடையவரே! தம்மிடம் வருபவர்கள் தம்மீது வைத்துள்ள பாசத்தையுணர்ந்து அதற்கு ஏற்ப விலைபேசி முடிவு செய்யும் வேசிகள்; தம்மை நேசித்தவர்களை மயக்குபவர்கள்; மிகுந்த பாவ வினையின் காரணத்தால் உடம்பெடுத்த வியபசாரிகள்; சீவிக்கோதி முடித்த கூந்தலையுடையவர்கள்; பார்வையாலேயே மோக மயக்கத்தைத் தருகின்ற துஷ்டைகள்; ஒழியாது அழுக்கு அடைந்துள்ள மிகுந்த பித்தளை நகைகளைச் சாம்பல் இட்டுப் பளபள என்று மினுக்கி வைத்துள்ளவர்கள்; அந்நகைகளை மார்பிலும் காதிலும் அணிந்து தளுக்குபவர்கள்; மிகுந்த மோகத்தை உண்டாக்க விரிவாகப் பேசும் பொய்யர்கள்;யாராயிருப்பினும்நட்புகொண்டு ஏமாற்றி வடிகட்டுபவர்கள் ஆகிய பொதுமாதர்களின் மாயைச் செய்கையுள் மனம் வைத்து, அம்மாயைக்குள் தினந்தோறும் அடியேன் அலைவேனோ?

## விரிவுரை

பாசத்தால் விலை கட்டிய பொட்டிகள் :—

பொதுமகளிர் தம்மிடம் வருபவர்கள் தம்மை நேசிக்கும் அளவுக்கு ஏற்ப விலைபேசி முடிவு கட்டுவார்கள். நிதிக்கு ஏற்ப நேயங் காட்டுவார்கள்.

மிகவேதான் பாவத்தால் மெயெடுத்திடு பட்டிகள் :—

உள்ளத்தில் ஒருவர் மீதும் பற்றின்றிக் கண்டாரைத் தழுவும் படியான தீ யொழுக்கம் பூண்டதனால் விலைமாதரின் உடம்பு மிகுந்த தீவினைப் பயனால் வந்தது என்றார்.

பார்வைக்கே மயலைத்தரு துட்டிகள் :—

ஆடவரைப் பார்வையாலே மயக்குவர்கள் என்றால், பேச்சினாலும் தொழுவதனாலும் என்னதான் செய்ய மாட்டார்கள் என்பதை உய்த்துணர விட்டார்.

பித்தளையிற்பணி நீறிட்டே யொளிபற்ற விளக்கிகள் :—

பித்தளையிற் செய்த ஆபரணங்களை அவ்வப்பொழுது சாம்பலிட்டு விளக்கி மெருகேற்றி அணிந்து கொள்வார். இதனைப் பட்டினத்து சுவாமிகளும் கூறுகின்றார்.

முட்டற்ற மஞ்சளை யெண்ணெயிற்கூட்டி முகமினுக்கி
மெட்டிட்டுப் பொட்டிட்டுப் பித்தளை ஓலை விளக்கியிட்டுப்
பட்டப்பகலில் வெளிமயக்கேசெயும் பாவையர்மேல்
இட்டத்தை நீதவிர்ப்பாய் இறைவா கச்சி யேகம்பனே.

வாய்வித்தார முரைக்கு மபத்திகள் :—

அபத்தம்—பொய். வாயில் இனிமையாக வித்தாரமாகப் பேசுவார்கள். ஆனால் அத்தனையும் பொய்மைதான்.

நேசித்தாரையுமெத்தி வடிப்பவர் :—

தம்மை மிகவும் நேசிக்கின்றவர்களையும் ஏமாற்றுவர். அன்றி தம்மிடம் வருபவர்களில் அதிகம் பொருள் தருபவர் யார் என வடிகட்டிப் பொருள் பறிப்பார்கள்.

தேசிக் கானகம் :—

தேசி—அழகு. வள்ளியம்மையார் இருந்த வனம் மிகவும் அழகியது.

தேடிப்பாடிய சொற்புலவர் :—

சுந்தரமூர்த்திக்காக இறைவன் நடு இரவில் பரவையார் திருமாளிகைக்குத் தூது சென்று அருள் புரிந்தார்.

"பரவைமனைமீதிலன்று ஒருபொழுது தூதுசென்ற பரமர்";
—(கருவிநுரு) திருப்புகழ்.

ஆசித்தார் மனதிற் புகுமுத்தம :—

முருகனை ஆசிரயித்த அன்பர்களின் மனதில் புகுந்து, அங்கு அப்பரமகருணாநிதி விளையாடிக் கொண்டிருப்பான்.

"என்உளமேபுகுந்த அதனால்" —(வேயுறு) சம்பந்தர்.

"சிந்தையுள்புகுந்த செல்வமே" —திருவாசகம்.

"மருவுமடியார்கள் மனதில் விளையாடு
மரகத மயூரப் பெருமாள்காண்" —(திருமக) திருப்புகழ்.

"மாசிலடியார்கள் வாழ்கின்ற வூர்சென்று
தேடிவிளை யாடியே யங்ஙனே நின்று"
—(மூளும்வினை) திருப்புகழ்.

வைகையிற் கரைகட்டிட ஆளொப்பாபுதிர் பிட்டமுதுக்கடி படுவோன் :—

அரிமர்த்தன பாண்டியன் மணிவாசகரைத் துன்புறுத்தியதனால் மதுரையை யழிப்பது போல் வைகை நதியில் வெள்ளம் பெருகியது. அதன் கரையை உயர்த்துமாறு மக்களுக்கு மன்னன் ஆணை பிறப்பித்தான்.

வந்தியம்மையின் வருத்தத்தை மாற்ற மூவருக்கும் எட்டாத முழு முதல்வன் கூலியாளாக வந்து உதிர்ந்தபிட்டுக்காக மண் சுமந்து, பாண்டியனால் அடிபட்டு, பெண் சுமந்தமேனியில் புண் சுமந்தார்.

"மாடையாடைதர பற்றிமு னகைத்து வைகை
யாறின்மீதுநட மிட்டுமணை டுத்துமகிழ்
மாதுவாளரிதரு பிட்டுநுகர் பித்தனருள்க ந்தவேளே"
—(சிதவாசனை) திருப்புகழ்.

## கருத்துரை

பழமுதிர்சோலை மேவிய பரனே! மாதர் மயல் தீர அருள் புரிவாய்.

## 14

அழகு தவழ்குழல் விரித்துக் காட்டி
விழிகள் கடையிணை புரட்டிக் காட்டி
அணிபொ னணிகுழை புரித்துக் காட்டி யனுராக
அவச இதமொழி படித்துக் காட்டி
அதர மழிதுவர் வெளுப்பைக் காட்டி
அமர்செய் நகநுதி யழுத்தைக் காட்டி யணியாரம்

ஒழுகு மிருதன மசைத்துக் காட்டி
எழுத வரியிடை வளைத்துக் காட்டி
உலவு முடைதனை நெகிழ்த்திக் காட்டி யுறவாடி
உருகு கடிதட மொளித்துக் காட்டி
உபய பரிபுர பதத்தைக் காட்டி
உயிரைவிலைகொளுமவர்க்குத்தேட்டமொழிவேனோ

முழுகு மருமறை முகத்துப் பாட்டி
கொழுநர் குடுமியை யறுத்துப் போட்ட
முதல்வ குகைபடு திருப்பொற் கோட்டு முனிநாடா
முடுகு முதலையை வரித்துக் கோட்டி
அடியர் தொழமக வழைத்துக் கூட்டி
முறைசெய் தமிழினை விரித்துக் கேட்ட முதுநீதர்

பழய கடதட முகத்துக் கோட்டு
வழுவை யுரியணி மறைச்சொற் கூட்டு
பரமர் பகிரதி சடைக்குட் சூட்டி பரமேசர்
பணிய அருள்சிவ மயத்தைக் காட்டு
குமர குலமலை யுயர்த்திக் காட்டு
பரிவொ டணிமயில் நடத்திக் காட்டு பெருமாளே.

## பதவுரை

அருமறை முகத்து முழுகும் பாட்டி கொழுநர் - அரிய வேதத்தின் முகத்தில் முழுகுகின்ற கலைமகளின் கணவராகிய பிரமதேவரது, குடுமியை அறுத்துப்போட்ட முதல்வ - குடுமியை அறுத்தெறிந்த தலைவரே! குகைபடு திரு பொன் கோட்டு - குகைகள் அமைந்த அழகிய பொன் மேருகிரியை, முனி - கோபித்தவரே! நாடா - இறைவனை நாடி, முடுகு முதலையை வரித்து- விரைந்து வரும்படி முதலையை வரவழைத்து, கோட்டி அடியர் தொழ - கூட்டமான அடியார்கள் தொழுது நிற்க, மகவு அழைத்து கூட்டி - முதலை யுண்ட மதலையை அழைத்துப் பெற்றோரிடஞ் சேர்த்து, முறை செய் தமிழினை - சுந்தரர் முறையிட்ட தமிழ்மறையை, விரித்து கேட்ட-விரிவாகக் கேட்டருளிய, முதுநீதர் - பழைய நீதிமானும், பழைய கட தட முகத்து கோட்டு - பழையதும் மதம்பாயும் விசாலமான முகத்தையும் கொம்பையும் உடையதுமான, வழுவை உரி அணி - யானையின் தோலை உரித்துப் போர்த்துக் கொண்டவரும், மறை சொல் கூட்டு பரமர் - வேத மொழியைச்

சொன்னவரும், பகிரதி சடைக்கு உள் சூட்டு பரம ஈசர் - சடைக்குள் கங்கா நதியை முடித்த பரமேச்சுரரும் ஆகிய சிவபெருமான், பணிய - தேவரீரைப்பணிய, அருள் சிவமயத்தை காட்டு குமர - அவருக்கு சிவமய மான பிரணவப் பொருளை அருள் செய்து காட்டிய குமாரக் கடவுளே, குலமலை உயர்த்தி காட்டு - சோலைமலையை புகழால் உயருமாறு காட்டிய வரே! பரிவொடு அணிமயில் நடத்தி காட்டு - அன்புடன் அழகிய மயிலை நடத்திக் காட்டிய, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! அழகு தவழ் குழல் விரித்து காட்டி - அழகுதவழ்கின்ற கூந்தலை விரித்துக்காட்டியும், விழிகள் கடை இணை புரட்டி காட்டி - கண்ணின் கடைப்புறம் இரண்டையும் புரட்டிக் காட்டியும், அணி பொன் அணி குழை புரித்து காட்டி - அழகிய பொன்னுபரணங்களையும் குழையையும் விளக்கமுறக் காட்டியும், அநுராக - காமத்தை விளைக்கவல்ல, அவச - தன்வசம் அழிக்கவல்ல, இத மொழி படித்து காட்டி - இனிய பேச்சுக்களைப் பேசிக்காட்டியும், அதரம் அழிதுவர் வெளுப்பை காட்டி - வாயிதழின் செம்மை யழிந்த பவளம் போன்ற வெளுப்பைக் காட்டியும், அமர் செய் நகநுதி அழுத்தை காட்டி - போரிடும் நகத்தின் நுனி அழுத்தினதைக் காட்டியும், அணி ஆரம் ஒழுகும் - அழகிய முத்துமாலை தொங்குகின்ற, இருதனம் அசைத்து காட்டி - இரண்டு கொங்கைகளையும் அசைத்துக் காட்டியும், ஒழுக அரிய இடை வளைத்து காட்டி - எழுதுதற்கு அரிய இடையை வளைத்துக்காட்டியும், உலவும் உடைதனை நெகிழ்த்து காட்டி - அணிந்து உலாவிவரும் புடவையைத் தளர்த்திக்காட்டியும், உறவு ஆடி - உறவு செய்து, உருகு கடி தடம் ஒளித்துக்காட்டி - உள்ளத்தை உருகவைக்கும் அல்குலை ஒளிப்பது போல் காட்டியும், உபய பரிபுர பதத்தை காட்டி - இரண்டு சிலம்பு அணிந்துள்ள பாதங்களைக் காட்டியும், உயிரை விலை கொளும் அவர்க்கு - உயிரை விலையாகக் கொள்ளும் பொதுமாதரிடம் உள்ள, தேட்டம் ஒழிவேனோ - விருப்பத்தை ஒழிக்க மாட்டேனோ?

## பொழிப்புரை

அருமையான வேதப் பொருளில் முழுகுகின்ற கலைமகளின் கணவராகிய பிரமதேவரின் குடுமியை அறுத்து எறிந்த தலைவரே! குகைகள் அமைந்த பொன் மேருகிரியைக் கோபித்தவரே! திருவருளை நாடி, விரைந்து வரும்படி முதலையை வரவழைத்து, கூட்டமாக நின்ற அடியார் தொழுமாறு முதலையுண்ட மதலையை அழைத்துப் பெற்றோரிடம் சேர்த்த சுந்தரருடைய முறை செய்த தமிழ்ப் பாடலைக் கேட்டவரும், பழமையான நீதிபதியும், மதம் பொழியும் விசாலமான முகத்தையும் தந்தத்தையும் உடைய பழைய யானையை உரித்துப் போர்த்துக் கொண்டவரும், வேத மொழியரும், பெரியவரும், கங்கையைச் சடைக்குள் முடித்தவரும், பரமேசரும் ஆகிய சிவ

பெருமான் பணிந்து கேட்க, சிவமயமான ஓங்காரத்தின் உட்பொருளை உபதேசித்தருளிய குமாரக் கடவுளே! சோலைமலையில் எழுந்தருளி அம்மலையைப் பெருமைப்படுத்தியவரே! அன்புடன் அழகிய மயிலை நடாத்தியருளிய பெருமிதமுடையவரே! அழகு தவழ்கின்ற கூந்தலை விரித்துக் காட்டியும், கண்ணின் கடைப்புறம் இரண்டையும் புரட்டிக் காட்டியும், அழகிய பொன்னுபரணங்களையும் குழையையும் விளக்கமுறக்காட்டியும், காம விருப்பத்தை விளைக்க வல்லதும், தன்வசம் அழிக்க வல்லதும் ஆகிய இனிய மொழியைப் பேசிக் காட்டியும், வாயிதழின் செம்மையழிந்த பவளம் போன்ற வெளுப்பைக் காட்டியும், போரிடும் நகத்தின் நுனியை அழுத்திக் காட்டியும், முத்துமாலை தொங்குகின்ற இரு கொங்கைகளையும் அசைத்துக் காட்டியும், எழுதுதற்கு அரிய இடையை வளைத்துக் காட்டியும், உலாவுகின்ற புடவையைத் தளர்த்திக் காட்டியும், உறவு செய்து,உள்ளத்தை உருகச் செய்கின்ற அல்குலை ஒளிப்பதுபோல் காட்டியும் சிலம்பு அணிந்த இரு பாதங்களைக் காட்டியும், உயிரை விலையாகக் கொள்ளுகின்ற பொதுமாதரின் விருப்பத்தை ஒழிக்க மாட்டேனே?

## விரிவுரை

இத்திருப்புகழில் முதற்பகுதி விலைமாதர்களின் சாகசங்களை விரித்துக் கூறுகின்றது.

முழுகுமருமறை முகத்துப் பாட்டி :—

பாட்டி—பெரியவள். வேதத்தில் வல்லவள் சரசுவதி.

குடுமியை யறுத்துப் போட்ட :—

பிரமனின் தலையில் முருகவேள் குட்டியபோது குடுமி யறுந்து விழுந்தது.

"சிகைதூளிபட தாளமிடும் இளையோனே"
—(வாலவய) திருப்புகழ்.

திருப்பொற் கோட்டு முனி :—

பொன் மேருகிரியை உக்கிரப் பெருவழுதி செண்டால் எறிந்த வரலாற்றை இது குறிக்கின்றது. இதன் விரிவை திருப்புகழ் விரிவுரை முதல் தொகுதி 69-ம் பக்கத்தில் காணலாம்.

மகவழைத்துக் கூட்டி முறைசெய் :—

அவநாசியில் முதலையுண்ட பாலனைச் சுந்தரர், ''கரைக் கான் முதலையைப் பிள்ளைதரச் சொல்லு காலனையே'' என்று தேவாரம் பாடி வருவித்துப் பெற்றோரிடம் சேர்த்தருளினர்.

குலமலை :—

குலமலை—பழமுதிர் சோலை.

கருத்துரை

சோலைமலை மேவு பெருமானே! பொதுமாதர் மயல்தீர அருள் செய்யும்.

15

தலைமயிர் கொக்குக் கொக்கந ரைத்துக்
கலகலெ னப்பற் கட்டது விட்டுத்
தளர்நடை பட்டுத் தத்தடி யிட்டுத் தடுமாறித்
தடிகொடு தத்திக் கக்கல்பெ ருத்திட்
டசனமும் விக்கிச் சத்தியெ டுத்துச்
சளியுமி குத்துப் பித்தமு முற்றிப் பலகாலும்

திலதயி லத்திட் டொக்கவெ ரிக்கத்
திரிபலை சுக்குத் திப்பிலி யிட்டுத்
தெளியவடித்துத்துய்த்துடல்செத்திட் டுயிர்போமுன்
திகழ்புகழ் கற்றுச் சொற்கள்ப யிற்றித்
திருவடி யைப்பற் றித்தொழு துற்றுச்
செனனம றுக்கைக் குப்பர முத்திக் கருள்தாராய்

கலைணவி சித்துப் பக்கரை யிட்டுப்
புரவிசெ லுத்திக் கைக் கொடு வெற்பைக்
கடுகந டத்தித் திட்டென எட்டிப் பொருசூரன்
கனபடை கெட்டுத் தட்டற விட்டுத்
திரைகட லுக்குட் புக்கிட எற்றிக்
களிமயி லைச்சித் ரத்ில்ந டத்திப் பெருமாளே

குலிசன்ம கட்குத் தப்பியு மற்றக்
குறவர்ம கட்குச் சித்தமும் வைத்துக்
குளிர்தினை மெத்தத் தத்துபு னத்திற் றிரிவோனே
கொடியபொ ருப்பைக் குத்திமு றித்துச்
சமரம்வி ளைத்துத் தற்பர முற்றுக்
குலகிரி யிற்புக் குற்றுறை யுக்ரப் பெருமாளே.

## பதவுரை

கலணை விசித்து - சேணத்தைக்கட்டி, பக்கரை இட்டு-அங்கவடியிட்டு, புரவி செலுத்தி - குதிரைகளைச் செலுத்தியும், கைகொடு வெற்பை - தும்பிக்கையுடைய கொடிய மலைபோன்ற யானைகளை, கடுக நடத்தி - வேகமாக நடத்தியும், திட்டென எட்டி பொரு சூரன் - திடீர் என்று நெருங்கி வந்து போர் செய்த சூரபன்மனுடைய, கனபடை கெட்டு தட்டு அறவிட்டு - பெரியபடை அழிந்து நிலைகுலையவும், திரை கடலுக்கு உள் புக்கிட எற்றி - சூரன் அலை கடலுக்குள் புகுமாறு அவனை மோதியும், களி மயிலை - மகிழ்ச்சி கொண்ட மயிலை, சித்ரத்தில் நடத்தி பொருகோவே - அழகாக நடத்திப் போராபுரிந்த தலைவரே! குலிசன் மகட்கு தப்பியும் - குலிசாயுதம் கொண்ட இந்திரன் புதல்வியாகிய தெய்வயானைக்குத் தெரியாமல் சென்று குறவர் மகட்கு சித்தமும் வைத்து-வள்ளி நாயகி மீது உள்ளத்தை வைத்து, குளிர்தினை மெத்த தத்து புனத்தில் திரிவோனே - குளிர்ந்த தினைகள் மிகவும் பரவியுள்ள தினைப்புனத்தில் திரிந்தவரே! கொடிய பொருப்பை குத்தி முறித்து - பொல்லாத கிரவுஞ்சமலையை வேலால் குத்தி அழித்து, சமரம் விளைத்து - போர் புரிந்து, தற்பரம உற்று - மேம்பட்ட உமது நீதியை விளக்கி, குலகிரியில் புக்கு உற்று உறை - சோலைமலையில் புகுந்து வீற்றிருக்கின்ற, உக்ர பெருமாளே - வீரம் பொருந்திய பெருமையிற் சிறந்தவரே! தலை மயிர் - தலைமயிரானது, கொக்குக்கு ஒக்க நரைத்து-கொக்கு போலவே வெளுத்தும், கல கல என பல்கட்டது விட்டு - கல கல என்று பல்வரிசைகளின் கட்டு விட்டும், தளர் நடை பட்டு - நடை தளர்வுற்றும், தத்து அடி இட்டு - தத்தி தத்தி அடிவைத்து நடந்தும், தடுமாறி - தடுமாற்றத்தை யடைந்தும், தடிகொடு தத்தி - தடியை யூன்றி தாண்டியும், கக்கல் பெருத்திட்டு - ஒக்காளம் மிகுந்து, அசனமும் விக்கி - உணவு உண்ண முடியாமல் விக்கல் எடுத்தும், சத்தியெடுத்து - வாந்தியாகியும், சளியும் மிகுத்து - சளியதிகப்பட்டு, பலகாலும் பித்தமும் முற்றி - பலமுறையும் பித்தம் மேலிட்டும், தில தயிலத்து இட்டு - எண்ணெயிலிட்டு, ஒக்க எரிக்க - எரித்தல்போல் உடம்பு எரிச்சல் உண்டாக, திரிபலை - தான்றிக்காய், கடுக்காய், நெல்லிக்காய் இந்த மூன்றையும், சுக்கு திப்பிலி இட்டு-சுக்கையும் திப்பிலியையும் சேர்த்துக் கஷாயஞ் செய்து, தெளிய வடித்து உற்று - தெளியவைத்து வடிகட்டி, துய்த்து - அதனைப்பருகி, உடல் செத்து இட்டு

உயிர் போம் முன் - உடல் மடிந்து உயிர் போவதற்கு முன்பாக, திகழ் புகழ் கற்று - உமது விளங்கும் புகழைக்கற்று, சொற்கள் பயிற்றி - அந்திருப் புகழின் சொற்களை நிரம்பப் பயின்றும், திருவடியை பற்றி - தேவரீருடைய திருவடியைப்பற்றியும், தொழுது உற்று - தொழுது உம்மையடைந்து, செனனம் அறுக்கைக்கு - பிறப்பை ஒழிக்கும் வண்ணம், பரமுத்திக்கு அருள் தாராய் - பரமுத்தியை யடையத் திருவருள் புரிவீராக.

## பொழிப்புரை

சேணம் கட்டி, அங்கவடியிட்டுக் குதிரைகளைச் செலுத்தியும், துதிக்கை கொண்ட மலை போன்ற கொடிய யானைகளை வேகமாக நடாத்தியும், திடீர் என்று நெருங்கி வந்து போர் புரிந்த சூரனுடைய பெரியபடை அழிந்து நிலைகுலையவும், சூரன் அலைகடலுக்குட்புகும்படி அவனைத் தாக்கியும், களிப்பு மிகுந்த மயிலை அழகுடன் நடாத்திப் போர் புரிந்த தலைவரே! இந்திரன் மகளாகிய தேவசேனைக்குத் தெரியாமல், வள்ளி மீது மனம் வைத்து, குளிர்ந்த தினைகள் மிகவும் பரந்துள்ள புனத்தில் திரிந்தவரே! கொடிய கிரவுஞ்ச மலையை வேலினால் குத்தியழித்துப் போர் புரிந்து மேம்பட்ட நிலையை விளக்கியவரே! சோலை மலையில் எழுந்தருளிய, வீரம் பொருந்திய பெருமிதமுடையவரே! தலைமயிர் கொக்கு போல் நரைத்தும், கலகல என்று பல் கடடுவிடவும், தத்தித்தத்தித் தளர் நடையிட்டு நடந்து தடுமாற்றத்துடன் தடியூன்றி நடந்தும், ஒக்காளம் மிகுந்து உணவும் விலக்கி வாந்தி யெடுத்தும், சளி மிகுந்தும், பித்தம் பல காலும் மேலிட்டும், எண்ணெயிலிட்டது போல் உடல் எரிச்சலுண்டாகியும், தான்றிக்காய் நெல்லிக்காய் கடுக்காய் சுக்கு திப்பிலி இவைகளையிட்டுக் கஷாயஞ் செய்து, தெளிந்தபின் வடிகட்டிப் பருகியும், உடல் மடிந்து உயிர் போவதற்குமுன், உமது திருப்புகழைக் கற்று, அதன் சொற்களைப் பயின்று, திருவடியைப் பற்றித் தொழுது, உம்மைச் சேர்ந்து, பிறப்பு ஒழியுமாறு பரமுத்திபெற அருள்புரிவீர்.

தலைமயிர் கொக்குக் கொக்க நரைத்து :—

## விரிவுரை

எண்பத்து நான்கு நூருயிர யோனி பேதங்களில் எந்த உயிர்கட்கும் நரை கிடையாது; பன்றி யானை காக்கை முதலியவைகட்கு உரோமம் நரைப்பதில்லை. உயர்ந்த பிறப்பு என்று கருதப்படுகின்ற மனிதனுக்கு மட்டும் நரையுண்டு. ஏன்? நரைப்பதின் காரணம் யாது? இது இறைவன் நமக்குத் தரும்

வக்கீல் நோடீஸ். மற்ற பிராணிகள் உண்பதற்கும் உறங்குவதற்கும் மட்டும் வந்தவை. மனிதன் பிறவாமையைப் பெற வந்தவன். ஏன் பிறந்தோம் என்பதை மறந்திருந்தவனுக்கு இறைவன் செய்யும் எச்சரிக்கை நரையென வுணர்க. நரையுண்டானவுடனே ஆசாபாசங்களையகற்றி தவநெறியில் நாட்டம் உண்டாக வேண்டும். காதின் அருகில் ஒரு நரையைக் கண்ட மாத்திரத்தில் தயரதர் தவம் மேற்கொள்ள முயன்றார் என்கிறது இராமாயணம். ஒரு ரோமம் நரைத்தவுடன் ஒரு பொருளில் உள்ள பற்றையாவது விடவேண்டும்.

"மீனுண்கொக்கின் தூவியன்ன
வால்நரைக் கூந்தல்" —புறநானூறு (277)

பற்கட்டது விட்டு :—

பற்கள் இடையிலே முளைக்கின்றன. இடையிலேயே உதிர்ந்து விடுகின்றன.

சத்தி யெடுத்து :—

சத்தி—வாந்தி. முதுமையால் வாந்தியும் விக்கலும் வந்து துன்புறுத்தும்.

"........................ ...விக்கி
இருமாமுன் மாகாணிக் கேகாமுன் நெஞ்சே
ஒருமாவின் கீழரையின் றோது." —காளமேகம்.

திலதயிலத்திட்டொக்க வெரிக்க :—

கொதிக்கின்ற எண்ணெயில் இட்டது போல் உடம்பில் எரிச்சல் உண்டாகும். இது ஒரு நோய்.

திரிபலை :—

திரிபலை—தான்றிக்காய், நெல்லிக்காய், கடுக்காய் இந்த மூன்றுஞ் சேர்ந்தது. இது வைத்திய பரிபாஷை.

திகழ்புகழ் கற்று :—

முருகனுடைய புகழைக் கற்றவர்க்கு இருள்சேர் இருவினையுஞ் சேரா.

காலபயந் தீரும்; சீலநலஞ் சேரும்; சித்தியெலாம் எய்தும்.

"திருப்புகழை கற்பார்க்குச் சித்தியெட்டும் எளிதாமே"
—தணிகைச் சந்நிதிமுறை

ஜெனனமறுக்கைக்குப் பரமுத்திக் கருள்தாராய் :—

பதமுத்தியினும் சிறந்தது பரமுத்தி. அது பெற்றார் பிறவியைப் பெறார்.

கலணை விசித்துப் பக்கரை யிட்டு :—

கல்லணை—குதிரையின் மீது இருக்கின்ற சேணம். பக்கரை—அங்கவடி.

> "பக்கரை விசித்ரமணி பொற்கலணை யிட்டநடை
> பட்சியெனு முக்ரதுரகம்" —திருப்புகழ்.

கைகொடு வெற்பை :—

வெற்பு—மலை. இது இங்கு உவம ஆகு பெயராக யானையைக் குறிக்கின்றது. தும்பிக்கையுங் கொடுமையும் உடைய மலைபோன்ற யானைகள்.

களிமயிலைச் சித்திரத்தில் நடத்தி :—

இங்கே சூரபன்மனுடன் போர் புரியும்போதே முருகன் மயிலில் ஆரோகணித்திருந்தார் என்று அருணகிரியார் கூறுகின்றார்.

சூரபன்மன் சக்கரவாகப்பறவை யுருவெடுத்துப் போர்புரிய வந்தபோது இந்திரன் மயிலாகி வந்து முருகவேளைத் தாங்கினான்.

முருகவேளைத் தாங்கும் பேறு பெற்றோமே என்று மகிழ்ந்தான் இந்திரன். அதனால் "களி மயில்" என்றார்.

> "பன்னிருநாட்டத்தண்ணல் படர்சிறை மயூரமாகி
> முன்னுறு மகவான் தன்மேல் மொய்ம்புடன் புக்குவைகி"
> —கந்தபுராணம்.

குலிசன் மகட்குத் தப்பியும் :—

இங்கே முருகவேள் வள்ளியை மணக்கும் பொருட்டுப் புறப்பட்ட போது தெய்வயானையம்மைக்குத் தெரியாமல் போனார் என்று வருகின்றது. அது வஞ்சனையன்று; தெரிந்தால் தெய்வயானையம்மை சினங்கொள்வார் என்பதுமன்று? வேறு ஏன்? கூறுதும்.

திருமாலின் கண்மணிகளில் பிறந்த பெண்மணிகள் அமுதவல்லியும் சுந்தரவல்லியும். இவ்விருவரும் வாழ்க்கையில் பிரியாதிருக்க வேண்டும் என்று கருதி தவஞ் செய்து, முருகனை "எங்கள் இருவரையும் மணந்தருள வேண்டும்" என்று வரம் இரந்தார்கள்.

பெருமான் அவர்களை துரைமகளாகவும், குறமகளாகவும் பிறக்குமாறு பணித்தருளினார். அதன்படி அமுதவல்லி தானே

மகவாகத் தோன்றி ஐராவத யானையால் வளர்க்கப்பட்டு திருப் பரங்குன்றத்தில் திருமுருகனை மணந்துகொண்டார்.

இளையாள் சுந்தரவல்லி வள்ளி மலையில் மான் வயிற்றில் பிறந்து வளர்ந்தாள். முருகன் இதை முன்னமே தெய்வ யானைக்கு அறிவித்தால்அவருக்கு மிகுந்த மகிழ்ச்சியேற்படாது. திடீர் என்று ஒன்று நிகழ்ந்தால்தான் பெருமகிழ்ச்சியுண்டாகும். ஆதலால் முருகன் தெய்வயானையம்மை யுணராதவண்ணம் சென்று வள்ளியை மணந்துகொண்டு சென்றார். இதைக் கண்ட தெய்வயானையம்மை, முன் பிரிந்த தங்கையை மீளவும் சந்தித்ததற்குப் பெரிதும் மகிழ்ந்து தழுவி வாழ்த்தியருளினார். தெய்வயானைக்குப் பெரும் மகிழ்ச்சியைத் தரும்பொருட்டு முருகன் அவருக்குத் தெரியாமல் சென்று வள்ளியை மணந்தார் எனவுணர்க.

புனத்திற்றிரிவோனே :—

முருகப் பெருமான் வேதமுடிவில் விளையாடும் பாத கமலங் களை வைத்து தினைப்புனத்தின் அருகில் திரிந்தருளினார். தினைப்புனம் என்ன புண்ணியஞ் செய்ததோ?

"சுனையோ டருவித் துறையோடு பசுந்
தினையோ டிதணோடு திரிந்தவனே" —கந்தரநுபூதி (40)

## கருத்துரை

பழமுதிர் சோலைப் பரமனே! பரமுத்தி யருள்புரிவாய்.

## 16

மலரணை ததும்ப மேக குழல்முடி சரிந்து வீழ
மணபரி மளங்கள் வேர்வை யதனோடே
வழிபட இடங்க ளுட பிறைநுதல் புரண்டு மாழ்க
வனைகலை நெகிழ்ந்து போக இளநீரின்

முலையிணை ததும்ப நூலின் வகிரிடை சுழன்று வாட
முகமுகமொ டொன்ற பாய லதனூடே
முதுமயல் கலந்து மூழ்கி மகிழ்கினும் அலங்க லாடு
முடிவடிவொ டங்கை வேலு மறவேனே

சிலைநுத லிளம்பெண் மோகி சடையழகி யெந்தை பாதி
திகழ்மர கதம்பொன் மேனி யுமைபாலா
சிறுநகை புரிந்து சூரர் கிரிகட லெரிந்து போக
திகழயி லெறிந்த ஞான முருகோனே
கொலைமிக பயின்ற வேடர் மகள்வளி மணந்த தோள
குணவலர் கடம்ப மாலை யணிமார்பா
கொடிமின லடைந்த சோதி மழகதிர் தவழ்ந்த ஞான
குலகிரி மகிழ்ந்து மேவு பெருமாளே

## பதவுரை

சிலை நுதல் இளம் பெண் - வில்லைப்போன்ற நெற்றியையுடைய இளம் பெண்; மோகி - சிவனிடம் மோகத்தை யுடையவள்; சடை அழகி - அழகிய சடையையுடையவள்; எந்தை பாதி திகழ் - எமது பிதாவாகிய சிவபெருமானுடைய பாதியில் விளங்கும், மரகதம் பொன் மேனி - மரகதம் போன்ற பச்சைநிறத்து அழகிய உருவையுடையவளாகிய உமை பாலா - உமாதேவியின் திருக்குமாரரே! சிறுநகைபுரிந்து - புன்னகை செய்து, சூரர் - சூராதியசுரர்களும், கிரி - கிரவுஞ்சமலையும், கடல் - சமுத்திரமும், எரிந்து போக - எரிந்துபோகும்படி, திகழ் அயில் எறிந்த - விளங்குகின்ற கூரிய வேலை விடுத்த, ஞான முருகோனே - ஞானமேவடிவாய முருகக் கடவுளே! கொலைமிக பயின்ற வேடர்மகள் - கொலைத் தொழிலே பயின்ற வேடர் குலப்பாவையாகிய, வளி மணந்த தோள - வள்ளியம்மையை மணந்தருளிய தோள்களையுடையவரே! குண - நற்குணசீலரே! அலர் கடம்ப மாலை அணிமார்பா - அலர்ந்த கடப்ப மலர் மாலையை அணிந்த திருமார்பினரே! கொடிமினல் அடைந்த சோதி - மின்னற் கொடி போன்ற சோதியே! மழ கதிர் தவழ்ந்த ஞான - இளங்கதிர் விளங்கும் ஞானமூர்த்தியே! குலகிரி மகிழ்ந்து மேவு - சோலை மலையில் மகிழ்ச்சியுடன் வீற்றிருக்கும், பெருமாளே -பெருமையிற் சிறந்தவரே! மலர் அணைததும்ப - மலருடன் கூடிய படுக்கை அசைந்து கலையவும், மேக குழல் முடிசரிந்து வீழ - மேகம் போன்ற கரிய கூந்தலின் முடி சரிந்துவிழவும், மண பரிமளங்கள் வேர்வை அதனோடே வழிபட - நலமிக்க மணங்கள் வேர்வையுடனே ஒன்றுபடவும், இடம் கண் ஆட - விசாலமான கண்கள் அசையவும், பிறை நுதல் புரண்டு மாழ்க - பிறைபோன்ற நெற்றி புரண்டு கலங்கவும், வனைகலை நெகிழ்ந்து போக, அலங்காரமாய் உடுத்த உடை நெகிழ்ந்து போகவும், இளநீரின் முலை இணைததும்ப - இளநீர் போன்ற இருதனங்கள் அசையவும், நூலின் வகிர் இடை சுழன்று வாட - நூலின் பிளவு போன்ற நுண்ணிய இடை சுழன்று வாட்டங் கொள்ளவும், முகம் முகமொடு ஒன்ற - முகம் முகத்தோடு பொருந்தவும், பாயல் அதன் ஊடே - படுக்கையிலே, முது மயல் கலந்து மூழ்கி மகிழினும் - பெரிய மோகச் செயலின் மயலில் கலந்து முழுகி

அடியேன் களிகூர்ந்திருந்தாலும், அலங்கல் ஆடும் - மாலைகள் அசையும், முடிவடிவொடு - உமது சிரம் முதலிய திருவுருவத்தையும், அம் கை வேலும் - அழகிய திருக்கரத்தில் விளங்கும் வேலாயுதத்தையும், மறவேனே - மறக்கமாட்டேன்.

## பொழிப்புரை

வில்லைப் போன்ற நெற்றியையுடைய இளம்பெண்; சிவ பெருமானிடம் மோகத்தையுடையவள், அழகிய சடையுடையவள்; எமது பிதாவாகிய சிவபெருமானுடைய இடப்பாகத்தில் திகழ்கின்ற மரகதம் போன்ற அழகிய மேனியையுடையவள் ஆகிய உமா தேவியின் திருக்குமாரரே! புன்னகைசெய்து, சூரன் முதலிய வீரர்களும், கிரவுஞ்சமலையும், கடலும் எரிந்து போக விளங்குகின்ற வேலை விடுத்த ஞானமே வடிவாய முருகக் கடவுளே! கொலைத் தொழிலே பயின்ற வேடர் குலப்பாவை யாகிய வள்ளியம்மையை மணந்த தோள்களையுடையவரே! மின்னல் கொடி போன்ற ஜோதியே! இளங்கதிர் விளங்கும் ஞானமூர்த்தியே! சோலை மலையில் மகிழ்ந்து வீற்றிருக்கின்ற பெருமிதம் உடையவரே! மலர் நிறைந்த படுக்கை அசைந்து கலையவும், மேகம் போன்ற கரிய கூந்தலின் முடி சரிந்து விழவும், நலமிக்க மணங்கள் வேர்வையுடன் வழியவும், விசால மான் கண்கள் அசையவும், பிறை போன்ற நெற்றி புரண்டு கலங்கவும், அலங்காரமாக உடுத்த உடை நெகிழ்ந்து போகவும், இளநீர் போன்ற இருதனங்கள் அசையவும், நூலின் பிளவு போன்ற நுண்ணிய இடை சுழன்று வாட்டங் கொள்ளவும், முகம் முகத்தோடு பொருந்தவும், படுக்கையிலே பெரிய மோக மயலின் செயலில் கலந்து முழுகி மகிழ்ச்சி மிகுந்த போதும், மாலைகள் அசையும் உமது சிரம் முதலிய திருவுருவத்தையும், அழகிய திருக்கரத்திலேயுள்ள வேலாயுதத்தையும் மறக்க மாட்டேன்.

## விரிவுரை

இத்திருப்புகழின் முதல் மூன்று அடிகளில் மாதரை மருவும் போது ஏற்படும் மெய்ப்பாடுகளைக் கூறுகின்றார்.

முதுமயல் கலந்து மூழ்கி மகிழினும் அலங்கலாடு முடிவடிவொ டங்கை வேலு மறவேனே :—

"முருகா! மாதர் மயக்கத்தால் மிகுந்த மகிழ்ச்சிக் கடலில் முழுகினாலும் உனது வடிவையும் வேலையும் மறவேன்" என்று சுவாமிகள் கூறுகின்றார்.

"கண்டுண்ட சொல்லியர் மெல்லியர் காமக் கலவிக்கள்ளை
மொண்டுண்டயர்கினும் வேல்மறவேன்" —கந்தரலங்காரம் (37)

சிலைநுதல் இளம்பெண் :—

அம்பிகையின் நெற்றி வில்லைப் போல் வளைந்து விளங்குகின்றது.

"சிலைநுத லிமயவல்லி திருக்கண்ணேக் குற்ற தன்றே"
—பெரியபுராணம்.

கொலைமிக பயின்ற வேடர் மகள் :—

"கொலையே புரிவேடர் குலப்பிடிதோய் மலையே" —அநுபூதி (92)

## கருத்துரை

சோலைமலைச் சோதியே! எக்காலத்தும் உன் வடிவையும் வடிவேலையும் மறவேன்.

## ஆறு திருப்பதி

1

அலைகடல் நிகராகிய விழிகொடு வலைவீசிகள்
அபகட மகபாவிகள் விரகாலே
அதிவித மதராயத நிதமொழி பலகூறிகள்
அசடரொ டுறவாடிகள் அநியாயக்

கலைபகர் விலைமாதர்கள் இளைஞர்கள் குடிகேடிகள்
கருதிடு கொடியாருட னினிதாகக்
கனதன முலைமேல்விழு கபடனை நிருமூடனை
கழலிணை பெறவேயினி யருள்வாயே

அலைபுனல் தலைசூடிய பசுபதி மகனாகிய
அறுமுக வடிவே அருள் குருநாதா
அசுரர்கள் குடியேகெட அமரர்கள் பதியேபெற
அதிரிடும் வடிவேல்விடு மதிசூரா

தலையய னறியாவொரு சிவகுரு பரனேயென
தரணியி லடியார்கண நினைவாகா
சகலமு முதலாகிய அறுபதி நிலைமேவிய
தடமயில் தனிலேறிய பெருமாளே.

## பதவுரை

அலைபுனல் தலை சூடிய - அலை வீசும் கங்காநதியைத் தலையில் சூடிய, பசுபதி மகன் ஆகிய - பசுக்களுக்குப் பதியாகிய சிவபெருமானுடைய குமாரராகிய, அறுமுகவடிவே - ஆறுமுக வடிவுடையவரே! அருள்குரு நாதா - ஆன்மாக்களுக்கு அருள் புரியும் குருநாதரே! அசுரர்கள் குடியே கெட - அசுரர்களின் குடி அழியும்படியும், அமரர்கள் பதியே பெற - தேவர்கள் தமது அமராவதி நகரைப் பெறுமாறும். அதிர் இடும் வடிவேல் விடும், ஒலியுடன் செல்லும் கூரிய வேலாயுதத்தை விடுத்தருளிய, அதிசூரா - அதிசூரரே! அயன் - பிரமதேவன், தலை அறியா - சிரத்தை அறியமாட்டாத, ஒரு சிவகுருபரனே என - ஒப்பற்ற சிவபெருமானுக்குக் குருமூர்த்தியே என்று, தரணியில் அடியார் கணம் - பூமியில் உள்ள அடியார்களின் திருக்கூட்டம், நினைவாக - நினைக்கின்ற அழகரே! சகலமும் முதல் ஆகிய - சகல தலங்களுக்கும் முதலாக விளங்கும், அறுபதி நிலை மேவிய - ஆறு திருப்பதிகளில் வீற்றிருக்கின்ற, தடமயில் தனில் ஏறிய - பெரிய மயிலின் மீது ஏறிய, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! அலை கடல் நிகர் ஆகிய - அலை வீசும் கடலுக்கு ஒப்பாகிய, விழி கொடு வலை வீசிகள் - கண்களைக் கொண்டு காம வலை வீசுபவர்கள்; அபகட மகபாவிகள் - வஞ்சனை எண்ணமுடைய பெரிய பாவிகள், விரகாலே-உபாயத்தாலே, அதிவித மதர் ஆய்-பலவிதமான செருக்குடன், அத அநித மொழி பல கூறிகள் - தாழ்வான அநீதமான வார்த்தைகள் பல பேசுபவர்கள், அசடரொடு உறவு ஆடிகள் - கீழ்மக்களுடன் உறவு செய்பவர்கள், அநியாய கலைபகர் விலை மாதர்கள் - அநியாய வழியிலே உடலை விலை கூறி விற்கும் விலைமகளிர்கள், இளைஞர்கள் குடிகேடிகள் - இளைஞர்களின் குடிகளைக் கெடுக்கின்றவர்கள், கருதிடு கொடியார் . உடன் - வஞ்சனையையே நினைக்கின்ற கொடி போன்றவர்களாகிய பொது மாதருடன், இனிது ஆக - இன்பமாகக்கூடி, கனதன முலைமேல் விழு கபடனை - பாரமான கொங்கை மேல் விழுகின்ற வஞ்சகன், நிருமுடனை - முழுமூடன், கழல் இணை பெறவே இனி அருள்வாயே - உமது திருவடிகளைப் பெறுமாறு இனி அருள் புரிவீராக.

## பொழிப்புரை

அலை வீசும் கங்கா நதியைத் தலையிற் சூடிய பசுபதியாகிய சிவபெருமானுடைய புதல்வராகிய ஆறுமுக உருவத்தையுடையவரே! எல்லாவுயிர்கட்கும் அருள்புரியும் குருமூர்த்தியே! அசுரர்களின் குடிகள் கெடுமாறும், தேவர்கள் தமது அமராவதி நகரில் குடியேறவும், ஒலியுடன் செல்லும் வடிவேலை விடுத்த அதிசூரரே! திருமுடியைப் பிரமன் அறிய வொண்ணாத சிவமூர்த்திக்குக் குருவாகின்றவரே! என்று பூதலத்தில் அடியார் திருக்கூட்டம் தியானிக்கின்ற அழகரே! எல்லாத் தலங்கட்கும் முதலாகிய ஆறுபடை வீடுகளில் எழுந்தருளியவரே! பெரிய

மயிலின்மீது ஏறிய பெருமிதம் உடையவரே! அலை வீசும் கடலுக்கு நிகராகிய கண்களைக் கொண்டு காமவலை வீசுபவர்கள்; வஞ்சக எண்ணமுடைய மகாபாவிகள்; உபாயத்தால் பலவிதமான செருக்குடன் தாழ்வான அநீதியான பல பேச்சுக்களைப் பேசுபவர்கள்; கீழ்மக்களுடன் உறவு செய்பவர்கள்; அநியாய வழியில் உடலை விற்பவர்கள்; இளைஞர்களின் குடியைக் கெடுப்பவர்கள், தீமையை நினைக்கின்ற கொடிபோன்றவர்கள் ஆகிய விலைமாதர்களுடன் கூடி, பாரமான கொங்கையின் மேலே விழுகின்ற கபடனும் முழுமூடனுமாகிய அடியேன், உமது இரு திருவடிகளைப் பெற்று உய்யுமாறு இனி அருள்புரிவீராக.

## விரிவுரை

அலைகடல் நிகராகிய விழிகொடுவலை வீசிகள் :—

கண்கள் கடல்போல் விசாலமாகத் திகழ்கின்றன. அக் கண்வலை வீசி இளைஞர்களாகிய மீன்களைப் பிடித்துவிடுவார்கள் விலைமகளிர்.

அபகடமதராய் :—

அபகடம்—வஞ்சகம். மதர்—செருக்கு.

அதநித மொழி :—

அத அநித மொழி. அதம்—தாழ்வு; தாழ்ந்த அநியாய சொற்களைப் பேசுவார்கள்.

கலைபகர் விலைமாதர்கள் :

கலை—உடம்பு. உடம்பை விலைகூறி விற்பவர்கள். பகர்தல்—விற்றல்.

நினைவாகா :—

நினைத்தல்—தியானித்தல். வாகு—அழகு. அழகன்.

சகலமு முதலாகிய அறுபதி :—

எல்லாத் தலங்கட்கும் முதன்மை பெற்று விளங்கும் ஆறு திருப்பதிகள்.

## பதவுரை

ஆறு திருப்பதியில் அமர்கின்ற அழகனே! உனது திருவடி பெற அருள் செய்

## 2

ஈனமிகுத் துளபிறவி யணுகாதே
யானுமுனக் கடிமையென வகையாக
ஞானஅருட் டனையருளி வினைதீர
நாணமகற் றியகருணை புரிவாயே
தானதவத் தினின்மிகுதி பெறுவோனே
சாரதியுத் தமிதுணைவ முருகோனே
ஆனதிருப் பதிகமரு ளிளையோனே
ஆறுதிருப் பதியில்வளர் பெருமாளே.

### பதவுரை

தான தவத்தினில் மிகுதி பெறுவோனே - அடியார்கள் புரியும் தானத்தின் தகைமையையும் தவத்தின் தியானத்தையும் மிகுதியாகப் பெறுகின்றவரே! சாரதி உத்தமி துணைவ - சரஸ்வதி தேவியாகிய உத்தமியின் சகோதரரே! முருகோனே - முருகக் கடவுளே! ஆனதிருப்பதிகம் அருள் இளையோனே - திருஞானசம்பந்தரை யதிஷ்டித்து தமிழ்மறையாகிய தேவாரப்பதிகங்களைப் பாடிய இளம்பூரணரே! ஆறு திருப்பதியில் வளர் - ஆறுபடை வீட்டுத் திருத்தலங்களில் வளர்கின்ற, பெருமாளே - பெருமையின் மிக்கவரே! ஈனமிகுத்து உளபிறவி அணுகாதே - ஈனமே மிகுந்துள்ள பிறவிக்கடலில் ஆழ்ந்து அழியாமல், யானும் உனக்கு அடிமையென வகையாக - அடியேனும் தேவரீருக்கு அடிமை யென்று வகைப்பட்டுய்ய, ஞான அருள்தனை அருளி - மெய்ஞ்ஞான அருளைப் புரிந்து, வினை தீர - அடியேனது வினைகள் அறவே நீங்க, நாணம் அகற்றிய கருணை புரிவாயே - வள்ளியம்மையாரிடத்தில் நாண மகற்றிப் போய் அருளிய திருவருளை அடியேனுக்குத் தந்தருள்வீர்.

### பொழிப்புரை

தானம் தவம் இவற்றிற்குத் தலைவராக விளங்கி அவற்றின் பயனை மிகவும் பெறுபவரே! வாணிதேவிக்குச் சகோதரரே! முருகக் கடவுளே! திருஞானசம்பந்தரை யதிஷ்டித்து தமிழ் மறையாகிய தேவாரப்பதிகங்களைப் பாடியருளிய இளமையானவரே! ஆறுபடைவீட்டுத் தலங்களிலும் எழுந்தருளியுள்ளவரே! ஈனமிகுந்த இப் பிறவியை அடியேன் அடையாமல், உமது அடிமையாகி உய்ய சிவஞான அருளைத் தந்து என்

வினை தீர, தேவரீரது எளிமையான வான் கருணையை வழங்கியருள்வீர்.

## விரிவுரை

ஈனமிகுத்துளபிறவி :—

சின்னாள் வாழ்க்கை, பல்வகை நோய், பசி மூப்பு முதலியவை பொருந்தி யிடர் விளைவிப்பதால் ஈனமிகுத்துள பிறவி யென்றார்.

அடிமையென :—

ஆண்டானடிமைத் திறத்தையுணர்த்துகின்றனர்.

அருளதருளி எனையுமனதொ
டடிமை கொளவும் வரவேணும் —(திமிரவுததி) திருப்புகழ்.

நாண மகற்றிய கருணை :—

தான் சிவகுருநாதனாக இருந்தும் மூவர் தேவாதிகள் தலைவனாக இருந்தும் குறமாதினிடம் நாணமின்றிச் சென்றனர். அவ்வம்மையை யாட்கொள்ளும் கருணையின் எளிமையே அதற்குக் காரணம்.

"நாண மழிந்துரு மாறியெ வஞ்சக
நாடிய பங்கய பதநோவ
மாமுனிவன் புணர்மானுதவுந்தனி
மானைமணஞ் செய்த பெருமாளே"—(பாரநறுங்) திருப்புகழ்.

சாரதி உத்தமி துணைவ :—

திருமாலின் புதல்வராகிய பிரமதேவர் முருகப்பெருமானுக்கு மைத்துனராவார். மைத்துனன் மனைவி சகோதரி முறையாதலின் "சாரதி யுத்தமி துணைவ" என்றனர்; உத்தமி யென்று வாணிதேவியை வியந்து பாராட்டுவது சிந்தித்தற்குரியது.

ஆனதிருப்பதிகமருள் இளையோனே :—

ஞானசம்பந்தராக முருக சாரூபம் பெற்ற அபர சுப்பிரமணியர் அவதரித்தனர். அவரை அதிட்டித்து முருகன் தமிழ் மறையைப் பாடியருளினர்.

**ஆறு திருப்பதி :—**

ஆறு திருப்பதிகளாவன ;—

(1) திருப்பரங்குன்றம்
(2) திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்)
(3) திருவாவினன்குடி பழநி)
(4) திருவேரகம் (சுவாமிமலை)
(5) குன்றுதோருடல் (பல மலைகளும்)
(6) பழமுதிர்சோலை.

இந்த படைவீட்டுத்தலங்கள் ஆறும் நமக்குள் ஆதாரங்கள் ஆறனையுங் குறிக்கின்றன.

மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்களிலும் எழுந்தருளியிருப்பவர் ஆறுமுகப் பெருமான்.

"ஆறுதிருப்பதிகண் டாறெழுத்தை யன்பினுடன்
கூறுமவர் சிந்தைகுடி கொண்டோனே" —கலிவெண்பா.

## கருத்துரை

தானத்திற்குந் தவத்திற்குந் தலைவரே! சாரதி துணைவ! முருகா! தேவாரப் பாடல் பாடியருயவரே! ஆறு திருத்தலமுடையவரே! பிறவியை யொழித்து உமது அடிமையாக ஞானத்தைத் தந்து அருள்புரிவீர்.

ஆறுவது படைவீட்டுத்

திருப்புகழ் விரிவுரை முற்றிற்று.

———:O:———

